த. பா. நி. (க. வெ.) வரிசை எண்—126

# ஆக்ஸ்ஃபோர்டின் இந்திய வரலாறு - IV

## (THE OXFORD HISTORY OF INDIA)

ஆசிரியர்

காலஞ்சென்ற வின்செண்ட் ஏ. ஸ்மித், சி.ஐ.இ.,

மூன்றாம் பதிப்பு

பெர்சிவல் ஸ்பியர்

அவர்களால் திருத்தியமைக்கப்பட்டது.

தமிழாக்கம்

பு. ஆர். இராமச்சந்திரன், எம்.ஏ., எம்.லிட்.,

பேராசிரியர்,
வரலாற்றுத்துறை,
பச்சையப்பன் கல்லூரி, சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—March, 1973

T.N.T.B.S. (C.P.) No. 126



# THE OXFORD HISTORY OF INDIA

VINCENT A. SMITH

Translation
T. R. RAMACHANDRAN

PRICE RS. 7-20

This translation of 'The Oxford History of India' by Vincent A. Smith is published by arrangement with Clarendon Press, Oxford.

'Published by the Tamil Nadu Text Book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.'

*Printed by* :
Ravichandra Press,
145, Ramakrishna Mutt Road,
Madras-28.

# அணிந்துரை

## திரு. இரா. நெடுஞ்செழியன்

(தமிழகக் கல்வி—உள்ளாட்சித் துறை அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பன்னிரண்டாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.), 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப்படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத் தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழி பெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'ஆக்ஸ்ஃபோர்டின் இந்திய வரலாறு—IV' என்ற இந்நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 426ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க்குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 461 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

## பொருளடக்கம்

### பகுதி IX

### இந்தியாவில் ஆங்கிலப் பேரரசு 1858—1905



### பகுதி X

### தேசிய இந்தியா 1905–47

## படங்களின் அட்டவணை

### புகைப்படங்கள்



### படங்கள்

# காலவரிசைப் பட்டி

## பாகம் III, பகுதி VII, 1740—1818

| முகலாயர்களும் மராத்தியர்களும் | பிரிட்டிஷ்காரர்களும் ஃபிரெஞ்சுக்காரர்களும் | பிரிட்டனும் ஐரோப்பாவும் |
|---|---|---|
| 1724 ஐதராபாத் நடைமுறையில் சுதந்திர மடைதல். | | |
| 1738 மாளவத்தை மராத்தியர்கள் பெறுதல். | | |
| 1739 டில்லியில் நாதர்ஷா: காபூல் இழப்பு. | | |
| 1740-56 அலி வர்தி கான் வங்கத்தின் சுபேதார். | 1744-9 முதல் ஆங்கில ஃபிரெஞ்சுப் போர். | 1740-8 ஆஸ்திரிய வாரிசுரிமைப் போர். |
| 1744 வங்காளத்தில் மராத்தியர் படையெடுப்பு. | 1742-51 டூப்ளே பாண்டிச்சேரியின் கவர்னர். | |
| 1745 ஒரிசாவை மராத்தியர் கைப்பற்றுதல். | 1746 ஃபிரெஞ்சுக்காரர்கள் சென்னையைக் கைப்பற்றுதல். | |
| 1748 அகமத் ஷா அபிதாலி துரத்தப்படுதல், முகமது ஷா மறைவு. | 1748 நைசாம் – உல் – முல்க் மறைவு. | 1748 ஆக்ஸ் – லா – சாஃபேல் உடன்படிக்கை. |
| 1750 முகலாயர்கள் குஜராத், சிந்து ஆகியவற்றை இழத்தல். | 1750-4 இரண்டாவது ஆங்கிலோ ஃபிரெஞ்சுப் போர். (அதிகார பூர்வமற்றது). | |

| | | |
|---|---|---|
| 1752 பஞ்சாப், சிந்து ஆகியவற்றை ஆப்கானியர்கள் பெறுதல். | 1750-8 ஐதராபாத்தில் புஸ்ஸி. | |
| 1753 இமாத்-உல்-முல்க் வாசிர் பேரரசர். | 1751-2 ஆர்க்காடு, திருச்சினப்பள்ளி முற்றுகைகள். | |
| 1756 டில்லியில் அஹமத்ஷா அப்தாலி. | | 1756-63 ஏழாண்டுப் போர். |
| 1758 பஞ்சாபை மராத்தியர் கைப்பற்றுதல். | 1758-63 மூன்றுவது ஆங்கிலோ-ஃபிரெஞ்சுப் போர். | 1757-61 மூத்த பிட், நியூகஸில் அமைச்சரவை ஆட்சி. |
| 1761 பானிப்பட்டு யுத்தம். | 1761 பாண்டிச்சேரியின் வீழ்ச்சி. | 1760 கனடாவைக் கைப்பற்றுதல். |

| இந்தியர் இந்தியா | பிரிட்டிஷ் இந்தியா | பிரிட்டனும் ஐரோப்பாவும் |
|---|---|---|
| 1756-75 ஷுஜா உத்-தௌலா, அயோத்தி நவாப்-வசீர்.<br>1761-82 ஹைதர் அலி-மைசூர் அரசர்.<br>1761-72 மாதவ ராவ், பீஷ்வா.<br>1768 காட்மாண்டு கூர்க்காக்கள் கைவசமாதல்.<br>1772 ஷா ஆலம் டில்லி திரும்புதல்.<br>1772-82 மீர்ஜா நஜாஃப்கான் பிரதம முகலாய அமைச்சர்.<br>1773 ரகுநாத ராவும், மராத்திய உள்நாட்டுப் போரும். | 1757 பிளாசிச் சண்டை.<br>1757-60 கிளைவினுடைய முதல் கவர்னர் பதவிக்காலம்..<br>1763 நவாப் மீர்காசிம் தோல்வியுறுதல்.<br>1764 பக்ஸார் சண்டை.<br>1765-7 கிளைவினுடைய இரண்டாவது கவர்னர் பதவிக்காலம்.<br>1765 வங்காளம், பீகார், ஒரிசா ஆகியவற்றில் திவானி உரிமையைப் கம்பெனி பெறுதல்.<br>1773 ஒழுங்குமுறைச் சட்டம் நிறைவேற்றப்படுதல்.<br>1772-85 வாரன் ஹேஸ்டிங்ஸ் கவர்னர் பதவிக் காலம்.<br>1775-82 முதலாவது மராத்தியப்போர். | 1775-82 அமெரிக்கச் சுதந்திரப் போர்.<br>1770-82 நார்த் பிரபு அமைச்சர் சபை ஆட்சி. |

| | | |
|---|---|---|
| 1782-98 திப்பு சுல்தான், மைசூர் அரசர். | 1780-84 இரண்டாவது மைசூர்ப் போர். | 1783-1801 இளைய பிட், பிரதமர். |
| 1785 சிந்தியா டில்லியைத் தன் ஆதிக்கத்திற்குட்படுத்துதல். | 1784 பிட் இந்தியா சட்டம் இயற்றப்படுதல். | |
| 1787 லால்சோன்டில் சிந்தியா தோல்வி அடைதல். | வங்காள ஆசியாக்கழகம் நிறுவப்படுதல். | 1788-95 வாரன் ஹேஸ்டிங்ஸ் அரசத் துரோகக் குற்ற விசாரணைக்குட் படுத்தப்பெறல். |
| 1788 ஷா ஆலம் குருடாக்கப் பெறுதல். | 1786-90 காரன்வாலிஸ் சீர் திருத்தங்கள். | 1789 ஃபிரஞ்சுப் புரட்சித் தொடக்கம். |
| 1788-1803 சிந்தியா டில்லியைத் தன் ஆதிக்கத்திற்குட்படுத்துதல். | 1790-2 மூன்றாவது மைசூர்ப் போர். | 1791 பிட் கனடாச் சட்டம். |
| 1792 ரஞ்சித் சிங், சுகெர்சாக்கியமிசல் தலைவர். ஹோல்காரை சிந்தியா தோற்கடித்தல். | | 1792-94 பிரான்சில் பயங்கர ஆட்சி. |
| | 1793 நிலையான நிலவரித் திட்டம் வங்காளத்தில் ஏற்படுத்துதல். | |
| 1794 மது ராவ் சிந்தியா பூனாவில் உயிர் நீத்தல். | | |

| இந்தியர் இந்தியா | பிரிட்டிஷ் இந்தியா | பிரிட்டனும் ஐரோப்பாவும் |
|---|---|---|
| 1795 கர்தா சண்டை. | 1798–9 நான்காவது மைசூர்ப் போர். | 1798 எகிப்தின்மீது நெப்போலியன் படையெடுத்தல். |
| 1798 லாகூரில் ஜாமன் ஷா. | 1799 சீரங்கப்பட்டணம் வீழ்ச்சி. திப்புசுல்தான் போரில் மடிதல். | |
| 1799 ரஞ்சித்சிங் லாகூர் ஆட்சியாளர். | 1799 செராம்பூரில் வில்லியம் காரே. | 1799 நெப்போலியன் முதல் கான்சல். |
| 1800 நானா பட்னவிஸ் மறைவு. | 1801 கர்நாடகமும் அயோத்தியின் ஒரு பகுதியும் இணைக்கப்படுதல். | |
| 1801 பங்கிகளை ரஞ்சித் சிங் தோற்கடித்தல். | 1802 பீஷ்வா பாஜிராவுடன் பஸ்ஸீன் உடன்படிக்கை. | 1805 டிராஃபால்கர், ஆஸ்டர்லிட்ஸ் சண்டைகள். |
| 1803 லேக் பிரபு டில்லியைக் கைப்பற்றுதல். | 1803–5 இரண்டாவது மராத்தியப் போர். | |
| 1806 லூதியானா ரஞ்சித் சிங் கைவசமாதல். | 1806 வேலூர் படைக்கலகம். | |
| 1806–1815 மத்திய இந்தியாவில் பிண்டாரிகள். | 1808 மால்கம் (பாரசீகம்), எல்பின்ஸ்டன் (காபூல்), மெட்கால்ப் (பஞ்சாப்) தூதுக்குழுக்கள். | 1807 டில்சிட் சமாதானம், ஃபிரான்சு–ரஷ்யா நேச உடன்பாடு. |

| | | |
|---|---|---|
| 1818–19 சீக்கியர்கள் மூல்தானையும் காஷ்மீரத்தையும் வெல்லுதல். | 1809 அமிர்தசரஸ் உடன்படிக்கை.<br>1811 ஜாவாவை வெல்லுதல்.<br>1813 சாசனம் புதுப்பிக்கப்படுதல், தடையிலா வாணிபம், சமயப் பரப்பாளர்கள் அனுமதிக்கப்படுதல்.<br>1814–16 கூர்க்கா போர்.<br>1816 இந்துக் கல்லூரி, கல்கத்தா (வித்யாலயம்) நிறுவப் பெறுதல்.<br>1817 பிண்டாரிகள்மீது போர் —இறுதி மராத்தியப் போர்.<br>1818 பொது ஏற்பாடு.<br>1819 சிம்லாவில் முதல் பிரிட்டிஷ் மாளிகை. | 1812 மாஸ்கோ போர் ஏற்பாடு.<br>1815 வாட்டர்லூ சண்டை. |

## பகுதி VIII 1818—58

| அரசியல் செயலாட்சித் துறையும் படைத்துறையும் | அரசியல் துறை | சமூக, கலாசார, பொருளாதாரத் துறைகள் | இங்கிலாந்தும் உலகமும் |
|---|---|---|---|
| 1819 சிங்கப்பூர் கைப்பற்றப்படுதல். | 1819-27 எல்பின்ஸ்டன் பம்பாய் கவர்னர். | 1815-30 இராஜாராம் மோகன்ராயின் பணி. செராம்பூர் கிறித்து வக்குருமார்கள். | 1815 வியன்னு மாநாடு. |
| | 1820-4 மன்ரோ சென்னை கவர்னர். | 1817 மில் எழுதிய 'இந்திய வரலாறு' வெளியிடப் பட்டது. | 1821 கிரேக்கப் புரட்சி. |
| | 1823 ஜான் ஆடம் பத்திரிகைத் தடைகள். | 1822 22ஆவது விதி (நில ஏற்பாடு). | |
| 1824 முதல் பர்மாப் போர் அரக்கான், டென்னசிரிம் கைப்பற்றப் படுதல். 1827 பாரத்பூர் முற்றுகை. | 1828-35 வில்லியம் பென்டிங்க் பிரபு கவர்னர் ஜெனரல். | 1829 பிரம்ம சமாஜம் நிறுவப்பட்டது. | 1828-29 ருஷ்ய-துருக்கியப் போர். |

| | | | |
|---|---|---|---|
| 831 பர்னெசின் சிந்து நதிப் பயணம். ரூபரில் ரஞ்சித்சிங்– பென்டிங்க் சந்திப்பு | 1831 மைசூரின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளுதல். | 1829–37 உடன் கட்டை ஏறும் முறை தடுக்கப் படுதல் தகி முறை ஒடுக்கப் பெறுதல். | 1830 ஃபிரான்சில் ஜுலைப் புரட்சி. |
| | 1833 சாசனச் சட்டம் கம்பெனியின் வணிகம் நிறுத்தப்பட்டது. | | |
| 834 ரஞ்சித்சிங் பெஷாவரைக் கைப்பற்றுதல் | 1834 குடகு இணைக்கப் பட்டது. | 1830–33 இங்கிலாந்தில் இராஜாராம் மோகன் ராய். | 1830 – 41 பால்மெர்ஸ்டன் அயல்நாட்டு அமைச்சர். |
| | | 1833–9–ஆவது விதி (நில ஏற்பாடு) | 1832 பெரும் சீர்திருத்தச் சட்டம் இயற்றப் பட்டது. |
| | 1835 மெட்காஃப் பத்திரிகைத் தடைகளை நீக்குதல். | 1835 மெகாலே பிரபுவின் கல்வித் திட்ட விளக்கம், ஆங்கிலம் நீதிமன்ற மொழிஆதல். | |
| 1837 காபூலுக்குப் பர்னெசின் தூது. | 1836–42 ஆக்லந்து பிரபு. | | 1833 உன்கியார்ஸ்கெலெசி உடன்படிக்கை. |
| 1838 மூவர் உடன்படிக்கை | | 1837–8 வட இந்தியாவில் பஞ்சம். | |

| அரசியல் செயலாட்சித் துறையும் படைத்துறையும் | அரசியல் துறை | சமூக, கலாசார, பொருளாதாரத் துறைகள் | இங்கிலாந்தும் உலகமும் |
|---|---|---|---|
| 1839 ரஞ்சித்சிங் மறைவு. | | | |
| 1839-42 முதலாவது ஆஃப்கானியப் போர். | | 1843 அடிமைத்தனம் ஒழிக்கப்பட்டது. | 1841 சர். R. பீல் பிரிட்டிஷ் பிரதமர், இரயில்வே பாதைப் பெருக்கம், வாணிக வாரியத்தில் டல்ஹௌசி. |
| 1843 சிந்து மாகாணம் கைப்பற்றப்பட்டது. | 1842-4 எல்லன்பரோ பிரபு. | | |
| 1844 குவாலியர் படை தோற்கடிக்கப்பட்டது. | 1844-8 ஹார்டிஞ்ச் பிரபு. | | 1846 தானியச் சட்டங்கள் ரத்து செய்யப்பட்டன. |
| 1845-6 முதலாவது சீக்கியப் போர். | | 1853 டல்ஹௌசியின் இரயில்வே திட்ட விளக்கம், முதல் இரயில் பாதைத் திறக்கப்பட்டது. கல்கத்தா - ஆக்ரா தந்தி இணைப்பு. | 1848 புரட்சிகள் மிகுந்த ஆண்டு. |
| 1848-9 இரண்டாவது சீக்கியப் போர், பஞ்சாப் இணைக்கப்படுதல். | 1848-56 டல்ஹௌசி பிரபு. | | 1851 பெரும் பொருட்காட்சி. |

| | | | |
|---|---|---|---|
| 1852 இரண்டாவது பர்மாப் போர், ரங்கூனும், பெகுவும் கைப்பற்றப்பட்டன. | 1853 நாகபுரி கைப்பற்றப் பட்டது. நைஜாம் பீராரை அளித்தல். சாசனம் புதுப்பிக் கப்பட்டது, I.C.S. தேர்வுப் போட்டி. | 1854 சர் சார்லஸ் உட்டின் 'கல்வி' பற்றிய அரசியல் நடவடிக்கைத் தாள், சணல் தொழில் வளர்ச்சி. | 1854 கிரிமியாப் போர். |
| | 1857–58 கலகம். | 1857 கல்கத்தா. பம்பாய், சென்னைப் பல்கலைக் கழகங்கள் நிறுவப் பட்டன. | |

## பகுதி IX 1858—1905

| அயல்நாடுகளும் எல்லையும் | அரசியல் துறை | சமூக, கலாசார, பொருளாதாரத் துறைகள் | இங்கிலாந்தும் உலகமும் |
|---|---|---|---|
| | 1858 இந்தியா, இங்கிலாந்து அரசாங்கத்தின்கீழ் வருதல், விக்டோரியா ராணியின் பேரறிக்கை. | 1859-60 ஜேம்ஸ் வில்சனின் நிதித்துறைச் சீர்திருத்தங்கள். | 1859-60 இத்தாலி ஒன்றுபடுதல். |
| | | 1859 வங்காளத்தில் அவுரிச் செடித்தகராறுகள். | 1861-5 அமெரிக்க உள்நாட்டுப் போர் |
| 1863 தோஸ்து முகமது மறைவு, அம்பேலா படையெடுப்பு. | 1861 இந்தியக்கவுன்சில்கள் சட்டம், உயர்நீதி மன்றங்கள் சட்டம். | 1861 இந்தியக் குற்ற விதித் தொகுதி நடைமுறைப் படுத்தப் பட்டது, பருத்தி உற்பத்திப் பெருக்கம். வடமேற்கு இந்தியாவில் பஞ்சம். | 1862 பிஸ்மார்க் அமைச்சராதல். |
| 1868 அமீர் ஷெர் அலிக்கு உதவிப் பணமளித்தல். | 1862–3 எல்ஜின் பிரபு. 1864–9 சர் ஜான் லாரன்சு. | 1865 ஒரிசாவில் பஞ்சம். | 1867 ஜப்பானில் ஷோகன் ஆட்சி முடிவடைதல், புதிய ஆட்சி. |

| | | | |
|---|---|---|---|
| 1869 ஷெர் அலியுடன் அம்பாலாவில் சந்திப்பு. | 1869-72 மேயோ பிரபு. | 1868 பஞ்சாப் - அயோத்தி குத்தகைச் சட்டங்கள். | 1868-74 கிளாட்ஸ்டனின் முதல் அமைச்சரவை. |
| | 1870 மாகில நிதி ஏற்பாடு. | | 1869 சூயஸ் கால்வாய் திறக்கப்பட்டது. |
| | 1872-6 நார்த்புருக் பிரபு. | | 1870-1 ஃபிரெஞ்சு — பிரஷ்யப் போர்-ஜெர்மானியப் பேரரசு. |
| 1873 கிவாவை ரஷ்யர்கள் கைப்பற்றுதல். | 1876-80 லிட்டன் பிரபு. | 1875 எஸ். அஹமது கான் அலிகார் கல்லூரியை நிறுவினர். ஆரிய ஸமாஜம் சுவாமி தயானந்தரால் நிறுவப்பட்டது. | 1874-80 டிஸ்ரேலி பிரிட்டிஷ் பிரதமர். |
| 1876 குவெட்டா கைப்பற்றப் படுதல். | 1876 அரசி இந்தியாவின் பேரரசியாக அறிவிக்கப் பெறுதல். | | 1876-8 ரஷ்ய துருக்கிப் போர். |
| 1878-80 இரண்டாவது ஆஃப்கானியப் போர். | 1879 நாட்டுமொழிப்பத்திரிகைச் சட்டம். | 1876-8 தென் இந்தியாவில் பஞ்சம். | 1878 பெர்லின் மாநாடு. |
| 1880 காபூலில் அப்துர் ரஹ்மான் அமீர் ஆனர். | 1880-4 ரிப்பன் பிரபு. | 1879 பருத்தி வரிகள் ரத்து செய்யப்பட்டன. | |

| அயல்நாடுகளும் எல்லையும் | அரசியல் துறை | சமூக, கலாசார, பொருளாதாரத் துறைகள் | இங்கிலாந்தும் உலகமும் |
|---|---|---|---|
| | | 1880 பஞ்சக்குழு அறிக்கை பஞ்ச விதி முறைத் தொகுப்புகள். | 1880–5 கிளாட்ஸ்டனின் இரண்டாவது அமைச்சரவை. |
| | 1881 மைசூர் திரும்பக் கொடுக்கப்பட்டது. | 1881 முதல் தொழிற்சாலைச் சட்டம். | 18[illegible] இங்கிலாந்து எகிப்தைக் கைப்பற்றியது. |
| | 1833-4 உள் ஆட்சித்துறைச் சட்டங்கள். | 1882 ஹண்டர் கல்விக் குழு | |
| 1884 ரஷ்யர்களினால் மெர்வ் கைப்பற்றப்பட்டது. | 1883-4 இல்பெர்ட் மசோதாத் தகராறு | | |
| 1885 பஞ்சேட நிகழ்ச்சி. | 1881-8 டஃப்ரின் பிரபு. | 1885 வங்காளக் குத்தகைச் சட்டம் | |
| 1885-6 மூன்றாவது பர்மாப் போர், மேல் பர்மா இணைக்கப்பட்டது. | 1885 இந்திய தேசியக் காங்கிரசு நிறுவப்பட்டது. | 1886 இராமகிருஷ்ண பரமஹம்சர் மறைந்தார். இராமகிருஷ்ண இயக்கம் | 1886 கிளாட்ஸ்டனின் தன்னாட்சிச் சட்டம். |
| | 1888-94 லான்ஸ்டவுன் பிரபு. | 1887 நாகபுரியில் டாடா எம்பிரஸ் பருத்தி ஆலை. | 1886–92 சாலிஸ்பரி பிரபு பிரிட்டிஷ் பிரதமர் |

| | | | |
|---|---|---|---|
| | 1892 இந்தியக் கவுன்சில் சட்டம். | 1891 இரண்டாவது தொழிற்சாலைச் சட்டம், வயது ஒப்புதல் சட்டம். | 1890 பிஸ்மார்க் வீழ்ச்சி. |
| 1895 சித்ரால் படையெடுப்பு. | 1894-9 இரண்டாம் எல்ஜின் பிரபு. | 1893 சிகாகோ 'சமயங்களின் பாராளுமன்றத்தில் விவேகானந்தர். | 1894–5 சீன - ஜப்பான் போர். |
| | 1899–1905 கர்சன் பிரபு. | 1896–1900 பிளேக் நோயும் பஞ்சமும். | 1899–1902 போயர் போர். |
| 1897 எல்லைகளில் எழுச்சிகள். | | | |
| 1901 ஆஃப்கானிஸ்தானத்தில் அபிபுல்லா அமீர் ஆனார். | 1900 வ. மே. எ. மாகாணம் அமைக்கப்பட்டது | 1900 நில பராதீனச் சட்டம். | |
| | 1903 டெல்லி தர்பார். | | 1901 ஆங்கில - ஃபிரெஞ்சு உடன்பாடு. |
| 1903-4 லாசா படையெடுப்பு | 1905 வங்காளப் பிரிவினை. | 1901 பல்கலைக்கழகங்கள் சட்டம். கூட்டுறவுச் சங்கங்கள் சட்டம். தொல்பொருள் துறை. | 1904–5 ருஷ்ய - ஜப்பானியப் போர். |

## பகுதி X 1905—47

| அயல்நாடுகள் | அரசியல் துறை | சமூக, கலாசார, பொருளாதாரத் துறைகள் | இங்கிலாந்தும் உலகமும் |
|---|---|---|---|
| | 1905-10 இரண்டாவது மின்டோ பிரபு. | 1906 'இந்தியப் பணியாளர் சங்கம்' கோகலேயினால் நிறுவப்பட்டது. | 1905 லிபரல் கட்சி அமைச்சரவை. |
| | 1906 முஸ்லிம் லீக் நிறுவப்பட்டது | | |
| | 1907 சூரத் மாநாடு மிதவாதிகள்-தீவிரவாதிகள் மோதல். | 1907 டாடா இரும்பு எஃகு கம்பெனி நிறுவப்பட்டது. | 1908 இங்கிலாந்து-ரஷ்யா உடன்பாடு, பாரசிகப் புரட்சி. இளந் துருக்கியர் இயக்கம். |
| | 1909 மார்லி-மிண்டோ சீர்திருத்தங்கள். | | |
| | 1910-16 இரண்டாவது ஹார்டிஞ்சு பிரபு | | |
| | 1911 டில்லி தர்பார், வங்காளப் பிரிவினை ரத்து செய்யப்பட்டது. | 1913 தாகூருக்கு 'நோபல்' பரிசு. | 1911 சீனப் புரட்சி தொடக்கம். |

| | | | |
|---|---|---|---|
| | 1910–14 அரசு – காங்கிரசு நல்லுறவு. | 1911 காந்திஜி தென் ஆஃப்ரிக்காவிலிருந்து திரும்புதல். | 1914–18 முதல் உலகப் போர். ஃபிரான்சில் இந்தியப் படை. |
| | 1915 கோகலே மறைவு. | 1915 தன்னாட்சி இயக்கம். | 1915 மெசொபொடேமியப் படையெடுப்பு. |
| | 1916–21 செம்ஸ்போர்டு பிரபு. | | |
| | 1917 தன்னாட்சி பற்றி அறிவிப்பு. | | 1917 ரஷ்யப் புரட்சி. |
| | 1918 மாண்டேகு செம்ஸ்போர்டு அறிக்கை. | | 1918 ஜனாதிபதி வில்சனின் பதினான்கு உறுதிப்பாடுகள் |
| 1919 மூன்றாவது ஆப்கானியப் போர். | 1919 அமிர்தசரஸ் படுகொலை. | 1919 சாட்லர் பல்கலைக் கழக அறிக்கை. | 1919 வெர்சேயி உடன்படிக்கை. |
| | 1919 இந்திய அரசாங்கச் சட்டம். | | |
| 1919–29 ஆப்கானிஸ்தானத்தில் அமானுல்லா அரசராக இருந்தார். | 1920–22 ஒத்துழையாமை இயக்கம், கிலாபத் இயக்கம். | 1921 நிதித் துறையில் சுய ஆட்சி. | |

| அயல்நாடுகள் | அரசியல் துறை | சமூக, கலாசார, பொருளாதாரத் துறைகள் | இங்கிலாந்தும் உலகமும் |
|---|---|---|---|
| 1919 சர்வதேச சங்கத்தில் இந்தியா உறுப்பு நாடு. | 1921 மாண்ட்போர்டு சீர்திருத்தங்கள். | | 1919 சர்வதேச சங்கம் அமைக்கப்பட்டது. |
| | 1921-6 ரீடிங்க் பிரபு. | | 1921 தேசிய துருக்கியும் துருக்கியின் தந்தையும். |
| 1929 ஆப்கானியக் கலகம், ஆப்கானிஸ்தான் அரசராக நாதிர் ஷா. | 1921 மாப்ளா எழுச்சி.<br>1923 சுயராஜ் கட்சி அமைக்கப்பட்டது. | 1923 சுங்கவாரியம் அமைக்கப்பட்டது. | 1922 இத்தாலியில் முசோலினி சர்வாதிகாரி. |
| | 1925 C. R. தாஸ் மறைவு. | 1925 பருத்தி வரி நீக்கப்பட்டது. | 1926 டொமினியன் அந்தஸ்துபற்றிப் பேரரசு மாநாடு மீண்டும் வரையறுத்துக் கூறியது. |
| | 1926–31 இர்வின் பிரபு.<br>1928 சைமன் குழு. | 1929 சாரதா சட்டம் இயற்றப் பட்டது. காந்திஜியின் ஹரிஜன இயக்கம். | |
| | 1930–31 முதல் சட்ட மறுப்பு இயக்கம். | | |
| | 1930–32 வட்டமேஜை மாநாடுகள். | | 1929–33 பெரிய மந்தம். |
| | 1931 காந்தி–இர்வின் ஒப்பந்தம். | | 1931 வெஸ்ட்மினிஸ்டர் சட்டம். |

| | | | |
|---|---|---|---|
| **1934** நாதர் ஷா கொலை செய்யப்பட்டார். **ஆப்கானிஸ்தானில் ஜாஹிர் அரசராதல்.** | 1931–36 வில்லிங்டன் பிரபு. | | 1933 ஜெர்மனியில் சர்வாதிகாரி ஹிட்லர். |
| | 1932 இரண்டாவது சட்ட மறுப்பு இயக்கம் | | |
| | 1935 இந்திய அரசியல் சட்டம். | | |
| | 1936–43 லின் லித்கோ பிரபு. | | |
| **1937** பர்மா **இந்தியாவிலிருந்து** பிரிக்கப் **பட்டது.** | 1937 மாநிலச் சுய ஆட்சி. காங்கிரஸ் அமைச்சரவைகள். | | 1938 ஆஸ்திரியா ஜெர்மனியினால் கைப் பற்றப்பட்டது. **மியூனிச் ஒப்பந்தம்.** |
| | 1939 காங்கிரஸ் அமைச்சரவைகள் பதவி விலகல். | | 1939–45 இரண்டாம் உலகப் போர். |
| | 1940 பாகிஸ்தான் வேண்டுமென முஸ்லிம் லீக் அறிவித்தது. | | 1941 ஜெர்மனி ரஷ்யாவை முற்றுகையிட்டது. ஜப்பான் அமெரிக்காவைத் தாக்கியது. |

| அயல்நாடுகள் | அரசியல் துறை | சமூக, கலாசார, பொருளாதாரத் துறைகள் | இங்கிலாந்தும் உலகமும் |
| --- | --- | --- | --- |
| | 1942 கிரிப்ஸ் தூதுக்குழு, காங்கிரஸ் எதிர்ப்பு.<br>1943 வங்காளப் பஞ்சம்.<br>1943–7 வேவல் பிரபு.<br>1945-6 இந்தியாவில் பொதுத் தேர்தல்கள்.<br>1946 அமைச்சரவைத் தூதுக் குழு.<br>வங்காளத்தில் வெறியாட்டம்.<br>1947 மௌன்ட்பேட்டன் பிரபு. | | 1945 போர் முடிவடைந்தது, இங்கிலாந்தில் தொழிற் கட்சி அமைச்சரவை.<br>ஐக்கிய நாடுகள் சபை அமைக்கப்பட்டது. |

# பிழைதிருத்தம்

| பக்கம் | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 45 | கிளாட்சன் | கிளாட்ஸ்டன் |
| 92 | கிளாட்சன் | கிளாட்ஸ்டன் |
| 134 | கிளாட்சன் | கிளாட்ஸ்டன் |
| 194 | கிளாட்சன் | கிளாட்ஸ்டன் |
| 214 | கிளாட்சன் | கிளாட்ஸ்டன் |
| 241 | மாப்பிள்ளைக் கலகம் | மாப்பிளார் கலகம் |
| 266 | மீர்சா நவாப் கான் | மீர்சா நுசாப் கான் |

பாகம் III—(தொடர்ச்சி)

# பிரிட்டிஷாருடைய குடியேற்ற நாடுகளின் தோற்றம்--(தொடர்ச்சி)

(பெர்சிவல் ஸ்பியரால் திருத்தி எழுதப்பட்டது)

பகுதி IX

# இந்தியாவில் ஆங்கிலப் பேரரசு (1858 - 1905)

## 1. காளிங்கும் மறு சீரமைப்பும்

1857ஆம் ஆண்டில் நடைபெற்ற கலகத்திற்குப் பிறகு, மறு சீரமைப்புப் பணி மேற்கொள்ளப்பட்டது. முதல் வேலையாகக் கிழக்கிந் தியக்கம்பெனி ஒழிக்கப்பட்டது. முன்னர்க் குறிப்பிட்டபடி,[1] 1833ஆம் ஆண்டு முதல், கம்பெனிக்கும் இந்தியாவிற்கும் இடையே ஏற்பட் டிருந்த வாணிபத் தொடர்பு மறைந்துவிட்டது. கம்பெனி சீனர்களுடன் நடத்தி வந்த வாணிபம் முடிவுற்றதால் 1853ஆம் ஆண்டிலிருந்து வாணிபக் கூட்டுரிமைக் குழுவாக அது செயல்பட்டு வருவதை நிறுத்திக் கொண்டது. அதனுடைய இயக்குநர்களில் அறுவரை ஆங்கிலேய அரசாங்கமே நியமித்தது. மேலும் போட்டித் தேர்வு முறை புகுத்தப் பட்டதால், இயக்குநர்கள் பெற்றிருந்த அலுவலர்களை நியமிக்கும் ஏக போக உரிமை தகர்க்கப்பட்டது. இதற்கு முன்னதாகவே கம்பெனி யானது தன் அதிகாரங்கள் எல்லாவற்றையும் இழந்து ஆற்றலற்ற நிலையை அடைந்தது. நடைமுறையில் அது இந்திய விவகாரங்களை நடத்திவரும் துணைக் குழுவாக இயங்கி வந்தது. ஆட்சிக் கொள்கை களில் அதற்கு யாதொரு செல்வாக்குமில்லை. தன்னுடைய அதிகாரத்தை அதிர்ச்சி தரும் உறுதியுடன் பயன்படுத்தி அது நிறை வேற்றிய இறுதிச் செயல் எல்லன்பரோ பிரபுவைத் திரும்ப அழைத்துக் கொண்டதேயாகும். அது மேற்பார்வைக் குழுவில் (Board of Control) தலைவருக்குப் பயனளிக்கும் வகையில் தான் பெற்றிருந்த இந்திய அனுபவ அறிவை வழங்கி வந்தது. அதுவே அது தொடர்ந்து நீடித்து வந்ததற்கு ஒரு காரணமாகும். மற்றுமொரு காரணமும் உண்டு.

[1] பகுதி VIII, அத்தியாயம் 6.

அன்றாட இந்திய அரசாங்க நிருவாகப் பணியும், அலுவலர்களை நியமிக்கும் பணியும், கட்சிப் பூசலின் கடும் தாக்குதலுக்கு இலக்காகாமல் செவ்வனே நடைபெற அது உதவியது. இவை ஒரு புறமிருக்க, அது முறைகேடான தன்மையும் அடைந்தது. சீர்திருத்தத்தினையும், மறுபரிசீலனையையும் தூண்டக்கூடிய சிறந்த வாய்ப்புகள் தோன்றாத வரைதான் இத்தகைய பொது முறைகேடுகள் தொடர்ந்து காணப்பெறும். ஜான் ஸ்டூவர்ட் மில் எழுதிக் கொடுத்த வாதங்களின் மூலமாக கம்பெனியே தன் சார்பில் மிகத் திறமையாக வாதாடியது. ஆனால், அப்பொழுது இருந்த பொதுநோக்கு அதற்கு எதிராகவே இருந்தது.

1858ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட இந்திய அரசாங்கச் சட்டம் இந்திய ஆட்சி உரிமையைக் கம்பெனியிடமிருந்து பறித்துவிட்டது.[1] மேற்பார்வைக் குழுவின் தலைவர்க்குப் பதிலாக இந்திய விவகாரங்களைக் கவனிக்க அமைச்சர் ஒருவர் அமர்த்தப்பட்டார். இந்திய அமைச்சர் இங்கிலாந்து மந்திரி சபைக்குட்பட்ட இந்திய அதிகாரங்களின் பிறப்பிடமாகவும், ஆட்சிக் கொள்கை இயக்குநராகவும் விளங்கினார். கம்பெனி இயக்குநர்கள் அளித்து வந்ததாகக் கூறப்படும் இந்திய விவகாரங்களைப் பற்றிய செய்திகளை அமைச்சருக்கு அறிவிக்க இந்திய ஆலோசனைக் குழு ஒன்று அமைக்கப்பட்டது. இதில் பதினைந்து உறுப்பினர்கள் இருந்தனர். முதலில் அவர்கள் அவர் தம் ஆயுட்காலம் வரை பதவியிலிருக்க ஏற்பாடு செய்யப்பெற்றது. பிறகு அவர்கள் பத்து முதல் பதினைந்து ஆண்டுகள் வரை பணியாற்றினர். இவர்களில் எட்டு அங்கத்தினர்களை அரசாங்கத்தார் நியமித்தனர். எஞ்சியுள்ள ஏழு பேர்களை முதலில் கம்பெனி இயக்குநர்கள் நியமித்தனர். பின்னர் அவ்வாலோசனைக் குழுவினரே தம்முள் ஒத்து அவ்வெழுவரையும் தேர்ந்தெடுத்துக் கொண்டனர். இக் குழு அரசாங்கப் பணியினை ஒட்டிய அனுபவத்தினைப் பிரதிபலித்துக் காட்டுவதாக அமைந்திருந்தது. மேலும் இக் குழுவின் அங்கத்தினர்கள் பெரும்பாலும் பல காலம் இந்தியாவில் பணிபுரிந்து ஓய்வு பெற்றவர்களாய் இருந்தமையால், இது கடந்த தலைமுறையாளரின் அரசாங்கப் பணித்துறையினை ஒட்டிய அனுபவத்தின் கண்கூடான உருவாகத் தோன்றியது. கடந்த காலத்தையும் தற்காலத்தையும் ஒன்றுசேர்க்கும் பயனுடைய இணைப்புக் கருவியாக அது அமைய இந்த வகையான நிலை உதவியது. ஆனால், அந் நூற்றாண்டின் பிற்கால ஆண்டுகளில் இந்தியா முன்னேறத் தொடங்கியபோது, இதுவே ஒரு முட்டுக்கட்டையாக மாறியது. இந்திய அமைச்சருடைய முக்கிய ஆலோசகர்கள் புதிதாக ஏற்பட்டுள்ள பொது நோக்கங்களை சரிவர தீர்மானிக்க முடியாத நிலையில் இருந்தனர்

[1] பார்லிமெண்டு சட்டத்தின் வாயிலாக 1874ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் தேதியன்று கம்பெனி முறையாகக் கலைக்கப்பட்டது.

என்பதை அது குறித்துக் காட்டியது. ஏனென்றால், இவர்கள் பதவி ஏற்ற பிறகுதான் இப் புதிய கருத்துகள் தோன்றி அல்லது வளர்ந்து வந்தன. ஆயினும், தொடக்கத்தில் இம்மாற்றம் நன்மையையே விளைவித்தது. பிரிட்டிஷ் இந்தியா விவகாரங்களைப் பற்றிய ஆலோசனைகளில் ஆங்கிலேயரின் தனிப்பற்றுகளின் செல்வாக்குக் குறையலாயிற்று. நிருவாகப் பணியில் ஏற்பட்டிருந்த அனுபவத்தின் தனிச் சிறப்பு பெருகியது. இந்தியாவுடன் வியாபாரத் தொடர்புகளையோ, கம்பெனியினுடைய மூலதனத்தில் ஒரு பங்கை எதிர்பாராத விதமாகப் பெற்ற காரணத்தாலோ அல்லது இந்தியாவுடன் வெற்றிகரமாக வாணிபம் நடத்தியவர்களில் ஒருவராக இருந்த காரணத்தாலோ ஒருவருக்கு இந்திய விவகாரங்களை இயக்கும் வேலையில் இனிச் செல்வாக்கு ஏற்பட வழி இல்லை.

வணிகத் தொடர்பு நீக்கப்பட்ட ஆட்சிமுறையைச் சார்ந்த குழுவின் உருவில் கம்பெனி, ஆட்சியாளராகத் தொடர்ந்து இருந்துவருவதை ஆதரிக்கும் வகையில் பல வாதங்கள் வலியுறுத்தப்பட்டன. கம்பெனியினுடைய நீண்ட அனுபவமும், கூட்டுணர்வும், அதனுடைய அலுவலர்களை உண்மையாய்ப் பணியாற்றும்படி வகை செய்தன. தனித்தன்மையற்ற அரசாங்கத்தால் இவ்விதமாகச் செயலாற்ற முடியாது என்று வாதிட்டனர். இந்தியா போன்ற நாட்டில் உள்நாட்டு விவகாரங்களுக்குரிய மரியாதையைச் செலுத்த வேண்டியது அவசியமாகும். இயக்குநர்களின் நுணுக்கமான கண்காணிப்பு அத்தகைய மரியாதை ஏற்பட வழிவகை செய்தது. மேலும், கம்பெனி இயக்குநர்கள் பெற்றிருந்த அலுவலர்களை நியமிக்கும் உரிமையானது இந்திய நிருவாகத்தைக் கட்சிப் பூசலிலிருந்தும், மோசடி வகைகளிலிருந்தும் காப்பாற்றியது. இவ் வாதங்கள் அனைத்தும் ஒரு காலத்தில் வலுப்பெற்றிருந்தன. ஆனால், காலம் செல்லச்செல்ல இவை ஒவ்வொன்றினது, பிறரை ஒத்துக்கொள்ளவைக்கும் திறம் குறைந்து வந்தது. அரசாங்கம் கம்பெனியை விடக் குறைந்த அளவில் தனித்தன்மையுடையதாய் இருந்தது என்பது உண்மையேயாகும். ஹனோவீரிய வம்சத்தைச் சார்ந்த அரசர்கள் காலத்தில் இப் பொறுப்பு மாற்றம் ஏற்பட்டிருந்தால் அதிக இழப்பு ஏற்பட்டிருக்கும். ஆனால், இக் காலத்தில் இலண்டனில் நடைபெற்று வந்த அரசாங்கம் இந்தியாவைத் தொடர்ந்து கவனிக்கப்பட வேண்டிய நாடாகக் கருதியது. இந்தியாவிற்குச் சிறந்த அலுவலர்களையே அது அனுப்பி வந்தது. முற்காலத்தில் காரன்வாலிஸ் போன்ற சிறந்த அலுவலர்களை இந்தியாவிற்கு அனுப்புவது வழக்கத்திற்கு மீறிய செயலாக இருந்தது. ஆனால், இப்பொழுது அதுவே சாதாரண நிகழ்ச்சியாகக் கருதப்பட்டது. மேலும் அந்த அரசாங்கம், விக்டோரியா பேரரசியார் வாயிலாக இந்திய விவகாரங்களில்

கம்பெனி இயக்குநர்களைக் காட்டிலும் பெருமளவில், அக்கறையைக் காட்டி வந்தது. அந்த அக்கறையை அதனுடைய அமைதிக்கால அரசுப் பணியாளர்களுக்கும், படையினருக்கும், பொது மக்களுக்கும், பேரரசியார் குறிப்பான வகையில் அறிவித்து வந்தார். பழங்காலத்தில் அரசுப் பணியாளர்களிடம் நிலவி வந்த குடும்ப உணர்வினைப் பொறுத்தளவில் பொறுப்பு மாற்றம் ஏற்படுவதற்கு முன்னரே புகுத்தப்பட்ட போட்டித் தேர்வு முறை அவ்வுணர்வை அழிக்கத் தொடங்கியது. இந்திய அரசுப் பணி துறைகள் ஒரு குறிப்பிட்ட வகுப்பினர் மட்டுமே அடங்கிய நிறுவனங்களாக மாறுவதை, இத் திட்டம் தடுத்து நிறுத்தியது. இந்திய அரசு பணித்துறைகளைச் சார்ந்தவர்கள் உடன்பிறப்பாளர்கள் நிலையினைப் பெற்றிருந்தமையால் ஓரளவு நன்மை ஏற்பட்டது என்பது உண்மை. ஆனால், அந்த அளவிற்கு அவை தற்படைப்பாற்றல், துணிவாண்மை ஆகியவற்றை இழந்து இருந்தன என்பதை எவரும் மறுக்க இயலாது. மேலும், பழைய குடும்பங்களைச் சார்ந்தவர்கள் இப் பணித் துறைகளில் இடம் பெறுவதை இது தடுக்கவில்லை. அவர்களில் திறமையற்றவர்களைத்தான் அது ஒதுக்கியது.

கம்பெனி இயக்குநர்கள், இந்தியாவைப் பற்றிய விவரங்களை அறிந்தவர்கள் என்ற வாதம், முன்னரே குறிப்பிடப்பட்ட இந்திய ஆலோசனைக் குழுவினை ஏற்படுத்தி முறியடிக்கப்பட்டது. கம்பெனி இன்னும் நடைமுறையிலிருந்ததால், இந்திய விவகாரங்கள் கட்சிப் பூசலினின்றும் காப்பாற்றப்பட்டன என்ற வாதம் ஒரு காலத்தில் வலிவு பெற்றதாய் இருந்தது. அரசியல்வாதிகள் அலுவலர்களை நியமிக்கும் அதிகாரம் பெற்றிருந்ததால், பிரிட்டிஷ் அரசியலில் மோசடி வகை வெகு சாதாரணமாக இருந்த காலத்தில், அது இந்தியாவிற்கும் பரவ வாய்ப்பு இருந்தது. கடந்த ஐம்பது ஆண்டுகளாக பிரிட்டிஷ் அரசியலின் சிறப்பியல்புகள் மாறிய காரணத்தால், பிரிட்டிஷ் அரசியலில் வெகு நாள்களுக்கு முன்னரே மோசடி வகை அருகிவிட்டது. மேலும் கம்பெனி இயக்குநர்களும் அலுவலர்களை நியமிப்பதில் குற்றமற்றவர்களாய் இருந்தனரில்லை. அன்றாட நிர்வாகத்தில் தலையிடுவதைப்பொறுத்த வரையில், இந்தியாவில் நீக்கப்பட வேண்டிய கடுஞ் சிக்கல்கள் அதிகமாயிருந்த காரணத்தால், எந்தக் கட்சியும், பொறுப்பற்ற தலையீட்டைச் சகித்துக்கொள்ளாத நிலையில் இருந்தது என்பது பொதுவாக உணரப்பட்டது.

மாறுதல் அனைத்தையும் ஒன்று சேர்த்துப் பார்க்கும்போது, இம் மாற்றம் கிழக்கிந்தியக் கம்பெனி அலுவலகத்திற்குரிய தனிப்பட்ட உணர்ச்சியும், இயல்பான தன்மையும், நெருங்கிய உறவுடைய நிலையும் சிறிது அழியக் காரணமாயிருந்தது என்னும் கருத்தை ஏற்றுக்கொள்ள

லாம். ஆனால், புதிதாக ஏற்படுத்தப்பட்ட இந்தியா அமைச்சர் அலுவலகத்தில் (India Office) ஊடுருவிப் படர்ந்திருந்த முற்போக்குக் கருத்து அந்த இழப்பை ஈடு செய்தது. கம்பெனி இயக்குநர்கள் கடைசிவரை பின்பற்றி வந்த வணிகத் தன்மையின் சின்னங்களும், கணக்குப் புத்தக மனப்பான்மையும் முற்றிலும் மறைந்துவிட்டன. புதிய துணிகரமான செயல்களில் ஈடுபட விரும்பாமல், வரி வசூலித்தல், அமைதி நிலைநிறுத்தல் ஆகியவற்றையே தனது வேலையாக இந்திய அரசாங்கம் கொண்டுள்ளது என்ற பழங்காலக் கருத்து ஒதுக்கித் தள்ளப்பட்டது. முகலாயர் காலத்திலிருந்த அமைதியை நாட்டில் ஏற்படுத்துவதையே மீண்டும் மீண்டும் வலியுறுத்தி வந்த காலம் மறைந்தது. பொதுவாக இந்திய அரசாங்கம் தன்னுணர்வுடன், நவீன இந்தியாவை எதிர்நோக்கிச் செயல்படலாயிற்று. மேலும், தங்களுடைய நல்வாழ்வு, கடலுக்கப்பால் இயங்கிவந்த அரசாங்கத்தின் கவனத்திற்குரிய பொருளாக இருந்தது என்பதை இந்திய மக்கள் அறிந்திருந்தனர். அரசரவைகளும், அரசர்களியற்றிய சட்டங்களும் ஒரு காலத்தில் வங்காளியருக்குப் பயங்கரமாகத் தோன்றின. ஆனால், இப்பொழுது அரசியாரும், அவருடைய அறிக்கைகளும், இந்திய மக்களின் அரசப் பற்றின் குவிமையாகவும், அவர்களது நம்பிக்கையின் பிறப்பிடமாகவும் விளங்கின.

இனி இந்தியாவின் நிலையைக் கவனிப்போம். கானிங்கு மேலும் நான்கு ஆண்டுகள் இந்தியாவின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றிருந்தார். அவர் நல்ல உழைப்பாளி; திட்ட நோக்குடையவர்; சிந்தித்துப் பார்க்கும் திறனுடையவர். டல்ஹௌசியிடமும், வெல்லஸ்லியிடமும் காணப்பட்ட ஆட்சித் திறமும், வாரன்ஹேஸ்டிங்ஸ் பெற்றிருந்த ஆழ்ந்த நுண் அறிவுத் திறமும் அவர் பெற்றிருக்கவில்லை. எனினும், அவருடைய நேர்மைக் குணமும், கொள்கையில் திடமான நம்பிக்கையால் விளைந்த நிதானமும், அவரிடம் காணப்பட்ட பெருந் திறமின்மையை ஈடு செய்துவிட்டன. எல்லாவற்றிற்கும் மேலாக அவர் கொண்டிருந்த ஆர்வம், அவருடைய ஆட்சிக்கு அவருக்கே உரிய ஒழுக்கத் தத்துவத்தை அளித்தது. 1857ஆம் ஆண்டு நடைபெற்ற கலகம் தொடங்கியபொழுது அவர் வெகுவாக விளக்கம் பெறவில்லை. ஏனென்றால், அவருடைய குணங்கள் அக்காலத்தின் குறிப்பான தேவைகளுக்கு ஏற்றனவாக இல்லை. துணிவுடையவராகவோ உணர்ச்சியூட்டுபவராகவோ இல்லையென்றாலும், அவர் மன உறுதியுடனும் மேற்கொண்ட காரியத்தில் பற்றுடனும் இருந்தார். தொடக்கத்தில் ஏற்பட்ட நெருக்கடிகளைச் சமாளித்த பிறகு, அவருடைய பெருமை ஒரே சீராக வளர்ந்துவந்தது. அப்போதைய நிகழ்ச்சிகளின் போக்கு அவருடைய அரிய குணங்களை அதிகமாக வெளிக்காட்டியது.

உறுதிகொண்ட எதிர்ப்பாளராகவும், பொறுமையுடன் திட்டமிடுபவராகவும் தொலைநோக்குடைய சமரசவாதியாகவும் மேலும் மேலும் சிறந்து விளங்கினர். தந்நாட்டவரிடம் கொழுந்துவிட்டெரிந்த வெறி உணர்ச்சியை அடக்குவதிலும், தோல்வியின் விளைவாக ஏற்படவிருக்கும் பழிவாங்கும் மனப்பான்மையினை அகற்றுவதிலும் அவரைக்காட்டிலும் அதிகத் திறமை பெற்றவர் எவருமிலர். பின்வருந் தலைமுறையின் காலத்தில் நிலவி வந்த அமைதியான ஒளியில் பார்க்கும் பொழுது கலகக் காலத்தில் அரசாங்கம் மேற்கொண்ட நடவடிக்கைகள் கடுமையாகவே புலப்படுகின்றன. வெறியால் ஏற்பட்ட எழுச்சியை நினைவுப்படுத்திப் பார்க்கும்பொழுதுதான் கானிங்கு, லாரன்சு ஆகியோருடைய சாதனைகளின் அருமை பெருமைகளை அளவிட முடிகிறது. அவ்விருவருடைய சாதனைகளையும், அரிய முயற்சிகளையும் அவர்களுடைய பணிமுறை சாராத கடிதங்கள் போதுமான அளவில் சான்று கூறுகின்றன. பழிவாங்க வேண்டும் என்ற கோரிக்கையை எதிர்த்த காரணத்தால், கல்கத்தாவில் கானிங்குக்குக் 'கருணையுள்ளவர்' என்ற வசைப்பெயர் அளிக்கப்பட்டது. அவரை அவமதிக்க வேண்டும் என்ற எண்ணத்தோடு அளிக்கப்பெற்ற இப் பட்டப் பெயரே பின்னர் ஒப்புக்கொள்ளப்பட்ட சிறப்புப் பட்டமாக மாறியது.

கானிங்கு, பாகுபாடற்ற பழிச்செயல்களுக்கு ஆதரவளிக்க மறுத்தது எவ்வளவு கடினமான செயலாக இருந்ததோ அவ்வளவு பெருந்தன்மையுடையதாகவும், வருங்கால கூர்நோக்குந் தன்மையுடையதாகவும் இருந்தது. ஆனல், அயோத்தியில் அவருடைய நடவடிக்கைகளை விலக்க முடியாத விதிப்பயன் தொடர்ந்து பற்றிக்கொண்டது. அவருடைய 1858ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் பொது அறிக்கையை தாலுக்நார்கள் பறிமுதல் சட்டமாகக் கருதினர்கள். ஆகவே, அவர்கள் கிளர்ச்சி செய்தார்கள். அவ்வாண்டு முடியும்வரை அவர்கள் அம்முறையற்ற போரில் ஈடுபட்டிருந்தனர். இந் நிகழ்ச்சி, எல்லன்பரோ பிரபுவின் மேற்பார்வை சபையின் கடைசித் தலைமைப் பதவிக் காலத்தை முடித்துவிட்டது.[1] கிளர்ச்சிக்குக் காரணமான அறிக்கையைத் திரும்பப் பெறுமல், சர் ஹென்றி மான்ட்கோமரியாரை அயோத்தியின் ஆணையாளராக (Commissioner) நியமித்து, அறிக்கையை அமல் நடத்தும் பொறுப்பை அவரிடம் விட்டு, கானிங்கு குறிப்பிடத்தக்க வகையில் தம்முடைய தவற்றைத் திருத்திக்கொண்டார். அவர் கையாண்ட இணங்குவித்தல் முறையின் விளைவாகவும், சொத்து உரிமையைத் திருப்பிக் கொடுத்ததன் மூலமாகவும் அநேக தலைவர்கள்

[1] எல்லன்பரோ பிரபு மந்திரி சபையை ஆலோசிக்காமல் பொதுப்பணி சார்ந்த அஞ்சல் விடுகையில் அப் பொது அறிக்கையினைக் கண்டித்தார்.

அடங்கி, தங்களுடைய நிலங்களைத் திருப்பிப் பெற்றனர். 1858ஆம் ஆண்டு நவம்பர் மாதம் முதல் தேதியன்று இந்தியா முழுவதற்கும் விடப்பட்ட அரசியாரின் பொது அறிக்கை ஒரு புதிய காலத்தின் தொடக்கத்தைக் குறித்துக் காட்டியது. ஆட்சி அதிகாரத்தைப் பெற்றிருப்பினும், இந்திய மக்களின் நட்பினை நாடும் வகையில் ஆங்கில அரசு பணியாற்றுதற்குரிய சூழ்நிலை உருவாகி வர இது உதவியது. மேலும், தம்முடைய அரசு கருணையுடனும் நியாய உணர்ச்சியுடனும் நடந்துகொள்ளும் என்றும், பொது நல முன்னேற்றத்தில் கவனம் செலுத்திப் பணியாற்றும் என்றும் பேரரசியார் உறுதி அளித்தார்.

நிர்வாகப் பொறுப்பு கம்பெனியாரிடமிருந்து அரசாங்கத்தின் கைக்கு மாறியது. இந்தியாவைப் பொறுத்தவரையில் இது பெயரளவில் ஏற்படுத்தப்பட்ட மாற்றமாகவே காணப்பட்டது. அரசாட்சி பெரும்பாலும் முன்போலவே நடைபெற்று வந்தது. அதே அலுவலர்கள் தாம் அதனை நடத்தி வந்தனர். எனினும், மத்திய அரசைப் பொறுத்தவரையில் ஆட்சி முறையைச் சார்ந்த மாற்றங்கள் அதிகமாகவே இருந்தன. மேலும் ஆட்சிக் கொள்கையில் ஏற்படுத்தப்பட்ட மாற்றங்கள் இன்னும் குறிப்பிடத்தக்க முறையில் அமைந்து இருந்தன. பெரும் கிளர்ச்சிக்குக் காரணமான தவறுகளை எவ்வாறு நீக்குவது என்பதே அதனுடைய ஒவ்வொரு நடவடிக்கையின் கடந்தகால குறைபாடுகளைச் செம்மைப்படுத்தும்போது நோக்கமாக இருந்தது. நிகழ்காலத் தேவைகள் பொதுவாகப் புறக்கணிக்கப்படுவதுண்டு. அவ்வாறே கிளர்ச்சிக்குக் காரணமான குறைபாடுகளைப் போக்க ஆர்வத்துடன் செயலாற்ற முற்பட்டபோது பிரிட்டிஷ் அரசு அக்காலத்திய தேவைகளை முற்றிலும் மறந்து விட்டது என்று கூறலாம். இவ்வாறாக அரசாங்கம் வளர்ச்சியடைந்து வரும் புதிய சமுதாயக் கூறுகளைத் தன்னுடன் இணைப்பதைக் கைவிட்டு பழைய மக்கள் பிரிவுகளைச் சமாதானப்படுத்துவதில் தன்னுடைய கவனத்தைச் செலுத்தியது. இவ் வகுப்புகளின் அரசுப்பற்று ஐயத்திற்கு இடமற்ற வகையில் மிகவும் குறிப்பிடத்தக்கதாய் அமைந்து இருந்தது. பிற்காலத்தில் அவர்கள் புறக்கணிக்கப்பட்டதால் அவர்கள் அதிருப்தி அடையத் தொடங்கினர்.

என்றாலும், அப்போதைக்குப் புதிய நடவடிக்கைகள் சமரசம் உண்டுபண்ணுவனவாகவும் அறிவிற்குப் பொருந்தியனவாகவும் தோன்றின. கவர்னர்-ஜெனரல் தமக்குரிய சட்ட முறையான பட்டத்தைத் தொடர்ந்து வைத்திருந்தார். அரசியாரின் பிரதிநிதி என்ற காரணத்தால் அரசப் பிரதிநிதி என்ற மதிப்பு வழக்குச் சொல்

அவருடைய பட்டத்துடன் சேர்க்கப்பட்டது. இதனால் நெருங்கிய உறவுடைய நிலையிலும், ஆடம்பரத்திலும் நன்மையே ஏற்பட்டது. ஏனென்றால், கவர்னர்-ஜெனரல் தனித் தன்மை பெற்ற வணிகக் குழுவின் தற்காலிகப் பொம்மைத் தலைவராக இல்லாமல், அரசியாரின் தனிப்பட்ட பிரதிநிதியாகப் பணியாற்றிவரலாயினர். கவர்னர்-ஜெனரல் செயலாளர்கள் துணைகொண்டு செயல்புரியும் பணித்துறை ஆட்சியாளராக இருக்கவேண்டும் என்று முதலில் யோசனை கூறப் பட்டது. ஆனால், இதைவிட மேலான கருத்துரை வென்றது. 1861ஆம் ஆண்டின் இந்தியக் கவுன்சில்கள் சட்டப்படி நிர்வாகக் குழு (Executive Council) நிலையாக வைக்கப்பட்டது. மேலும் நிர்வாகக் குழுவின் சாதாரண உறுப்பினர்கள் எண்ணிக்கை நான்கிலிருந்து ஐந்தாக உயர்த்தப்பெற்றது. இவர்களன்றி முதற் பெரும் படைத் தலைவர் சிறப்பு உறுப்பினராக அக் குழுவில் தொடர்ந்து இருந்து வந்தார். ஆனால், அவர் அக் குழுக் கூட்டங்களில் அடிக்கடி கலந்து கொள்வதில்லை. அமைச்சர் பொறுப்பு பங்கீடு முறை (இலாகா முறை) (Portfolio System) கையாளப்பெற்று வந்தது. முன்பு ஒவ்வொரு பிரச்சினை எழும்போது அதனுடைய ஒவ்வோர் உறுப்பினருக்கும் குறிப்பிட்ட துறைகளைக் கவனிக்கும் பொறுப்பு அளிக்கப்பட்டது. இதற்கு முன்னர் நிர்வாகக் குழு உறுப்பினர்கள் அனைவரும் ஒன்றாக அமர்ந்து எல்லாப் பிரச்சினைகளையும் விவாதித்து வந்தனர். சாதாரண மாக அங்கத்தினர்களுடைய பரிசீலனைக்குப் பிறகு மேற்கொள்ள வேண் டிய நடவடிக்கைகள் பற்றிய விவரங்கள் அரசப்பிரதிநிதிக்கு நேரடியாக அனுப்பப்பட்டன. பொதுவான உட்கருத்தடங்கிய அல்லது சந்தேகத் திற்குரிய, அல்லது ஆய்வுக்குரிய பிரச்சினைகள் மட்டுமே முடிவுக்காகக் குழுவின்முன் வைக்கப்பட்டன. அதன் பயனாக அரச காரியங்கள் விரைவாகவும் எளிதாகவும் நிறைவேற்றப் பெற்றன. மத்திய அரசின் அமைப்பு இவ்வாறாகத் தன்னுடைய தற்கால அமைப்பைப் பெறத் தொடங்கியது. நிதி போன்ற குறிப்பிட்ட துறைகளைக் கவனிக்க நிபுணர்களை அமர்த்த அந்த அமைப்பு முறை உதவியது. துறைத் தலைவர்களடங்கிய குழுவின் தலைவராகப் பணியாற்றிய கவர்னர்-ஜெனரலின் நிலை பிரதம மந்திரியின் நிலையை ஏறத்தாழ ஒத்திருக்கத் தொடங்கியது. ஆனால், விலக்குச் செய்யும் அதிகாரத்தை அவர் தொடர்ந்து பெற்றிருந்த காரணத்தால் அவர் நிலை சுயேச்சை அதிகாரம் பெற்ற சட்டசபையின் கட்டுக்கு உட்படுத்தப்பெறாத அமெரிக்க ஜனாதிபதியின் நிலையைக் கிட்டத்தட்ட ஒத்திருந்தது.

1853-ல் தொடங்கப்பட்ட சட்டசபை அநேக வகையில் மாற்றப் பட்டது. வெஸ்ட்மினிஸ்டரில் இயங்கிவந்த பார்லிமென்டின் நிகழ்ச்சி முறையையும், மூலக்கோட்பாட்டினையும், முன்மாதிரியாகக் கொண்டு

டல்ஹௌசியின் கீழ் நீதிபதிகள் இருவரும், மாகாணப் பிரதிநிதிகள் நால்வரும் ஒன்றுசேர்ந்து சிறிய அளவில் பாராளுமன்றம் ஒன்றினை அமைத்திருந்தனர். இப்பொழுது அவர்களுக்குப் பதிலாக ஆறு முதல் பன்னிரண்டுக்கு உட்பட்ட கூடுதலான அங்கத்தினர்கள் நியமிக்கப் பட்டனர். இவ்வுறுப்பினர்களை இரண்டு ஆண்டுகளுக்கு கவர்னர்-ஜெனரல் நியமித்தார். அவர்களுள் அரசு பணித்துறை சாராதவர் களின் எண்ணிக்கை பாதிக்குக் குறையாமல் இருக்க ஏற்பாடு செய்யப் பெற்றது. அவர்களைத் தேர்ந்தெடுப்பதற்கான முறையேதும் வரை யறுக்கப்படவில்லை. ஆனால், நடைமுறையில் இந்தியர்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டுமென்ற டல்ஹௌசியின் விருப்பம் இந்த ஏற்பாட்டின் வாயிலாக நிறைவேற்றப்பட்டது. அதே சமயத்தில் அதனுடைய அதிகாரங்கள் அச் சபைக்கு இடையூறு விளைவிக்கும் அளவிற்குத் தனித்தியங்கும் தன்மையை அளித்தன என்று கானிங் கண்டறிந்தார்.[1] ஆகவே, அதன் ஆய்விற்கெனக் கொண்டு வரப்படும் குறிப்பிட்ட நடவடிக்கைகளில் மட்டுமே அதனுடைய அதிகாரங்களைப் பயன்படுத்த இப்பொழுது ஏற்பாடு செய்யப்பட்டது. இதன் பயனாக மத்திய அரசாங்கம் மக்களிடமிருந்து ஒதுங்கி நிற்கும் நிலை குறையும் என்று கருதப்பட்டது. மேலும், மாநில அலுவலர்கள், நீதிபதிகள் ஆகியோர் துணைகொண்டு சட்டமன்றத்தில் அரசாங்கத்திற்கு எதிராக அமைக்கப்பட்டிருந்த போலி எதிர்க்கட்சி இப்பொழுது நீக்கப்பட்டது. அதே நேரத்தில் சென்னைக்கும் பம்பாய்க்கும் மாநில அளவில் சட்ட மியற்றும் அதிகாரங்கள் திருப்பிக் கொடுக்கப்பட்டன.

புதிய அமைப்பின் அடுத்த திட்டம் அரசாங்க நிதிபற்றியதாகும். இதுவரை இந்திய அரசாங்கத்தின் நிதி பற்றிய விவகாரங்களை கவர்னர்-ஜெனரலும் அவருடைய சபையும் சேர்ந்து கவனித்து வந்தனர். 1857ஆம் ஆண்டு நடைபெற்ற கலகம், சில வருமான வழிவகைகளைப் போக்கியும், புது செலவுகளை ஏற்படுத்தியும் இந்திய அரசாங் கத்தின் பழைய கடன் தொகையுடன் நான்கு கோடியே இருபது இலட்சம் பவுன்களைக் கூட்டி, அதனுடைய மொத்தக் கடன் தொகையை ஒன்பது கோடியே எண்பது இலட்சம் பவுன்களாக உயர்த்திவிட்டது. 1859-60ஆம் ஆண்டுகளில் எழுபது இலட்சம் பவுன்களுக்கு மேல் இந்திய அரசாங்க வரவு செலவுத் திட்டத்தில் பற்றாக்குறை ஏற்பட்டது. மொகலாயர்கள் ஆண்ட காலத்தில் நிலவி வந்த தன்னிறைவு பெற்ற சிற்றூர்க்குரிய பழைய பொருளாதார முறையைக் கைவிட்டு, இந்தியா, உலகப் பொருளாதார விளைவுகளின் எல்லைக்குள் ஒரே சீராகச் சென்றுகொண்டிருந்தது. அடக்கியாளும் முறைகள், முயற்சியின்றி நலம் தானே வரும் என்ற கருத்தை

[1] இந்த வகையில் நீதிபதிகள் அதிகத் தொல்லை தருபவர்களாகக் கருதப்பட்டனர்.

அடிப்படையாகக்கொண்ட பொருளாதாரக் கொள்கைகள் ஆகியவற்றை விட மேலான முறைகளைக் கையாள வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அரசப் பிரதிநிதியின் சபையில் ஏற்படுத்தப்பட்ட புதிய பதவிக்கு ஜேம்ஸ் வில்சன் என்ற பொருளியல் நிபுணர் 1859-ல் நியமிக்கப்பெற்ருர். அவர் கல்கத்தாவை வந்தடைந்ததற்கும் அவர் இறப்பதற்கும் இடையே இருந்த ஒன்பது மாத காலத்தில் நிதிநிலைமையைப் பற்றிய நிருவாகத்தைச் சீர்படுத்திஞர். குறிப்பிடத்தக்க சிக்கன முறைகளை அறிவித்தார். ஐந்தாண்டுகளுக்கு வருமான வரியொன்றை விதித்தார். வருடாந்தர வரவுசெலவுத் திட்டங்களையும், பொதுக்கணக்கு பற்றிய அறிக்கைகளையும் சமர்ப்பிக்கும் நடைமுறை ஒழுங்கைப் புகுத்திஞர். அவரைப் பின்தொடர்ந்த சாமுவேல் லேய்ங் முழுமையாய் நிறைவேற்றி வைத்த அவருடைய வேலைகளுள் 10 சதவீதம் ஒரே வகையான சுங்க வரி விதித்தல் மாற்றிக் கொள்ளக்கூடிய காகித நடப்பு நாணயம் ஒன்றை ஏற்படுத்துதல், உப்பு வரியை உயர்த்தல் முதலியவை குறிப்பிடத் தக்கனவாகும். இந்தியாவின் பெரும் உற்பத்தி சாதனங்களை நன்குணர்ந்த லேய்ங் 'இந்திய அரசினரின் ஆண்டு வருவாய் உண்மையிலேயே நம்பிக்கையும், நெகிழ்திறமும் வியக்கத்தக்க வகையில் பெற்றிருக்கிறது' என்ற உண்மையை வற்புறுத்திஞர். இக் கருத்து பழைய கருத்தினின்றும் முற்றிலும் மாறுபட்டிருந்தது. இக் கருத்தைப் பிற்கால நிகழ்ச்சிகள் தெளிவுபடுத்துகின்றன. மேற்கூறிய வழிவகைகளின் உதவியாலும், செம்மையான பருவ காலங்களின் துணையாலும், ஆண்டுதோறும் ஏற்பட்ட பற்ருக்குறை 1864-ல் மறைந்துவிட்டது. வில்சன், லேய்ங் ஆகியோருடைய சாதனைகள் வாயிலாகத் தற்கால இந்தியாவின் நிதி நிருவாக முறை தொடங்கிவைக்கப்பட்டது.

ஆட்சியாளரின் கவனத்தின்கீழ்க் கொண்டுவரப்பட்ட அடுத்த திட்டம் நிலத்தைப் பற்றியதாகும். நிலையான நிலவரி ஏற்பாட்டின் கீழ் கொண்டுவரப்பட்ட வங்காளத்திலுள்ள பயிரிடுவோரின் நிலை வெகு நாளாக கவலைக்கிடமானதாக இருந்தது. முயற்சி ஏதுமின்றி நிலம் தானுக அடையும் ஆதாய வளர்ச்சியின் மதிப்பையும், பயிர்த் தொழில் பெருக்கத்திஞல் ஏற்படும் அதிக வருவாயையும், இத்திட்டம் ஜமீன்தார்களுக்கே கொடுத்தது. மேலும் அது பயிரிடுவோரை நடைமுறையில் முன்னறிவிப்பின்றி வெளியேற்றக்கூடிய மானியதாரராக மாற்றிவிட்டது.[1] 1859-ல் இந்தத் தீமை வங்காள நிலவரிச் சட்டத்தைக் கொண்டு திருத்த முயற்சி செய்யப்பட்டது. இச் சட்டம்

[1] 1858-ல் இயக்குநர்கள் குழு பின்வருமாறு அறிவித்தது : வங்காள குடியானவர்களுடைய உரிமைகள் சந்தடியின்றி மறைந்துவிட்டன. மேலும், அவர்கள் முன்னறிவிப்பின்றி வெளியேற்றப்படக் கூடிய நிலையிலுள்ள மானியதார்களாக மாறிவிட்டனர்.

வடமேற்குப் பாகம் முழுவதிலும்[1] வங்காளத்திலும் செயற்படுத்தப் பட்டது. 12 ஆண்டுகள் தங்களுடைய கையாட்சியில் நிலம் இருந்து வந்தது என்று சான்றுறுதி செய்யும் பயிரிடுவோர் அனைவருக்கும் நில உடைமையாட்சி உரிமைகள் வழங்கப்பட்டன. குடிவாரம் உயர்த்து வதையும் இது கட்டுப்படுத்தியது. இச்சட்டம் முழு வெற்றியடைந் தது என்று கூற முடியாது. மேலும் அது அநேக வழக்குகளைத் தூண்டி விட்டது. எனினும், இதனைக் குடியானவர்களுடைய உரிமை சாசனம் (Magna Carta) என்று விவரிப்பது மிகையென்றாலும், பெரும் ஜமீந் தார்கள், தாலுக்தார்கள் ஆகியவர்களுடைய சூழ்ச்சிகளினின்றும் அது குடியானவர்களைக் காப்பாற்றும் வகையில் மேற்கொள்ளப்பெற்ற குறிப் பிடத்தக்க திட்டமாகக் காணப்படுகிறது. பிறகு மற்றொரு விவாதத் திற்குரிய கேள்வி எழுப்பப்பட்டது. அதாவது சென்னையில் சில இடங்களிலும், வடமேற்கு மாகாணங்களிலும் செயற்படுத்தப் பெற்று வரும் நிலையான நிலவரித் திட்டத்தை இந்தியா முழுவதிலும் பரப்ப வேண்டுமென்பதேயாகும். பெரும் நிலப் பகுதிகளைப் பயிரிடுவோர்கள் இப் புது நிலவரிச் சட்டத்தின் வாயிலாகக் காப்பாற்றப்பட்டு வருகின் றனர் என்ற கருத்து நிலவி வந்தது. மற்றப் பகுதிகளிலும் நிலையான நிலவரித் திட்டம் கொண்டுவரப்பட்டால், இரயத்துவாரி அல்லது நேர் குடிவாரத் திட்டம், கிராமத் திட்டம் ஆகியவற்றின் கீழ் வரி தீர்மானிக் கப்பட்ட குடியானவர்கள், முயற்சியின்றி நிலம் அடையும் ஆதாய வளர்ச்சியின் மதிப்பையும், அதிகப்படியான பயிர்த்தொழிலினால் ஏற்படும் வருவாய்ப் பெருக்கத்தின் முழு மதிப்பையும், அடையக்கூடும் என்று கருதப்பட்டது. அளவு மீறிய வரித் தீர்மான முறையோடு பஞ்ச காலத்தில் ஏற்படும் இறப்பு வீதம் இணைக்கப்பட்டிருக்கிறது என்று வாதாடப்பட்டது. குடியானவர்கள் மிகச் சிறிய அளவில் பணம் மிச்சப்படுத்தி வருவதால் பஞ்ச காலங்களில் அவர்களுக்கு உதவக்கூடிய சேமிப்பு நிதியை ஏற்படுத்த முடியாமல் போகிறதல்லவா? இந்தக் கருத்து இந்தியாவில் சர். பார்ட்லி ப்ஃரியர், சாமுவேல் லேய்ங், இங்கி லாந்தில் சர். ஜான் லாரன்சு ஆகியவர்கள் உட்பட அநேகருடைய பேராதரவைப் பெற்றது. 1862-ல் சர். சார்லஸ் உட் அவர்களும் அதனைக் கொள்கையளவில் ஏற்றுக்கொண்டார். ஆனால், அதனைச் செயற்படுத்தும் முயற்சி முதலில் ஒத்திப்போடப்பட்டது. கடைசியில் அம் முயற்சி கைவிடப்பட்டது. நிலவரித் தீர்மான வேலைகளில் உண்டான அதிகரித்த செயல்திறமும், வங்காள நிலவரிச் சட்டம் அடைந்த அரைகுறையான வெற்றியையும் ஒன்று சேர்ந்து நடவடிக் கைகளை நிறுத்தும் அளவிற்குப் பலமான சந்தேகங்களை எழுப்பின. பஞ்சப் பிரச்சினைக்கு உண்மையான விடை பிற்காலத்தில்தான் வர விருந்தது.

1 பஞ்சாப், அயோத்தி இவைகளைத் தவிர.

மனநிறைவுடைய குடியானவர்களைப்பற்றிய தீர்வுக்குரிய விறு விற்குப் பிறகு, அதிருப்தி நிறைந்த சிற்றரசர்களின் பிரச்சினைகள் கவனிக்கப்பட்டன. லாப்ஸ் கொள்கையை அப்படியே செயல்படுத்திய தாலும், தொடர்ந்து பல பகுதிகளை ஆங்கிலேய அரசுடன் இணைத்துக் கொண்டதாலும் ஏற்பட்ட வருத்தம் 1857ஆம் ஆண்டு தொடங்கிய கிளர்ச்சிக்கு குறைந்தது ஒரு துணையுதவி செய்கிற காரணமாகவாவது இருந்ததல்லவா? அதே நேரத்தில் நிஜாம், அவருடைய மந்திரியான சர். சலார்ஜங்கு, சிந்தியா, அவருடைய அமைச்சரான சர். தின்கர் ராவ், இராஜபுத்திர தலைவர்கள், சீக்கியத் தலைவர்கள் ஆகியோருடைய அரசாங்க பற்று பெருமளவில் காணப்பட்டது. நன்றியறிவுடைய தலைவர்கள் பட்டங்கள், பரிசுப் பணம் அல்லது நிலம் பெற்றுப் பலன டைந்தார்கள். ஆனல், அதைவிடக் குறிப்பிடத்தக்கது அப்பொழுது முறைப்படுத்தப்பட்ட ஆட்சிக் கொள்கையாகும். கானிங்கு சிற்றரசர் களை 'ஒரு பெரிய அலையைக்கொண்டு நம்மை விழ்த்திச் செல்லவிருந்த புயலின் இடையே அமைக்கப்பட்ட அலைதாங்கிகள்' என்று குறிப் பிட்டார். இது முதற்கொண்டு தங்கள் அழிவை எதிர்நோக்கப் பிறர் ஆதரவில் இருக்கும் தலைவர்கள் அல்லது இந்திய மக்களின் பெரும்பகுதி யினர் செல்லுகின்ற வாழ்க்கைப் பாதையினின்றும் விலகி வாழும் சுதந்திர ஆட்சியாளர்கள் என்று அவர்களைக் கருதுவதைவிட பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கட்டுக்கடங்கிய கூட்டாளிகள் என்று குறிப்பிடத்தக்க வர்களாய் இருந்தனர். இப் புது கோட்பாட்டினைச்செயலாக்க எடுத்துக் கொண்ட முதல் நடவடிக்கை, அரசியாரே ஆட்சிப்பொறுப்பை ஏற்றுக் கொண்ட நிகழ்ச்சியாகும். எல்லா இராச்சியங்களும் மொகலாயர் காலத்தில் இருந்ததுபோல, மேதகவான அரச அதிகாரத்திற்குட்படுத்தப் பட்டன. கம்பெனியுடைய ஆதிக்கம் முன்பு தெளிவாக வற்புறுத்தப் படவில்லை. ஆனல், இப் புது இணைப்பு வரையறுக்கப்பட்டும், தனித் தன்மையுடையதாகவும் இருந்தது. மேலும் இந்த நடவடிக்கை இரண்டு குறிப்பான கருத்துகளை உட்கொண்டிருந்தது. முதலாவதாக இந்தியச் சிற்றரசர்கள் ஆங்கிலப் பேரரசின் பிரிக்க முடியாத கூறு களாய் இருந்தமையால், ஒழித்துக்கட்டி விட வேண்டுமென்ற நோக்கத் துடன் புறக்கணிக்கப்படாமல், காத்து ஆதரிக்கப்பட வேண்டியவர் களாய் கருதப்பட்டனர். அவர்களுடைய இராச்சியங்களுக்குக் காப் புறுதி அளிக்கப்பட்டது. சுவீகார உரிமைக்கு இசைவு கொடுக்கப் பட்டது. இரண்டாவதாக மேதகத்தன்மை பெற்ற காரணத்தால் ஆங்கிலேய அரசாங்கம் அவ்வரசர்களுடைய விவகாரத்தில் தலையிடும் உரிமைபெற்றது ஆங்கிலேய அரசாங்கம், அவர்களுடைய காப்பாளர் என்ற நிலையில் அவர்களின் நன்னடத்தையை வற்புறுத்தி வர ஏது வாயிற்று. கம்பெனியானது தற்பெருமையுடன் அவர்களினின்றும் விலகி நின்று அவர்களைப் புறக்கணித்த காரணத்தால், மேற்கூறியவாறு

செயலாற்றுவதற்குத் தேவையான திறமை பெற்றிருக்கவில்லை. பல்வேறு இராச்சியங்களில் வாழ்ந்து வந்த பிரிட்டிஷ் அரசின் (ரெஸிடெண்டுகளின்) பிரதிநிதிகளின் செல்வாக்கு அவ்விடங்களில் நல்லாட்சியை வளர்க்கப் பயன்படுத்தப்பட்டது. முன்பிருந்த வழக்கத்திற்கு மாருக இப்பொழுது சிற்றரசர்களின் சீர்கேடான நிருவாகம் பேரரசின் கவனத்தின்கீழ் கொண்டுவரப்பட்டது. முன்போல் அவர்களுடைய இராச்சியங்களைப் பேரரசுடன் இணைத்துக்கொள்ளாமல், அவைகளைச் சில காலம் ஆங்கிலேய ஆட்சியின்கீழ் கொண்டுவர முடிந்தது. சிற்றரசர்கள், தங்களுடைய விவகாரங்களில் அக்கறைகொள்ளுமாறு தூண்டப்பட்டனர். சாலைகளையும் இருப்புப் பாதைகளையும் அமைத்தல், கல்வி, நவீன தொழில்கள் ஆகியவற்றை வளர்த்தல் போன்ற நடவடிக்கைகள் வாயிலாகத் தங்களுடைய இராச்சியங்களில் மேற்கத்திய செல்வாக்குகள் புகுவதற்கு வேண்டிய வழிவகைகளைச் செய்யுமாறும் தூண்டப்பட்டனர். இவ்வாருகச் சிற்றரசர்களடங்கிய பிரிட்டிஷ் இந்தியா ஒருமைப்பாட்டை அடைய முதல் வழிவகை செய்யப்பட்டது. நம்பிக்கையூட்டுகிற தொடக்கத்திற்குப் பிறகு அந்த நடவடிக்கை பாதியிலேயே நிறுத்தப்பட்டது. அது அந் நடவடிக்கையை மேற்கொள்ள வேண்டி தொடக்கப்பெற்ற முயற்சியின் தவறன்று. தனித்தனி அரசர்களின் திரள்கூளமாக விளங்கிய சிற்றரசர்கள் இப்பொழுது புது நிர்வாகத்தில் அக்கறை கொண்டுள்ள ஒழுங்கு அமைப்பாக மாறினர்.

(வங்காளப்படை எல்லா வகைகளிலும் திருத்தி அமைக்கப்பட இருந்தது. 1,28,000 இந்தியர்களைக்கொண்ட வங்காளப் படையில் சுமார் 12,000 பேர் கிளர்ச்சியில் சேர்ந்திருந்தனர்.) அவர்களில் பலர் கொல்லப்பட்டனர். எஞ்சியோர் சிதறடிக்கப்பட்டனர். கலகத்தில் சேராத 11 படைக் கூறுகளும், மற்றப் படைகளில் எஞ்சிய பாகங்களும், படைத் துறை ஒழுங்குமுறை சாராத சில படைப் பிரிவுகளும், சுமார் 16,000 பேர் கொண்ட ஐரோப்பியச் சேனையும்தான் இப்பொழுது எஞ்சி இருந்தன. இவ்வாருக வங்காளப் படை முற்றிலும் மறைந்துவிட்டது.) நிற்க, மூன்று மாகாணங்களின் படை அமைப்பு முறை கிளர்ச்சி தென்புறம் பரவாமல் தடுக்க உதவியாயிருந்தது. ஏனென்ருல், ஒவ்வொரு படை தனித்தனி கருத்து நம்பிக்கைகளையும், குழு மதிப்புணர்ச்சியையும் வளர்த்திருந்தது. பம்பாய்ச் சிப்பாயிடம் சாதி பற்றிய சிக்கல்கள் மதிப்புப் பெறவில்லை. சென்னைச் சிப்பாயின் மனநிலை வட இந்திய பிராமணர்களின் மனநிலைக்கு மாறுபட்டதாயிருந்தது. ஆகையால், செயல்முறையிலிருந்த மூன்று மாகாணப்படை அமைப்பு முறை, மைய ஆட்சி முறை அமைப்பில் ஒரு முறைகேடாகக் கருதப்பட்டபோதிலும், நிலையாக வைக்கப்பட்டது. 1895-ல் இந்த மூன்று படைகளும் ஒன்றுசேர்க்கப்பட்டு ஒரே பெரும் படைத்தலை

வரின் கீழ்ப் பணியாற்றும் இந்தியப்படையாக மாற்றப்பட்டன. முற்காலத்தில் இருந்த தனித்தியங்கும் படைகளுக்குப் பதிலாகத் தனித் தலைவரின் அதிகாரத்துக்குட்பட்ட படைப் பிரிவுகள் ஏற்படுத்தப் பட்டன.

புனரமைப்பின்போது விடுவிக்கப்பட வேண்டிய முதல் சிக்கல் கம்பெனியினுடைய ஐரோப்பியப் படைக்கூறுகளைப் பற்றிய முடிவாகும். கம்பெனியினுடைய ஆட்சி அழிந்தவுடன் அவை தாமாக அரசாங்கத்தின்கீழ் வந்தன. அக்காரணத்தால் அவற்றைக் கலைக்க வேண்டிய நிலை ஏற்படவில்லை. மேலும், கானிங்கு இந்தியாவில் ஐரோப்பியப் படையொன்றை வைத்திருக்க விரும்பினர். எல்லாப் படைக் கூறுகளையும் ஒன்று சேர்த்துவிட ஆங்கிலேய அரசாங்கம் முடிவு செய்ததால், அவருடைய யோசனை நிராகரிக்கப்பட்டது. எல்லா அணியிலிருப்பவர்களுக்கும் புதிய நிபந்தனைகளின் பேரில் உத்தி யோகங்கள் அளிக்கப்பட்டன. ஆனால், இவை அதிருப்தியை உண்டாக்கின. ஏனென்றால், அவர்களில் அநேகர் இந்தியாவில் குடும்பங்களை ஏற்படுத்திக் கொண்டதால், அவர்கள் இங்கிலாந்துக்கு மாற்றலாகிவிட்டால் தங்களுடைய குடும்பங்களோடு ஏற்பட்டிருந்த தொடர்புகள் முறிந்துபோகும் என்று பயந்தனர். மேலும் உயர் பதவியில் உள்ளவர்கள் அரசியார் படையில் வசதியாக வாழ முடியாது என்று கருதினர். படைத் துறை விடுவிப்புப் பெற்ற சுமார் 10,000 வீரர்களுக்குப் பணிக் கொடைகளைக் கொடுத்தும், உயர் அதிகாரி களுக்கு இந்திய இராணுவத்தில் வேலை கொடுத்தும் வெள்ளைப்படை கலகம் என்ற பெயரால் அழைக்கப்படும் இக் கிளர்ச்சி முடிவில் அடக்கப்பட்டது.

இந்தியப் படைப் பகுதி, புதிய ஒழுக்க முறைகளைக் கொண்டு திருத்தி அமைக்கப்பட்டது. கிளர்ச்சிக்கு முன், மூன்று மாகாணங் களிலும் சேர்த்து 45,000 ஐரோப்பியர்களுக்கு சுமார் 2,38,000 இந்தி யர்கள் இராணுவத்தில் இருந்தனர். இப்பொழுது இந்தியருக்கும் ஐரோப்பியருக்கும் உள்ள விகிதம் வங்காளப்படையில் ஐம்பதுக்கு ஐம்பதாகவும், மற்றிரு படைகளில் இரண்டுக்கு ஒன்று விதத்திலும் அமைக்கப்பட்டது. 1863-ல் புனரமைப்பு முடிவுற்றபோது, இந்திய துருப்புகள் 1,40,000 ஆகவும், ஐரோப்பியர்கள் 6500 ஆகவும் இருந்தனர். கிளர்ச்சிக்காரர்களிடத்தில் மிகப் பலம் பொருந்தியதாகக் காணப்பட்ட இந்திய பீரங்கிப் படையினைக் (ஒரு சில மலைப் பீரங்கிப் படைத் தொகுதிகளைத் தவிர) கலைத்ததிலிருந்து அரசாங்கத்தின் எச்சரிக்கையுணர்ச்சி நன்கு புலப்படுகிறது. 18ஆம் நூற்றுண்டில் நடைமுறையிலிருந்த எல்லா வகுப்பினர்களைக் கொண்ட கலப்பு முறை

இராணுவப் பிரிவுகளை மீண்டும் அமைக்க வேண்டும் என்று சிலர் கூறினர்கள். ஆனால், பழக்க நம்பிக்கையோ அல்லது தொலை முன்னேக்கோ வெற்றி பெறவில்லை. ஆகவே, சமுதாயப் பிரிவுகளை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்ட சமுதாய இராணுவ முறை கைக்கொள்ளப்பட்டது. எஞ்சியுள்ள அக்காலப் பகுதியின் இறுதி வரைக்கும் அம்முறை நீடித்திருந்தது. இரண்டு இந்தியப் போர் அணிப் பிரிவுகளும், ஓர் ஐரோப்பிய பிரிவும் ஒன்றுசேர்க்கப் பட்டு ஒரு 'பிரிகேட்' என்கிற பிரிவாக அமைக்கப்பட்டன. அதனுல் ஐரோப்பியத் துருப்புகள் இல்லாத முக்கியப் படைநிலை எதுவுமில்லை என்று கூறலாம். முன் போலவே இந்திய இராணுவப் பிரிவுகள் ஐரோப்பியர்களை ஆணையர்களாகக் கொண்டிருந்தன. பல்வேறு வகுப்புகளினின்றும் படையில் சேர்க்கப்பட்ட ஆள்களின் வீதத்தில் ஒரு மாறுதல் செய்யப்பட்டது. இராஜபுத்திரர்கள், ஐக்கிய மாகாணத்தைச் சேர்ந்த பிராமணர்கள் ஆகியவர்களின் எண்ணிக்கை குறைக்கப்பட்டது. கூர்க்காக்கள், சீக்கியர்கள், பஞ்சாபிகள் ஆகியோரின் எண்ணிக்கை அதிகமாக்கப்பட்டது. பிற்காலத்தில் இம் முறை வடமேற்குப் பகுதியிலுள்ள விரமிக்க இனத்தவர்களுக்குச் சாதகமாகவும், தென்பகுதி மக்களுக்குப் பாதகம் ஏற்படும் வகையிலும் விரிவுபடுத்தப்பட்டது. 1893ஆம் ஆண்டு முதல் பத்தானியர், சீக்கியர், பஞ்சாபியர் ஆகியோர் அடங்கிய பிரிவுகளின் எண்ணிக்கை தென்னிந்தியர்களுடைய ஆதாய வளர்ச்சிக்குத் தீங்கு விளைவிக்கும் வகையில் அதிகமாக்கப்பட்டது. 1910-க்குள் சென்னை மாகாணத்தி னின்று பதின்மூன்று படைப் பிரிவுகளுக்குத்தான் ஆள்கள் சேர்க்கப் பட்டனர்.[1] தெற்கில் பெரியதோர் இராணுவப் படையை நிறுத்தி வைக்க வேண்டிய நிலை ஏற்படவில்லை என்பது உண்மையே யாகும். மேலும், வடக்குக் கணவாய்களைப் பாதுகாப்பதில் தென்னிந்தியரை விட வட இந்தியர்கள் தகுதி வாய்ந்தவர்களாயிருந்தனர். இதன் விளைவாக இந்தியப் படை தேசியப் பண்பில் குறைவாகக் காணப் பட்டது என்று சொல்ல முடியாதென்றாலும், அதன் அமைப்பில் பிரதி நிதித்துவம் குறைந்தே காணப்பட்டது. மேலும், நாட்டின் வாழ்வி னேடு ஒன்றுபடாமல் தொழிலுக்குரிய தனிநிலைத் தன்மையினையும் பஞ்சாப் பிரதேசத்தின் போர் விருப்பத் தன்மையினையும் இந்தப் புதிய ஏற்பாடு உரம்பெறச் செய்தது.

டல்ஹௌசி விடாமுயற்சியோடு பின்பற்றிய சமூக, பொருளா தார முன்னேற்ற அமைப்புத் திட்டத்தைக் கிளர்ச்சி நெருக்கடி தடுத்து நிறுத்தியது. ஆனால், அது சிறிது காலம்தான் தடைப்பட்டு நின்றது. இந்தியாவில் ஆங்கில ஆட்சியைப்பற்றிக் குறிப்பிடும்போது 1862-ல்

[1] 1857-ல் அதன் எண்ணிக்கை 41 ஆக இருந்தது.

ஜான் பிரைட்டு 'பணிவிணக்கமுள்ள இந்திய மக்களுக்கு எதிராகச் செய்யப்பட்ட நூறு ஆண்டுக்காலத் தீச்செயல்களின் தொகுதி' என்று கூறினர். ஆனல், அத்தகைய கூற்றினுக்கு வில்லியம் பென்டிங்கு பிரபு காலம் முதல் காறுதற்குரிய ஆதாரங்கள் கானிங்கு பிரபு காலத்திலும் இல்லையெனக் கூறலாம். சர். சார்லஸ் உட் அவர்களின் 1854ஆம் ஆண்டின் அறிக்கையின் விளைவாகக் கல்வி வளர்ச்சி தடையின்றி முன்னேறியது. முதன் மூன்று இந்தியப் பல்கலைக் கழகங்களாகிய சென்னை, பம்பாய், கல்கத்தாப் பல்கலைக் கழகங்கள் கிளர்ச்சி நடந்து கொண்டிருந்தபொழுதே நிறுவப்பட்டன. உதவித்தொகைத் திட்டத்தின் விளைவாகக் கலகத்திற்குப் பிறகு தனியார் கல்லூரிகள் வெகுவாகப் பெருகின. நாட்டின் பாதுகாப்பை அதிகரிக்கும் வகையில் மேற்கொள்ளப்பட வேண்டிய பொதுப்பணிகள் உடனடியாக நிறைவேற்றப்பட்டன. இவற்றில் இருப்புப் பாதைகளை அமைத்தல் முதலிடம் பெற்றது. 1860 முதல் 1869 வரை ஏற்பட்ட இருப்புப் பாதை அமைப்புப் பெருக்கம் கலக நெருக்கடியின் நேரடித் தூண்டுதலின் விளைவாகக் கருதுவதில் ஐயப்பாடு ஏதுமில்லை. ஆகையால், அதைக் கிளர்ச்சியின் தலையான இழப்பீடுகளில் ஒன்றெனக் கொள்ளலாம். இருப்புப் பாதைகளின் வலைபோன்ற கிளை பின்னலமைப்பு தற்கால இந்தியாவின் நரம்பு மண்டலம் போல் காணப்பட்டது. 1859, 1860 ஆகிய ஆண்டுகளில் ஐரோப்பிய அவுரிச் செடி முதலாளிகளுக்கும் வங்காளக் குடியானவர்களுக்கும் இடையே தகராறுகள் ஏற்பட்டன. அதன் விளைவாகக் குடியானவர்கள் தங்களுடைய விருப்பத்திற்கும், நலன்களுக்கும் மாறாக அவுரிச் செடி பயிரிடுவதைக் கட்டாயப்படுத்தும் முறை திருத்தப்பெற்றது. இதற்கு இங்கிலாந்து அரசாங்கம் பேருதவி செய்தது. 1861-ல் வட இந்தியாவில் ஏற்பட்ட பஞ்ச காலத்தில் நிவாரணத் திட்டம் உருவாக்க அவர் மேற்கொண்ட நடவடிக்கைகள் மூலமாகப் பின்னர் ஏற்படுத்தப்பட்ட பஞ்ச நிவாரண விதிகள் (Famine Code) எவ்வாறு அமைக்கப்பட வேண்டும் என்பதைக் கானிங்கு முன் குறித்துக் காட்டினர். 18ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட பெரும் பஞ்ச காலங்களில் மக்களில் மூன்றில் ஒரு பங்கோ அல்லது இரண்டில் ஒரு பங்கோ இறந்தனர். ஆனல், இவர் காலத்தில் பாதிக்கப்பட்ட மாவட்டங்களில் சாவு வீதம் 10 சதவீதத்திற்கும் குறைவாகவே கணக்கிடப்பட்டது. கடைசியாக 1833ஆம் ஆண்டு சாசனச் சட்டம் இயற்றப்பட்ட காலத்திலிருந்து நடைபெற்று வரும் சட்ட அமைப்புத் திருத்தம் இவர் காலத்தில் முழுமை அடைந்தது. மெக்காலே தலைமையின் கீழ் தொடங்கப்பெற்ற சட்டக் குழுவின் (Law Commission) வினைப் பயனாக 1860-ல் இந்திய தண்டனை விதித் தொகுப்பு (Indian Penal Code) இயற்றப்பட்டது. அடுத்த ஆண்டில் குற்ற இயல் நடைமுறை விதித் தொகுதி (Criminal

Procedure Code) இயற்றப்பட்டது. நீதிபதிகளில் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கை இந்திய சிவில் சர்வீசு துறை அமைப்பைச் சார்ந்தவர்களாய் இருந்தனர். நீதி மன்றங்களில் ஏற்படுத்தப்பட்ட சில மாற்றங்களுடன் சேர்ந்துப் பார்க்கும்பொழுது இந்தச் சட்ட அமைப்புகள் தற்போதைய இந்தியச் சட்ட அமைப்பின் அடிநிலையாக அமைந்தன எனலாம்.

அவரிடம் பெருந்திறம் காணப்படவில்லை என்றாலும், அவர் அடிக்கடி தவறான முடிவுகளைச் செய்தாரென்றாலும், கானிங்கு கிளர்ச்சியினால் ஏற்பட்ட குழப்பத்தைப் போக்கினார். இதுவன்றி இதைவிட கடினமான செயலாகிய அமைதியை நிலைநாட்டுவதில் ஏற்பட்ட இடையூறுகளை நீக்கும் பணியினையும் செவ்வனே செய்து முடித்தார். ஜான் லாரன்ஸ் துணையோடு மற்றெவரும் செய்திராத அளவிற்கு இந்திய மக்களை அரசாங்கத்துடன் இணைக்கப்படுத்தினார். மேலும் அரசாங்கத்தின் நோக்கம் பழிவாங்குவதோ ஆதிக்க ஆட்சியை ஏற்படுத்துவதோ அல்ல. மக்களின் நல்வாழ்வே அதன் பரந்த நோக்கமாகும் என்று இந்திய மக்களை நம்ப வைத்தார். கல்கத்தாவில் பழிவாங்கும் கருத்தை ஆதரிக்கும் வகையில் எழுந்த கூச்சல்களுக்கு, எதிராக அவர் கொண்ட உறுதியான நிலையும் அவரைப் பற்றிய இழிச் சொல்லைப் பொருட்படுத்தாத் தன்மையும் அவர் மேற்கொண்ட நடவடிக்கைகள் எல்ஜின் பிரபு கூறியபடி, "கடுமையாகத் தோன்றிய போதிலும் அருளிரக்கத்தின் வனப்பைப்" பெற்றதாக இந்தியர்களுக்குக் காணப்பட்டன. தனித்தெடுத்து நோக்கினாலும் சரி, அல்லது பிற்காலத்தின் விளைவுகளுடன் பொருத்திப் பார்த்தாலும் சரி கானிங்கு இன்னும் அதிகமான பரிவுடன் நடந்துகொண்டிருக்கலாம் என்று தோன்றும். ஆனால், அவர் வாழ்ந்த காலத்தின் சூழ்நிலையில் காணும்போது அவருடைய செய்கைகள் உயர்ந்த நேர்மை உணர்வுடன் கூடிய உறுதியையும், செயல் நோக்கத்தில் கொண்ட பெரும் பற்றுறுதியையும் குறித்துக் காட்டுகிறது. ஆட்சி முறை திருத்தி அமைக்கப்பட்டது. ஆட்சி முறையாளர் மக்களிடம் நெருங்கிய தொடர்புகளை வளர்க்கும் வகையில் சோதனையாகச் சில நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. சிற்றரசர்கள் தகுந்த வெகுமதிகளைப் பெற்று மனநிறைவு கொண்டிருந்தனர். அவர்களுடைய வருங்காலத்தைப் பற்றி அவர்கள் கொண்ட அச்சம் அகற்றப்பட்டது. மேல்நாட்டு வழிகளில் சென்று கொண்டிருந்த புதிதாகத் தோன்றிய இந்திய வகுப்பினரைப் பொறுத்தவரையில் அவர்களுடைய அரசப்பற்றை வளர்க்கும் வகையில் எந்தவித நடவடிக்கையும் மேற்கொள்ளப்படவில்லை. அவ்வகுப்புத் தோன்றியதற்குக் காரணமாயிருந்த நிருவாக அமைப்பில் அவர்களுக்கு முக்கியப் பங்கு அளிக்கப்படவில்லை. இந்த நிருவாக அமைப்பின் வருங்காலத்தோடு

தான் அவர்களுடைய நலன்கள் பிணைக்கப்பட்டிருந்தன என்றும் இங்குக் குறிப்பிடுவது அவசியமாகும். அவ்வகுப்பினர் அரசப் பற்றுடையவராகத்தான் இருப்பார்கள் என்று பிரிட்டிஷ் அரசு எண்ணியது. உண்மையில் அவர்களைப் பற்றிய எண்ணமே எழவில்லை. ஆனால், வியன்னா ஏற்பாட்டின்போது முற்போக்காளர்கள், தேசியவாதிகள், ஆகியோருடைய நிலை எவ்வாறிருந்ததோ, அதேபோல் இந்தியாவின் வருங்காலம் அவர்களுடைய கைகளில்தான் இருந்தது. புதிய ஆட்சியாளர்கள் நிலைமையை சீர்படுத்தினார்கள். தந்தைக்குரிய நல்லெண்ணத்துடன் திறம்பட அரசு நடத்துவதே அவர்களது குறிக்கோளாக இருந்தது. ஆனால், ஒவ்வொரு புனரமைப்பும் சில மாறுதல்களை உட்கொண்டிருக்கும் என்பதில் ஐயமில்லை. 1830ஆம் ஆண்டு முதல் ஏறக்குறைய பத்தாண்டுகளாக மேற்கத்திய செல்வாக்குகள் பரவியுள்ள இந்தியா முடிவாக தன்னாட்சிப் பெறவேண்டும் என்ற உறுதியான கருத்து நிலவி வந்தது. ஆனால், இப்பொழுது தன்னாட்சி வழங்குவதற்குப்பதிலாக தந்தைக்குரிய விழிப்புடனும், அக்கறையுடனும் அரசு செயற்பட்டு வரவேண்டும் என்ற எண்ணம் வளர்ந்தது. அதன்பயனாக அரசியல் துறையில் முன்னேற்றம் ஏற்படும் என்ற நம்பிக்கை தளர்ந்தது. இதுவே இப்பொழுது ஏற்பட்ட மாறுதலாகும். பொருளாதார வகையில் முன்னேற்றம் அடைவது அவசியமேயாகும். எனினும் தன்னாட்சியை ஏற்படுத்த வேண்டும் என்ற உயரிய நோக்கத்திற்கு எப்பொழுதும் வெளிப்படையான மறுப்பு இருந்ததில்லை. ஆனால், தன்னாட்சி முறை ஒருவேளை கவனிக்கப்பட இருந்தால், அதுபற்றிய பரிசீலனை வருங்காலத்தில்தான் மேற்கொள்ள வேண்டும் என்ற உள்ளடக்கமான கருத்து இருந்து வந்தது. டல்ஹௌசி பிரபு கூட முன்னால் கூறப்பட்ட கருத்தினையே கொண்டிருந்தார். ஆனால், ஆங்கிலேயர்கள் விளக்கி இசைவு பெற முடியாத மக்களின் மத்தியில் ஏகாதிபத்திய அமைப்பை ஏற்படுத்த முற்பட்டனர். இந்திய மக்கள் 1889ஆம் ஆண்டு வரை ஆங்கிலேயர்களின் நோக்கத்தில் சந்தேகங்கள் கொள்ளவில்லை. முதல் உலகப் போர் தொடங்கும் வரை ஆங்கிலேய அரசாங்கத்தினர் கருத்து மாறவுமில்லை. சாதனைகளின் பெருமை நிலைத்திருந்தது. ஆனால், இந்திய சுதந்திரத்தில் நம்பிக்கை செயலற்று கிடந்தது.

# 2. அரசியல் நிகழ்ச்சிகளின் தொடர்கோவை

## எல்ஜின் முதல் எல்ஜின் வரை

கானிங்கு பிரபு பதவியைவிட்டு விலகிய காலம் முதல் கர்சான் பிரபு பதவியைவிட்டு விலகிய காலம் வரையுள்ள காலப் பகுதி இந்தியாவில் ஆங்கில ஆட்சி உச்சம் பெற்ற காலம் என்று வழக்கமாக கருதப்படுகிறது. இது பெரும்பாலும் ஏற்றுக்கொள்ளத்தக்கது. ஏனெனில், அக்காலப் பகுதிக்குப் பிறகு அதனுடைய ஆதிக்கத்திற்கு எதிர்ப்பு ஏற்படலாயிற்று. மேலும் அதனுடைய எதிர்கால வாய்ப்புகள் முற்றிலும் நீக்கப்பட்டனவாகக் காணப்படவில்லை. இக்காலப் பகுதியின் முதல் பாதியில் ஆங்கில ஆட்சிக்கு தடையுரை ஏதும் எழுப்பப்படவில்லை. பழைய சிற்றரசுகள் மறைந்துவிட்டன. பழைய பாணி, அதிர்வு உண்டாக்கக்கூடிய தனது எதிர்ப்பினை உணர்ச்சியுடன் தெரிவித்துவிட்டு, செயலற்றும் திறனற்றும் கிடந்தது. அப்பொழுது வெளிப்படத் தொடங்கிய புதிய பாணியினைக் கூரறிவு பெற்ற ஒரு சிலரால்தான் தெரிந்துகொள்ள முடிந்தது. அப்புதிய பாணியினுடைய முக்கியத்துவத்தை அநேகர் குறைத்து மதிப்பிட்டனர். ஆங்கிலேய ஆட்சிக்குப் பொறுப்புணர்ச்சியுடன் கூடிய எதிர்ப்பினைத் தெரிவிக்க எவருமிலர். மக்கள் உணர்ச்சிகளைப் புண்படுத்துவதால் உண்டாகும் எழுச்சிகள் நிகழாதிருக்க ஆங்கிலேயர்களும் இப்பொழுது விழிப்புடன் நடந்துக்கொண்டனர். பயனுறுதியும், அமைதியும், அன்புச் செயலும், வளப்பெருக்கமும், இக்காலத்தின் முதற் பகுதியில் அரசாங்கத்தின் மூல நோக்கங்களாக விளங்கின. வடமேற்குப் பிரதேசத்தைப் பற்றிய ஆட்சிமுறை, எல்லைக் கட்டுப்பாடு, கல்வி, நீர்ப்பாசனம், பஞ்ச ஒழிப்புப் போன்ற ஆக்க நல வேலைகளை விரிவு படுத்துதல் ஆகியவை அப்பொழுதைய கவனத்திற்குரிய விவாதப் பொருள்களாக விளங்கின. 1876ஆம் ஆண்டின் பொது அறிவிப்பின்

படி அரசியார் பேரரசி என்ற பட்டத்தை ஏற்றுக்கொண்டார், அதுவே அக் காலத்தில் மகிழ்ந்து போற்றப்பட்ட நிகழ்ச்சியாகும். அது ஆங்கில ஆதிக்கம் திடநிலையும், ஆடம்பரத் தன்மையும் பெற உதவியது. அதே நேரத்தில் அவ்வாட்சியின் நீடிப்பாற்றலும். செயல் நோக்கமும் பாதிக்கப்பட அது காரணமாக இருந்தது என்பதும் உண்மையேயாகும். இந்திய ஆட்சிப் பொறுப்பினை பெரும் பாரமாகக் கருதினர். படைக்கும் திறனுள்ள அருஞ் செயலை மேற்கொள்ளவோ அல்லது ஒரு புதிய காலத்தினை உருவாக்குவதற்கு வேண்டிய முன்னேற்பாடுகளை செய்யவோ இந்திய ஆட்சிப் பொறுப்பினை ஏற்றுக்கொண்டதாக அவர்கள் எண்ணவில்லை. இதுகாறும் கண்டறியாதனவும், மக்கள் நடமாட்டம் இல்லாததுமான பகுதிகளில் அமைதியை நிலைநாட்டுவதில் வெல்லெஸ்லி பிரபு காலத்தில் பணியாற்றிய இளமை மிடுக்குப் பொருந்திய அலுவலர்கள் அடைந்த பூரிப்பும், அவ்வலுவலர்கள் தங்களுடைய பிற்கால வாழ்க்கையில் வெளிக்காட்டிய உணர்வமைதியுடன் கூடிய பரந்த நம்பிக்கையும் படிப்படியாக மறைந்துவிட்டன. அவ்வாறே பென்டிங்கு காலத்தில் தோன்றிய சீர்திருத்தவாதிகள் எதிர்பார்த்திருந்த இன்னியல்பான வருநிலை வாய்ப்பு வளங்களும் மறைந்துவிட்டன. 1840-முதல் 1849 வரையுள்ள ஆண்டுகளில் நாடுகளை வென்றதால் ஏற்பட்ட தற்பெருமை உணர்ச்சி உண்மை நிலையை உணர உதவியது. பஞ்சாப் தனிமுறைக் கொள்கையினரின் மெய்யார்வம் கடமையுணர்ச்சியினால் பலப்படுத்தப் பெற்றதேயன்றி நம்பிக்கை உணர்ச்சியினால் அன்று. மேற்கத்திய மந்திரக்கோலுக்கு இந்தியா மறுமொழி பகரவில்லை. அதற்குத் தகுந்தப் பதில் கிடைக்கும் என்ற எண்ணமே கணக்கிட முடியாத தொலைதூரத்தில் தள்ளப்பட்டது. இந்தியரில் ஒருவராவது பொறுப்பை ஏற்கும் நிலையை எய்தினர் என்று இந்தியாவில் உள்ளவர்களில் எவரேனும் கருதக்கூடிய நிலையில் இல்லை என்று விக் கட்சியை சார்ந்தவரும், மிகவும் எச்சரிக்கையுடன் நடப்பவருமான நார்த் புரூக்கு பிரபு 1880ஆம் ஆண்டில் குறை தெரிவிக்க முடிந்தது. இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னர் டல்ஹௌசி பிரபுவே இந்தியரில் ஒருவரைச் சட்டசபை உறுப்பினராக நியமிக்க வேண்டும் என்று எடுத்துரைத்தார். முன்னேக்கினையும், நம்பிக்கையையும் தூர ஒதுக்கிவிட்ட பிறகு, அமைதி நிலைநாட்டுதல், நீதி வழங்குதல், முன்னேற்ற நடவடிக்கைகளை மேற்கொள்ளுவதற்கு வழிவகை செய்தல், அன்பு நிறைந்த கவனிப்பை செலுத்துதல் போன்ற பணிகளே எஞ்சி இருந்தன. பல கோணங்களினின்றும் கவனிக்குமிடத்து அதுவே திருப்தி அளிக்கும் பணியாகக் காணப்பட்டது. ஆனால், முன்னால் காணப்பட்ட உணர்ச்சியும், ஆர்வத் தன்மையும் அதில் காணப்படவில்லை. மேலும், அது முன்பிருந்த அலுவலர்களினின்றும் மாறுபட்ட அலுவலர்கள் அடங்கிய

அலுவல் துறையை வளர்த்தது. (1860-முதல் 1879 வரையுள்ள ஆண்டுகள் செழிப்பாகவும் பொருளாதார பிரிவுகளில் பயனுடையதாக வும் இருந்தபோதிலும், ஆன்மிகத் துறையில் அவை வறட்சியாகவே காணப்பட்டன.)

அக்காலப் பகுதியின் அடுத்த பாதியில் அதே பொதுநிலை நீடித்திருந்த போதிலும், சூழ்நிலையில் கானத்தக்க மாற்றம் ஏற்பட்டது. சேம்பர்லேனுடைய தீவிரவாத உணர்ச்சியின் வாயிலாகவும், கிளாட் சனின் அற முறையான உணர்ச்சி வேகத்தின் வாயிலாகவும், நேர்மை யுணர்வும், ஜனநாயக முற்போக்கு உணர்ச்சியும் புதியதொரு தூண்டு தலைப் பெற்றன. நேர்மையுணர்வும், அரசியல் கோட்பாடும் ஒன்றுகூடி இந்திய விவகாரங்களில் ஆங்கிலேய அரசாங்கம் புதிய கவனத்தைச் செலுத்துமாறு தூண்டின. மேலும் அவை பெரும்பாலும் மறந்து போன அரசியல் சுதந்திரக் கனவுகளைப் புதுப்பித்தன. ஆனால் இப் புது கருத்தோட்டம் அழியாமல் இருந்து 1900ஆம் ஆண்டிற்கு முன்னுலேயே செல்வாக்குப்பெறத் தொடங்கியபோதிலும் அது இரண்டு நாடுகளிலும் சிறுபான்மையினருடைய கருத்தாகவே இருந்தது. தன்னுட்சிக் கொள்கை தோல்வியுற்ற காலம் தொடங்கி இருபது ஆண்டுகளில் கிளாட்சனுடைய முற்போக்குக் கொள்கையின் செல்வாக்கு மங்கி இருந்தது. இந்திய அலுவலர்களில் ஒரு சிறு பகுதியினரே இப்புதுக் கருத்துக்களை கடைப்பிடிப்பவராயிருந்தனர். பென்டிங்கு காலத்தில் இக்கருத்துகளுக்குக் கொடுக்கப்பட்ட அரசப் பிரதிநிதியின் பக்க ஆதரவு, ரிப்பன் பிரபு காலத்தைத் தவிர, ஏனையோரின் ஆட்சிக் காலத்தில் இல்லையென்றே கூறவேண்டும். சார்லஸ் ட்ரெவிலியன், மெக்காலே, அவர்களுடைய நண்பர்கள் போன்ற இள அலுவலர்கள் அடங்கிய செல்வாக்கு மிக்க குழு ஏதும் இக்காலத்தில் இல்லை.

இக் காலப் பகுதியில் ஆங்கிலேயருடைய கருத்துக்கும், இந்தியா வில் மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகளுக்கும் இடையேயிருந்த நெருங்கிய தொடர்பு நீடித்திருந்ததோடல்லாமல் வலுப்படுத்தப் பெற்றிருந்தது என்பதை நாம் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டியது மிகவும் அவசியமாகும். ஹெய்லிபரி கல்லூரி மூடப் பட்டதால் இந்திய நாட்டிற்கு அனுப்பப்பட்ட இள அலுவலர்கள் கொண்டிருந்த தோழமை மனப்பான்மை குறையலாயிற்று. ஆனால் மேலிடத்தில் கொள்கைக் கட்டுப்பாடு கடுமையாகவே காணப்பட்டது. அவர்களுடைய கருத்துக்களும் வெகுவிரைவாக இந்தியாவிற்கு தெரிவிக்கப்பட்டன. தந்தி முறை கலகக்காரர்களின் வெற்றி வாய்ப்புக்கு எவ்வளவு பாதகமாய் இருந்ததோ அந்த அளவிற்கு அரசப்

பிரதிநிதியுடைய தன்னுட்சிக்கு தீங்கு விளைவிப்பதாகயிருந்தது. விரைவாக முடிவெடுக்க வேண்டிய நிலையைக் காரணமாகக் காட்டி டல்ஹௌசி பிரபு பஞ்சாப் பிரதேசத்தை இங்கிலாந்து அரசாங்கத்தினருக்கு அறிவிக்காமலே ஆங்கிலேய அரசுடன் இணைத்துக் கொண்டார். இப்பொழுது அவ்வாறு எந்த அரசப் பிரதிநிதியும் செய்ய முடியாத நிலையில் இருந்தார். 1869-ல் சூயஸ் கால்வாய் போக்குவரத்துக்குத் திறந்துவிடப்பட்டதால் மேல்நாட்டு இலக்கியங்கள் இந்தியாவிற்கு வெகு தாராளமாகப் புகத் தொடங்கின. ஐரோப்பியர்களும் இந்தியாவிற்கு அடிக்கடி செல்ல முற்பட்டனர். இவற்றின் விளைவாக மேல்நாட்டின் கருத்துக்கள் இந்தியாவில் விரைவாகப் பரவின. இவ்வாறாக அடிப்படைக் கொள்கையினை உருவாக்குவதில் ஆங்கிலேயர்களுடைய கருத்துக்களின் செல்வாக்கு பெரியதொரு ஆக்கக்கூறாக தொடர்ந்து இருந்து வந்தது. ஆனால், அதில் ஒரு மாறுபாடு உண்டு. அதாவது கொள்கையை மாற்றுவதிலோ அல்லது தடைப்படுத்துவதிலோ இந்திய நிருவாக அனுபவம் கொண்டவர்களின் செல்வாக்கு வலிமை குறைந்துவிட்டது. ஆங்கிலேயர்களுடைய சொத்துக்களைப் பற்றிய கருத்துக்களின் செல்வாக்கினை நிலையான நிலவரித்திட்டம் வெளிப்படுத்துகிறது. இந்தியாவில் பெற்ற அனுபவ அறிவு அதனை ஓரளவே திருத்தியது. வரியைச் சார்ந்த பயன்கருதுக் கொள்கையினை அடிப்படையாகக்கொண்டு வடமேற்குப் பிரதேசங்களில் வரித் திட்டத்தை ஏற்படுத்தினார்கள். பிரிட்டிஷ் இந்திய அரசின் நாடு சேர்க்கும் கொள்கை மேல்நாட்டு செயலாற்றல் பற்றிய கருத்துக்களைக்கொண்டு அமைக்கப்பட்டது. அயல்நாட்டுக் கொள்கை பெரும்பாலும் கல்கத்தாவில் இயங்கிய இந்திய அரசாங்கத்தினரைவிட, இலண்டனில் நடைபெற்ற ஆங்கிலேய அரசாங்கத்தினராலேயே இயக்கப்பட்டது. மேலும் கல்வி, மற்றும் எல்லா தார்மீக நடவடிக்கைகளும் முழுமையாக மேல்நாட்டு தூண்டுதலின் விளைவேயாகும். பொதுவாக இந்தியக் கருத்துக்களை ஆதரிப்பவர்கள், சதி என்ற பழக்கத்தை ஆதரிப்பவராயினும் சரி அல்லது சிற்றரசர்களின் உரிமையை ஆதரிப்பவராயினும் சரி, தோல்வியைத் தவிர்க்க முடியாதென்ற நிலையிலுள்ள போரை நடத்துபவர்களின் நிலையில் இருந்தனர். இக்காலத்தில் ஆங்கிலேய அரசாங்கத்தின் கொள்கை இலண்டன் மக்கள் கருத்தின் பிரதிபலிப்பாகவே காணப்பட்டது. அரசப் பிரதிநிதியும் இங்கிலாந்து அமைச்சரவையின் செயல் முதல்வராகவே இயங்கினர். இக்காலப் பகுதியின் கடைசி நாட்களில்தான் இந்தியர்கள் கருத்து அதனுடைய ஆரவாரமற்றதும் குறிப்பிடத்தக்கதுமானப் பணிகளைச் செய்ய ஆரம்பித்தது. அப்பொழுது அக்கருத்து தொன்றுதொட்டு வரும் இந்தியர்கள் கருத்தாக இல்லாமல் பொலிவிழந்த கிளாட்சனுடைய கருத்தாக இருந்தது.

டல்ஹௌசி போலவே கானிங்கு பிரபுவும் பொதுப் பணியில் அதிகமாக ஈடுபட்டு தன் உடல் நலத்தை இழந்தார். அகவே அவர் சாவதற்காகவே இங்கிலாந்துக்கு சென்றார் என்று சொல்லப்படுகிறது. அவர் தந்தையார் அடக்கம் செய்யப்பட்ட இடத்தின் பக்கத்திலேயே அவர் வெஸ்ட்மினிஸ்டர் திருமடக்கோயிலில் அடக்கம் செய்யப் பட்டார். அதுவே அவர் பெற்ற வெகுமதியெனலாம். அவருக்குப் பின்னல் பதவியிலமர்ந்தவர் ஏகாதிபத்தியவாதிகளின் கையாட்களில் ஒருவராவர். சீன விவகாரங்களில் சிறந்து விளங்கிய மக்கார்தினி பிரபு இந்தியாவைப் பொறுத்தவரையில் அக்கையாட்களில் முதன்மை யானவர் ஆவார். லாண்ட்ஸ்டவுன் அவர்களில் மிக முக்கியமானவருள் ஒருவராகக் கருதலாம். வில்லிங்டன் பிரபு அவர்களில் கடைசியாவார். கானிங்கை பின்தொடர்ந்த எல்ஜின் தனது முப்பத்தி ஓராவது வயதில் ஜமெய்காவின் கவர்னரானார். மெட்காப் விலகிய பின் கனடாவின் கவர்னர் ஜெனரலாகப் பணியாற்றினர். கனடாவில் பார்லிமெண்டு ஆட்சியை ஏற்படுத்த மிகவும் உதவியாயிருந்தார். இரண்டாவது சீனப் போரில் அவர் புரிந்த சாதனைகளின் விவரத் தொகுதி விவாதத் திற்குரியனவாக இருந்தது. அவர் சீனவிற்குப் போகும்போதுதான் இந்தியாவில் கலகம் ஏற்பட்டது. அப்பொழுது கானிங்கு பிரபு விடுத்த அழைப்பையேற்று தன்னுடைய படை முழுவதினையும் இந்தியாவிற்குத் திருப்பிவிட்டார். இது அவருடைய முடிவெடுக்குத் திறனைப் புலப்படுத்துகிறது. எல்ஜின் திறமை வாய்ந்தவர். தன் விருப்பப்படி செயலாற்ற விருப்பங்கொண்டவர்; மிக விழிப்புடன் நடந்துகொள்ளும் திறம்கொண்டவர். ஆனல், அவர் இருபது மாதங் கள் தாம் பதவியிலிருந்தார். கடைசியில் தர்மசாலாவில் உயிரிழந்தார். முன் நிகழ்ச்சிகளை நினைவுபடுத்தி நோக்குங்கால், மெட்காப்பினுடைய ஆட்சி எவ்வாறு பென்டிங் பிரபுவின் ஆட்சியின் தொடர்ச்சியாக இருந்ததோ, (அவ்வாறு இவருடைய ஆட்சி கானிங்கு பிரபுவின் ஆட்சி தொடர்ச்சியாகக் காணப்பட்டது.) அவர் காலத்தில் ஏற்பட்ட முக்கிய நிகழ்ச்சி, சிந்து நதிக்கு மேற்கேயுள்ள இந்துகுஷ் மலையோரங்களில் வசித்து வந்த வாகாபி (Wakhabi) மத வெறியர்களுக்கு எதிராக மேற்கொள்ளப்பட்ட அம்பேலா போராட்ட ஏற்பாடேயாகும். எல்ஜினுடைய திடீர் மறைவு அரசப் பிரதிநிதி பதவிக்கு ஆள் அமர்த்தும் பணியில் வழக்கமாக மேற்கொள்ளப்படும் அரசியல் சூழ்ச்சி நடவடிக்கைகள் உரிய காலத்திற்கு முன்னதாகவே மேற்கொள்ள காரணமாக அமைந்தது. அம்பேலா போராட்டம் இன்னும் தொடர்ந்து நடந்து கொண்டுவருவதால், இந்திய விவகாரங் களைப் பற்றிய அனுபவ அறிவு கொண்டவர் ஒருவரை அரசப்பிரதிநிதி யாக அமர்த்த வேண்டிய அவசியத்தை இங்கிலாந்து அரசாங்கம் உணர்ந்தது. இத்தகைய சூழ்நிலையில் சர். ஜான் லாரன்சு என்பவரே

அரசப் பிரதிநிதி பதவிக்கு ஐயத்துக்கிடந்தராத நபராக விளங்கினுர். இந்திய பணித் துறையில் மிக்க அனுபவம் பெற்று, பிறகு கவர்னர் ஜெனரலாக பதவியேற்ற வாரன்ஹேஸ்டிங்ஸ், ஷோர், பார்லோ போன்றவர்களடங்கிய கூட்டத்தில் லாரன்சும் சேர்ந்து கொண்டார்.

லாரன்சுக்கு அப்பொழுது வயது 52-ஆக இருந்தது. இந்திய விவகாரங்களை இயக்குவதில் புகழும் அனுபவமும் பெற்றவர். இயற்கையில் அவர் ஆற்றல் வாய்ந்த பண்பியல்புகளைப் பெற்றிருந்த போதிலும் அவருடைய இடைவிடாத கடு முயற்சிகள் அவரை இரக்கமற்றவராகவும், பிடிவாதத் தன்மையுடையவராகவும் தோற்று வித்தன. P. E. இராபர்ட்ஸ் குறிப்பிட்டபடி அவர் ஆதிக்க மனப் பான்மையுடயவராகவும், சிறிதளவு பிடிவாத மனப்போக்குடையவ ராகவும், அவர் கீழ் பணியாற்றுபவர்களிடம் கண்டிப்புடன் நடப்பவராக வும், அதே சமயத்தில் தனக்கு சீரிய சேவை புரிந்த பணியாட்களைத் திடப்பற்றுடன் ஆதரிப்பவராகவும் திகழ்ந்தார். பஞ்சாபில் மேற் கொள்ளப்பட்ட நடவடிக்கை போன்ற வகையில் நடவடிக்கைகள் மேற் கொள்ளுவார் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனல், லாரன்சு அக் காலத்திற்கு அமைதிதான் தேவை என்ற கருத்தினைக் கொண்டிருந்தார். ஆகவே உள்நாட்டுத் துறைகளில் பெருக் :ம் ஏற்படுத்துவதிலேயே தன் முழு கவனத்தைச் செலுத்தினுர். அதே சமயத்தில் அவர் வெளிநாட்டு விவகாரங்களில் மிக எச்சரிக்கையாக இருக்கவேண்டிய அவசியத்தை வலியுறுத்தினுர். நாட்டு நடப்பு விவகாரங்கள் சிலவற்றில் அவர் தேவைக்கு மீறிய கவனத்தைச் செலுத்துவதில் மேம்பட்டவராகக் காணப்படுவார் என்று எதிர்பார்த்திருந்தவர்களுக்கு பெருத்த ஏமாற்றத்தை உண்டாக்கினுர். ஆட்சிக் கொள்கையைப் பொருத்த அளவில் அவரிடமிருந்து அதிகமாக எதிர்பார்க்கப்படவில்லை. எனினும் பிஸ்மார்க்குக்குரிய அடக்கத்தையும், உறுதியையும் ஒருங்கே கொண்டிருந்த லாரன்சு பிரபு ஆட்சிக் கொள்கையினை வரையறுப்பதில் அனைவரிலும் மேம்பட்டவராகத் திகழ்ந்தார்.

சுருங்கக்கூறின் லாரன்சுடைய ஆட்சி கானிங்கின் ஆட்சியின் தொடர்ச்சி என்றேக் கொள்ளவேண்டும். அதே சமயத்தில் லாரன்சு பிரபுக்குரிய சில சிறப்பியல்களையும் அதில் தெளிவாகக் காண்கின்ருேம். இருப்புப்பாதை அமைத்தல், நீர்ப்பாசன வசதிகளை ஏற்படுத்துதல் போன்ற பொதுப் பணிகளைச் சார்ந்த கொள்கை விறுவிறுப்பாக செயற்படுத்தப் பெற்றது. ஆக்க வளமுடைய பணிகளை நிறைவேற்று வதற்கு வேண்டிய மூலதனத்தை கடன்வாயிலாகப் பெறலாம் என்ற கொள்கையை இந்திய நிதி நிலைமையில் புகுத்தினுர். அவ்வாறிருந்தும்

ஆண்டுச் செலவு சுமார் ஒரு கோடி பவுன்கள் அதிகமாக உயர்ந்தது.[1] ஆக்கவேலை என்பதற்கு நுணுக்கமான விளக்க உரை பிற்காலத்தில் கொடுக்கப்பட்டது என்பது உண்மையேயென்றாலும், இவ்வுண்மை அத்திட்டத்தைப் புகுத்துவதற்கென அவர் மேற்கொள்ளப்பட்ட முடிவின் முக்கியத்துவத்தையோ, அம்முடிவை எடுக்க அவர் காட்டிய திடத் தன்மையினையோ மறைக்க முடியாது.) குடியானவர்களிடம் அவர் காட்டிய தனிப்பட்ட அக்கறையை 1868ஆம் ஆண்டின் பஞ்சாப்-அயோத்தி குடிவாரச் சட்டங்கள் எடுத்துக்காட்டுகின்றன. இச்சட்டங்கள் கானிங்கு பிரபுவின் 1859ஆம் ஆண்டின் வங்காள குடிவாரச் சட்டத்தின் தொடர்ச்சியேயாகும். பஞ்சாப் சட்டம் நிலத்தின் உடைமையாட்சியை ஒரு குறிப்பிட்ட காலம் நிலம் தன்னிடம் வைத்திருந்த வாரப் பயிர் செய்பவருக்கு வழங்கியது. மேலும் இச்சட்டம் மனநிறைவுடைய குடியானவர்களின் வல்லரணாகவும், உரிமை சாசனமாகவும் விளங்கியது. கானிங்கும், மான்ட்கோமரியும் தாலுக்தார்களுக்கு வழங்கிய காப்புறுதியினை, அயோத்திச் சட்டம் பயிரிடுவோருக்கு அளித்தது. குடியானவர்களில் ஐந்தில் ஒரு பகுதியினருக்கு நிலத்தின் உடைமையாட்சி வழங்கப் பெற்றது. அதற்கு பதிலாக அவர்கள் நியாயமான குத்தகைப் பணம் செலுத்த ஏற்பாடு செய்யப்பட்டது. நிலத்தின் மதிப்பினை உயர்த்தும் வகையில் மேற்கொள்ளப்பட்ட நில சீர்திருத்த நடவடிக்கைகளுக்குத் தக்க சரியீடு வழங்க இச்சட்டம் உதவியது. குத்தகை தொகை கணிப்பு விதத்தை நேர்மையான முறையில் கட்டுப்படுத்த முயற்சி செய்யப்பட்டது. இச் சட்டம் உரிமைக் கும்பலின் கடும் எதிர்ப்புக்கிடையில் நிறைவேற்றப்பட்டது. இதனை இவருடைய அரசப் பிரதிநிதி காலத்தின் வள ஆக்கம் நாடுகிற சாதனையாகக் கொள்ளலாம். லாரன்சு காலத்தில் இந்தியாவில் இரண்டு பஞ்சங்கள் ஏற்பட்டன. இவைகளுள் முதல் பஞ்சம் 1866-ல் ஒரிஸ்ஸாவில் ஏற்பட்டது. போக்குவரத்தில் இன்னல் நிறைந்திருந்ததாலும், வங்காள அரசாங்கம் தேவையான நடவடிக்கை மேற்கொள்ள தவறியதாலும், இப் பஞ்சத்தால் ஏற்பட்ட இன்னல்களை குறித்த நேரத்தில் லாரன்சு தடுக்கும் வகையில் முயற்சி செய்யத் தவறியதாலும் இப் பஞ்சம் சுமார் பத்து லட்சம் உயிர்களைக் குடித்தது. 1868-69-ல் இரண்டாவது பஞ்சம் இராசபுதனத்திலும் பண்டல்கண்டிலும் ஏற்பட்டது. லாரன்சு முன்னைவிட இப்பொழுது அதிக முன்னேற்பாடுகளுடன் இருந்ததால், பஞ்ச காலத்தில் பட்டினியைப் போக்குவதே தமது மேலான நோக்கமாக அதிகார வர்க்கத்தினர் கொள்ள வேண்டும் என்ற அடிப்படைக் கொள்கையை அறிவித்து அவர் புகழ் பெற்றார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

[1] சுமார் நாலரைக்கோடி ஐந்தரைக்கோடி மிலியன் பவுன்களாக உயர்ந்தது. இச் சூழ்நிலையில் ஐந்து ஆண்டுகளில் இருபத்தைந்து இலட்ச பவுன்கள் பெறுமான நிலைப் பற்றுக்குறை நாட்டிற்கு கேட்டை விளைவிக்கும் என்று கருத முடியாது.

வெளிநாட்டு விவகாரங்களில் லாரன்சு டல்ஹௌசியினுடைய தலையிடாக் கொள்கையைத் தொடர்ந்து செயலாற்றினார். 1863-ல் தோஸ்து முகம்மது இறப்பதற்குக் காரணமாயிருந்த சூழ்நிலைகள் பின்னர் ஏற்பட்ட நீண்டதொரு வாரிசுப் போர், மத்திய ஆசியா நாடுகளின் மீது ருஷ்யர்கள் நடத்திய அத்துமீறிய செய்கைகள், ஆகியவை இவருடைய கொள்கையை விவாதத்திற்குரியனவாக மாற்றின. கானிங்குக்கு நேர்ந்தது போலவே, ஏளனமாக வழங்கப் பட்ட அடைமொழி பிறகு தனிச் சிறப்பு முத்திரையாக மாறிவிட்டது. தொடக்கத்தில் அவர் கையாண்டுவந்த வலிகுன்று வாளாமைக் (Masterely Inactivity) கொள்கையினை வளைந்துகொடுக்கும் தன்மை யற்ற கொள்கையென்றும், ஒருவித அரசியல் நோயென்றும் குறை கூறினர். ஆனால் பிற்கால சம்பவங்கள் அதனை சரியான ஒரு முன்னோக்கு வாய்ந்த செய்கை என உறுதி செய்தன. லாரன்சு ஆப்கானித்தானத்தில் கைப்பற்றி வந்த கொள்கையின் சிறப்பை முழுமையாகவும், விரைவாக வும் காலத்தேவன் மெய்பித்துக் காட்டினான். அத்தகைய சம்பவம் அரசியல் வாதியொருவரின் வாழ்நாளில் ஏற்பட்டது வெகு அரிதான நிகழ்ச்சியாகும்.

லாரன்சு பதவியிலிருந்து விலகிய பிறகு டிஸ்ரேலி, தனது நாற்பத் தியாறு வயது நிரம்பிய அயர்லாந்தின் தலைமைக் காரியதரிசியான மேயோ பிரபுவை, அரசப் பிரதிநிதியாக நியமித்தார். இந் நியமனம் கட்சி சார்பானது. ஆகவே அவர் இந்தியாவிற்கு புறப்படுமுன் பதவி யேற்ற லிபரல் கட்சியினர் இந் நியமனத்தை நிராகரித்திருக்கக்கூடும். ஆனால், கிளாட்சன், 1835-ல் ஹேய்டஸ்பரி விவகாரத்தில் மெல்போர்ன் விக் கட்சியினர் ஏற்படுத்திய முன்னோடி மாதிரியைப் பின்பற்றாமல் மேயோவின் நியமனத்தை உறுதி செய்தார். இவ்வாறாக இந்திய அரசாங்கம் இரு கட்சியினருடைய பொறுப்பாகும் என்பதனை நிலைநாட் டினார். மேயோவின் நியமனம் டிஸ்ரேலிக்கே உரித்தான விளைவு தெரியாமல் மேற்கொள்ளப்படும் துணிகர முயற்சிகளில் ஒன்றாகப் பலருக்குத் தோன்றியது. ஆனால், மேயோவிற்கு இருந்த நல்வாய்ப்பு கள் அவருடைய திறமைகளின் மேன்மையை எடுத்துக் காட்டின. அவருடைய திறமையும், உழைப்பாற்றலும், அவர் பெற்றிருந்த பிறரை மயக்கும் ஆற்றலும் ஒன்று கலந்து, அவருடைய ஆட்சியினை மிக வெற்றிகரமான ஆட்சிகளில் ஒன்றாகக் கருதுமாறு செய்தன.

முதன் முதலில் மேயோ, லாரன்சு விட்டுச் சென்ற, நிதி பற்றாக் குறை நிலைமையைச் சமாளிக்கும் வகையில் நடவடிக்கை மேற்கொள்ள வேண்டியதாயிருந்தது. ஸ்ட்ராச்சி சகோதரர்கள் துணைகொண்டு, உப்பு வரி, வருமான வரி ஆகியவற்றை அதிகரித்தும், சிக்கனத்தை வலுயுறுத்

தியும், நிலைமையைச் சமாளித்தார். ஐந்து வருட காலத்திற்கு நிலையான மொத்த உதவித் தொகையை மைய அரசாங்கம் மாகாண அரசுக்குத் தரும் முறைக்குப் பதிலாக, ஆண்டுதோறும் குறிப்பிட்ட நோக்கத்திற்காக உதவித் தொகையை ஒதுக்கி வைக்கும் முறையை ஏற்படுத்தும் வகையில் பல மாறுதல்கள் புகுத்தப்பட்டன. இம் முறை, மாகாண அரசுகள் சிக்கனத்தைக் கையாள வகை செய்தது. ஏனெனில், ஒரு துறையில் மிச்சம் பிடிக்கப்பட்டத் தொகையினை, மத்திய கருவூலத்திற்குத் திருப்பி அனுப்பப்படாமல் வேறொரு துறை யிலோ அல்லது ஆண்டிலோ பயன்படுத்த இது உதவியது. இதன் விளைவாக அவர் பொறுப்பேற்கும்போது இருந்த பயங்கரமான பற்றாக் குறை நிலை மாறியது. அவர் ஆட்சியிலிருந்து விலகியபோது கணிசமான கையிருப்பை விட்டுச் சென்றார். அவர் பதவியிலமர்ந்த போது சட்ட மன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்ட மதிப்பீட்டுக் கணக்குகள் வழக்கமாக நம்பத்தகாதனவாயிருந்தன. அவர் பதவி நீக்கம் பெற்றபோது அவை களை நம்பிக்கைக்குகந்தனவாக விட்டுச் சென்றார். 1850ஆம் ஆண்டின் சட்டம் ஏற்படுத்திய நகரசபைகளின் அதிகாரங்களை அதிகப்படுத்தி யதின் வாயிலாக தன்னுடைய படைப்புத் திறனை வெளிப்படுத்தினார். இவ்வாறாக தலசுய ஆட்சியை விரிவுபடுத்துவதில் பெரும்பயன் விளைவிக்கிற நடவடிக்கை ஒன்றை மேற்கொண்டார். சிற்றரசர்கள், பிரபுக்கள் ஆகியோருடைய கல்விக்கென முதன்முறையாக ஆஜ்மீரில் கல்லூரியொன்றினை ஏற்படுத்தி தன்னுடைய பரந்த மனப்பான்மை யினை வெளிக்காட்டினார். கொள்கைப் பற்றார்ந்த நம்பிக்கையின் விளை வாக மேற்கொள்ளப்படும் மேலான சீர்திருத்தங்களின் தொடக்கத்தை இது குறித்துக் காட்டுகிறது. மேலும், சிற்றரசர்கள் இந்தியப் பேரர சின் பிரிக்க முடியாத அடக்கக் கூறுகள் என்ற கருத்தினை நிலை நாட்டு வதற்கென மேற்கொள்ளப்படும் செயல் விளைவாகவும் விளங்கியது.

வெளிநாடுகளைப் பொறுத்த அளவில், இதுகாறும் கையாளப் பெற்று வந்த தலையிடாக் கொள்கையை அவர் தொடர்ந்து பின்பற்றி னார். 1869-ல் அம்பாலா என்னுமிடத்தில் ஷெர் அலி சந்தித்த பொழுதும், அதற்குப் பிறகும் பயனளிக்கக்கூடிய வகையில் அவரைக் கட்டுப்படுத்துவதிலும் ஆக்ஸஸ் நதியினை ஆப்கானிய நாட்டின் வடக்கு எல்லையாகக் கொள்ளுமாறு ருஷ்யாவை ஒப்புவிக்க செய்வதிலும் தான் பெற்றிருந்து பிறரைக் கவரும் ஆற்றலைப் பயன்படுத்தினார்.

மேயோவினுடைய ஆட்சி மேம்பாடுற்ற நிலையிலிருந்து பெரும் புகழ் நிலையை அடைய நல்வாய்ப்புப் பெற்றிருக்கும் தருணத்தில் வெறிகொண்ட பத்தானியன் ஒருவனுடைய குத்துவாள் வாயிலாக அவ்வாட்சி விரைவில் எதிர்பாராத விதமாக முடிவுற்றது. 1872ஆம்

ஆண்டு பிப்ரவரி மாதம் அந்தமான் தீவில் தன்னுடைய சுற்றுப் பயணத்தை முடித்துக் கொண்டு திரும்பும்பொழுது அவர் கொல்லப் பட்டார். கிளாட்சன், அச்சமயத்தில் போர்த் துறை துணைக் காரிய தரிசியாக பணியாற்றி வந்த நார்த்புருக்கு பிரபுவை, அரசப் பிரதிநிதி யாக நியமித்தார். அவர், கொடுக்கல் வாங்கலில் ஈடுபட்டிருந்த பாரிங்கு குடும்பத்தைச் சார்ந்தவர். அவர் திறமை வாய்ந்தவர். உணர்ச்சியை வெளிக்காட்டாத தன்மையுடையவர்; கூர்மதி பெற்றி ருந்தார். அவரை அரசப் பிரதிநிதி பீடத்தில் அமர்ந்த வணிகர் என்று கூறலாம். அப் பதவிக்குத் தேவையான எல்லா குணங்களையும் பெற்றிருந்தார். ஆனால், அவருக்கு முன்னால் பணியாற்றியவரிடம் காணப்பட்ட தனி மனிதருக்குரிய கவர்ச்சி இவரிடம் இல்லை. ஆகவே அவருடைய ஆட்சி மேயோவினுடைய ஆட்சியைவிட மிகக் குறைந்த அளவில் எழுச்சியூட்டுவதாக அமைந்திருந்தது. இவர் காலத்தில் பஞ்சம் ஏற்பட்ட ஓராண்டைத் தவிர மற்ற ஆண்டுகளில், இந்தியா வளம் பெற்றிருந்தது. சூயஸ் கால்வாய் போக்குவரத்து திறந்துவிடப் பட்டதால், இந்தியாவின் வெளிநாட்டு வாணிகம் பெருகியது. லிபரல் கட்சியைச் சார்ந்தவரென்றாலும், காலச் சூழல்களை பொருட்படுத்தாமல் வறட்டுக் கோட்பாட்டையே பற்றி நின்று தடையிலா வர்த்தகத்தை ஆதரிப்பவரன்று. இந்தியாவின் தனிமுறையான சூழ்நிலைகளை காரணங்காட்டி காப்பு வரியை 5 சதவீதத்திற்குக் கீழ் குறைப்பதை எதிர்த்தார். வங்காளத்தில் நாட்டுப்புறஞ் சார்ந்த நகராண்மைக் கழகங் களை ஏற்படுத்துவதை ஆதரிக்கும் வகையில் உதவி செய்வதற்கு அவரி டம் போதிய படைப்புத் திறன் இல்லையென்றாலும் அவர் இந்திய வணிக நலன்கள் லங்காஷயர் வணிக நலன்களால் பாதிக்கப்படுவதால் உண்டாகும் ஆபத்தினை உணருவதற்கு வேண்டிய திறன் பெற்றிருந் தார். அவருடைய கவனமிக்க நடவடிக்கைகள் வங்காளத்திலும், பீகாரிலும், 1873-74-ல் ஏற்படவிருந்த பஞ்சத்தைத் தடுக்க உதவின. மேலும், பரோடாவின் அரசரான கெய்க்வாரின் மீது, அங்கு வசிக்கும் ஆங்கிலேயப் பிரதிநிதியை விடம் கொடுத்து கொல்ல முயற்சித்தார் என்று குற்றம் சாட்டப்பட்டபொழுது, அவர் திறமையுடன் நடந்து கொள்ளவில்லையென்றாலும், மிகக் கண்டிப்புடன் நடந்து கொண்டார்.

1874-ல் கன்சர்வேடிவ் கட்சியினர் மறுபடியும் டிஸ்ரேலியின் தலைமையின் கீழ் பதவியேற்றனர். அது முதல் இந்திய விவகாரங்கள் இங்கிலாந்திலுள்ள கட்சிகளின் விவகாரங்களினால் பாதிக்கப்பட்டன. அவ்விரண்டு கட்சியினரும் இந்தியாவில் கடைபிடிக்க வேண்டிய கொள்கையைப் பற்றி, வெவ்வேறு கருத்துக்களைக் கொண்டிருந்தனர். அக்கருத்துக்களுக்கேற்ப அரசப் பிரதிநிதிகளை அமர்த்தி வந்தனர். முக்கியமாக, ருஷ்யா, ஆப்கானித்தானம், ஆகிய நாடுகளுடன் கொள்ள

வேண்டிய வெளிநாட்டு உறவுமுறையைப்பற்றி மாறுபட்ட கருத்தினை அவர்கள் கொண்டிருந்தனர். அடுத்தாற்போல், மேற்கத்திய நிறுவனங்களை இந்தியாவில் புகுத்தும் வகையிலும் அவர்கள் வெவ்வேறு கருத்துக்களைக் கொண்டிருந்தார்கள். பழைய விக் கட்சியினருக்குத் திருப்தி அளிக்கக் கூடியதும் பழைய டோரி கட்சியினர் ஒத்துக்கொள்ளக் கூடியதும் ஆன நடவடிக்கைகள் மட்டுமின்றி பிற நடவடிக்கைகளையும் மேற்கொள்ள வேண்டும் என புதிய தீவிர முன்னேற்றவாதிகள் விரும்பினர். இப்பொழுது ஆட்சிப் பொறுப்பேற்ற கன்சர்வேடிவ் கட்சியினரால் நார்த்புரூக்கு முதலில் பாதிக்கப்படவில்லை. ஆனால், விரைவில் காப்பு வரியைக் குறைத்தல் காபூலுக்கு தூதுவரொருவரை அனுப்புதல் போன்ற விவகாரங்களில் இங்கிலாந்து அரசாங்கத்தினருக்கும், நார்த்புரூக்குக்கும் இடையே கருத்து வேற்றுமை ஏற்பட்டது, ஆகவே, நார்த்புரூக்கு தன்னுடைய பதவிக் காலம் முடிவதற்கு ஓராண்டு காலத்திற்கு முன்னரே, தன்னைத் திருப்பி அழைத்துக்கொள்ளும் வரை காத்திராமல் தன்னுடைய பதவியைத் துறந்தார். புதிய அரசப் பிரதிநிதியான லிட்டன் பிரபு, டிஸ்ரேலி, சாலிஸ்பரி ஆகியோருடைய நோக்கத்தைச் செயலாற்றுபவராக விளங்கினார். அவர் திறமை வாய்ந்தவர். நல்ல அழகுடையவர். நகைச்சுவையுடன் கூடிய பேச்சுத்திறன் படைத்தவர். கட்டுப்பாடற்ற பழக்கவழக்கங்களைப் பெற்றிருந்தவர். புனைகதை ஆசிரியரான அவருடைய தந்தைக்குரிய இலக்கியம் படைக்கிற நுட்பத் திறத்தினையும் ஓரளவு பெற்றிருந்தார். அவர் சீரிய ஆழ் கருத்துகளை உடையவரென்றாலும், எப்பொழுதும் ஆர்வமற்றவராகக் காணப்பட்டார். ஆகவே அநேகர் இவரை காரிய மனப்பான்மையற்றவர் என்று தவறுதலாகக் கருதினார்கள். பேச்சிலும், அதைவிட மேலாக செய்கையிலும், கிளாட்சனுடைய கோப உணர்ச்சியைத் தூண்டுவதில் அவர் நுட்ப ஆற்றலொன்றைப் பெற்றிருந்தார். அதனால், அவர் அவருடைய தலைவருக்கு அடுத்தபடியாக, கேடு நிறைந்தவராகக் கருதப்பட்டார். அவநம்பிக்கை உட்பட்ட நிலையில் தன்னுடைய ஆட்சியைத் தொடங்கினார். நல்லாதரவு இழந்த நிலையில் பதவியினின்றும் விலகினார். இருந்தபோதிலும் அவர் பல சாதனைகளை நிறைவேற்றினார். இந்திய அரசாங்கத்தின் கொள்கையை நிர்ணயிக்கும் பணியில் கிளர்ச்சியூட்டும் படைப்புத் திறனைப் புகுத்தினார். சிம்லாவின் சமூக காவற்காட்டிற்குள் மரபொழுங்கின்மையைப் புகுத்துவதிலும் அவர் வெற்றி கண்டார்.

லிட்டனுடைய புகழ் மழுங்குவதற்குக் காரணமான அவருடைய ஆப்கானித்தானக் கொள்கையைப்பற்றி அடுத்த பகுதியில் கவனிக்கலாம். உண்மையில் அது சம்பவம் நிறைந்த ஆட்சியின் ஒரு பகுதியே யாகும். அவர் விடுவிக்க வேண்டிய முதல் சிக்கல் 1876 முதல் 1878

வரை தொடர்ந்து இருந்து வந்த பஞ்சமாகும். பிரிட்டிஷ் இந்தியாவில் மட்டும் 50 லட்சம் மக்களுக்கு மேல் இப்பஞ்ச காலத்தில் இறந்தனர். அவர் அக்காலத்தில் கையாண்ட சில முறைகளில் குறைகள் காணப் பட்டன. ஆனால், ரிச்சர்டு ஸ்ட்ராச்சியின் தலைமையின் கீழ் பஞ்ச நிவாரண ஆய்வுக்குழு ஒன்றை ஏற்படுத்தி தன்னுடைய அறிவாற்றலை யும், ஆட்சித் திறனையும் வெளிக்காட்டினார். இந்த பஞ்ச நிவாரண ஆய்வுக் குழு பிற்கால பஞ்ச நிவாரண விதியின் (Famine Code) முன்னோடியாக விளங்கியது. பொது நிதி ஆட்சியில் தனக்கு உதவி யாக இருக்கும் பொருட்டு சர். ஜான்ஸ்ட்ராச்சி என்பவரை வடமேற்கு மாகாணங்களினின்றும் அழைத்துக் கொண்டார். அவர் துணை கொண்டு உப்பு வரியை ஒரே சீராக்கினர். இதனால், சுங்கவரி வசூலிப்பதற்கென உண்டாக்கப்பட்ட கள்ளிச் செடி வேலிகள் தேவை யற்று போயின. மேலும், பிற உள்நாட்டுச் சுங்கவரிகளும் குறைக்கப் பட்டன. இத் துறையிலும் கூட, இங்கிலாந்து அரசாங்கத்தின் கட்டளைக்கிணங்க, மட்டரகமான பருத்தி துணிகளின் மீது விதிக்கப் பட்டிருந்த சுங்கவரிகளை நீக்கி, அவர் கருத்து மாறுபாட்டிற்குள்ளானார். இது தடையிலா வர்த்தகம் ஏற்படுத்துவதற்காக மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகளில் ஒன்றாகும். இது முழு வளர்ச்சி எய்தப் பெறாத இந்தியர்களுடைய பொது கருத்துக்கும் பொதுப் பணியாளர்களுக்கும் பம்பாயில் ஏற்படுத்தப்பட்ட இந்திய பருத்தித் தொழில்களுக்கு லங்கா ஷயர் முதலாளிகள் கொடுத்த பதிலடியாகக் காணப்பட்டது. நியமனம் செய்யப்பட்ட இந்தியர்களடங்கிய சட்ட முறையான சிவில் சர்வீசு (Statutory Civil Service) ஏற்படுத்தமேற்கொள்ளப்பட்ட நடவடிக்கை வாயிலாக லிட்டனுடைய படைப்புத்திறன் வெளிப்படுத்த பட்டது. ஒப்பந்த அலுவலர்களுக்கு ஒதுக்கப்பட்ட பதவிகளில் ஆறில் ஒரு பங்கினை, இந்த சர்வீசைச் சார்ந்தவர்களுக்கு அளிக்கப் பட்டது. 1833ஆம் ஆண்டின் சாசனச் சட்டம் இந்தியர்களுக்குச் சில பதவிகளை ஒதுக்குவதாக வாக்குறுதி அளிக்கப்பட்டது. 1858ஆம் ஆண்டில் அரசியார் விடுத்த பொது அறிக்கை அவ்வாக்குறுதியை மீண்டும் வலியுறுத்தியது. ஆனால், லிட்டன் காலத்தில் ஏற்படுத்தப் பட்ட சட்டமுறையான சிவில் சர்வீசு இவ்வாக்குறுதியை நிறைவேற்று வதற்கென மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகளுள் முதலாவதாகும். மேலும் அரசியார், பேரரசி பட்டத்தினை ஏற்றுக் கொண்டதற்கு தகுந்தவாறு அமையும் பொருட்டு, அவர் இந்தியாவில் உயர்படிப்பெரு மகனார் நிலையொன்றையும் (Peerage), பிரிவி கவுன்சில் (Privy Council) ஒன்றையும் ஏற்படுத்த எண்ணினார். 1878-ல் நாட்டுமொழி செய்தித்தாள் சட்டம் இயற்றப்பட்டது. இதுமுன்னர் குறிப்பிட்ட திட்டத்தைவிட குறைவான கற்பனைத்திறம் வாய்ந்ததாக இருப்பினும் இதுவும் பயனற்றுபோயிற்று. இச்சட்டம் நாட்டுமொழியில் வெளியான

பத்திரிகைகளின் மீது சில தடைகளை விதித்தது. இத்தடைகள் ஆங்கில மொழியில் வெளியான பத்திரிகைகள் மீது சுமத்தப்படவில்லை. சில இந்தியப் பத்திரிகைகள் ஆங்கில மொழியில் வெளிவந்தன என்றாலும், இச்சட்டத்தினை, ஆங்கில அரசு கையாண்டு வந்த இனப்பாகுபாட்டுக் கொள்கையின் விளைவாக மேற்கத்தி முறைகளைக் கைப்பற்றி புதிதாக வளர்ந்து வரும்படியான உணர்ச்சிமிக்க வகுப்பினர் கருதினர்.)

1880ஆம் ஆண்டில் கிளாட்சன் மீண்டும் அரசப் பொறுப்பேற்ற போது, இங்கிலாந்து அரசாங்கம் அவரைத் திரும்ப அழைத்துக் கொள்ளும் வரைக் காத்திராமல், லிட்டன் அவருடைய பதவியை இராஜி நாமாச் செய்தார். அவர் திறமை மிக்கவரென்றாலும், அவருடைய ஆப்கானித்தானக் கொள்கையில் மட்டுமன்றி அனைத்திலுமே அவர் வெற்றிப் பெறாதவர் என்றே கொள்ள வேண்டும். ஏனெனில் அவர் பெற்றிருந்த கற்பனைத் திறம் ஆர்வக் கருத்தின் முக்கியத்துவத்தை அவருக்கு உணர்த்தி இருந்தபோதிலும், அதனை எவ்வாறு பயன்படுத்த வேண்டும் என்று அவருக்குக் கற்றுக்கொடுக்கவில்லை. அவருடைய செய்கைகள், இந்தியர்களுக்கும், ஆங்கிலேயர்களுக்கும் இடையே பிளவினை விரிவாக்கின. ஏனெனில், மக்கள் மனதைக் கவரும் பொருட்டும் அவர்களுடைய வேதனைகளை குறைப்பதற்கும் மேற் கொள்ளப்பட்ட நடவடிக்கைகள் அவர்கள் அரசாங்கத்தினிடம் அவ நம்பிக்கை கொள்ள உதவின. லாரன்சுவினுடைய கண்டிப்பு நிறைந் ததும், தாயதானதுமான நல்லெண்ணத்துடன் மக்களின் உரிமைகள் மீது கட்டுப்பாட்டினை சுமத்தும் ஆட்சிமுறை (Paterualism) மேயோ பிரபு காலத்தில் மகிழ்ச்சியூட்டுவதாகவும் பயனளிக்கக்கூடியதாகவும் இருந்தது. நார்த்புருக்கு காலத்தில் இம்முறை ஆர்வமற்றதாக இருந்தாலும் நேர்மை வாய்ந்ததாக விளங்கியது. லிட்டன் பிரபு காலத் தில் இம்முறை அழிவுற்றது. அதற்குப் பதிலாக தாற்றுமுள் ஒலியும் மிதியடிகளின் ஒலியும் நிறைந்த ஆட்சிமுறை ஏற்படுத்தப்பட்டதாக இந்திய மக்கள் உணர்ந்தனர். லிட்டனுக்குப் பிறகு பதவியிலமர்ந்த ரிப்பன் பிரபு முற்றிலும் மாறுன பண்புகளைப் பெற்றிருந்தார். அவர் சிறந்த உழைப்பாளி; திறமை மிக்கவர். நீதிமுறைக்குக் கட்டுப்பட்ட உள்ளார்வம் கொண்டவர்[1] கிளர்ச்சியூட்டும் தன்மையினையும், உணர்ச்சி புகட்டும் தன்மையினையும் அவர் பெற்றிருக்கவில்லை; அவர் உண்டாக் கிய கருத்து விளைவுகள், அவருடைய அறமுறையான குணநலன்களால் ஏற்பட்டனவேயன்றி அவருடைய தனிப்பட்ட பண்பு நலன்களாலன்று. இருந்த போதிலும் கானிங்குக்குப் பிறகு முதன்முறையாக அமைச்ச

1 அக்காலத்தில் பொதுத் தொண்டில் ஈடுபட்டிருக்கும் ஒருவர் தான் ஒரு கத்தோலிக்கர் என்று கூற மன உறுதியும், தைரியமும் தேவையாயிருந்தன. 1878-ல் ரிப்பன் தான் ஒரு கத்தோலிக்கர் என்று தைரியத்துடன் கூறினார்.

ரவையில் பெரும் நிலையில் இருந்தவர்களில் ஒருவரை அரசப் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டவர் இவராவர். லிட்டனைப் போலவே, இவரும் குறிப்பிட்ட பணியினை, நிறைவேற்றும் பொருட்டு இந்தியாவிற்கு வந்தவராவார். இவர் லிபரல் கட்சியினருள் முற்போக்குக் கருத்துகளை உடையவர்களுள் ஒருவராவர். லிட்டன் டிஸ்ரேலியினுடைய முகவர் என்று கூறுவதைப் போல் இவரையும் கிளாட்சனுடைய முகவர் (Agent) என்று கருதலாம். லிட்டன் தன்னுடைய தலைவருடைய விருப்பங்களுக்கு அதிகமாகவே காரியங்களை செய்து முடித்தார். ஆனால், ரிப்பன், தன்னுடைய தலைவரான கிளாட்சனுடைய விருப்பங்களோடு தொடர்ந்து செயலாற்றுவதற்கு வேண்டிய வல்லமை பெற்றிருக்கவில்லை. லிட்டனுடைய தவறு யாதெனில் அவர் தன்னுடைய கொள்கையை செயல்படுத்துவதில் தேவைக்கு அதிகமான பிடிவாதத்துடன் நடந்துகொண்டார். ரிப்பனோ என்றால் தன்னுடைய கொள்கையைச் செயல்படுத்துவதற்கு தேவையான பிடிவாதத்தினைக் காண்பிக்கவில்லை.

'தன்னாட்சி முறையைச் சார்ந்த அமைப்புகள் அளிக்கும் நற்பலன்களையும், வளங்களையும் இந்திய மக்களுக்கும் நாம் கொடுக்க இயலாத நிலையில் இருப்பது நம்முடைய வலுக்குறைவினுக்கும், இடுக்கண்களுக்கும் காரணமாகும்' என்று கிளாட்சன் கருதினார். ரிப்பன் பிரபு இந்த வகையில் செயலாற்றத் தொடங்க வேண்டும் என்ற நோக்கத்தோடு இந்தியாவிற்குப் புறப்பட்டார். இதுகாறும் அரசப் பிரதிநிதிகள் இந்தியர்களை தங்களுடைய குழந்தைகளாகப் பாவித்து தந்தைக்குரிய நல்லெண்ணத்துடன் செயலாற்றி வந்தனர். ரிப்பன் காலத்தில் அவர்கள் இந்திய நிர்வாகத்தினை நடத்துவதில் பங்கு பெற்றனர். இம் மாறுதலை ஏற்படுத்துவது அக்காலத்தில் மிகக் கடினமான செயலாகக் கருதப்பட்டது. ரிப்பன் தாசில்தார் ஆட்சிப் பகுதிகளிலும் மாவட்டங்களிலும், மக்களின் பிரதிநிதிகளைக் கொண்ட தல ஆட்சி மன்றங்களை ஏற்படுத்துவதிலும், நகரசபைகள் பெரிதளவில் விரிவாக்குவதிலும், வெற்றி கண்டார். ஆனால் குற்றங்களை விசாரிக்கும் இந்திய நடுவர்களுக்கு (Sessions Judges) ஐரோப்பியர்களையும் விசாரித்து தண்டிக்கும் அதிகாரத்தை வழங்குவதற்கென கொண்டுவரப்பட்ட இல்பர்ட் மசோதா[1] அரசுப்பணி சாராத ஐரோப்பியர்களின் கடும் எதிர்ப்புக்குள்ளாகியது. இவ்வெதிர்ப்புக்கு அரசுப் பணியாளரின் மறைமுகமான ஆதரவு அளிக்கப்பட்டது. மாகாண நகரங்களில் இத்தகைய அதிகாரம் இந்திய நடுவர்களுக்கு வழங்கப்பட்டிருந்தது என்பதை ஈண்டு குறிப்பிடுதல் அவசியமாகும். அதிக அளவில் பகைமை

[1] பிரிட்டிஷ்-ஐரோப்பிய குடிமகன் ஒருவனை ஐரோப்பிய மாஜிஸ்ட்ரேட்டு அல்லது நடுவர்தான் விசாரிக்க வேண்டும் என்று 1873-இல் ஒரு சட்டம் இயற்றப்பட்டது.

உணர்ச்சிகள் ஏற்பட்ட பிறகு, ரிப்பன், பாதிபேர் ஐரோப்பியர்கள் அடங்கிய அறங்கூறுயத்தினை (Jury) கோரிப் பெறும் உரிமையை ஐரோப்பியர்களுக்கு வழங்கி இந்த எதிர்ப்பிற்குப் பணிந்தார். ஒருவகை இன வழிபாகுபாட்டினைப் போக்க முயற்சி செய்த ரிப்பன் பிரபு, கடைசியில் மற்றொரு வகை பாகுபாட்டினை உண்டாக்குவதில்தான் வெற்றிகண்டார். இவரது செய்கை இரு தரத்தினருக்கும் திருப்தி அளிக்கவில்லை. இரு இனங்களுக்கும் இடையே இருந்த இடைவெளியினை அடைக்க வேண்டுமென்ற நோக்கத்தோடு அவர் இந்தியாவிற்கு வந்தார். ஆனால் தன்னுடு திரும்பும்போது அவ் விடைவெளி முன்னைவிட பெரிதாக்கப்பட்டிருந்தது. இந்த வழியில் அவருடைய ஆட்சி மனத்தில் ஆழ்ந்து பதியத் தக்கதாக இல்லையென்றாலும் அவருடைய பொது நோக்கம் மிகச் சிறந்ததாகவே காணப்பட்டது. புதிதாகத் தோன்றிய இந்திய நடுத்தர வகுப்பினர் இந்தியாவின் அரசியல் நிர்வாகம் தங்களுக்கு எதிராக இருந்தது என்று கருதிய போதிலும், பிரிட்டன் தேசத்தில் தங்களுக்குச் சாதகமாக ஒரு கூட்டத்தினர் உண்டு என்பதை உணர்ந்தனர். இத்தகைய உணர்வு லிட்டன் காலத்தில் ஏற்படவில்லை, லிட்டனுக்கு எதிராக ஏற்பட்ட மனக்கசப்பு மாறியது. இப்பொழுது வருங்காலத்தில் நம்பிக்கை ஏற்பட்டது. ரிப்பனும் பாராட்டுக்குரியவரானார். இந்திய தேசிய காங்கிரஸ் இந்த நம்பிக்கையால் ஏற்பட்ட விளைவாகும். ரிப்பனது வெற்றிகளைவிட, அவருடைய தோல்விகளே இந்தியா அரசியல் அமைப்பினை மேற்கத்திய மயமாக்குவதற்கென ஏற்பட்ட இயக்கம் விரைவாக வளர்ச்சி பெறுவதற்குக் காரணமாயிருந்தன. இதுவே ரிப்பன் பிரபு இந்தியாவிற்கு ஆற்றிய சிறப்புப் பணியாகும். இதனால், இந்தியர்கள் அரசாங்கத்தை மேற்கத்தியக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு எதிர்க்க வாய்ப்பு ஏற்பட்டது. மேல்நாட்டு அமைப்புகளை அடிப்படையாகக் கொண்ட தன்னாட்சி முறையைக் கோரவும் வாய்ப்பு ஏற்பட்டது. இப் புதிய இயக்கத்தின் தோற்றத்தை ஆங்கிலேயர்கள் உணர்ந்தனர். இவ்வியக்கத்தை ஆங்கிலேயர்கள் ஒரு பொருட்டாக மதிக்கவில்லை என்றாலும் அதனுடைய தோற்றத்தை மறுக்க அவர்களால் முடியவில்லை.

ரிப்பன் பிரபு ஆட்சியின் ஏனைய சிறப்புகளை இல்பாட் மசோதா விளைவித்த கருத்து மாறுபாடு மங்கலாக்கிவிட்டது. ரிப்பன் மரபு வழுவாத லிபரல் கட்சியினர் எங்ஙனம் நடந்துகொள்வாரோ அவ்வாறே நடந்துக்கொண்டார். உப்பு வரியைக் குறைத்தார். எஞ்சி இருந்த காப்பு வரிகளை நீக்கினார். லிட்டனுடைய நாட்டு மொழி செய்தித் தாள்கள் சட்டத்தினை நீக்கினார். தொடக்கப்பள்ளி, உயர்நிலைப்பள்ளி ஆகியவற்றின் வளர்ச்சிக்கு அவர் உதவியாயிருந்தார். மைசூர் அரசர்

1881-ல் தக்க வயதை அடைந்தபோது, மைசூரை அவருக்குத் திருப்பிக் கொடுத்தார். தொழில் சட்டம் உண்டாக்குவதில் ஆரவார மற்ற தொடக்கத்தினை ஏற்படுத்தினார். ஆட்சிப் பொறுப்பாளராக அவரைக் கவனிக்குமிடத்து, அவர் அரைகுறை ஆர்வமுள்ள ஒரு டல்ஹௌசியாக தோன்றவும் அரசியல்வாதியாக நோக்குமிடத்து வெட்கி ஒதுங்கிச்செல்கிற ஒரு கிளாட்சனாகவும் தோன்றினார்.

அவர் ஆர்வமற்றவரா, அல்லது பயங்கொள்ளியா என்பதை நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை என்றாலும் அவரை அவருடைய குறைபாடுகளை மட்டும் கொண்டு மதிப்பிடக்கூடாது.

அவர் லிபரல் கட்சியின் தத்துவத்தை இந்தியாவிற்கு கொண்டு வந்து அதன்வாயிலாக நல்லெண்ணத்துடன் மக்கள் மீது கட்டுப் பாட்டினை சுமத்தும் ஆட்சி ஒன்றினுக்குப் பதிலாக குடிமக்களுக்கும் ஆட்சிப் பொறுப்பில் பங்களிக்கும் ஆட்சி நிர்வாக அமைப்பினை ஏற்படுத்தும் முயற்சியினை தொடங்கிவைத்தார் எனலாம். இம்முயற்சி 1947-ல் முழுமையான வெற்றியுடன் முடிவுற்றது என்று கூறுவது பொருந்தமாகும்.

ஆகவே, இவருடைய சிறப்பியல்புகள்; கானிங், டல்ஹௌசி, பென்டிங்கு, வெல்லஸ்லி ஆகியோருடையவைகளைப்போல் அதிகமான அளவு கருத்தை ஈர்க்க வல்லவையாகக் காணப்பட இல்லையென்றாலும், சிறப்புத் தன்மையில் இவருடைய ஆட்சியை மேற்கூறியவர்களின் ஆட்சிகளின் வரிசையில் வைத்தெண்ணுவது பொருத்தமாகும்.

1884ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் ரிப்பன் பிரபு பதவியைவிட்டு விலகியபோது, இதுவரை நடைபெறாத அளவில் இந்தியர்கள் தங்களுடைய நல்லெண்ணத்தைத் தெரிவித்தனர். அதே சமயத்தில் கிளாட்சனுடைய இரண்டாவது மந்திரிசபை ஆட்டங்கண்டு தன்னுடைய வீழ்ச்சியை எதிர்நோக்கி இருந்தது. அந்த நேரத்தில் புதிய முன்னேற்றத் திட்டங்களை மேற்கொள்ளுவதைவிட இதுவரை புகுத்தப்பட்ட திட்டங்களை வலுப்படுத்துவதனையே மேலாகக் கருதினர். ரிப்பனுக்குப் பிறகு பதவியேற்ற டஃப்ரின் பிரபு பேரரசைச் சார்ந்த சில்லறை பணிபுரியும் சிறந்த ஆட்களில் ஒருவராவார். இல்பர்ட் மசோதா உண்டாக்கிய கருத்து வேறுபாட்டினால் ஏற்பட்ட மனக் கசப்புகளை நீக்குவதற்கு வேண்டிய திறமையும், கனிவும், அரசியல் செயலாட்சிக்குரிய அனுபவமும் தனிச் சிறப்பியல்புகளையும் பெற்றிருந்த காரணத்தால் அவர் இந்திய அரசாங்கத்தின் தலைமைப் பொறுப்பைத் தாங்க எல்லா வகையிலும் தகுதியானவராகக் காணப் பட்டார். தங்களிடமிருந்து எதிர்பார்க்கப்பட்டவைகளை முழுமையாக

நிறைவேற்றிய அரசப் பிரதிநிதிகள் ஒரு சிலருள் அவர் ஒருவராவார். அவ்வாறே அவர்களிடமிருந்து எதிர்பார்க்கப்பட்டவைகளைத் தவிர, வேறொன்றும் செய்யாத அரசப் பிரதிநிதிகள் ஒரு சிலருள் அவரும் ஒருவராவார். அவரைச் சிறந்த அரசியல் நிர்வாகி என்றோ அரசியல்வாதி என்றோ கூறுவதைவிட அரசியல் நயத்திறம் பெற்றவர் என்று கூறலாம். அவருடைய ஆட்சியினை மரபுவழாத ஆட்சி என்று கூறுவதை விட பேரரசின் 'தாதுவராட்சி என்று குறிப்பிடலாம். இக் கருத்துடன் நோக்குமிடத்து, அவருடைய ஆட்சி மிகவும் வெற்றிகரமானதாகத் தோன்றுகிறது. அவருடைய முழுக் கவனமும் வெளிநாட்டு விவகாரங்களிலேயே ஈடுபட்டிருந்தது. 1885ஆம் ஆண்டில் ஆப்கானித்தானத்தில் ஏற்பட்ட பஞ்ச்டே நிகழ்ச்சியினை ஒட்டிய நடவடிக்கையினை மேற்கொண்டார். 1886-ல் மேற்குப் பர்மாவை ஆங்கிலப் பேரரசுடன் இணைத்தார். இந்திய விவகாரங்களைப் பொறுத்தவரையில் இந்திய தேசிய காங்கிரசுக்கு தன்னுடைய எச்சரிக்கையுடன் கூடிய ஒப்புதலை அளித்தார். அதே சமயத்தில் இல்பர்ட் பிரச்சனை மீண்டும் எழாதிருக்க வழிவகை தேடினார். அவ்வாறே அரசியலமைப்புப் பற்றிய திருத்தங்கள் ஏற்படுத்துவதற்கென வழிவகுக்கும் போதும் மிக்க விழிப்புடன் நடந்துகொண்டார். சிற்றரசர்கள் ஆங்கிலேய ஆட்சியின் பாற் கொண்டிருந்த ஆர்வ நம்பிக்கையினையும் பற்றுறுதியினையும் பயன்படுத்தி பேரரசு பணிப் படையினை (Imperial Semi Corps) நிறுவினார். இதனால், சிற்றரசுகளின் படைகள் அயல் நாடுகளில் பயன்படுத்த வழியேற்பட்டது. மேலும் இது சிற்றரசர்களின் மனநிறைவை சான்றுறுதி செய்கிறது. இதைவிட குறிப்பிடத்தக்க செயல் யாதெனில், இப் புதிய படைப்பிரிவுகள் ஆங்கிலேய படைத் தலைவர்களின் மேற்பார்வையின் கீழ் வைக்கப்பட்டிருந்தபோதிலும், இந்தியப் படைத்துறை ஆலோயர்களின் கீழ்தான் இயங்கி வந்தன என்பதாகும். ஒரு விதத்தில் அவைகள் தற்காலத்திய இந்தியப் படையின் பிறப்பிடமாக அமைந்தன என்று கருதலாம். டஃபிரினுடைய முற்போக்குக் கருத்தினை, வங்காளம், அயோத்தி, பஞ்சாப் ஆகிய மாகாணங்களைப் பாதிக்கும் மூன்று குடிவாரச் சட்டங்கள் தெளிவாக எடுத்துக்காட்டின. இச் சட்டங்கள் குத்தகைக் காரர்களைக் காப்பாற்றும் வகையில் மேற்கொள்ளப்பட்ட முன்னைய முயற்சிகளை ஒரு படி முன்னால் கொண்டு சென்றன.

டஃபரின் பிரபுவின் பதவிக்காலம் இங்கிலாந்தில் தன்னாட்சி இயக்கத்தினால் ஏற்பட்ட அரசியல் நெருக்கடியினைச் சூழ்ந்திருந்தது. அவர் காலத்தில் சாலிஸ்பரி பிரபு யூனியனிஸ்டு கட்சி அமைச்சரவையின் தலைவராக அசைக்க முடியாத நிலையில் பொறுப்பு வகித்திருந்தார். இந்திய விவகாரங்களைப் பற்றி ஆங்கிலேயர்கள் கொண்ட கருத்தில்

ஒரு மாற்றம் ஏற்படத் தொடங்கியது. அடிப்படைக் கொள்கைகளில் அவர்களுக்குள் இருந்த பிளவு மறுப்படியும் குறைந்துவிட்டது. இப்பொழுது அவர்களுக்குள் இருந்த வேறுபாடுகளெல்லாம் அவற்றை நிறைவேற்ற மேற்கொள்ளப் பெறும் நடவடிக்கைகளைப் பொருத்திருந்தன. ஏகாதிபத்தியக் கொள்கை லிபரல் கட்சியைச் சார்ந்தவர்களிடையே பரவியதாலும், சாலிஸ்பரி தொடர்ந்து ஏற்படுத்திய அமைச்சரவைகள் நடுநிலைத் தன்மையைப் பின்பற்றியதாலும் இம் மாற்றம் ஏற்பட ஏதுவாயிற்று. புதிய அமைச்சரவையோடு சேர்ந்து பணியாற்றுவதில் அவர் எவ்வித துன்பத்தையும் அடையவில்லை. பதவியிலின்றும் விலகிய பிறகு அவருக்கு ரோமாபுரியில் தூதுவராகப் பணியாற்றும் பொறுப்பு அளிக்கப்பட்டது. அவருக்குப் பின்னர் ஆதிக்க கொள்கையை ஆதரிப்பவர்களின் கையாட்களில் ஒருவரான லாண்ட்ஸ்டவுன் பிரபு அரசப் பிரதிநிதியாகப் பொறுப்பேற்றார். அவர் ஏற்கனவே கனடாவின் கவர்னர் ஜெனரலாகப் பணியாற்றினார். பிற்காலத்தில் சிறப்பு மிக்க வெளிநாட்டு விவகாரங்களின் அமைச்சராக விளங்கினார். கன்சர்வேடிவ் கட்சியின் துணைத் தலைவராகவும் செயல் புரிந்தார். பொதுப் பணியினை வழக்கமானத் தொழிலாகவும் நாவடக்கத்தினையும் செயலறிவினையும் இயற்கைப் பண்புகளாகப் பெற்ற விக் கட்சியைச் சார்ந்த பெருங்குடி மக்களின் கடைசி நபராக இவரைக் கருதக்கூடும். முதல் தரமான முகத்திரைக்குப் பின்னால் முழுமையாக மறைத்து வைக்கப் பட்டிருந்த அவரது உண்மைக் குணங்களை அறிவது எளிதான காரியமன்று. மேயோவிடம் காணப்பட்ட கவர்ச்சியும், டபிரினிடம் காணப் பட்ட இணக்க நயப் பண்பும், லிட்டனிடம் காணப்பட்ட நிலையற்ற பகட்டுமுகினையும் ரிப்பனுடைய நேர்மையுணர்வும், இவரிடம் காண முடியாது. ஆனால், நார்த்புருக்கைப் போல் திறம்படைத்தவராகவும், அவரைவிட அதிக அளவில் ஒத்துக்கொள்ளும் மனப்பான்மை பெற்றவராகவும், ரிப்பனைப் போல் செல்வாக்குடையவராகவும் விளங்கினார். இந்திய நாட்டின் தலைமைப்பொறுப்பேற்ற பெரிய நற்குடியாளர் என்று அவரைக் குறிப்பிடலாம். எல்லா மக்களையும், பொருட்களையும் அன்பாகவும், பெருந்தன்மையுடனும், நடுவுணர்வு நிலையுடனும் சிறந்த முறையில் பாரபட்சமின்றி நடத்தினார்.

லிபரல் கட்சியைச் சார்ந்த டபிரின் கொண்டு வந்த அரசியல் அமைப்பு பற்றிய வரம்பு மீறாத சீர்திருத்தங்கள், லாண்ட்ஸ்டவுன் பிரபு காலத்தில் முழுமையைப் பெற்றன. இது இந்திய விவகாரங்களில் மேற்கொள்ளப்பட்ட கட்சிக் கொள்கையின் மாறுபடாத் தன்மை மீண்டும் புகுத்தப்பட்ட நிகழ்ச்சியினை எடுத்துக் காட்டுகிறது. இவரது சீர்திருத்தங்கள் ரிப்பனுடைய சுய ஆட்சிக் கொள்கையைச்

சார்ந்திருந்தபோதிலும் இந்தியர்களுக்கு மகிழ்ச்சியை உண்டாக்கத் தக்கனவாக அமையவில்லை. அவைகளைப் பற்றிய விவரங்கள் வேறிடத்தில் விவரிக்கப்பட்டுள்ளன. ஆனால் இதனுடைய சிறப்புத் தன்மையாதெனில், சட்டசபையிலுள்ள இந்திய உறுப்பினர்களில் சிலர் கிட்டத்தட்ட தேர்தல் முறைவாயிலாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். மேலும், இச் சபைக்கு ஆண்டு வரவு செலவு திட்டத்தை விவாதிக்கும் அதிகாரத்தினை வழங்கப்பெற்றது. அதன் பயனாக அதனுடைய அதிகாரங்கள் பெருக்கப்பெற்றன. இம் மாறுதல்களுக்குப் பிறகு இது பரந்த அடிப்படையின்மேல் மிகக் கவனமாக புதுப்பிக்கப்பட்ட டல்ஹௌசியினுடைய சிறப்புற்ற பாராளுமன்றத்தினை ஒத்திருந்தது. பல கட்டுப்பாடுகளுடன் கூடிய இத் தேர்தல் முறை, புதிய இந்தியாவிற்கு மைய அரசாங்கத்தில் பங்கு கொள்ளும் முதல் வாய்ப்பினைத் தந்து, சிறப்படைந்தது. இது தான் பிற்காலத்தில் கோகலேயின் செயற்களமாக விளங்கியது. ரூபாயின் நாணயமாற்று மதிப்புகுறைந்துவிட்டது. 1870-ல் ஒரு ரூபாயின் மதிப்பு 2 ஷில்லிங்காக இருந்தது. 1891-ல் இதுவரை ஏற்படாத வகையில் 1 ஷில்லிங்கும் 1 பென்னியுமாக குறைந்து விட்டது. இதுவே லான்ட்ஸ்டவுனுடைய கவனத்தைக் கவர்ந்த மற்றொரு விவகாரமாகும். இந்த இறக்கம் 1873-ல் தொடங்கியது. ஜர்மனியிலும், இலத்தீன் யூனியனிலும் வெள்ளியினுடைய பண மதிப்பைக் குறைத்ததே இதற்குக் காரணமாகும், வெள்ளியின் மதிப்பு தங்கத்தின் மதிப்புடன் உறவுகொண்டு குறையலாயிற்று. இந்தியா தங்க நாணயத் திட்டம் கொண்ட பிரிட்டன் தேசத்திற்கு கடன் பட்டிருந்ததால், இது இந்தியாவை வெகுவாகப் பாதித்தது. ஏற்றுமதிகள் தூண்டப்பட்டன. ஆனால், இறக்குமதிப் பொருள்களுக்கென செலவிடப்பட்டத் தொகை கேடுபயக்கத் தக்கதாயிருந்தது. 1895-ல் இந்த இறக்கத்தினை முழுமையாகத் தடுப்பதற்கு முன்னரே வருமான வரி மீண்டும் சுமத்தப்பட்டது. உப்பு வரி அதிகரிக்கப்பட்டது. லாண்டிஸ்டவுனுடைய எஞ்சிய கவனமெல்லாம் ஆப்கானித்தான பிரச்சனையிலும் எல்லைப் பிரச்சனைகளிலும் செலுத்தப்பட்டது. இப் பிரச்னைகள் தனித்தனியே விவாதிக்கப்பட்டிருக்கின்றன.

— ஸ்லாட்சனுடைய குறுகிய கால நான்காவது அமைச்சரவையின் பதவிக்காலத்தில் லாண்ட்ஸ்டவுன் பதவியினின்றும் விலகினார். அமைச்சரவை பிளவுற்றிருந்தது. இங்கிலாந்து அரசாங்கத்தின் ஆதரவைப் பெறும் வாய்ப்பு இல்லாத காரணத்தாலும், நிறைவேற்றப்பட வேண்டிய மேலிடத்துத் திட்டம் எதுவுமில்லாததாலும் இப் பதவியை அடைய எவரும் அக்கறை காட்டவில்லை. குரோமார் பிரபு அரசப் பிரதிநிதிப் பதவியை ஏற்க மறுத்தார். சர். எச். நார்மன் பதவி ஏற்க இசைவு கொடுத்து, பின்னர் முதுமைக் காரணத்தால்

பதவியை விட்டு விலகினர். ஆகவே, இப் பொறுப்பு எல்ஜின் பிரபுவின் மேல் திணிக்கப்பட்டது. இவருடைய தந்தையார் இவருக்கு முன்னர் இப் பதவியை வகித்திருந்தார். மேலும், இரண்டு ஆண்டுகளில் டஃபரின் ஏற்படுத்திய அமைதி தொடர்ந்து இருந்து வந்தது.[1] பிறகு, இந்தியா பிளேக்கு நோயாலும், பஞ்சத்தாலும் பீடிக்கப்பட்டது. தென்னிந்தியா, மத்திய இந்தியா, வட இந்தியா ஆகிய பிரதேசங்களின் பெரும் பகுதி பஞ்சத்தால் பிடிக்கப்பட்டன. பஞ்சம் பெருமளவில் ஏற்பட்டபோதிலும், புதிய முறைகள் கையாளப்பட்டதால் 75,000 பேர்களே உயிரிழந்தனர். அதுவும் போக்குவரத்தில் யாதொரு முன்னேற்றம் அடையாத மத்திய மாகாணங்கள் போன்ற பிரதேசங்களில் தான் இறந்தவர்கள் எண்ணிக்கை விதம் அதிகமாயிருந்தது. கருங் கொள்ளை நோய் என்ற பெயரால் ஐரோப்பாவை பாழாக்கியதும், 1665-ல் பிளேக் என்ற பெயரால் இலண்டனைப் பாழாக்கியதுமான இக் கொள்ளை நோய் 17-ஆம் நூற்றாண்டின் இறுதி ஆண்டுகளில் சீன நாட்டில் பரவியது. 1896-ல் ஹாங்காங்கிலிருந்து இந் நோய் பம்பாய்க்கு பரவியது. ஜஹாங்கீர் இக் கொள்ளை நோயின் அறிகுறிகளை பிழையின்றி 1616-ல் விவரித்திருந்தார். ஆனால், அக் கால முதல் இதுவரை இந் நோய் மக்களிடையே பெரும் அளவில் ஏற்படவில்லை. அந் நோய் பரவாமலிருக்க நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டபோது இந்திய மக்களின் பழக்கவழக்கங்கள் பாதிக்கப் பெற்றன. ஆகவே அவை குழப்பத்தை விளைவித்தன. இச் சமயத்தில்தான் பி. ஜி. திலகர் சிறப்படைந்தார். அக் கால முதல் இந்தியாவில் குறிப்பிட்ட சில காலங்களில் தோன்றுகிற ஒரு நோயாக இருந்து வந்தது. எனினும், அது கவலைக்கிடங் கொடுக்குமளவிற்கு ஏற்படவில்லை.

1862 முதல் 1898 வரை இடைப்பட்ட 36 ஆண்டுகளில் இந்திய அரசாங்கத்தின் தன்மை பல மாறுதல்களை அடைந்தது. சில காலம் நல்லெண்ணத்துடன் குடிமக்களின் மீது தேவையற்ற கட்டுப்பாடுகளை சுமத்தி வந்தது. சில காலம் முதிர்ச்சி பெருத ஏகாதிபத்தியக் கொள்கையை கடைபிடித்து வந்தது. சில காலம் மக்களை அரசுப் பணியில் கூட்டாளியாகத் தற்காலிக நடவடிக்கைகளை மேற்கொண்டது. ஆனால், தந்தைக்குரிய நல்லெண்ணத்துடன் தேவையற்ற கட்டுப்பாடுகளைச் சுமத்தும் ஆட்சி முறையே இக் காலத்தில் மேம்பட்டு இருந்தது. இக் கால இறுதிப் பகுதியில்தான் இந்திய அரசாங்கம், மக்களுடன் கலந்து பேசியதன் விளைவாக, தான் சுமத்திய கட்டுப்பாடுகளைக் குறைத்து ஆட்சி புரியத் தலைப்பட்டது. பொருளாதாரத் துறையில்,

[1] 1892-ஆம் ஆண்டு இந்திய கவுன்சில்கள் சட்டம்.

இந்தியா தடையிலா வர்த்தக கொள்கைக்குஅடிமைப் படுத்தப்பட்டது. இதனல், உலக வியாபாரத் தலங்களில் புகுந்ததால் விளைந்த நன்மைத் தீமைகளை அனுபவிக்கலாயிற்று. ஆரவாரமின்றியும் அதே சமயத்தில் ஒரே சீராகவும் தற்காலத் தொழில்களின் வளத்தைப் பெருக்கியது. எல்லாவற்றிற்கும் மேலாக பிரம்மாண்டமாகத் தோன்றிய பேரரசாட்சி யின்கீழ் உள்ள இந்திய சமுதாயத்தில் தோன்றிய கொதிப்பு விரைவாக வளர்ந்து வந்தது. இக் கொதிப்பு இறுதியில் பார்ப்பவர்களுக்குப் புலப்படும் வகையில் தன்றுடைய முழு அரசியல் உருவத்தைப் பெறும் நிலையை அடைந்தது.

# 3. வெளி நாட்டு உறவும் எல்லைக் கொள்கையும் (1862 - '98)

வடமேற்குப் பகுதி: *1857ஆம் ஆண்டு கலகத்திற்குப் பின்னர் நிலவியல் சார்ந்த அரசியல் நிலைமையில் சில மாறுதல்கள், ஏற்பட்டன. இம் மாறுதல்கள், இரண்டாவது ஆப்கானித்தானப் போருக்கும், மூன்றாம் பர்மா யுத்தத்திற்கும் முக்கிய காரணங்களாக அமைந்தன. 1857ஆம் ஆண்டிற்கு முன் இருந்தது போலவே, அதற்குப் பிறகும்கூட இந்தியாவின் பாதுகாப்பிற்கு இன்றியமையாத தேவைகள் மூன்றினுள் இரண்டு நிறைவேற்றப்பட்டன. பிரிட்டன் கடலாதிக்கம் பெற்ற நாடாக தொடர்ந்து இருந்து வந்தது. கிழக்கிந்தியத் தீவுகள், ஏறத்தாழ ஆங்கிலேயர்களின் உதவியாளர்கள் என்று சொல்லக்கூடிய டச்சுக்காரர்களின் ஆதிக்கத்தில் தொடர்ந்து இருந்து வந்தன. டச்சுக்காரர்கள், தங்களுடைய நேரடி ஆதிக்கத்தினை கிழக்கிந்தியத் தீவுகளைச் சூழ்ந்துள்ள பிரதேசங்களில் பரப்பிக் கொண்டிருந்தனர். இவ்வாறாக அவர்கள் இந்தியாவின் பாதுகாப்பினை வலுப்படுத்தினார்கள். இந்தியாவிற்கு கிழக்கிலுள்ள பிரதேசங்களிலும் மேற்கிலுள்ள பிரதேசங்களிலும் ஏற்பட்டிருந்த பொது நிலைமையில் மாறுதல் ஒன்று ஏற்படத் தொடங்கியது. கிழக்குப் பாகத்தில் ஏற்பட்ட மாறுதலுக்கு பிரஞ்சுக்காரரின் வருகை காரணமாகயிருந்தது. மேற்குப் பகுதியில் ஏற்பட்ட மாறுதல் மிக முக்கியமானதாகும். ஆகவே, முதலில் இதனைக் கவனிப்போம். வரலாற்று நிகழ்ச்சிகளைக் கொண்டு பார்க்கும் போது, இந்தியாவின் வட மேற்குப் பகுதியின் பாதுகாப்பு, இந்தியாவின் ஏற்படுத்தப்பட்ட வல்லரசு, ஈரான் நாட்டில் ஏற்படுத்தப்பட்ட வல்லரசு, ஆகிய இரு வல்லரசுகளைச் சம நிலையில் கொண்டு நிறுத்துவதனை ஒட்டியிருந்தது. எக்காலத்திலும் இந்தியா ஈரான் மேட்டுப் பிரதேசத்தைத் தன் ஆளுகையின் கீழ் கொண்டுவந்து கட்டுப்படுத்தியதில்லை. ஆகவே, அங்கு ஏற்படுத்தப்பட்ட வல்லரசு இந்தியாவின் பாதுகாப்பினுக்கு ஆதாரமாக விளங்கியது. ஏனெனில் அது*

மத்திய ஆசியாவின் ஆற்றல் பொருந்திய வலிமையை கட்டுக்குள் வைத்திருந்தது. பேரரசுகளின் வழிவழி மரபான பிறப்பிடமாகிய மத்திய ஆசியாவினை, ஒரு பெரிய நீர்த்தேக்கத்திற்கு ஒப்பிடலாம். வெளித்தோற்றத்தை முன் மதிப்பிட்டுக் கூற முடியாததாகவும், மாறு படக் கூடிய வேகத்தைப் பெற்றதாகவும் காணப்பட்ட மக்கள் வெள்ளம் அதனின்றும் அடிக்கடி வெளிப்பட்டது. மத்திய ஆசியாவினின்றும் வெளிப்படும் சாதாரண ஆபத்தினைத் தடுக்கக்கூடிய வலிமைபெற்ற அண்டை நாடு ஒன்று வடமேற்குப் பகுதியில் ஏற்படுத்தப்பட்டால், அத்தகைய நிகழ்ச்சி இந்தியாவிற்கு நலன் அளிக்கும் என்பதில் ஐயமில்லை. இந்தியாவிலும் வலிபொருந்திய மைய ஆட்சிமுறை ஏற்படுத்தப் பெற்றிருந்தால் தான் தகுந்த பலன் பெற முடியும் என்பது திண்ணம். சாபாவிடுகள் (Safavids) அழிந்தவுடனும், நாதர்ஷா ஈரானில் மறைந்த பிறகும், இந்தியாவில் மொகலாயர் ஆட்சி அழிவுற்றவுடனும் இத்தகைய நிலை ஏற்படவில்லை. பிரிட்டன் நாட்டவர்கள் 1818ஆம் ஆண்டிற்குள்ளாகவே இந்தியாவை ஒரு பேரரசின் கீழ் மீண்டும் இணைத்துவிட்டனர். அப்போது சிந்து நதிப் பிரதேசத்திற்கப்பால் அமைதி குலைந்த ஆப்கானித்தானமும், காஜார் குலத்தரசர்களின் கீழ் வலியிழந்து கிடந்த பாரசீகமும் தங்களுக்கு எதிர்முகத்தில் இருப்பதை கண்டனர். அவற்றினுக்கப்பால் ருஷ்யா பரந்து கிடந்தது. ருஷ்யா வின் ஆதிக்கம் பரவுவதற்குரிய வாய்ப்புக்காலம் இன்றும் ஏற்பட வில்லை. 1820 முதல் 1839 வரை ருஷ்யா தன்னுடைய கவனத்தை யெல்லாம் தென்மேற்குப் பகுதியிலிருந்த துருக்கி, கான்ஸ்டாண்டி நோபிள் ஆகியவற்றின் பக்கமாகச் செலுத்தி இருந்தது. பால்மர்ஸ்டன் தன்னுடைய அரசியல் செயலாண்மைத் திறத்தால் ருஷ்யாவைப் போதிய அளவு கட்டுப்படுத்தி இருந்தார். ருஷ்யாவிற்கும் ஆப்கானித்தானத் திற்கும் இடையே மத்திய ஆசியாவில் சிற்றரசுகள் பல இருந்தன. ஆப்கானித்தானத்தை பிரிட்டிஷ்காரர்களின் கட்டுக்குள் கொண்டுவர ஆக்லாண்டு பிரபு தவறிய போதிலும். அதனால் இந்திய பாதுகாப்பி னுக்கு யாதொரு விளைவுக்கேடும் நேராமலிருப்பதற்கு அச் சிற்றரசுகளே காரணமாக இருந்தன. அந்த நிலைமையைத் தங்களுக்குச் சாதகமாக பயன்படுத்திக் கொள்ளக் கூடியவர் எவரும் அப்பொழுது தோன்றிலர். ருஷ்யாவின் பார்வையெல்லாம் கான்ஸ்டாண்டிநோபிளின் மீதே பதிந்தி ருந்தது. 1844-ல் இவ்விரு பேரரசுகளுக்குடையே யிருந்த அச் சிறு நாடுகளைக் கொண்டு நடுநிலை மண்டலம் ஒன்றை ஏற்படுத்த பிரிட்ட னும் ருஷ்யாவும் இசைந்தன. இதனால் இந்திய அரசாங்கத்திற்கும். தோஸ்து முகமதுவுக்கும் இடையே ஏற்பட்டிருந்த தொடர்பு மீண்டும் நன்னிலைக்குக் கொண்டுவருவதற்கான வாய்ப்பு ஏற்படுத்தப்பட்டது. தோஸ்து முகமதும் அந்த வகையில் முயற்சி மேற்கொள்ளுவதற்கு பெரும் உதவி புரிய விரும்பினார். அத்தகைய சூழ்நிலையில் பாரசீகம்

வலுத்தாக்குதல் செய்யக்கூடிய நிலையில் இல்லை. பாரசீகத்திற்கும், இந்தியப்பேரரசுக்கும் இடையே ஆப்கானித்தானம் இருந்தமையால் பிரிட்டனும் பாரசீகத்தை அடக்கியாளும் நோக்கமோ அல்லது அதற்கு தேவையான வலிமையோ பெற்றிருக்கவில்லை. 1856-ல் பாரசீகம் ஹீரத்தை அதனுடைய ஆட்சியாளரிடமிருந்து கைப்பற்றிய பொழுது, பிரிட்டன் அவுட்ராம் தலைமையின் கீழ் படையொன்றினை பாரசீக வளைகுடாவிற்கு அனுப்பி, பாரசீகத்தை வெகு விரைவில் அவ்விடத்தை விட்டு வெளியேறும்படி செய்தது. ஈரான் (பாரசீகம்) அரசாங்கத்தின் ஆதிக்க கொள்கையால் ஏற்பட்ட சிக்கலுக்குத் தீர்வு காணப்படவில்லை என்றாலும், அச் சிக்கல் செயலற்ற நிலையில் விட்டு வைக்கப்பட்டது.

அத்தகைய நிலை வெகுநாள் வரை நீடித்திருக்கவில்லை. 1854 முதல் 1856 வரை நடைபெற்ற கிரிமியப் போர் அந்நிலையை மாற்றியமைத்தது. கான்ஸ்டாண்டிநோபிளை நோக்கி முன்னேறிய ருஷ்யர்கள் மீண்டும் தடுத்து நிறுத்தப் பெற்றனர். அதே சமயத்தில் மத்திய ஆசிய நாடுகளைப் பற்றிய உடன்பாடும் தகர்த்தெறியப்பட்டது. இதனை இந்திய அரசாங்கம் 19 ஆம் நூற்றாண்டில் கைப்பற்றி வந்த வடமேற்குக் கொள்கையின் இரண்டாவது படியின் தொடக்கமாகக் கொள்ளுகிறார்கள். இக் காலப் பகுதியில் நடைபெற்ற நிகழ்ச்சிகளின் தொகுதியினை மதிப்பிடும்போது இரண்டு அடிப்படை உண்மைகளை நாம் மனதில் வைத்துக்கொள்ளவேண்டும். அவற்றுள் முதலாவது இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கையின் மீது பிரிட்டிஷ் அரசாங்கம் சுமத்திய கட்டுப்பாடு முன்பிருந்ததை விட அதிகமாயிற்று என்பதாகும். 1870ஆம் ஆண்டில் செங்கடல் வழியாகக் கடலடித் தந்திக்கம்பி வடம் இடப்பட்டது. அக்காலந் தொடங்கி கல்கத்தாவில் செயலாற்றி வந்த இந்திய அரசப் பிரதிநிதிகள் தங்கள் விருப்பப்படி பெருமளவில் நடவடிக்கை மேற்கொள்ள இயலவில்லை. லிட்டன் பிரபுவின் ஆட்சிக்காலத்தின்போது ஒரு சில சமயங்களிலும், கர்சன் பிரபு ஆட்சிக்காலத்தின் போது ஓரளவும், இந்திய அரசாங்கத்தினரால் தங்கள் விருப்பப்படி நடவடிக்கைகளை மேற்கொள்ள இயன்றது என்பதனை நாம் இங்கு குறிப்பிடுதல் அவசியமாகும். 1907ஆம் ஆண்டிற்குள்ளாக பிரிட்டிஷ் அரசாங்கத்தினரே இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கையினைக் கட்டுப்படுத்தி வந்தமையால் ஹார்டிஞ்சு பிரபு சமீப காலத்தில் நாங்கள் இந்திய அரசாங்கத்தினரை கலந்து ஆலோசியாமலே முடிவுகள் எடுக்கிறோம் என்று எழுத முடிந்தது. இரண்டாவதாக இலண்டனில் செயலாற்றி வந்த அரசாங்கத்தினர் ருஷ்யாவின் மீது நடவடிக்கை மேற்கொள்ளும்போது ஐரோப்பா அண்மைக் கிழக்கு, மத்திய கிழக்கு, மத்திய ஆசியா ஆகிய பிரதேசங்களில் ஏற்பட்ட நெருக்கடி நிலைமையை தங்களுடைய கருத்தில் கொள்ளத் தொடங்கினார்கள்.

1856-ல் ருஷ்யா கிரிமியப் போரில் தோல்வியுற்ற காரணத்தால் பாரசீகத்திற்கு யாதொரு உதவியும் புரிய இயலாத நிலையில் இருந்தது. அதே நேரத்தில் இந்தியாவில் 1857-ல் ஏற்பட்ட கிளர்ச்சி இந்தியாவில் பிரிட்டனுடைய ஆட்சி அமைக்க முடியாத நிலையைப் பெற்றிருந்தது என்று எண்ணமிடுவது தவறானதென்று எடுத்துக் காட்டியது. அதன் பிறகு ஏனைய இடங்களில் தன்னுடைய திட்டங்களுக்குத் தடையேற்படும் போது, எதிர்ப்பு அதிகமில்லாத திசைகளில் தன்னுடைய கவனத்தைச் செலுத்தும் வழக்கமான கொள்கையை ருஷ்யா மீண்டும் கடைப்பிடிக்கலாயிற்று. 1860 முதல் 1869 வரை ஐரோப்பிய நாடுகள் புத்துயிர்ப்பு பெறுவதிலும், உள்நாட்டுச் சீர்திருத்தங்களை மேற்கொள்ளுவதிலும், அரசியல் செயலாட்சிக்குரிய விவகாரங்களில் அமைதி காணுவதிலும் ஈடுபட்டு இருந்தபொழுது ருஷ்யா ஆசியாவில் தன்னுடைய ஆதிக்கத்தை விரிவுபடுத்தத்தொடங்கியது. குறிப்பாக மக்கள் தேக்கம் என்று கருதப்பட்ட மத்திய ஆசியப் பகுதிக்குள் ருஷ்யா முன்னேறத் தொடங்கியது. அம் மக்கள் தேக்கத்தின் ஊற்றுகள் வற்றிப் போய்க்கொண்டு இருந்தன. அப் பகுதியில் ஏற்பட்ட வறட்சியின் காரணமாக ஏற்பட்ட வறுமையும், குடியழிவும் இதற்கு முக்கிய காரணமேயன்றி அம்மக்கள் கொண்டிருந்த உள்ளியல்பான பண்புகளில் காணப்பட்ட சீரழிவு அல்ல. அங்குள்ள சிற்றரசுகள், தற்கால அறிவிற்கும் வலிமைக்கும் மூல ஆதாரமாக விளங்கும் தன்மைகளைப் பெறாத காரணத்தால் சீர்படுத்த இயலாத அளவிற்கு ஆற்றல் இழந்த நிலையை அடைந்தன. ஆகவே முன்னொரு காலத்தில் ருஷ்யாவை அடக்கியாண்ட தாதாரிய சிற்றரசர்கள் 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ருஷ்யாவிற்கு இரையானார்கள். 1866-ல் பொகாரா ருஷ்யாவின் ஆதரவிலுள்ள நட்பு நாடாக மாறியது. 1868-ல் ருஷ்யா சாமர்கண்டைக் கைப்பற்றியது. 1873-ல் கீவா சாமர்கண்டைப் போலவே ருஷ்யாவின் ஆதிக்கத்திற்குட்பட்டது. துருக்கிஸ்தானம் என்ற பெயர்கொண்ட புதியதொரு மாகாணத்தை ருஷ்யா ஏற்படுத்தியது. அதன் பயனாக ருஷ்யாவின் படைத்தளம் ஓரென்பெர்க்கிலிருந்து ஆயிர மைல் தள்ளியிருந்த தாஷ்கண்டு என்னுமிடத்திற்கு மாற்றப்பட்டது. ஹீரத்துடன் கூடிய வடகிழக்கு ஆப்கானிஸ்தானத்திற்கும் ருஷ்யப் பேரரசுக்கும் இடையே எஞ்சியிருந்தது மெர்வ் என்னும் பிரதேசமேயாகும்.

இனி ஆப்கானிஸ்தானம் பற்றிய நிகழ்ச்சிகளை ஆராய்வோம் வடமேற்குப் பகுதியில் ருஷ்யா தலையிடாதவரை எல்லன்பரோ பிரபு தொடங்கிவைத்த தலையிடாக் கொள்கை பயனளிப்பதாக விளங்கியது. தோஸ்துமுகமது ஹீரத்துக்கு இன்னும் தலைவராகாத காரணத்தால் பிரிட்டன் நடுநிலைக் கொள்கையை கையாளுவதை அவர் மிகவும்

மகிழ்ச்சியுடன் வரவேற்றார். மேலும், பாரசீகத்திற்கு எதிராக பிரிட்டனின் உதவியைப் பெறலாம் என்ற நம்பிக்கையையும் பெற்றிருந்தார். அவருடைய நட்பைப் பெறுவதற்காக டல்ஹௌசி அவருடன் உடன்படிக்கை யொன்றை 1855-ல் ஏற்படுத்திக் கொண்டார். ஹிரத்து பற்றிய விவகாரத்தில் பிரிட்டனுடைய உதவி அவருக்கு அளிக்கப்பட்டது. 1857ஆம் ஆண்டு கலகத்தின் போது தோஸ்து முகமது பெஷாவரைக் கைப்பற்றும் நோக்கத்தைக் கைவிட்டார். 1863-ல் அவர் ஹிரத்தைக் கைப்பற்றினர். சில நாட்களுக்குப்பின் தனது எண்பதாவது வயதில் அவர் காலமானர். மொகலாய ஆட்சிக் காலத்தில் இந்தியாவில் ஏற்பட்டது போலவே ஆப்கானித்தானத்தில் வாரிசுப் போர் ஒன்று ஏற்பட்டது. தோஸ்து முகமதுக்கு 16 பிள்ளைகள் இருந்தமையாலும், மொகலாய அரசர்களுக்குச் சாதாரணமாக மூன்று அல்லது நான்கு பிள்ளைகளே இருந்தமையாலும், மொகலாய வாரிசுப் போரை விட ஆப்கானித்தானத்தில் நிகழ்ந்த வாரிசுப் போர் மிகச் சிக்கலுடையதாக இருந்தது. ஜான் லாரன்சு இப்போரில் தலையிட மிக உறுதியுடன் மறுத்தார். அவருடைய கொள்கையை, அவருடைய ஆதரவாளர்களாலும் அவரைக் குறை கூறுபவர்களாலும் வலிகுன்றுவாளாமை என்று மிகவும் ஆர்வத்துடன் விவரிக்கப்பட்டது. ஆனல் அக் கொள்கை, அன்று நடைமுறையில் இருந்த தலையிடாக் கொள்கையின் ஆர்வமற்ற தொடர்ச்சியே ஆகும். ஒவ்வொரு போட்டியாளரும் கீழ்ப்படியும் தன்மையற்றத் தலைவனுக இருப்பதை லாரன்சு கண்டறிந்தார். போட்டியிட்ட அனைவரும் தன்னுடைய பொதுப்படையான கண்டனத்துக்குரியவர்கள் என்று அவர் கொண்டிருந்த கருத்தினை வெளிக்காட்டாமல் இருப்பது மிகக்கடினமென்று உணர்ந்தார். 1868-ல் ஷெர்அலி இறுதியில் தன்னுடைய எதிரிகளை முறியடித்த போது, அவரை அமீராக ஏற்க தன்னுடைய ஒப்புதலைத் தெரிவித்தார். இதற்கு முன்னரே ஷெர் அலியின் எதிரிகள் பாரசீகம், ருஷ்யா ஆகிய நாடுகளின் உதவியை நாடிய பொழுது அவருக்குப் பண உதவி அளித்தார். லாரன்சுவினுடைய குறைகாண இயலாத கொள்கையுடன் ஆர்வத்தன்மையை அவரைப்பின் தொடர்ந்த மேயோப் பிரபு சேர்த்து விட்டார். ஆகவே 1869-ல் ஷெர் அலியை அம்பாலாவில் சந்தித்து தன் செல்வாக்கினைப் பயன்படுத்தி ருஷ்யாவின் கவர்னர் ஜெனரலான காப்மேன் 1870ஆம் ஆண்டு முதல் ஆப்கானித்தானத்திற்கு அனுப்பிய கடிதங்களை அவரிடமிருந்து பெற்றார். தலையிடாக் கொள்கை முழு வெற்றி அடைவதற்காக ஆப்கானித்தானத்தின் கூறுபடா நிலையை ருஷ்யா ஏற்றுக் கொள்ளத்தக்க வகையில் உடன் படிக்கையொன்றை ருஷ்யாவிடன் செய்துக் கொள்வது அவசியம் என்று லாரன்சு கண்டறிந்தார். துருக்கிஸ்தானத்தில் ஏற்பட்ட

ருஷ்யர்களுடைய முன்னேற்றமும், அதனால் அமீர் அடைந்த கவலையும் பிரிட்டனுக்குப் புதிய வாய்ப்பு ஒன்றினை அளித்தன. இளாட்சனுடைய முதல் அமைச்சரவை 1869-ல் ஆக்ஸஸ் நதிக்கு தெற்கே யுள்ள பகுதி ஷெர் அலியின் ஆதிக்கத்திற்குட்பட்ட பகுதி என்பதை ருஷ்யர்கள் ஒத்துக்கொள்ளுமாறும் 1873-ல் பதக்ஷானில் ஏற்படுத்தப் பட்ட ஷெர் அலியின் ஆதிக்கத்தினை ருஷ்யர்களை அங்கீகரிக்குமாறு வழி செய்தது.

ஐரோப்பாவின் அரசியல் நிலைமாறுபடாதிருந்தால் மேற்கூறிய உடன்பாடு ஆப்கானியப் பிரச்சனைக்கு நெடுநாள் நிலைத்திருக்கக் கூடிய முடிவு ஒன்றினை ஏற்படுத்தியிருக்கும். ஆனால், விரைவில் ஐரோப்பாவின் அரசியல் நிலைமையில் மாற்றம் ஏற்பட்டது. அதனால் ருஷ்யாவில் முன்னேற்றமும், அதனுடைய சிறு தொல்லைகள் கொடுக்கும் வழக்கமான கொள்கையும் முக்கியத்துவம் பெற்றன. 1873-ல் கீவா ருஷ்யர்கள் கைக்குமாறியது. அதற்கு மறுநாள் ருஷ்யாவின் நாடு பிடிக்கும் நோக்கத்தைக் கண்டு அஞ்சிய ஷெர் அலி சிம்லாவிற்குத் தூதுவரொருவரை இந்திய அரசாங்கத்துடன் நெருங்கிய உறவு ஏற்படுத்திக் கொள்வதற்கென அனுப்பிவைத்தார். ஆனால் நார்த் புருக்கு, மேயோ பிரபு முன்பு அளித்ததெளிவற்றவாக்குறுதிகளைத்தவிர வேறொன்றும் அளிக்க இயலாத நிலையில் இருந்தார். ஆகவே ஷெர் அலி ருஷ்யாவின் நட்பு நாட்டங்களிலும் உறுதி மொழிகளிலும், இதுகாறும் காட்டி வந்த அசட்டை மனப்பான்மையைக் குறைத்துக் கொள்வது உசிதமாகும் என்று கருதினர். இப்பொழுது நிகழ்ச்சிகள் வேகமாக ஊர்ந்து சென்றன. 1874-ல் டிஸ்ரேலி பிரதமராகவும், சாலிஸ்பரி பிரபு இந்திய அமைச்சராகவும் பொறுப் பேற்றனர். 1875-ல் துருக்கியின் ஆளுகைக்குட்பட்ட ஐரோப்பிய மாகாணங்களில் கிளர்ச்சி ஏற்பட்டது. 1876-ல் ருஷ்யா கிளர்ச்சிகாரர்களுக்கு முழு ஆதரவளித்தது. அதைத் தொடர்ந்து ருஷ்யா மீண்டும் முன்னேறிச் செல்லத்தொடங்கியது. 1878ஆம் ஆண்டின் தொடக்கத்தில் கான்ஸ்டாண்டிநோபிள் வரை முன்னேறிச் சென்று துருக்கி அரசருக்கு சமாதான நிபந்தனைகளைக் கட்டுறுத்திக் கூறியது. அதன் விளைவாக பல்கேரியா ஏனைய பிரதேசங்களைப் பெற்றது. அவ்வாறு விரிவுப்படுத்தப்பட்டதும் ருஷ்யாவின் கைப்பொம்மையாக விளங்கக் கூடியதுமான பல்கேரியாவின் வாயிலாக பால்கன் தீபகற்பம் முழுவதிலும் ருஷ்யாவின் ஆதிக்கம் நிலைநாட்டப் பெறுவதற்கான பெரும் வாய்ப்பு ருஷ்யாவிற்கு ஏற்பட்டது. ஆகவே அவ்வுடன்படிக்கையின் நிபந்தனைகளை மாற்றியமைக்க வேண்டுமென்றும் பிரிட்டன் வற்புறுத்தியது. அதற்கு ருஷ்யா இணங்கவில்லை யென்றால் பிரிட்டன் போர்புரியத் தயாராக இருப்பதாகவும் அறிவித்தது.

இறுதியில் பிஸ்மார்க்கின் தலையீட்டின் விளைவாகக் கூட்டப்பெற்ற பெர்லின் மகாநாட்டில் பிரிட்டன் வெற்றிகண்டது. கன்சர்வேடிவ் கட்சித்தலைவர்கள் ருஷ்யாவின் நோக்கங்களின் மீது பெருத்த ஐயப்பாடு கொண்டனர். எனவே மத்திய ஆசியாவில் ருஷ்யா மேற்கொண்ட நடவடிக்கைகளை அவர்கள் கண்டிக்கத் தலைப்பட்டனர். ருஷ்யாவின் வலுத்தாக்குதலினின்றும் ஆப்கானித்தானத்தைப் பாதுகாக்க வேண்டிய அவசியத்தை உணர்ந்தனர். மேலும் ஆப்கானித்தானத்தைத் துணையாகக் கொண்டு ருஷ்யாவின் ஆளுகைக்குட்பட்ட மத்திய ஆசியாவைத் தாக்குவதாக பயமுறுத்தி அப்பயமுறுத்தல் வாயிலாக ருஷ்யாவை ஐரோப்பாவில் கட்டுப்படுத்த எண்ணினார்கள். அவர்களுடைய நோக்கங்களைச் செயல்படுத்துவதற்கு 1876 முதல் லிட்டன் பிரபுவை தங்களுடைய கையாளாகக் கொண்டிருந்தனர். லிட்டன் பிரபு பள்ளிப்பிள்ளைக்குரிய ஆர்வத்தினைப் பெற்றிருந்தார். அதுவுமன்றி அவருடைய தலைவர்கள் கொண்டிருந்த ஆர்வத்தை விட அதிகளவில் ஆப்கானிய விவகாரங்களில் அவர் ஆர்வம் காட்டினார் என்பதை இங்கு குறிப்பிடுதல் அவசியமாகும்.

மேற்குறிப்பிட்ட நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக பிரிட்டிஷ் அரசாங்கத்தினர் ருஷ்யாவின் மீது தங்களுடைய செல்வாக்கு வலிமையை நேரடியாக செலுத்துவதற்குப் பதிலாக ஷெர்அலி மீது அதனை பயன்படுத்தும் முறையைக் கையாண்டனர். 1875ஆம் ஆண்டின் தொடக்கத்தில் காபூலுக்குத் தூதுவரொருவரை அனுப்புமாறும் அதே சமயத்தில் எல்லையில் நிறுத்தப்பட்டிருந்த இந்தியப் படைகளை வலுப்படுத்துமாறும் சாலிஸ்பரி நார்த்புருக்குக்கு யோசனை கூறினார். நார்த்புருக்கு தயங்கினார். ஆகவே அந்த யோசனையை சாலிஸ்பரி ஒரு கட்டளையாகப் பிறப்பித்தார். அதனால் நார்த்புருக்கு அடுத்த ஆண்டின் தொடக்கத்தில் பதவியினின்றும் விலகினார். லிட்டன் இந்தியா வந்தடைந்ததும் அந் திட்டத்தை அமீருக்கு எடுத்துரைத்தார். 1876-ல் காலாட்தலைவருடன் செய்துகொள்ளப்பட்ட உடன்படிக்கையின்படி க்வெட்டா பிரிட்டிஷ்காரர்களின் கைவசமாயிற்று. அமீர் ஆப்கானித்தானத்தில் பிரிட்டிஷ் பிரதிநிதி தங்க அனுமதிப்பதில்லை என்று முடிவு கட்டினார். அவருடைய தந்தையார் ஆட்சிக்காலத்தில் ஏற்பட்ட துன்பம் சூழ்ந்த முன்னோடியான நிகழ்ச்சிகள் அவர் கண்முன் நின்றன. ஒரு நாட்டின் அரசவைக்கு பிரிட்டிஷ் பிரதிநிதியின் வருகை அந்நாட்டின் சுதந்திரத்தின் அழிவை முன் குறித்துக்காட்டும் நிகழ்ச்சியாகும் என்ற கருத்து பொதுவாக கிழக்கு நாடுகளில் உலவி வந்தது. அத்திட்டத்தை நிராகரித்தால் ஆங்கிலேயர்களின் வெறுப்புக்காளாக நேரும் என்று அவர் பயந்தார். அதே நேரத்தில் அதை ஏற்றுக்கொண்டால் அவருடைய மக்களின்

ஆதரவை இழக்க நேரும் என்று அவர் அஞ்சினார். அவர் இருநிலைக் கொள்ளிக்கிடையே அகப்பட்ட எறும்பு போல் தத்தளித்தார். இறுதியில் 1877ஆம் ஆண்டின் தொடக்கத்தில் பிரிட்டிஷ் தூதுக் குழுவினை ஏற்க மறுத்தார். அதே நேரத்தில் ஐரோப்பாவில் அரசியல் நெருக்கடி அதிகமாகவே ருஷ்யார்கள் அதிகளவில் தொல்லைகள் கொடுக்க ஆரம்பித்தனர். 1878ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில் ருஷ்யப் படைத் தலைவர் ஸ்டோலியடாப் யாதொரு தடையின்றி காபூல் சென்றடைந்தார். அதே சமயத்தில் பெர்லின் மாநாடு முடிவுற்றது. பெர்லின் உடன்படிக்கை ஏற்றுக்கொள்ளப்பட்டதால் ஸ்டோலி யடாப்பை உடனே திருப்பி அழைத்துக்கொள்ள வேண்டும் என்று பிரிட்டிஷ் அரசாங்கம் வற்புறுத்தியிருக்கக்கூடும். ஆனால் அதற்கு மாருக பிரிட்டிஷ் தூதுவரொருவரை ஆப்கானித்தானத்திற்கு அனுப்ப இருப்பதாக லிட்டன் அமீருக்கு அறிவிக்க பிரிட்டிஷ் அரசாங்கம் அனுமதி வழங்கிற்று. அதுமுதற்கொண்டு திட்டத்தை செயலாற்றும் பொறுப்பு பிரிட்டிஷ் அரசாங்கத்திடமிருந்து இந்தியாவில் சிந்திக் காமல் செயலாற்றி வருகிற அதனுடைய கையாளிடம் மாறியது. ஏனெனில் அவர் கட்டுப்பாட்டுடன் நடந்து கொண்டால் பிரிட்டிஷ் அமைச்சரவை நெருக்கடிக்கு உள்ளாகி இருக்கும். அத்தகைய நெருக்கடி ஏற்பட பிரிட்டிஷ் அரசாங்கம் அனுமதிக்க தயாராக இல்லை.

பிரிட்டிஷ் தூதுவரான சர். நெவில் சேம்பர்லேன் அலிமஜீத் என்னுமிடத்தில் பின்வாங்க நேர்ந்தது. அதைத் தொடர்ந்து ஆப்கானித்தானத்தின் மீது படையெடுப்பு ஏற்பட்டது. வழக்கம் போல் பிரிட்டிஷ் படைகள் வெற்றி கண்டன. ஷெர்அலி நாட்டை விட்டு ஓட நேர்ந்தது. 1839-ல் ஏற்பட்ட அச்சுறுத்துகிற நிகழ்ச்சிகள் மீண்டும் நிகழ்வதற்குரிய அறிகுறிகள் காணப்பட்டன. உரிய காலங்கடந்த பின்னர்தான் ருஷ்யாவிடம் தனக்கு உதவியாகப் பெறத்தக்க பொருள் யாதும் இல்லை என்பதனை அவர் உணர்ந்தார் அடுத்த ஆண்டில் ஷேர்அலி இறந்தார். 1879-இல் அவருடைய மகனை யாகூப் என்பவருடன் ஏற்படுத்தப்பட்ட கண்டார்மக் உடன் படிக்கை வாயிலாக சமாதானம் ஏற்படுத்தப்பட்டது. ஆனால் இந்த சிறப்பு மிக்க வெற்றிகள், மேற்கொள்ளப்பட்ட எண்ணங்கள் நிறைவேருமல் போகும் நிலையினையே மீண்டும் மெய்ப்பித்துக்காட்டின. அவ்வுடன்படிக்கையின்படி, குர்ரம், சிபி, பிஷின் ஆகிய மாவட்டங்கள் பிரிட்டிஷ் ஆதிக்கத்திற்குட்படுத்தப்பட்டன. காபூலில் பிரிட்டிஷ் பிரதிநிதி ஒருவர் தங்க ஏற்பாடு செய்யப்பட்டது. ஏனைய பகுதிகளில் பிரிட்டிஷ் அரசின் பிரதிநிதிகள் அமர்த்தப்பட்டனர். பிரிட்டன் நாட்டவர்களுடைய ஆலோசனையின்படி தன்னுடைய அயல்நாட்டு உறவு முறைகளை செயலாற்றுவதாக அமீர் ஒத்துக்கொண்டார்.

இவற்றிற்குப் பதிலாக ஆப்கானிஸ்தானத்தின் மீது அன்னிய நாடுகள் ஆக்கிரமிப்பு மேற்கொள்ளும்போது யாகூப்புக்கு உதவி செய்வதாகவும் ஆண்டுதோறும் ஆறு லட்ச ரூபாய் உதவித்தொகை வழங்குவதாகவும், பிரிட்டிஷ்காரர்கள் வாக்குறுதி அளித்தார்கள். ஆப்கானிஸ்தானம் இறுதியில் இந்திய அரசாங்கத்தின் பாதுகாப்புப் பெற்ற நாடாகத் தோன்றியது. ஆனால் இந்த உடன்படிக்கையை மேற்கொள்ளும்போது இதனால் பாதிக்கப்படும் மக்களின் ஒப்புதலைத் தவிர ஏனையவற்றை மதிப்பிட்டு முடிவு செய்ததாகக் காணப்பட்டது. ஆகவே புதிய தூதுவரான காவெக்னரி காபூல் சென்றடைந்த ஆறு வாரத்திற்குள்ளாக மக்கள் கிளர்ச்சியொன்று அங்கு ஏற்பட்டது. அதன் விளைவாக ஜூலை மாதத்தில் காவெக்னரியும் அவருடைய மெய்க்காப்பாளர்களும் கொல்லப் பட்டனர். இந்நிகழ்ச்சிகள் படைத்தலைவர் இராபர்ட்ஸ் காபூலுக்கும், ஸ்டுவர்டு காந்தகாருக்கும் விரைந்து செல்லக் காரணங்களாக அமைந்தன. யாகூப் கான் பிரிட்டிஷ் படையுடன் சேர்ந்துகொண்டார். ஆயினும் விரைவில் அவர் அரசியல் கைதியாக இந்தியாவிற்கு கொண்டு செல்லப்பட்டார்.[1] இளவேனிற் காலத்தில் இராபர்ட்ஸுடன் ஸ்டுவர்டு காபூலில் சேருவதாக திட்டமிடப்பட்டது. ஆனால் அதற்கு முன்னரே குளிர்காலத்தில் ஷெர்பூரில் ராபர்ட்ஸ் முற்றுகைக்குட்படுத்தப்பட்டார். லிட்டனுடைய கொள்கை அழிவுற்ற நிலையில் இருந்தது. அவர் குறிப்பிட்டபடி "மிகக் கவனமாகவும் பொறுமையுடனும் அமைக்கப் பட்ட கொள்கை பலத்த தாக்குதலினால் சிதறடிக்கப்பட்டது." வழி முறையாதும் அவருக்கு இல்லாது போகவே தனக்கு எதிர்ப்பட்டத் தலைவர்களை எல்லாம் ஏற்றுக்கொள்ள வேண்டிய நிலை அவருக்கு ஏற்பட்டது. ஷெர் அலிகான் என்பவர் பழைய சாடாஜாயி குலப் பிரதிநிதியாகவும் காந்தகாரின் தலைவராகவும் ஏற்றுக்கொள்ளப்பட்டார். ஷெர் அலியின் புதல்வர்களுள் ஒருவரான அயூப்கான் தன்னுடைய ஆட்சியை ஹீரத்தில் ஏற்படுத்தினார். காபூல் ஒன்று தான் எஞ்சி இருந்தது 1880ஆம் ஆண்டின் தொடக்கத்தில் ஷெர்அலியினுடைய சகோதரனும், அவருடைய எதிரியுமான அப்சல்கானுடைய[2] புதல்வரான அப்துர் ரஹ்மான் பால்க் பகுதியை வந்தடைந்தார். அவர் வெகுகாலம் ருஷ்ய துருக்கிஸ்தானத்தில் வாழ்ந்து வந்தார். ருஷ்யர்கள் ஷெர்அலியைத் தங்களுடைய வற்புறுத்தலுக்கு இணங்கவைப்பதற்காக அவரை ஆற்றல் வாய்ந்த மருட்டல் கருவியாகப் பயன்படுத்தி வந்தனர். அப்துர் ரஹ்மான் நாற்பது வயது நிரம்பியவர். குள்ளமான உருவம் படைத்தவர். கட்டுடல் வாய்ந்தவர். பொய்கூறி ஏமாற்றும் தன்மையுடையவரென்றாலும் மகிழ்வளிக்கின்ற இயல்புகளைப் பெற்றிருந்தார்.

[1] 1923-இல் டேராடூனில் அவர் இறந்தார்.

[2] அப்சல் 1866, 1867ஆம் ஆண்டுகளில் காபூலில் ஆட்சி புரிந்து வந்திருந்தார்.

புன்சிரிப்பும் நன்னடக்கமும், தெளிவான கருத்திணையும் கொண்டிருந் தார். அரசியல் திறத்தில் சிறந்தவர் ஒருவர் தோன்றினர் என்று அவரையறிந்த பலர் கருதினார்கள். லிட்டன் பிரபு புதரில் அகப்பட்ட செம்மறியாட்டினை ஆவலாகப் பற்றிக்கொள்வது போல அவரை இறுகப்பற்றினர். (லிட்டன் அவரை அகப்பட வைப்பதற்குக் காரணமாகயிருக்கவில்லை என்பதை இங்கு குறிப்பிடுவது அவசிய மாகும்.) இவ்வாருக லிட்டன் உறவு கொள்ளத்தக்க ஒருவரைப் பெற்ருர். ரிப்பன் பிரபுவின் வருகை ஆப்கானித்தானத்தின் சிக்கல் மிகுந்த அரசியில் குழப்பத்திற்கு முடிவு காண உதவியாக இருந்தது.

“ஆங்கிலேயர்களைத் தவிர வேறெந்த நாட்டவர்களுடனும் அரசியல் தொடர்புகள் வைத்துக்கொள்வதில்லை'' என்ற நிபந்தனையை யும், குர்ரம், சிபி, பிஷின் ஆகிய மாவட்டங்களை பிரிட்டிஷ்காரர்களுக்கு அளிப்பதாக முன்னரே மேற்கொண்ட முடிவினை உறுதிப்படுத்தி யதாலும் அப்துர் ரஹ்மானை 1880ஆம் ஆண்டு ஜூலை மாதம் காபூலின் அமீராக பிரிட்டிஷ்காரர்கள் ஏற்றுக்கொண்டனர். இவை களுக்குப்பதிலாக பிரிட்டிஷ்காரர்கள் அவருக்கு ஆண்டுதோறும் உதவித் தொகை அளிப்பதாக உறுதி கூறினார்கள். மேலும், காபூலில் பிரிட்டிஷ் அரசாங்கப் பிரதிநிதியை அமர்த்தும் திட்டத்தைக் கைவிட்டார்கள். அடுத்தபடியாக ஹீரத்தில் அயூப்கானின் திடீர் எழுச்சி ஏற்பட்டது. ஜூன் மாதத்தில் காந்தகாரா படை தோல்வி யுற்றது. இராபர்ட்ஸ் காபூலில் இருந்து தன்னுடைய படைகளை நடத்திச் சென்று காந்தகாரில் வெற்றிபெற்று சிறப்படைந்தார். இப்பொழுது பிரிட்டிஷ் படைகள், காபூலினின்றும் வெளியேறின. 1881ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் அயூப்கான் தோல்வியுற்றதாலும், அதைத் தொடர்ந்து அவர் நாட்டைவிட்டு ஓடியதாலும் புதிதாக பதவியேற்ற அமீருடைய ஆட்சி மிக்க வலிமையைப்பெற்றது. 1901-இல் அவர் இறக்கும்வரை அந்நாட்டின் ஆட்சி அதிகாரத்தை அவர் தன் கைகளில் வைத்திருந்தார்.

(எல்லாவற்றையும் ஒன்று சேர்த்து பார்க்குமிடத்து இரண்டாவது ஆப்கானியப் போர் தேவையற்றது என்றேக் கூறவேண்டும்.) ஆப்கானியத் தலைவர்களிடம் லாரன்சு காட்டிவந்த மனப்பான்மை, சீக்கியத்தலைவர்கள்பால் அவர் கொண்டிருந்த அருவருப்பை அதிகப் படுத்தியது என்றாலும், அவருடைய தலையிடாக் கொள்கையின் பின் விளைவான ருஷ்யாவுடன் மேற்கொள்ளப்படும் நேரடியான உடன் பாட்டுடன் சேர்த்து காணும்போது தலையிடாக் கொள்கையளவில் குறைவற்றதாகத் தோன்றியது. பிரிட்டிஷ்காரர்கள் ஆசியாவில் ஏற்படுத்தவிருந்த பிரிட்டிஷ் பேரரசின் முன்னேற்றத்திற்கென

அமைக்கப்படும் அரணாக ஆப்கானித்தானம் விளங்கவேண்டும் என்பதற்காக மேற்கொள்ளப்பட்ட கொள்கை அநேக அடிப்படைக் கருத்துக்களை கவனியாத காரணத்தால் வெற்றிவாய்ப்புப் பெற்றதாகக் காணப்படவில்லை. அந்நாடு மிகவும் வறண்டு இருந்த காரணத்தால் அது ஒரு படையை வைத்துப்பேணும் நிலையைப் பெற்றிருக்கவில்லை. அந்நாட்டு மக்களிடம் எதிர்ப்புணர்ச்சி அதிகளவில் இருந்த காரணத்தால் அங்கு ஒரு படையை அமைக்காமல் இருக்கவும் முடியவில்லை. ஆப்கானித்தானத்திற்கும் ருஷ்யாவிற்கும் இடையே இருந்த தூரம் ருஷ்யாவின் ஆதிக்கம் பெருமளவில் ஆப்கானித்தானத்தில் ஏற்படுத்துவதற்குத்தடையாய் இருந்தது. அவ்வாறே ஆப்கானித்தானத்திற்கும் பிரிட்டிஷ் பேரரசுக்கும் இடையே இருந்த தூரம் பிரிட்டிஷ்காரர்கள் இந்துகுஷ் மலையைக் கடந்து பெருமளவில் முன்னேறுவதைத் தடை செய்தது. எல்லாவற்றிற்கும் மேலாக ஆப்கானித்தானத்தில் பிரிட்டிஷ் படையை அமைக்க மேற்கொண்ட முயற்சி ஆப்கானியர் களுடைய சுதந்திர வேட்கைக்கு முரணாக இருந்தது. ஆகவே ஆப்கானித்தானத்தில் நிறுத்தப்பெறும் ஒவ்வொரு படையினருடைய வாழ்வும், ஒவ்வொரு தூதுவருடைய வாழ்வும் இடர்செறிந்ததாக காணப்பட்டன. ஆப்கானித்தானத்தில் பிரிட்டிஷ் ஆதிக்கம் ஏற்படுத்தப்பட்டிருந்தால், ஆக்ஸஸ் நதிப்பகுதியில் ருஷ்யப் படைகள் குவிக்கப்பட்டிருந்திருக்கும். அதனைத் தொடர்ந்து பிரிட்டிஷ்காரர் களுடைய படைகளை காபூலிலும், ஹிரத்திலும் நிறுத்திவைக்க வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கும். அதனால் பெரும் பொருட் சேதம் எப்படியும் ஏற்பட்டிருக்கும். ஆனால் அத்தகைய கொள்கையின் பயனாக பெரும் பொருட்சேதம் ஏற்படுவதற்கு முன்னரே ஆப்கானித் தானத்தில் ஏற்பட்ட மக்கள் எழுச்சி அக்கொள்கை குறைபாடுடையது என்பதை உணர்த்திக் காட்டியது. இந்தியாவின் நற்பேறு என்றே கூறவேண்டும். ஷெர்அலி இருந்த இடத்தில் அப்துர் ரஹ்மானை அமர்த்தியதே ஆப்கானித்தானத்தில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளின் நற்பயனாகும். ருஷ்யாவினின்றும் வந்த அகதியுடன் பிரிட்டிஷ்காரர்கள் வெகு எளிதாக செய்து கொண்ட ஒப்பந்தம் ஒவ்வொரு ஆப்கானியத் தலைவனும் ருஷ்யாவின் இரகசிய நண்பன் என்றத் தவறான கருத்தினால் ஏற்பட்ட பெருங்கவலையை தணிக்க உதவியது. ஆப்கானியர்கள் பிரிட்டிஷ்காரர்களின் நண்பர்கள் அல்லர் என்பது எவ்வளவு உண்மையோ அதேபோல் அவர்கள் ருஷ்யர்களுக்கும் நண்பர்கள் அல்லர் என்பதை அந்நிகழ்ச்சி தெளிவாக எடுத்துக்காட்டியது. அவர்கள் அனைவருமே ஆப்கானித்தானத்தின் சுதந்திரத்தின் நண்பர் களாவார்கள் என்பதும் தெளிவாயிற்று.

பிரிட்டிஷ் பேரரசுக்கும், ருஷ்யப் பேரரசுக்கும் இடையே ஏற்பட்ட சிறு பூசல் ஆப்கானித்தானம் பற்றி அவைகளுக்கிடையே

ஏற்பட்டிருந்த உடன்பாடு முழுமையை அடைய உதவி செய்தது. 1881-இல் துருக்கோமானியர்கள் ருஷ்யர்களால் தோற்கடிக்கப்பட்டதன் விளைவாக மெர்வ் என்னும் பகுதியை ருஷ்யர்கள் தங்களுடைய கைவசமாக்கிக்கொண்டனர். மேற்கூறிய நிகழ்ச்சிகள் பிரிட்டிஷ்காரர்களிடம் ஒரு புதிய பயத்தைத் தோற்றுவித்தன. இதைத்தான் ஆர்கைல் கோமான் (Duke of Argyll) மெர்வெஸ்னெஸ் என்று குறிப்பிட்டார். அதாவது மெர்வ் என்னும் பகுதி ருஷ்யர்கள் ஆளுகைக்குட்பட்டதால் உண்டான அதிர்ச்சி என்பதாகும். அதன் விளைவாக இரு அரசுகளும் எல்லையை நிர்ணயிக்கும் பணியினை இருதரத்தாரின் பிரதிநிதிகள் அடங்கிய குழுவினிடம் ஒப்படைக்க இசைந்தன. ஆனால் ருஷ்யத் தளபதி கோமராப் என்பவர் பஞ்ச்டே (Panjdeh) என்னுமிடத்திலிருந்து ஆப்கானியர்களை துரத்தியடித்து ஜுல்பீகர் (Zulfikar) கணவாயைக் கைப்பற்றப் போவதாகப் பயமுறுத்தியபோது, உண்மையிலேயே ஒரு கடுமையான நிலை ஏற்பட்டது என்றேக் கூறவேண்டும். நற்காலமாக அச்சமயத்தில் அப்துர் ரஹ்வான் ராவல்பிண்டியில் டஃபரினைச் சந்தித்துப் பேசிக்கொண்டிருந்தார். அவர்களில் ஒருவரின் பரபரப்பற்ற மனத்திட்பமும் மற்றவரின் சாமார்த்தியமும், கிளாட்சன் மந்திரி சபையின் மன உறுதியும் போரைத் தடுத்தன. அப்துர் ரஹ்மான் பஞ்ஜ்டேவைக் கொடுத்துவிட்டு அதற்குப் பதிலாக அதை விட முக்கியமான ஜுல்பிகர் கணவாயைப் பெற்றுக்கொள்ள இணங்கினார். ருஷ்யர்களும் பெரும் போர் ஒன்றைத்தொடங்க விருப்பங் கொண்டிருக்கவில்லை. ஒப்பந்தப் பேச்சுகள் மீண்டும் துவக்கப்பட்டன. ஆயினும் இன்று நடைமுறையில் இருந்து வரும் எல்லைக்கோடு பற்றிய ஒப்பந்தம் 1887-இல் தான் நிறைவேற்றப்பட்டது.

**எல்லை :**

சிந்து மாகாணத்தை பிரிட்டிஷ் அரசுடன் இணைக்கப்பட்டதன் விளைவாக அமைந்த எல்லையைப் பற்றியும், ஆப்கானியப் போர்களின் விளைவாக மேம்பாடும் முக்கியத்துவமும் பெற்ற சீக்கிய அரசின் அழிவைப் பற்றியும் சில வார்த்தைகள் கூறவேண்டியதவசியமாகும். எல்லைப் பிரச்சினையைப் பற்றிக் கவனிக்கும்போது பாலுசிகள், பத்தானியர்கள் ஆகியோர்களுக்கு இடையே இருந்த வேற்றுமைகளை நாம் கருத்தில் கொள்ளவேண்டும். இவ்விரு மக்களுடைய பழக்க வழக்கங்களும், நிலையும், தனித்தனியே கவனிக்கத்தக்க வகையில் வேறுபட்டிருந்தன. கொள்ளையாடித் திரிந்த பாலுச் கூட்டத்தினருக்கு எதிராகப் பாதுகாப்பு அமைப்பதே சிந்து மாகாணத்தைப் பொருத்தளவில் கவனிக்கத்தக்க முதல் பிரச்சினையாக இருந்தது. சர். சார்லஸ்

நேபியருடைய படை முறை, அரண்பாதுகாப்புகளால் வலுப்படுத்தப் பட்ட படைத் துறைக்களங்கள் ஏற்படுத்தும் முறையைச் சார்ந் திருந்தது. ஆனால் படைத்துறைக்களங்கள் மிகச் சொற்பமாக இருந்தமையாலும், அவைகளின் தலைவர்கள் ஊக்க வெழுச்சியைப் பெற்றிராத காரணத்தாலும் இடம் விட்டு இடம் பெயரும் எதிரியை சமாளிக்க இயலாத நிலையில் பிரிட்டிஷ்காரர்கள் இருந்தனர். ஆனால் 1848-இல் ஜேகப் என்பவர் எளிதில் இடம்விட்டு இடம்பெயரும் நன்மை படைத்த காவல் தண்டுகளின் வாயிலாக பாதுகாப்பு அமைக்கும் முறையைப் புகுத்தினார். அதன் விளைவாகப் பயிர் நிலங்களின் பரப்பை பெருக்குவதற்குத் தேவையானப் பாதுகாப்பு ஏற்படுத்தப் பட்டது. பஞ்சாபைப் பொருத்தவரையில் காக்கப்பட வேண்டிய எல்லைக்கோடு மிக நீளமாக இருந்தது. அங்கு வசித்துவந்த மக்கள் பல்வேறு இனத்தவர்களாகப் பிரிந்திருந்தனர். அவ்வினத்தவர்களின் எண்ணிக்கையும் அதிகமாகவே இருந்தது. மேலும் அவர்களிடையே வழி வழி மரபாக வளர்ந்து வந்த பூசல்கள் கணக்கற்றனவாக இருந்தன. ஆகவே பஞ்சாபின் எல்லைப் பிரச்சனை மலைப்பூட்டுகிறத் தன்மையைப் பெற்றிருந்தது. அவ்வெல்லைப் பிரச்சனை இப்பொழுது புதிதாக ஏற்பட்டதொன்று அல்ல என்பதை நாம் கருத்தில் கொள்வது மிக அவசியமாகும். பிரிட்டிஷ்காரர்கள் அப்பிரச்சனையை சீக்கியர்களிட மிருந்து மரபுரிமையாகப் பெற்றனர். சீக்கியர்களும் அதனை மொகலா யர்களிடமிருந்து மரபுரிமையாகப் பெற்றனர். எல்லைப் பகுதிகளில் வாழ்ந்துவந்த மக்கள் இனத்தவர்களுக்கு உதவித் தொகை அளித்து, கணவாய்களைப் பாதுகாப்பு அரண்களின்றி வைத்திருத்தலே மொகலா யர்கள் கையாண்டுவந்த எல்லைப்புறப் பாதுகாப்பு முறையாகும். உதவித் தொகை அளிக்கும் வழக்கம் நிறுத்தப்பட்டதால், 1738-இல் காபூலைக் கைப்பற்றிய பிறகு இந்தியாவிற்குள் நாதர்ஷா எளிதில் நுழைய முடிந்தது. மொகலாயர்களையும், சீக்கியர்களையும் தங்களு டைய முன்னோடிகளாகக் கொண்டிருந்தது பிரிட்டிஷ்காரர்களின் தீப்பயனேயாகும். சமவெளிப் பகுதியில் வாழ்ந்துவந்த கட்டுறுதியு டன் கூடிய சீக்கியர்களுக்கும், மலைப் பகுதியில் வாழ்ந்துவந்த தளர் வுருத பத்தானியர்களுக்கும் இடையே வழக்கமான வெறுப்புணர்ச்சி இருந்து வந்தது. அவர்களுக்கிடையே ஏற்பட்டிருந்த மதச்சச்சரவுகள் அவ்வெறுப்புணர்ச்சியை மேலும் வளர்த்து விட்டன. படைத் தலைவர்கள் அவிடபைலும், (Avitabile) ஹரிசிங்கும் பெஷாவரையும், ஹஜாராவையும் வன்முறையைக் கையாண்டு ஆண்டு வந்தனர் எனவே அவர்களுடைய துப்பாக்கிக் குண்டுகள் பாயும் தூரமுள்ள பகுதியைத்தான் அவர்கள் தங்களுடைய கட்டுப்பாட்டுக்குள் வைத் திருக்க இயன்றது. பிரிட்டிஷ்காரர்கள் தங்களுடையப் பேரரசின் எல்லையை வடமேற்கு திசையில் விரிவு படுத்தியபோது அங்குள்ள




ஆப்கானிஸ்தானமும் வடமேற்கு எல்லைப்பகுதியும்.

மக்கள் இயற்கையாகப் பெற்றிருந்த கட்டுக்கடங்காத வன்மையுடன் எதிர்த்து நிற்கும் தன்மையையும், மனக்கசப்பும் கலந்திருப்பதைக் கண்டனர். 87 'ஆம் ஆண்டு வரை தலையிடாக் கொள்கைப் பின்பற்றப் பட்டது. பழைய தலைவரியைக் குறைத்தல், தடையிலா வாணிகம் ஏற்படுத்துதல், மலை சாதியினருக்குப் படைப்பணி வாய்ப்பளித்தல் ஆகிய நடவடிக்கைகளுடன், தண்டனைப் படையெடுப்புகள், முற்று கைகள், அபராதங்கள் போன்ற நடவடிக்கைகளையும் கலந்து அப்பகுதி யினரை ஓரளவு கட்டுப்படுத்த முயன்றனர். இவ்வாறாக பிரிட்டிஷ் பேரரசுக்கு அருகாமையில் அமைதியற்றும் குழப்பம் நிறைந்தும் காணப்படும் 25000 சதுரமைல் பரப்புள்ள மலை சாதியினர் வசித்துவந்த நிலப்பரப்பு இருந்து வந்தது.

எல்லைப்புறக் கொள்கையின் அடுத்த வளர்ச்சிக்கு இரண்டாவது ஆப்கானியப் போர் வழி வகுத்தது. 1851-இல் காலாட் சிற்றரசருடன் ஏற்படுத்தப்பட்ட ஒப்பந்தம், 1876-ல் ஏற்படுத்தப்பட்ட ஜேகோபபாத் உடன்படிக்கையின் வாயிலாக விரிவு படுத்தப்பட்டது. அதன் 'விளை வாக குவெட்டாவில் படைத்தளம் ஒன்று நிறுவப்பெற்றது. அதற்குப் பிறகு குறிப்பிட்ட பணிகளை நிறைவேற்றுவதற்கென உதவித் தொகை வழங்கும் முறையை சர். இராபர்ட் சன்டேமன் தொடங்கினார். மேலும் இம்முறை, அங்கிருந்த தலைவர்களுடனும், ஜிர்காஸ் அல்லது இன மரபுக்குழு சார்ந்த மக்கள் கூட்டங்களுடனும் மேற்கொள்ளப் பட்ட நெருங்கியத் தொடர்புகளை அடிப்படையாகக் கொண்டிருந்தது. ஆகவே அது நாளடைவில் மிக வெற்றி வாய்ப்புப் பெற்றதாகக் காணப்பட்டது. எனினும் அது வேறிடங்களில் செயல்படுத்தத் தகுதி பெற்றிருக்கவில்லை. எடுத்துக்காட்டாக தங்களுடைய மக்கள் சார்பில் தாங்களே பிரச்சனைக்குத் தீர்வு காணத்தக்க அதிகாரம் பெற்றிலாதத் தலைவர்களைக் கொண்டதும், மக்கள் ஆட்சியின் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டதுமான மஃசூதிய மக்கள் சமுதாயத்தினரிடம் அம்முறை வெற்றிபெறவில்லை.

இவை போக எஞ்சியிருப்பது இந்து குஷ்மலை முதல் டேரா இஸ்மெயில்கான் மாவட்டம் வரை வியாபித்திருந்த எல்லைப் பகுதியே யாகும். இப்பகுதி பத்தானியர்களின் ஆதிக்கத்தில் இருந்தது. இப்பகுதியில் நான்கு இடங்களில் பாதுகாப்பு அரண்களை அமைக்க வாய்ப்பிருந்தது. அவைகளுள் முதலாவது சிந்து நதியாகும். சிந்து நதியை ஒட்டி பாதுகாப்பு அரண்களை அமைக்கும் ஏற்பாட்டினுக்கு லாரன்சு தன்னுடைய ஆதரவை அளித்தார். ஆனால் நதிகளைவிட மலைத் தொடர்களே எக்காலத்திலும் சிறந்த தடை அரண்களாக விளங்கத் தகுதி பெற்றவை என்ற விதிக்கு ஏற்றாற்போல் சிந்து நதி

எக்காலத்திலும் உறுதியான எல்லையாக விளங்கியதில்லை. மேலும் சிந்து நதியின் மேற்குக்கரை கிழக்குக்கரையைவிட பெரும்பாலும் உயர்ந்திருக்கிறது. காபூலினின்றும் கஜினி வழியாக காந்தஹார் வரை முறைப்படி அமைந்திருந்த எல்லையே அவைகளுள் இரண்டாவது ஆகும். ஷாஜஹான் காலத்தில் காந்தஹார் மொகலாயரிடமிருந்து கைப்பற்றப்பட்ட காலம் வரை இதுவே மொகலாயர்களின் எல்லையாக விளங்கி வந்தது. இது மேற்குக் கணவாய்களின் மேல் பாகங்களையும் உட்கொண்டிருந்தது. ஆனால் இது மலைச் சாதியினருடைய பின்புறத் தாக்குதலுக்கு இலக்காயிருந்தது. மேலும் ஆப்கானியர்களுடைய உள்ளக் கருத்து அதனைச் செயல் முறையில் மேற்கொள்ளுவதைத் தடுத்தது. இவை போக எஞ்சியிருப்பவை இவைகளுக்கு இடைப்பட்ட இரண்டு எல்லைக் கோடுகளாகும். அவைகளுள் ஒன்று பழைய சீக்கிய எல்லைக் கோடாகும். இது ஆட்சி முறையைச் சார்ந்த கோட்டினை ஏறத்தாழ ஒத்திருந்தது. சீக்கியப் போர்களுக்குப் பிறகு இதுவே நடைமுறை எல்லையாகவும் இருந்து வந்தது. ஆனால் இது மலை சாதியினர் வசிக்கும் பகுதி முழுவதினையும் பிரிட்டிஷ்காரர்களின் கட்டுக்கப்பால் வைத்தது. பிற்காலத்தில் டூரண்டு கோடு என்ற பெயரால் அழைக்கப் பட்ட எல்லைக்கோடு அவைகளுள் இரண்டாவதாகும். அது மலை சாதியினர் வசிக்கும் பகுதியினை பிரிட்டிஷ்காரர்களுக்கும் ஆப்கானியர் களுக்கும் இடையே சரிசமமாகப் பிரித்தது. மேற்கூறிய இரண்டு எல்லைகளும் இராணுவப் பாதுகாப்புக்கு உகந்தனவாக இருக்கவில்லை. ஆனால் இரண்டாவது எல்லைக்கோடு ஒரு தன்மையைப் பெற்றிருந்தது. அது மலை சாதியினருடைய தாக்குதல் முயற்சிகளால் ஏற்படும் அபாயத்தைக் குறைத்தது. மேலும் முறையோடு கூடிய படை யெடுப்புகளால் நாட்டின் பாதுகாப்புக்கு நேரக்கூடிய ஆபத்தைக் குறைத்தது. ஆனால் குவெட்டாவை பிரிட்டிஷ்காரர்கள் தங்களு டைய கையில் இறுகப் பற்றியிருந்ததால், அவ்விரண்டு எல்லைக் கோடுகளை அமைப்பதால் ஏற்படும் இராணுவம் பற்றிய குறைகள் மட்டுப்படுத்தப்பெற்றன. மேற்குக் கணவாய்களைக் கடந்து இந்தியா விற்குள் புக முற்படும் எந்தப் படையினையும், அதனுடைய பக்க திசைகளினின்றும், பின்புறத்தினின்றும் குவெட்டாவிலிருந்த பிரிட்டிஷ் படைகளினால் தாக்கப்படலாம் என்ற அச்சம் ஏற்பட் டிருந்தது.

வெகு தீவிரமான முன்னேற்றம் நாடியவர்கள் லிட்டன் பிரபு காலத்தில் செல்வாக்குப் பெற்றிருந்தனர். பிறகு அவர்கள் வெறும் கற்பனையாளர்கள் என்று ஒதுக்கப்பட்டனர். பிற்காலத்தில் டூரண்டு கோடு என்ற பெயரால் குறிப்பிடப்பட்ட எல்லைக்கோட்டை அமைப்பதில் கவனம் செலுத்தி வந்த கருத்துக்களை இராபர்ட்ஸ் பிரபு

சிறப்பாக எடுத்துரைத்தார். லான்ட்ஸ்டவுன் பிரபு காலத்தில் அவர்களுடைய எண்ணம் நிறைவேற்றப்பட்டது. அநேக முட்டுப் பாடுகளுக்குப் பின்னர் சர் மார்டிமோர் டூரண்டு என்பவர், அப்பொழு திலிருந்து டூரண்டு கோடு என்று அழைக்கப்பட்டு வந்த எல்லைப் பிரிவுக் கோட்டினை ஏற்கும்படி அமீரை வற்புறுத்தினர்[1] அதற்குப் பதிலாக அமீர் பெற்றுவந்த உதவித் தொகை பன்னிரண்டு லட்சத்தி லிருந்து பதினெட்டு லட்சமாக உயர்த்தப்பட்டது. ஆப்கானியர்கள் தங்களுடைய ஆளுகைக்குட்பட்ட பகுதியில் எவ்வித முன்னேற்றத் தையும் ஏற்படுத்தவில்லை. கைபர் பிரதேசத்தைச் சார்ந்த ஆப்ரிதியர், மஹ்ஸூதியர், வாசீரியர், சவாத் சாதியினர்களும், சித்ரால், ஜில்ஜிட் பிரதேசங்களின் தலைவர்களுடைய ஆட்சிக்குட்பட்ட மக்களும் பிரிட்டிஷ் பகுதியில் வசித்து வந்தனர். பிரிட்டிஷ்காரர்கள் தங்களு டைய ஆதிக்கத்தை அம்மக்கள் மீது சுமத்துவதற்கென பலப் போராட்டங்களை நடத்தினார்கள். இங்கு லான்ட்ஸ்டவுன் பிரபு போட்ட விதைப்பயனை எல்ஜின் அடைய வேண்டியிருந்தது. 1898-இல் சித்ரால் பகுதியில் நடந்தப்பட்ட போராட்டம், 1897-இல் ஒரு பெரிய பத்தானிய எழுச்சியில் கொண்டுவிட்டது. அவ்வெழுச் சியை அடக்க சர். புரூஸ் லாக்ஹார்ட் தலைமையின் கீழ் 35000 பேர்களடங்கிய படையொன்று தேவைப்பட்டது. எனினும் மலை சாதி யினர் வசித்து வந்தப் பிரதேசத்தைக் கட்டுக்குள் வைக்கும் பிரச்சனைக் குச் சரியான முடிவு இன்னும் காணப்படவில்லை. ஆகவே அப்பிரச்சனை தன்னுடைய அடுத்த வளர்ச்சிக் கட்டத்திற்குள் நுழைவதற்காக கர்சன் பிரபுவின் வருகையை எதிர்நோக்கி யிருந்தது.

## கிழக்குப் பகுதி :

பர்மாவின் வடபாகம் பிரிட்டிஷ்காரர்களின் ஆட்சியின் கீழ் கொண்டு வருவதற்குக் காரணமாக அமைந்த மூன்றாவது பர்மாப் போர் 1885-இல் தொடங்கியது. அதைப்பற்றி இரண்டாவது அத்தியாயத்தில் ஓரளவு கவனித்தோம். இப்பொழுது அந்நிகழ்ச்சியை வெவ்வேறு நாடுகளில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளுடன் ஒத்திட்டு கவனிப்போம். பதினான்காம் லூயி மன்னரின் காலத்திலேயே பிரஞ்சுக்காரர்கள் இந்தோசீனாவுடன் தொடர்புகள் வைத்திருந்தனர். எனினும் பத்தொன்பதாம் நூற்றுண்டில்தான் அவர்கள் வெகு தீவிரமாக அந்நாட்டின் விவகாரங்களில் தலையிடத் தொடங்கினார்கள். மட்டுமிஞ்சிய உழைப்பும், இழப்பும் இன்றி புகழ் அடையும் வழியினை

[1] அப்துர் ரஹ்மான் தன்னுடைய உடல்நலம் சரியில்லாதக் காரணத்தாலும், அநேக பணிகளில் ஈடுபட்டிருந்ததாலும், இராபர்ட்ஸ் இந்தியாவை விட்டுப்போகு முன்னர் அவரை வரவழைக்க இயலாத நிலையில் இருந்தார்.

ஆராய்ந்து கொண்டிருந்த மூன்றாவது நெப்போலியன் மதப் பிரசாரகர்களுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டிய அவசியத்தைச் சாக்குச் சொல்லி, கிழக்கு நாடுகளில் தன்னுடைய கவனத்தைச் செலுத்தலானார். ஆல்சேஸ் பகுதி பிரான்சு நாட்டினிடமிருந்து பிரிக்கப்பட்டதாலும், ஐரோப்பிய விவகாரங்களில் தான் வகித்திருந்த முந்திய நிலையை பிரான்சு இழந்ததாலும், பிரான்சுக்கு ஏற்பட்ட இழப்பிற்கு ஈடு செய்யத்தக்க வழியினை ஆராயும், திட்டத்தின் ஒரு பகுதியாக மூன்றாவது குடியரசு நெப்போலியனுடைய கொள்கையை தொடர்ந்து மேற்கொண்டது. இவ்வாறாக இந்தோசீனாவில் பிரஞ்சுப் பேரரசு நிறுவப்பெற்றது. பிரஞ்சுக்காரர்களின் நடவடிக்கைகள் இந்தியப் பேரரசின் கிழக்குப் பகுதிக்கு இடர் விளைவிக்கலாம் என்று பிரிட்டன் எண்ணியக் காரணத்தால், அது பிரஞ்சுக்காரர்களின் நடவடிக்கைகளைக் கூர்ந்து கவனிக்கலாயிற்று. ஹாலந்து நாட்டைப் போலன்றி பிரான்சு எந்த வகையிலும் பிரிட்டனின் ஆதரவை எதிர்நோக்கி இருந்ததில்லை. ஆனால் அதற்கு மாறாக அநேக வகையில் அது பிரிட்டனின் எதிரியாகவே விளங்கி வந்தது மேலும் அதனுடைய கப்பற்படை பிரிட்டிஷ் கப்பற்படைக்கு அடுத்தபடியாக வைத்து எண்ணக்கூடிய அளவில் வலுப்பெற்று இருந்தது. பிரஞ்சுக்காரர்களின் நடவடிக்கை தான் பர்மாவின் வடபகுதி பிரிட்டிஷ் பேரரசுடன் இணைப்பதற்காக மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கையினைத் துரிதப்படுத்தியது. 1885ஆம் ஆண்டு ஜனவரி மாதம் பிரஞ்சுக்காரர்கள் பர்மாவுடன் பலர் அறிய உடன்படிக்கையொன்றை செய்துக் கொண்டனர். அதைத் தொடர்ந்து அயலிட நாட்டுப் பேராளர் (Consul) ஒருவரை அங்கு அமர்த்தினார்கள். இந்த உடன்படிக்கை ஏற்படுத்தப்பட்ட அதே நேரத்தில் பிரான்சின் வெளிவிவகார அமைச்சர் கையொப்பமிடப் பெற்ற இரகசிய கடிதம் ஒன்று சில மாதங்களுக்குப் பிறகு கண்டுபிடிக்கப்பட்டது அக்கடிதத்தின் வாயிலாக பிரஞ்சு அரசாங்கம் போர்க் கருவிகளை டான்கினிலிருந்து பர்மாவில் இறக்குமதி செய்ய உறுதிமொழி அளித்திருந்தது. பர்மாவில் தான் பெற்றிருந்த நல்வாய்ப்பு நிலை. மேற்கூறிய நடவடிக்கைகளால் பாதிக்கப்படும் என்று பிரிட்டன் கண்டறிந்தது. இதுவே டஃபரின் மேற்கொண்ட போர் நடவடிக்கைக்கு உண்மையான காரணமேயன்றி பாம்பே-பர்மா வாணிபக் கழகத்தினுக்கு (Bombay Burmah Trading Corporation) இழைக்கப்பட்ட இன்னல்களன்று. சையாம் நாட்டு அரசாங்கத்தினருக்கு பிரஞ்சுக்காரர்கள் 1893ஆம் ஆண்டு ஜூன் மாதம் அனுப்பிய இறுதி எச்சரிக்கையே பரபரப்பூட்டும் கடைசி நிகழ்ச்சியாகும். அப்பொழுது வெளிநாட்டு அமைச்சராகப் பணியாற்றி வந்த ரோஸ்பரி பிரபு சையாம் நாட்டு அரசினரை பிரஞ்சுக்காரர்களின் கோரிக்கைகளை ஏற்றுக் கொள்ளுமாறுத் தூண்டினார். அதே நேரத்தில் பாங்காக்

நகரத்தைப் பிரஞ்சுக்காரர்கள் முற்றுகையிடுவதை எதிர்த்தார். ஆகவே பிரஞ்சுக்காரர்கள் முற்றுகையைக் கைவிட்டனர். ரோஸ்பரி குறிப்பிட்டுள்ளபடி, ஒரு சில மணி நேரம் சண்டையா சமாதானமா என்றப் பிரச்சனை உறுதியற்ற நிலையில் ஊசலாடிக்கொண்டு இருந்தது. இறுதியில் பிரிட்டிஷ்காரர்கள், பிரஞ்சுக்காரர்கள் ஆகியோர் பெற்றிருந்த செல்வாக்கெல்லைகளுக்கு இடையே சையாம் இனி நடுநிலை நாடாக விளங்கவேண்டும் என்று ஏற்பாடாயிற்று. பிரஞ்சுக்காரர்களின் நடவடிக்கை பர்மாவினுடைய சுதந்திரத்தின் அழிவைத் துரிதப்படுத்தியது என்றாலும், சமநிலைக் கொள்கையை வற்புறுத்தி, பிரிட்டிஷ் ஆக்கிரமிப்பு மேலும் ஏற்படாது இருக்க வழி வகுத்து சையாம் நாட்டின் சுதந்திரத்தை அது காப்பாற்றியது.

### கடல்கடந்து சென்ற இந்தியர்கள் :

விக்டோரியா அரசியார் காலத்தில் கடல் கடந்து சென்ற இந்தியர்களைப் பற்றியும், அதனால் விளைந்த பிரச்சனைகளைப் பற்றியும் நாம் கவனிக்கத் தவறினால், இந்தியாவினுடைய அயல்நாட்டு விவகாரங்களைப் பற்றிய ஆராய்ச்சி முழுமையை எய்தப்பெற்றதாகாது. கடல் கடந்து சென்ற இந்தியர்களின் வரலாறு பெருமையும் பழமையும் பொருந்தியதாகக் காணப்படுகிறது. அவ்வரலாற்றினை கிறித்தவ சகாப்தம் தொடங்குவதற்கு முன்னர் இருந்தே நாம் தொடங்கக்கூடும். அண்மைக் கிழக்கு நாடுகளுடனும் (Near East) நிலவழியாகப் பாரசீகம், மத்திய ஆசிய நாடுகள் ஆகியவற்றுடனும், கடல் வழியாகப் பாரசீக வளைகுடாப் பகுதியுடனும், அரபுத் துறைமுகங்களுடனும் வாணிபத் தொடர்புகள் ஏற்படுத்தப் பெற்றிருந்தன என்பதை நாம் உறுதியாகக் கூறலாம். கிறித்தவ சகாப்தத்தின் முதல் ஆயிரம் ஆண்டுகளை எல்லா வகையிலும் இந்தியர்கள் பெருக்கம் அடைந்த சிறப்பான காலம் என்று நாம் கூறலாம். அதைப் பற்றி முதற்பாகத்தில் நாம் முன்னரே விரிவாகக் கவனித்தோம். கிரேக்க-ரோமானிய உலகத்துடன் நெருங்கிய வாணிபத் தொடர்புகள் ஏற்படுத்தப் பட்டிருந்தன. தென்னிந்தியாவிலுள்ள அரிக்கமேடு, முசிறி ஆகிய இடங்களில் உரோமானியர்கள் வியாபாரத்தைக் குறிக்கோளாகக் கொண்டு குடியேற்றப் பகுதிகளை அமைத்தது போலவே இந்தியர்களும் அலெக்சாந்திரியாவில் வியாபாரிகள் குடியிருப்புகளை ஏற்படுத்தினார்கள். யோகிகள் என்றழைக்கப்பெற்ற ஞானிகளைப் பற்றி இரண்டாவது நூற்றாண்டில் வாழ்ந்துவந்த கிறித்தவப் பாதிரிமார்கள் அறிந்திருந்தனர். நிலவழியாக இந்திய வர்த்தகர்களும், பௌத்தத் துறவிகளும் நடு ஆசியாவிற்கும், இன்னல் அற்ற வழியாகச் சீனாவிற்கும் சென்றனர். அவ்விடங்களுக்குத் தங்களுடைய வியாபாரப் பொருள்கள், கலைச்

செல்வம், சமயம் ஆகியவைகளைக் கொண்டு சென்றனர். நடு ஆசியாவிலுள்ள வறட்சியின் காரணமாகப் பாழடைந்த நகரங்களும், மடங்களும், இந்தியக் கலைஞர்களின் செயல்திறத்தினை விளக்குகின்றன. சீனாவின் கலையும், சமயக் கோட்பாட்டு முறைகளும் இந்திய சமயத்தின் செல்வாக்கினுக்கு சான்று கூறுகின்றன. திபெத்தில் இந்தியர்களின் குடியேற்றம் ஏற்படுத்தப் பெறவில்லை என்றாலும் அங்கும் இந்தியர்களின் செல்வாக்கு மிகப் பெரிய அளவில் இருந்தது. ஆனால் தென்கிழக்கு ஆசியாவில்தான் இந்தியர்களுடைய வெளிநாட்டு நடவடிக்கைகள் பெரிதளவில் மேற்கொள்ளப்பட்டன. அப்பகுதிக்கு வர்த்தகம், கலை, சமயம் ஆகிய துறைகளில் இந்தியா தன்னுடைய பிரதிநிதிகளை அனுப்பி வைத்தது. அங்கு தான் இந்தியர்கள் தங்களுடைய அரசுகளை அமைத்தனர். அங்கு தான் இந்திய நாகரிகம் பண்புகள் பெருமளவில் செல்வாக்குப் பெற்றிருந்தன. கடலுக்கப்பால் உள்ள பராபதூர் என்னுமிடத்தில்தான் பௌத்தக்கலை தன்னுடைய உன்னத நிலை அடைந்தது. அதேபோல் அங்கோர் என்னுமிடத்தில் தான் இந்துக்கலை தன்னுடைய உச்ச நிலையை அடைந்தது.

இந்தியாவினின்றும் வெளியேறிய மக்களின் எண்ணிக்கை குறைந்த பொழுது, மேற்குறிப்பிட்ட இந்திய நாகரிகம் செல்வாக்குப் பெருகுவதற்குக் காரணமாய் அமைந்திருந்த குடியிருப்புகள் தங்களுடைய ஆக்கமுறையான ஆற்றல் வளத்தை இழந்தன. ஹூணர்கள், முஸ்லீம்கள் ஆகியோர்களின் படையெடுப்புகள் இந்தியர்களுடைய வாணிகத் தொடர்புகளையும், இந்துக் கருத்துகளின் படர்ச்சியையும் பெரிதளவில் பாதித்தன. எனினும், இந்தியர்களின் செல்வாக்கு அங்கு தன்னுரிமையாகத் தொடர்ந்து இருந்து வந்தது. மேலும் அச்செல்வாக்கு இன்று வரை ஓரளவு தொடர்ந்து நீடித்து வருகிறது. இடைக் காலத்தில் இந்தியாவினின்றும் மக்களோ அல்லது நாகரிகக் கருத்துக்களோ வெளிநாடுகளுக்கு அனுப்பப் படவில்லை. ஏனெனில் அப்பொழுது இந்தியாவின் மக்கள் தொகை அளவுக்கு மீறியதாக இருக்கவில்லை. மேலும் இந்திய சமூகத்தினர், வெளிநாடுகளிலிருந்து வந்த மக்கள் ஏற்படுத்திய நெருக்கடியைத் தடுப்பதிலேயே தங்களுடைய கவனத்தைச் செலுத்தியிருந்தனர். ஆகவே வெளிநாடுகளில் தங்களுடைய செல்வாக்கை மீண்டும் ஏற்படுத்துவதைப் பற்றி சிந்திக்க வாய்ப்பற்று இருந்தனர். முற்காலத்தில் இந்தியர்கள் அயல் நாடுகளில் தங்களுடைய செல்வாக்கை ஏற்படுத்த மேற்கொண்ட நடவடிக்கைகளில் எஞ்சியிருந்தது அண்மைக் கிழக்கு நாடுகள், மத்தியக்கிழக்கு நாடுகள் கிழக்கு ஆப்பிரிக்கா நாடுகள் ஆகியவற்றுடன் அவர் ஏற்படுத்திக்

கொண்டிருந்த வியாபார நடவடிக்கையேயாகும். கடல்வழிப் பயணம் சாதி அடிப்படைக்கு மாறானது என்ற கருத்து இந்து சமூகத்தினரிடம் மேலோங்கி வளரும் அளவிற்கு, அயல் நாடுகளுடன் துணிச்சல் வியாபாரம் மேற்கொள்ளும் வழக்கம் அவர்களிடையே மறைந்து விட்டது.

பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிவரை இந்த நிலைமை நடைமுறையில் மாறவேயில்லை பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிக் காலத்தில் ஐரோப்பியர்களுடன் ஏற்பட்ட நெருக்கமானத் தொடர்புகள் கடல் கடந்து செல்லும் விருப்பத்தை இந்தியர்களிடையே புதுப்பித்தன. 1785-இல் இங்கிலாந்துக்குச் சென்ற முதல் இந்தியர்களுள் ஒருவர் மீர்ஜா அபுதாலிப்கான் என்பவராவார். பிராம்மண குலத்தைச் சார்ந்த இராம்மோகன் ராய் என்பவர் 1830-இல் இங்கிலாந்துக்குச் சென்று கடல் கடந்து செல்லுவதைத் தடை செய்த வைதீகத் தடைக் கட்டுக்கு எதிர்ப்புத் தெரிவித்தார். அதுபோலவே பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் சுரேந்திரநாத் பானர்ஜியும், மகாத்மா காந்தியும் கல்வி கற்பதற்காக மேற்கொண்ட கடற் பயணத்திற்கு விதித்தத் தடையை எதிர்த்துப் போராடினார்கள். வெளி உலகத்துடன் தனிப்பட்ட இந்தியர்கள் மீண்டும் தொடர்பு வைத்துக் கொள்ளுவதற்காக ஏற்பட்ட பயணங்களாகவே அவை இருந்து வந்தன. இன்றும் அத்தகையப் பயணங்கள் தொடர்ந்து ஒரே சீராக நடைபெற்று வருகிறது மாணவர்கள், அரசாங்க அலுவலர்கள், வர்த்தகத் துறையில் ஈடுபட்டிருப்பவர்கள், ஆகியோர்களில் பலர் கடல் கடந்து உலகத்தின் பல்வேறு பகுதிகளுக்குச் சென்று கொண்டிருக்கிறார்கள்.

ஆனால் அத்தகையத் தொடர்புகளை குடியேற்றத்திற்கு ஒப்பாகக் கூற இயலாது உலக முழுவதும் இந்தியக் குடியேற்றங்கள் அமைவதற்குக் காரணமாயிருந்த மக்கள் இடப் பெயர்புகள் 1830க்குப் பிறகு தான் ஏற்பட்டன. 18ஆம் நூற்றாண்டிலேயே பர்மாவிற்கு சிறிதளவில் இந்திய மக்கள் செல்லலாயினர் என்பதை நாம் கருத்தில் கொள்ள வேண்டும். மேலைநாடுகளில் ஏற்பட்ட சமூக, பொருளாதாரப் புரட்சி மேற்குறிப்பிட்ட மக்கள் இடப் பெயர்ச்சியைத் தூண்டிவிட்டது. இந்தியாவில் ஏற்பட்டிருந்த நிலைமையில் காணப்பட்ட சில காரணங்களும் அதற்கு உதவி செய்தன. பிரிட்டனின் ஆளுகைக்கு உட்பட்டிருந்த குடியேற்ற நாடுகளில் அடிமைத்தனம் ஒழிக்கப்பட்டதும் அதனால் ஏற்பட்ட பொருளாதாரம் பற்றிய விளைவுகளும் மேலே குறிப்பிடப்பட்ட புரட்சியாகும். முன்பு அடிமைகளே கரும்புத் தோட்டங்களைப் பயிரிட்டு வந்தனர். அடிமைத்தனம் அகற்றப்பட்ட பிறகு அவர்கள் அத்தோட்டங்களில் சுதந்திரம் பெற்ற கூலியாட்களாகப்

பணியாற்ற விருப்பங்கொள்ளவில்லை. அதனால் ஜமெய்க்கா, டிரினிடாட் ஆகிய மேற்கிந்தியத் தீவுகளிலும், தென் அமெரிக்காவிலுள்ள பிரிட்டிஷ் கயானாவிலும், இந்து மகாசமுந்திரத்தின் தென் பகுதியிலுள்ள மௌரிஷியஸ் தீவுகளிலும், தோட்டத் தொழிலாளிகளை அளிக்கத்தக்க இடத்தைத் தேடும் முயற்சி வெகு அவசரமாக மேற்கொள்ளப்பட்டது. அவைகளுடையத் தேவையை நிறைவேற்றத் தக்க வகையில் இந்தியாவில் சில காரணக் கூறுகள் தோன்றியிருந்தன. இயந்திரங்களைக் கொண்டு தயாரிக்கப்பட்ட பருத்தி ஆடைகளை இந்தியாவில் புகுத்தப்பட்டதன் விளைவாக இந்தியக் கைத்தொழில் அழிந்தது. அதன் விளைவாக வங்காளத்திலும், சென்னையிலும் வேலையின்மை பெருகிற்று. 1830ஆம் ஆண்டு முதல் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிவரை அவ்வப்போது ஏற்பட்ட பஞ்சங்கள் மக்களின் வறுமைக்குக் காரணமாக அமைந்தன. அக்கொடிய வறுமை தாற்காலிகமானது என்றாலும் அவர்களிடையே தோன்றிய அயல்நாடுகளில் வேலை தேடும் எண்ணத்தை அது ஊக்குவித்தது. மேலும் ஏறக்குறைய 1870ஆம் ஆண்டு முதல் மக்கள் தொகை பெருகலாயிற்று. அதன் விளைவாக விளை நிலங்கள் சிறுசிறு துண்டுகளாக்கப்பட்டன. நிலமற்ற தொழிலாளிகளின் எண்ணிக்கையும் அதிகரித்தது. மேற்குறிப்பிட்ட காரணங்களால் மக்கள் வாழ்விற்கு இன்றியமையாத வருவாய் நிலையில் பெருத்த நெருக்கடி ஏற்பட்டது. மௌரிஷியஸ் நோக்கிச் சென்ற முதல் மக்கள் புறப்பாடுகள் தனிமுறையாகவே ஏற்பாடு செய்யப்பட்டன. ஆனால் இந்திய அரசாங்கமும் பிரிட்டிஷ் அரசினரும், அரசாங்கத்தின் தலையீடும், கட்டுப்பாடும் மிகவும் அவசியமானவை என்று வெகு விரைவிலேயேக் கண்டறிந்தனர். இவ்வாறாகத் தொழில் முறைக் கட்டுப்பாட்டு ஒப்பந்த முறை ஏற்படுத்தப்பட்டது. அதன்படி ஒவ்வொரு தொழிலாளியும் ஒரு குறிப்பிட்ட ஆண்டுக் காலம் வரை (சாதாரணமாக ஐந்து அல்லது ஏழாண்டுகள் வரை) தோட்டத்தில் வேலை செய்வதாக உறுதி செய்தார். குறிப்பிட்ட காலம் முடிந்த பிறகு அவர் யாதொரு தடையின்றி தன் நாடு திரும்பவோ, அல்லது குடியேற்ற நாட்டிலேயே சுதந்திரம் பெற்ற தொழிலாளியாக தங்கவோ அவருக்கு உரிமையளிக்கப்பட்டது. இதுவே அதனுடைய பெரு வழக்கானத் திட்டமாகும். ஆனால் அத்திட்டம் பல வகைகளில் மாற்றப்பட்டிருந்தன. அத்தகைய மாற்றங்கள் ஆட்களை சேகரிப்பதில் கையாளப் படவேண்டிய விதிமுறைகளையும், ஒப்பந்தக் காலத்தில் கையாள வேண்டிய நிபந்தனைகளையும், மீண்டும் நாடு திரும்புவதைப் பற்றியும், அக் குடியேற்றங்களிலேயே தங்குவதைப் பற்றியும் ஏற்படுத்தப்பட்ட நிபந்தனைகளையும் பொறுத்திருந்தன. ஆனால் எல்லா திட்டங்களும் யாதொரு கட்டாயமுமின்றி மனப்பூர்வமாக ஏற்படுத்தப்பட்ட ஒப்பந்தத்தைத் தொடக்கமாகவும், அடிமைத்தனம் நீங்கப்பெற்ற தொழிலாளி

நிலை, யாதொரு தடையின்றி தாய்நாடு திரும்புவதற்கேற்ற வாய்ப்பு நிலை தன் விருப்பம்போல் அக்குடியேற்றங்களிடையே தங்குவதற்கு வேண்டிய சூழ்நிலை ஆகியவைகளை முடிவுகளாகவும் கொண்டிருந்தன. ஆனால் அறியாமையும், வறுமையும் நிறைந்த மக்கள் அறிவும் தன் நலமும் செல்வாக்கும் கூடிய மக்களுடன் பேரம் செய்யவேண்டியதாயிருந்தது என்ற அடிப்படை உண்மை எல்லாத் திட்டங்களிலும் இருந்து வந்தது. மோசடிகளைத் தடுக்க முடியாத நிலையும் ஏற்பட்டிருந்தது. அத்தகைய மோசடிகள் அடிக்கடி ஏற்படுத்தத் தவறியதில்லை. ஆனால், அனைத்தும் சீர்தூக்கிக் காணுமிடத்து, தோட்ட முதலாளிகள், ஒப்பந்தக்காரர்கள் ஆகியோரின் சுரண்டல்களின்றும் தொழிலாளிகளின் நலன்களைக் காப்பாற்றுவதில் இந்திய அரசினரும், பிரிட்டிஷ் அரசினரும் பெருமையுறத்தக்க ஆர்வத்தைக் காட்டிவந்தனர் என்பதைப் பழைய பதிவேடுகள் குறித்துக் காட்டுகின்றன. குடியேற்ற அரசினர்களும் நடுவுநிலை வகிக்க விருப்பங்கொண்டனர். ஆனால் இலண்டனில் செயற்பட்டுவந்த அனுபவம் முதிர்ந்த குடியேற்ற அலுவலகத்தைவிட அதிகமான அளவில் அக்குடியேற்ற அரசினர்கள் உள்ளூர் மக்களின் செல்வாக்கின் வலிமைக்கு உட்படுத்தப்பட்டனர். கங்காணி முறை என்பது மேற்குறிப்பிட்ட ஒப்பந்த முறையின் மாற்று வடிவமேயாகும். அம்முறையின்படி தொழிலாளர் மேன் முறையாள் (Foreman) அல்லது 'பணி முதல்வர்' (Boss) ஒருவர் இருபத்தைந்து அல்லது முப்பது ஆட்களடங்கிய தனக்கேயுரிய வேலையாட்களின் தொகுதியொன்றைச் சேகரித்தார். அவ்வேலையாட்களை மேற்பார்வையிடுவதற்கும், கட்டுப்படுத்துவதற்கும் அவரே பொறுப்பாளியாக இருந்தார்.

மேற்குறிப்பிட்ட வகைகளிலே இந்து மகாசமுத்திரத்தின் தென் பகுதியிலுள்ள மொரிஷியஸ் தீவு, பசிபிக் பெருங்கடலிலுள்ள பிஜி தீவு ஆகியவைகளிலிருந்து, கிழக்கு ஆசியாவிலுள்ள மலாயா, பர்மா, இலங்கை (இங்கு யாழ்ப்பாணத்தில் முன்னரேக் குடியேறியிருந்த தமிழர்களின் எண்ணிக்கை புதிதாக வந்தவர்களால் அதிகரிக்கப் பெற்றது) ஆசிய நாடுகளின் வழியாக, ஆப்பிரிக்காவிலுள்ள கெனியா, தங்கனீக, உகாந்தா, தென் ஆப்பிரிக்கா (பெரும்பாலும் நேடாலிலும்) ஆகிய பகுதிகள் வரையிலும், அங்கிருந்து கரீபியன் கடற் பகுதியிலுள்ள ஜமெய்கா, டிரினிடாட், தென் அமெரிக்காவிலுள்ள பிரிட்டிஷ் கயானா ஆகிய நாடுகள் வரையிலும் இந்தியர்களுடைய குடியிருப்புத் தொகுதிகள் தோன்றலாயின. இந்திய நாட்டின் வறுமையைப்பற்றி கடல் கடந்து சென்ற இந்தியத் தொழிலாளிகள் ஏற்கனவே அறிந்திருந்ததாலும், இந்தியாவுடன் அவர்கள் கொண்டிருந்த பிணைப்புகளை அவர்கள் இழந்துவிட்டதாலும், தாய்நாடு திரும்பு

வதைவிட அங்கேயே அடிமைத்தனம் நீங்கப்பெற்ற தொழிலாளியாகவோ அல்லது வர்த்தகர்களாகவோ வாழ்வதே மேலானதென்று கருதியதால் அவ்விடங்களில் இந்தியக் குடியிருப்புத் தொகுதிகள் வளரலாயின. அவைகளின் விளைவாக குடியேற்ற நாடுகளையும், குடியிருப்பாளர்களையும் குறித்து புதிய பிரச்சனைகள் தோன்றின. இந்தியக் குடியிருப்பாளர்கள் புதிதாகத் தோன்றிய பலதிறப்பட்ட இனத்தவர்களடங்கிய சமூகங்களின் ஒரு கூருக அமைந்திருப்பதைக் கண்டனர். இனவழி, நாகரிகம் பின்னணிச் சூழல், நாகரிகப்படி நிலை, தொழிற்றிறம் ஆகியத்துறைகளில் வேறுபட்ட பல மக்கள் பிரிவினர் ஓரிடத்தில் வாழ்வதால் ஏற்படக்கூடிய அமைதி நீடித்திருக்க இயலாத நிலைக்கு அவர்களும் அடிப்படுத்தப்பெற்றனர். சில இடங்களில் போதியயளவில் தொழிலாளிகளைப் பெறமுடியாதக் காரணத்தால் தோட்ட முதலாளிகள் அவர்களை அங்கேயே தங்குமாறு கட்டாயப் படுத்திஞர்கள். நேட்டால் போன்ற மற்றப் பகுதிகளில் அவர்களை தொழிற்துறைப் போட்டியாளராகக் கருதியதால், அவர்களை அப் பகுதிகளை விட்டுச் செல்லுமாறு தூண்டிஞர்கள். இறுதியில் அக் குடியிருப்புகள் வளரலாயின. தொழிலாளிகளில் அநேகர் நாளடைவில் சிறு வியாபாரிகளாக மாறிஞர்கள். சிறிது சிறிதாக அவ்வியாபாரிகளினின்றும் வாழ்க்கைத் தொழிலுடனும், வியாபாரத்துடனும் தொடர்பு கொண்ட மக்கள் வகுப்பு ஒன்று தோன்றியது. ஒப்பந்த முறை நாளடைவில் உதவிபெற்ற குடியேற்ற முறையாக (Assisted emigration) மாறியது. அம்முறை முதலாவது உலகப்போர் முடிவுற்றப் பிறகு முழுமையாக மறைந்துவிட்டது.[1] கடல் கடந்து சென்று குடியேற்ற நாடுகளில் குடியிருப்பு அமைத்துக்கொண்ட இந்திய சமுதாயத்தினருடைய எண்ணிக்கை சுமார் 35 லட்சங்களாக இருந்தது. அச்சமுதாயத்தினர்கள் தன்னுற்றலுணர்வு படைத்தவர்களாயிருந்தனர். மேலும் அவ்விடங்களில் மேற்கொள்ளப்பட்ட கூட்டு வாழ்க்கை நடவடிக்கைகளில் சிறந்த அங்கம் பெறத் தகுதியானவர்களாகக் கருதப்பட்டனர். பிரிட்டிஷ் கயானுவில் இந்தியர்களே ஏனையவரைவிட அதிக பலம் பெற்றவர்களாகக் காணப்பட்டனர். டிரினிடாட், மௌரிஷியஸ், பிஜி, மலாயா ஆகிய இடங்களில் அவர்கள் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தனர். கெனியாவிலும், தங்கனீகாவிலும் அவர்களுடைய நலன்களில் அக்கறை கொள்ளவேண்டிய அவசியத்தை அரசினர் ஏற்றுக்கொண்டனர். தென் ஆப்பிரிக்காவில் இந்தியர்களுடைய நிலையை உயர்த்துவதற்காக மகாத்மா காந்தி, ஹார்டிஞ்சு பிரபு, படைத் தலைவர் ஸ்மட்ஸ்

[1] ஒப்பந்தம் முடிவுபெறவேண்டிய காலங்கள் பின்வருமாறு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. மௌரிஷியஸ் 1915; பிஜி 1920; பிரிட்டிஷ் கயானு 1917; டிரினிடாட், நேட்டால் 1911, மலாயா 1878; பர்மா, மலாயா, (1878க்குப் பிறகு) இலங்கை ஆகிய நாடுகளில் கங்காணிமுறை அல்லது அதனுடைய மாற்றுருவமான மேஸ்திரி முறை நடைமுறையில் இருந்தது.

ஆகியோர் கடுமுயற்சி மேற்கொண்டபோதிலும், அவர்களுடைய அதிகரித்தனவேயன்றிக் குறையவில்லை. தென் ஆப்பிரிக்காக் குடியேற்றத்தினர் முதலில் இந்தியர்களுடைய சேவகத்தை நாடியது உண்மையே என்றாலும், இப்பொழுது அவர்களை மகிழ்ந்து வரவேற்றற் குரியவர்களாகக் கருதவில்லை என்பது தெளிவாகக் காணப்பட்டது.

தொழிலாளிகள் அமைத்த குடியிருப்புத் தொகுதிகளுடன் தொழிற்துறையில் ஈடுபட்டவர்களும், பெருவணிகர்களும் அமைத் திருந்த குடியிருப்புகளையும் நாம் சேர்த்துக் கொள்ளவேண்டும். அத்தகைய குடியிருப்புகள் தொழிலாளிகள் ஏற்படுத்திய குடி யிருப்புத் தொகுதிகளைவிடச் சிறியதாகவேயிருந்தன. ஆனால் அவை களைவிட அதிக நாட்கள் நீடித்திருந்ததோடல்லாமல் அவைகள் நிலையாக நிறுவப்பட்டனவாகவும் இருந்தன. இத்தகைய குடியிருப்புகளில் தலை சிறந்தனவாகக் கருதப்படுபவைகளைக் கிழக்கு ஆப்பிரிக்காவில் காணலாம். ஆகாகானைப் பின்தொடர்ந்த அநேகரை உள்ளிட்ட மேற்கு இந்தியாவைச் சார்ந்த வணிகர்கள் வெகு நாட்களாகவே அவ்விடத்தில் ஆர்வத்துடன் செயற்பட்டு வந்தனர்.

# 4. பொருளாதாரக் கொள்கையும் முன்னேற்றமும்: 1858 - 1939.

பிரிட்டிஷ் ஆதிக்கம் இந்தியாவில் உச்சகட்டம் அடைந்த அதே காலத்தில் பொருளாதாரக் கோட்பாடுகளில் ஒன்றான தடையிலா வாணிகக் கொள்கையும் வெகு தீவிர முன்னேற்றம் கண்டிருந்தது. அக் கொள்கை பெற்றிருந்த செல்வாக்கு வலிமைக்கு இந்திய அரசியலாருடைய கொள்கையும் வேறு வழியின்றி அடிமைப்படுத்தப்பட்டது. பொருளாதாரம் பற்றிய நடவடிக்கைகளில் அரசினருடைய தலையீட்டை எவ்வளவு குறைத்துக் கொள்ள முடியுமோ அவ்வளவு குறைத்துக் கொள்வது அறிவு செறிந்த செயலாகக் கருதப்பட்டது. ஆனால் தனித் தூய்மைக் கோட்பாட்டினர்கூட சில சூழ்நிலைகளில் அரசாங்கத்தினர் ஆக்க முறையான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டிய அவசியத்தை உணர்ந்தனர். அத்தகைய சூழ்நிலைகள் ஏனைய இடங்களில் ஏற்படுவது போல இந்தியாவிலும் தோன்றின. 1857ஆம் ஆண்டில் ஏற்பட்ட கலகம் பண நெருக்கடி உண்டாக்கியது. அதன் பயனாக அரசாங்க வருவாயைப் பற்றிய கடும் பிரச்சனையை இந்திய அரசினர் உடனே கவனிக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. தற்காலத்திற்குரிய வழிகளிலே இந்தியா முன்னேற்றம் அடைய வேண்டிய அவசியம் அப்பொழுது ஏற்பட்டிருந்தது. ஆனால் அத்தகைய முன்னேற்றத்தை அடைவதற்கான முயற்சியைத் தொடங்குவதற்கு இந்திய அரசினரைத் தவிர வேறெவருமிலர். புதிய விஞ்ஞானக் காலம் உண்டாக்கித் தந்த துணை வளங்களை இந்திய அரசினர் பெற்றிருந்த போதிலும், திரும்பத் திரும்பத் தோன்றிய பஞ்சங்கள் அதனைப் பழிச் சொல்லுக்கு உள்ளாக்கின. இந்த விவகாரங்களைக் கவனிப்பதில் ஏற்பட்ட முன்னேற்றம் இந்தியத் துணைகண்டம் வெகு காலமாக இருந்து வந்த பொருளாதார ஒதுக்க நிலையினின்றும் விடுபட உதவி செய்தது. குடிசைத் தொழில்களைக் உலக வாணிப சூழ்நிலைகள், குடிசைத் தொழில், அந்நிய நாடுகளுடன்

சிறிதளவில் நடைபெற்று வந்த வாணிபம் ஆகியவற்றைக் கொண்டு முழு நிறைவாக்கப்பெற்ற இந்திய குடியானவர் பிழைப்புப் பொருளாதாரத் திட்டத்தினை பெருமளவில் மாற்றிவிட்டன. தானியங்கள் பயிரிடுவதை விட்டு வாணிகப் பொருள்களைப் பயிரிட்டனர். உள்நாட்டுத் தேவைகளை நிறைவேற்றுவதற்காகப் பொருள்களை உற்பத்தி செய்வதற்குப் பதிலாக அயல் நாட்டுத் தொழிற்சாலைகளின் தேவைகளை நிறைவேற்றும் வகையில் பொருள்கள் உற்பத்தி செய்யப்பெற்றன. அழிவுற்ற பழைய குடிசைத் தொழில்களிடத்தில் இயந்திர ஆற்றலால் இயக்கப்பெற்ற புதிய தொழிற்சாலைகள் ஏற்படுத்தப்பெற்றன. மேற்கூறிய அவசரத்தேவைகளும், முன்னேற்றங்களும், அரசினரை நடவடிக்கைகளை பெருமளவில் மேற்கொள்ளுமாறு தூண்டின. ஆயினும், தடையிலா வாணிகக் கோட்பாடு முதலாவது உலகப்போர் தொடங்கிய காலம்வரை பொதுவாக நடைமுறையில் இருந்து வந்தது. எனினும் அக்காலத்திலேயே அதைப் பற்றி மக்கள் கொண்டிருந்த ஐயப்பாடுகளும், அவநம்பிக்கை உணர்ச்சிகளும் பெருகிக்கொண்டே இருந்தன.

அரசாங்க வருவாயைப் பெருக்குவதைப் பற்றிய பிரச்சனையே 1857ஆம் ஆண்டு நடைப்பெற்ற கலகத்திற்குப் பிறகு அமைக்கப் பெற்ற இந்திய அரசினருடைய கவனத்திற்குரிய முதல் நிதி நிலைப் பற்றிய பிரச்சனையாகும். தொன்றுதொட்டு வந்த நிலவரியே கலகத்திற்கு முன்னர் அரசாங்க வருவாயின் முக்கியமான ஆதாரப் பொருளாக விளங்கி வந்தது. இப்பொழுது அது குறைக்கப்பட்டது. மேலும் அதனை மீண்டும் பழைய நிலைக்கு கொண்டு வந்த பொழுதும், அதனை எளிதில் பெருக்க முடியாத நிலையில் அது இருப்பதைக் கண்டனர். அபின், உப்பு, பத்திரங்கள், ஆகியவைகளின் மீது சுமத்தப்பட்டிருந்த வரிகளும், உள்நாட்டுப் பொருள் வரி, சுங்க வரி, மாகாண அரசாங்கத்தினர் வசூலித்து வந்த சிறு வரிகள் ஆகியவையே எஞ்சி இருந்தன. ஆனால் சுங்கம் போன்ற வரிகளை பெருக்க முற்படும் போது பொருளாதாரக் கொள்கையினையும் உப்பு போன்ற வரிகளைப் பெருக்க முற்படும்போது பொது மக்களுக்குப் பயன்படத்தக்கக் கொள்கையினையும் எதிர்த்து செல்ல வேண்டிய நிலை ஏற்பட்டிருந்தது. 1859 முதல் 1862 வரையுள்ள காலப் பகுதியில் வில்சனும், லேய்ங்கும் (Laing) தீவிரமான சிக்கன முறைகளை நடைமுறைப் படுத்தியும், உப்பு வரியை அதிகப்படுத்தியும், ஒரே சீரான 10 சதவீத இறக்குமதி வரியை சுமத்தியும், விவசாயத்தின் விளைவாக ஏற்பட்ட வருமானத்தைத் தவிர ஏனைய வருமானங்களின் மீது வருமான வரியை விதித்தும் வரவு செலவுகளை சமநிலையில் மீண்டும் வைத்தனர். அதைத் தொடர்ந்த காலப் பகுதியில் வியாபாரப் பெருக்கம் ஏற்பட்டது. பொதுப் பணிகளை

உள்ளடக்கியத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கான பொருளைப் பெற அது பெரிதும் உதவியது. ஆனால் லாரன்சு அந்த நடவடிக்கைக்கும் ஒரு எல்லையுண்டு என்பதைக் கண்டறிந்தார். ஆகவே மீண்டும் பற்றாக்குறைகள் ஏற்பட்டன. 1867-இல் கடன் தொகைகளைக் கொண்டு ஆக்க வளம் பொருந்திய பொதுப் பணிகளுக்கு முதலீடு உதவும் முறையைக் கையாளுவதற்குத் தேவையான அனுமதியைப் பெற்றார். மேயோ பிரபுவால் வரையறுக்கப் பெற்றதும் செம்மைப் படுத்தப்பெற்றதுமான விதிகளின்படி செயலாற்றப்பட்ட இந்த நடவடிக்கையே நிதிக்கொள்கையின் ஏற்பிசைவு பெற்ற தனிச் சிறப்புக் கூறாக மாறியது. பெரிய நீர்ப்பாசன திட்டத்தை நிறைவேற்றுவதற்கு அது உதவி செய்தது. இருப்புப்பாதை அமைப்பதற்கும் அது பெரிதும் உதவியாய் இருந்தது. மைய அரசு மாகாண அரசுகளுக்கு உதவித் தொகை அளிக்கும் முறையை மாற்றியமைத்து மாகாண நிதியைச் சார்ந்த ஆட்சி முறையை அவரே செம்மைப்படுத்தினார். இதுவரை மாகாண அரசுகள் மேற்கொள்ள வேண்டிய செலவினங்கள் ஒவ்வொன்றின் மதிப்பீட்டிற்குத் தக்கவாறு மைய அரசு அவைகளுக்குப் பொருளுதவி செய்து வந்தது. செலவினங்களுள் ஏதேனும் ஒன்றில் குறைவாக செலவழிக்க நேர்ந்தால் அதனால் மாகாண அரசுக்கு யாதொரு நன்மை ஏற்படவில்லை. ஏனெனில் அந்த நிதி ஆண்டு முடிந்தவுடன் அந்த வழியில் மீதம் பிடிக்கப்பட்ட தொகையை மைய அரசு மீட்டுப்பெற்றது. மதிப்பீட்டுத் தொகையைவிட அதிகமாக செலவழிக்க நேர்ந்தாலும், அதற்காக யாதொரு தண்டனையும் வழங்கப் படவில்லை. ஏனெனில் பற்றாக்குறையை ஈடு செய்யுமாறு மைய அரசு நடைமுறையில் கட்டாயப்படுத்தப்பட்டது. 1870-இல் மேற்குறிப் பிட்ட திட்டம் பெற்றிருந்த இடத்தை, ரிச்சர்டு ஸ்ட்ராச்சி, ஜான் ஸ்ட்ராச்சி என்ற இரு சகோதரர்கள் தயாரித்த முறையைக் கொண்டு நிரப்பப்பட்டது. ஒவ்வொரு மாகாண அரசுக்கும் ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட தொகையை மைய அரசினர் வழங்கினர். ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு முறை அத்தொகையை மாற்றியமைக்க வழி வகுக்கப்பட்டது. ஆகவே ஒவ்வொரு ஐந்து ஆண்டுக் காலப் பகுதியில் மாகாண அரசுகளுக்கு ஒரு வகையான சுயேச்சை வாய்ப்பு அளிக்கப்பட்டது. ஆனால் திடீரென்று ஏற்படும் நெருக்கடி காலங்கள் அல்லது விலை ஏற்ற இறக்கங்கள் ஆகியவற்றால் ஏற்படும் அதிக செலவினைச் சரிக்கட்டுவதற்கு வேண்டிய வழிகளை இம்முறை ஏற்படுத்திக் கொடுக்கவில்லை. ஆயினும் உள்ளூர் தீர்வைகளையும் சேர்ப்பித்து மாகாணங்களின் பணத்திரட்டு வாய்ப்புகளை அதிகரித்து அதன் வாயிலாக பெயரளவில் அல்லாத மாகாண நிதி அமைப்பதற்கு அது அடிகோலியது. 1877-இல் சர். ஜான் ஸ்ட்ராச்சி என்பவர் அதனை மேலும் விரிவு படுத்தினார். அவர் மாகாண

அரசுகளுக்கு ஆண்டுதோறும் மைய கருவூலத்தினின்றும் ஒரு குறிப்பிட்டத் தொகையினை வழங்குவதற்குப் பதிலாக அரசாங்க வருவாயில் ஒரு பங்கை அளிக்க ஏற்பாடு செய்தார்.

தடையிலா வாணிகக் கொள்கை இன்னும் செல்வாக்குப் பெற்றிருந்தது. இந்திய அரசாங்கம் தன்னுடைய சுங்க வரிகளைக் குறைத்துக் கொள்ளுமாறு வற்புறுத்தப்பட்டது. முதலில் அவ்வரிகள் 5 சதவீதமாகக் குறைக்கப் பெற்றன. 1879-இல் லங்காஷயர் தொழிலதிபதிகளின் வற்புறுத்தலுக்கிணங்க பருத்தி மீது சுமத்தப் பட்ட வரிகள் நீக்கப்பெற்றன. இந்நடவடிக்கை இந்தியாவில் அதிகாரவர்க்கம் மக்கள் ஆகியோரிடையே பலத்த எதிர்ப்பை தோற்றுவித்தது. கவர்னர் ஜெனரல் தான் பெற்றிருந்த ஒதுக்கித் தள்ளும் அதிகாரத்தை பயன்படுத்தியதால் தான் அந்நடவடிக்கையை கவர்னர் ஜெனரலின் கவுன்சிலில் நிறைவேற்ற இயன்றது. பிரிட்டிஷ் காரர்களின் நலன்களுக்காக இந்திய மக்களின் நலன்களை அரசாங்கம் விட்டுக் கொடுத்தாகவே அப்பொழுது கருதப்பட்டு வந்தது. அதுவே, இரண்டு நாடுகளின் பொருளாதார நலன்களுக்கிடையே உண்டான மோதல்களின் வெளிப்படையாகச் செய்யப்பட்ட முதல் எடுத்துக் காட்டாக அமைந்தது. அதே நேரத்தில் உள்நாட்டு சுங்கவரி வசூலிப்பதற்கென கள்ளிச் செடிகளைக் கொண்டு அமைக்கப்பட்டிருந்த வரம்புக்கோட்டினை அழிப்பதற்காக மேற்கொண்ட நன்மை பயக்கத் தக்க நடவடிக்கை முழுமையாக நிறைவேற்றப்பட்டது.[1] சுதேச இராச்சியங்களுடன் இந்திய அரசாங்கம் மேற்கொண்ட ஒரு உடன்பாடே மேற்கூறிய நடவடிக்கையை மேற்கொள்ள வழி வகுத்துக் கொடுத்தது. அதன்படி இராச்சியங்கள் உப்பு உற்பத்தி செய்வதில்லை என்று உறுதி கூறின. இந்திய அரசாங்கம் அவைகளுக்குத் தக்க ஈடு அளிக்க இசைந்தது. அதன் பிறகு உப்பு வரியை ஒரே சீராக விதிக்க வழி ஏற்பட்டது. ஆகவே ஒரு மாகாணத்தினின்றும் மற்றொரு மாகாணத்திற்கு உப்பை எடுத்துச் செல்வது இலாபகரமாக காணப்பட வில்லை. அதன் பிறகு மேலும் சில வரிச் சலுகைகள் காட்டப்பட்டன. அதனால் 1882ஆம் ஆண்டில் தடையிலா வாணிகம் முழுமையாக ஏற்படுத்தப்பட்டது. அரசாங்க வருவாயைப் பெருக்குவதற்கென சில பொருள்களின் மீது மட்டும் குறைந்தபட்ச ஏற்றுமதி வரிகள் சுமத்தப்பட்டன. அதேப் பொருள்களின் மீது உள்நாட்டுப் பொருள்

[1] இந்த எல்லைக்கோடு கள்ளிச்செடிகளைக் கொண்டு அமைக்கப்பட்ட வேலியாகும். இது 2500 மைல்கள் நீளமுடையதாகவிருந்தது. இது பருத்தப் பொருள்களை ஒரு மகாணத்தினின்றும் மற்றொரு மாகாணத்திற்கு வரி கொடாமல் எடுத்துச் செல்வதைத் தடுக்க அமைக்கப்பட்டது. இதைக் காக்க 12000 பேர்கள் தேவைப்பட்டனர். நார்த்புரூக்கு காலத்தில் இவற்றுள் 1000 மைல் எல்லைக்கோடு கைவிடப்பட்டது. எஞ்சியிருந்த எல்லைக் கோட்டினை லிட்டன் காலத்தில் கைவிட்டனர்.

வரி சுமத்தி வெகு சொற்பமான இறக்குமதி வரிக்குச் சரியீடு செய்தது. 1891ஆம் ஆண்டு வரை தடையிலா வாணிகம் ஒழுங்காக நடைபெற்று வந்தது. அவ்வாண்டில் ஏற்பட்ட காசிந ரூபாய் நெருக்கடி (இதைப் பற்றி இரண்டாவது அத்தியாயத்தில் கவனித்துள்ளோம்) அரசாங்க வருவாயை மேலும் பெருக்க வேண்டிய நிலையினை உண்டாக்கியது. அது பருத்தி வரிகளைப் பற்றிய பூசலைப் புதுப்பித்தது. முதலில் பருத்தி, வரியின்றி வியாபாரம் செய்யக்கூடியப் பொருளாகக் கருதப்பட்டு வந்தது. ஆனால் 1894ஆம் ஆண்டின் இறுதியில் பருத்தி ஆடைகள் மீது 5 சதவீத இறக்குமதி வரி விதிக்கப்பட்டது. லங்காஷயர் தொழிலதிபதிகள் போட்ட கூக்குரலின் விளைவாக பருத்தி ஆடைகள் மீது விதிக்கப்பட்ட இறக்குமதி வரிக்கு சரியீடு செய்யத்தக்க வகையில் பருத்தியின் மீது 5 சதவீத உள்நாட்டு வரி விதிக்கப்பட்டது. இந்திய பருத்தி ஆலைகளின் முதலாளிகள் வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட பருத்தி ஆடைகளுக்குச் சாதகமாக அமையும் வகையில் வெளிப்படையாக கையாளப்பட்ட ஓரங்காட்டும் தன்மை படைத்தச் செயலாக அதனைக் கருதினார்கள். 1896-இல் இவ்விரு வரிகளும் 3½ சதவீதமாகக் குறைக்கப்பட்டது. முதல் உலகப் போரின் இடைப் பகுதி வரை (அந்நிலை) யாதொரு மாறுதலுமின்றி தொடர்ந்து இருந்து வந்தது. அப்பொழுது அரசாங்கத்திற்கு மிகைப்படியான வருவாய்த் தேவைப்பட்டது. அப்பொழுது இறக்குமதி அல்லது சுங்கவரி 7 சதவீதமாக உயர்ந்தப்பெற்றது. உள்நாட்டு வரி 3½ சதவீதமாகவே விட்டு வைக்கப்பெற்றது. லங்காஷயர் ஆலை முதலாளி களின் பிடிப்புத் தளர்வுற்றதை மேற்கூறிய நடவடிக்கை குறித்துக் காட்டுகிறது. 1921-இல் சுங்கவரி 11 சதவீதமாக உயர்த்த மேற்கொண்ட நடவடிக்கை அவர்களுடைய பிடிப்பு மேலும் தளர்வுற்றதைத் தெளிவாக்குகிறது. இறுதியில் 1925-இல் உள்நாட்டு வரி முதலில் தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டது. பின்னர் அது அறவே நீக்கப்பெற்றது. இந்த நிகழ்ச்சி இந்தோ-பிரிட்டிஷ் உறவு முறைகளுக்குப் பெருங்கேடு விளைவித்தது. ஏனெனின் லங்காஷயர் ஆலை முதலாளிகளின் நன்மைக்காக இந்தியர்களின் நலன்கள் பலியிடப் பெற்றன என்றக் கருத்து பொது மக்களிடம் வேரூன்றி நிலவி வந்தது.

இக்காலப் பகுதியில் அரசினர் பொருளாதாரத் துறையில் மேற்கொண்ட நற்செயலாக்கத்திற்கு தலைசிறந்த எடுத்துக் காட்டுகளாக விளங்குபவை பஞ்ச சட்டத் தொகுதி நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்குவதற்காக மேற்கொண்ட பணிகள், இருப்புப் பாதைகள் அமைத்தல் ஆகியவையாகும். தற்கால இந்தியாவின் வளர்ச்சி இருப்புப் பாதைகளின் வளர்ச்சியுடன் அதிகளவில் சார்ந்திருப்பதனால், அவ்விருப்புப்பாதைகளை அமைக்க மேற்கொண்ட நடவடிக்கைகள்

நம்முடைய பரிசீலனைக்கு உரியனவாகின்றன. ஹார்டிஞ்சு பிரபு காலத்திலேயே இருப்புப்பாதை அமைத்தலைப் பற்றிய பேச்சு எழுந்த போதிலும், டல்ஹௌசி பிரபு தான் அதற்கான முதல் முயற்சியை மேற்கொண்டார். இந்தியா முழுவதிற்கும் ஒரு இருப்புப்பாதை திட்டத்தையும், இருப்புப்பாதை யமைத்தல், அதற்கான பொருள் தேடுதல் அவைகளைக் கட்டுப்படுத்தும் முறை, ஆகியவற்றிற்கான செயல் முறைக் கொள்கைகளையும் 1853-இல் வரையப்பட்ட நிகழ்ச்சிக் குறிப்பேட்டில் அவர் எடுத்துரைத்திருந்தார். 1857-இல் அப்பொழுது நடைமுறையில் இருந்து வந்த இருநூறு மைல் நீள இருப்புப்பாதைகள் அவற்றின் பயன் மதிப்பை பெருமளவில் எடுத்துக்காட்டின. 1859-இல் எட்டுக் கம்பெனிகள் 5000 மைல்கள் நீளமுள்ள இருப்புப்பாதையை அமைப்பதற்கான நடவடிக்கையை மேற்கொள்ள அனுமதி பெற்றன. ஒரே சீரான இருப்புப்பாதையின் அகலத் தரத்தைக் (Gauge) கையாள வேண்டும் என்று டல்ஹௌசி திட்டமிட்டிருந்தார். 4 அடி 8½ அங்குல அளவுள்ள பிரிட்டிஷ் ஸ்டாண்டர் அகலத்தரத்திற்கும் 7 அடி அளவுள்ள தி கிரேட் வெஸ்டர்ன் அகலத் தரத்திற்கும் நடுத்தரமாக அமைய வேண்டும் என்று கருதி டல்ஹௌசி அகலத்தரம் 5 அடி 6 அங்குலமாக அமைய வேண்டும் என்று திட்டமிட்டார். ஆக்க வளம் பொருந்திய வேலைகளுக்காக கடன் எழுப்ப அரசாங்கம் அக்காலத்தில் அதிகாரம் பெற்றிராத காரணத்தால், வேறு இடங்களில் தேவையான மூலதனத்தைப் பெறவேண்டியதாயிற்று. அம்மூலதனத்தைத் தனியார் கம்பெனிகளின் வாயிலாக பிரிட்டனில் பெற முயற்சி மேற்கொள்ளப் பட்டது. ஆனால் அந்தக் கம்பெனிகளை மிகக் கவனமாக கட்டுப்படுத்த வேண்டியதாகயிருந்தது. இதுவரை இந்திய பொருளாதார நடவடிக்கைகளில் பிரிட்டிஷ் மூலதனத்தை ஈடுபடுத்த தயக்கங் கொண்டவர்களை கவரத்தக்க வகையில், இப்பொழுது கம்பெனிகளுடன் ஒப்பந்தங்கள் மேற்கொள்ளப்பட்டன. அவற்றின்படி சற்றேறக் குறைய 5 சதவீத வட்டியை அக் கம்பெனிகளுக்கு அளிக்க அரசாங்கம் பொறுப்புறுதி அளித்தது. அத்தொகைக்கு மேலாக விளையும் இலாபத்தை அரசாங்கமும், கம்பெனியும் பகிர்ந்து கொள்ளவும் ஏற்பாடு செய்யப்பட்டது. இவைகளுக்குப் பதிலாக அவற்றின் செலவினங்களையும், நடத்தும் முறைகளையும் அரசாங்கம் கட்டுப்படுத்த வும், இருபத்தைந்து ஆண்டுக் காலம் முடிவுற்றப் பிறகு அரசாங்கம் அவைகளை விலைகொடுத்து வாங்குவதற்கும் உரிமைப்பெற்றது. மேலும் கம்பெனிகள் யாதொரு கட்டணமுமின்றி தபால்களையும், குறைந்த சத்தத்தில் படைகளையும் இரயில் வண்டிகளில் ஏற்றிச் செல்ல இசைந்தன.

இம்முறை குறைபாடற்றது என்று நாம் கூற இயலாது. ஆனால் மிக நன்றாகப் புரிந்துகொள்ளும் திறன், முன்னறிவாற்றல் ஆகியவற்றின்

பெரும் வினாவுகளுள் அது ஒன்ருகும் அது இந்திய இயந்திரப் போக்குவரத்துச் சாதனங்களைப் பற்றிய முழு திட்டத்தினைத் தொடங்கி வைத்தது. அரசினருடைய உடைமைப் பொருளாகவும். அரசினரால் இயக்கப்படும் நிறுவனங்களாகவும் விளங்கக்கூடிய இருப்புப்பாதை அமைப்புகளை நாடு முழுவதிலும் அமைக்கப்படும் நாளை அது எதிர்நோக்கியிருந்தது. பிற்காலத்தில் இந்த திட்டத்தில் ஏற்படுத்தப் பட்ட மாறுதல்கள் யாவும் விஞ்சிய மேன்மையுடையனவாகக் காணப்படவில்லை. இருப்புப்பாதைகளை அமைப்பதற்குத் தேவையான மூலதனத்தைப் பெறுவதில் அத்திட்டம் வெற்றி கண்டது. ஆயினும் அம் மூலதனத்தைக் கவர்ந்து பெறுவதற்காகக் கையாளப்பட்ட திட்டத்தின் அவசியத்தைப் பற்றி மாறுபட்ட கருத்துகள் தோன்றின. ஆனுல் ஒரு முறை தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்ட பிறகு அதனின்றும் விடுபட அரசாங்கத்தினுல் இயலவில்லை. வேறு நிபந்தனைகளின் பேரில் மூலதனத்தைப் பெறுவதற்காக மேற்கொண்ட முயற்சிகள் பலனளிக்கவில்லை. ஆனுல் அந்தத்திட்டம் சிக்கன முறையைக் கையாளுமாறு அவர்களைத் தூண்டவில்லை. ஏனெனில் இருப்புப்பாதை அமைப்புகள் தேடித்தந்த முதல் இலாபங்களை அரசினரே அடைந்தனர். அவைகளால் ஏற்பட்ட நஷ்டங்களை அவர்களே ஏற்றுக் கொண்டனர். மேலும் இருப்புப் பாதைகளை அமைப்பதில் ஈடுபட்டிருந்த பொறியியற் வல்லுநர்களைக் கட்டுப் படுத்துவது மிகக் கடினமாகத் தோன்றியது. 1868-இல் நடைமுறைப் படுத்தப்பட்ட இருப்புப்பாதை அமைப்புகளின் செலவு டல்ஹௌசி திட்டமிட்டப்படி மைலுக்கு 8000 பவுன்களாக இருப்பதற்குப் பதிலாக மைலுக்கு 18000 பவுன்களாக காணப்பட்டது. மேற்கூறப் பட்ட குறைபாடுகளுக்கு எதிராக, இந்தியாவில் அமைக்கப்பெற்ற இருப்புப்பாதை அமைப்பு உலகத்தில் ஏற்படுத்தப்பட்ட எந்த இருப்புப்பாதை அமைப்புடனும் வைத்துப் போற்றத்தக்க அளவில் மிக உயர்தரமாக இருந்தது என்ற உண்மையை வைத்து நாம் அதனை மதிப்பிடுதல் அவசியமாகும்.

1870ஆம் ஆண்டிற்குப் பிறகு அரசினருடைய கொள்கை மாற்றியமைக்கப் பெற்றது. ஆக்க வளம் பொருந்திய பணியை மேற்கொள்ளுவதற்காக வேண்டிய பொருளை கடன் மூலமாகப் பெறுவதற்கு வழங்கப்பட்ட புதிய அனுமதி அரசினரே இருப்புப்பாதை அமைக்கும் பணியை மேற்கொள்ள உதவியது ஆனுல் சிக்கனத்தின் பொருட்டு மீட்டர்கேஜ் இருப்புப்பாதை வகையினையே புதிதாக இருப்புப்பாதைகளை அமைக்கும்பொழுது பெருமளவில் அரசினர் மேற்கொண்டனர். அவற்றுள் சில பிற்காலத்தில் 'பிராட்கேஜ்' வகையாகப் மாற்றப்பெற்றன. ஏனெனில் போக்குவரவு




இந்தியாவின் இருப்புப் பாதைகள்.

நடமாட்டத்தில் ஏற்பட்ட பெருக்கத்தை தாங்குவதற்கு ஏற்ற கட்டமைப்பு வாய்ந்ததாக மீட்டர்கேஜ் வகை காணப்படவில்லை. ரூபாய் நாணயத்தின் மதிப்பு குறைந்து விட்டதால் இருப்புப்பாதைகளை அமைப்பதில் தாமதம் ஏற்பட்டது 1880-இல் வெளியான பஞ்சாயிலே பரிசீலனைக் குழுவினுடைய அறிக்கையில் மேலும் பல இருப்புப் பாதைகள் அமைப்பதற்கான வேண்டுகோள் இடம்பெற்றது. அதனால் அரசினருடைய கொள்கையில் மேலும் மாறுதல்கள் ஏற்படுத்த வேண்டிய அவசியம் தெளிவாக்கப்பெற்றது. 1880ஆம் ஆண்டிற்குப் பிறகு உத்தரவாத முறையைக் கையாண்டு தனியார் கம்பெனிகளின் உதவியைக்கொண்டு இருப்புப்பாதைகளை அமைக்கும் முறை மீண்டும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆனால் அனுபவத்தின் விளைவாக முன்பு இருந்ததைவிட மேலான நிபந்தனைகள் ஏற்படுத்தப் பெற்றன. அதன் பிறகு ஒப்பந்தங்கள் தவணை கடந்தபோது அரசாங்கம் காலந்தவறுமல் இருப்புப்பாதை அமைப்புகளை விலை கொடுத்து வாங்கிக்கொண்டது. அவ்வாறு விலைக்கு வாங்கப் பட்ட அமைப்புகளில் சிலவற்றைத்தானே நடத்தி வந்தது. எஞ்சிய அமைப்புகளை அக் கம்பெனிகளே தொடர்ந்து நடத்திவர அனுமதி வழங்கிற்று. இவ்வாறாக 'தி கிரான்ட் இந்தியன் பெனின்சுலார்' இரயில்வேயும் வடமேற்கு இரயில்வேயும் அரசினரால் நடத்தப்பெற்ற அமைப்புகளாக விளங்கின. பம்பாய், பரோடா, மத்தியக் கிழக்கு இரயில்பாதை நிறுவனங்கள் தனிப்பட்ட நிறுவனங்களால் நடத்தப் பெற்று வந்தன. அதே நேரத்தில் சுதேச இராச்சியங்களிலும், இரயில் பாதை அமைப்புகள் நிறுவப்பெற்றன. அவற்றுள் சில இராச்சிய அரசாங்கத்தினரால் நடத்தப்பெற்று வந்தன. உதாரணமாக ஐதராபாத் அரசாங்கத்தினர் தங்கள் இராச்சியத்தில் நிறுவப்பெற்றிருந்த இரயில் பாதை நிறுவனத்தை நடத்தி வந்தனர். வேறு சில அமைப்புகள் தனிப்பட்ட கம்பெனிகள் அல்லது இந்திய அரசாங்கத்தினர் ஆகியோரால் நடத்தப்பெற்று வந்தன. 1900ஆம் ஆண்டிற்குள்ளாகவே இந்திய இருப்புப்பாதை அமைப்புத் திட்டத்தின் பெரும்பகுதி நிறைவேற்றப்பெற்றது. சுமார் 25000 மைல் நீளமுள்ள இரயில்பாதைகள் போக்குவரத்துக்குப் பயன்படுத்தப்பெற்றன. 1914ஆம் ஆண்டிற்குள்ளாக மேலும் 10000 மைல் நீளமுள்ள இரயில் பாதை உருவாக்கப்பெற்றது. இரயில்பாதை அமைப்பைச் சார்ந்த மூலத்திட்டத்தில் ஒரே மாதிரியான சிக்கலற்ற இரயில்பாதை நிறுவ வழி செய்யப்பட்டிருந்தது. ஆனால் அத்தகைய பாதைக்குப்பதிலாக ஒன்றுக்கொன்று மாறுபட்டத் தன்மையுடைய அமைப்புகள் இப்பொழுது ஏற்படுத்தப் பெற்றிருந்தன. முன்பு அமைக்கப் பெற்ற இரயில் பாதைகள் ஒரே 'கேஜ்' வகையைச் சார்ந்

திருந்தன. இப்பொழுது மூன்று வகைப்பட்ட 'கேஜ்'கள் அமைக்கப்பெற்றன.[1]

இருப்புப்பாதை அமைப்புகளை உடைமையாகக் கொண்டிருந்தவர்களும், நடத்துபவர்களும் மூன்று வகையாகப் பிரிந்திருந்தனர். அது மட்டுமன்றி அவர்கள் பலவிதமாக ஒருவரோடு ஒருவர் இணைக்கப்பட்டிருந்ததன் விளைவாக, வேறுபல வகைகளாகவும் பிரிந்திருந்தனர். ஆனால் திட்டமிடுதல் உடைமை, நடத்து முறை ஆகியவற்றை அரசாங்கத்தினருடைய முடிவானக் கட்டுப்பாடு இருக்க வேண்டும் என்று மூலத் திட்டத்தில் குறிப்பிட்டவாறு இப்பொழுதும் இரயில் நிறுவனங்கள் நடத்தப் பெற்று வந்தன. பிரிட்டனில் தோன்றியிருந்ததைப் போல இந்தியாவில் போட்டியில் பங்குகொள்ளுகிற நிறுவனங்கள் ஏற்படுத்தப் பெறவில்லை. மேலும் அதிக இலாபம் அளிக்கக்கூடிய பகுதிகளில் இரயில் நிறுவனங்களை ஏற்படுத்தி அவைகளின் வாயிலாகப் பெரும் இலாபம் அடைவதற்காக இன்றியமையாதத் தேவைகளை விட்டுக் கொடுக்கும் வகையில் நடவடிக்கை ஏதும் மேற்கொள்ளப்படவில்லை. அப்பொழுது ஏற்படுத்தப் பெற்றிருந்த இரயில்பாதை அமைப்புகள் நாடு முழுவதற்கும் உரிய நிறுவனங்களாக இருந்தன. யாதொரு இடையூறுமின்றி சிறிது சிறிதாக எவரும் உணராத வகையில் அவ்வமைப்புகள் தேசிய உடைமையாக்கப் பெறுவதற்கு உதவி செய்யும் வகையில் அவைகள் ஏற்படுத்தப்பெற்றிருந்தன. இவையெல்லாம் பிரிட்டனில் தனி மனிதனின் தனிச் செயலுரிமையை ஆதரிக்கும் சமுதாயக் கொள்கை நிலவி வந்த காலத்திலும், தேசியமயமாக்க வேண்டும் என்று எண்ணுவதையே பெருங்குற்றமாகக் கருதி வந்த காலத்திலும் இவையனைத்தும் மேற்கொள்ளப்பட்டன என்பதை நாம் உணருதல் அவசியமாகும். எல்லாவற்றையும் ஒன்று சேர்த்து பார்க்கும்பொழுது இந்திய இரயில்பாதை அமைப்புத் திட்டத்தை உருவாக்கியவர்கள் இந்தியாவிற்கு நல்ல முறையிலே பணியாற்றியுள்ளார் என்பதை நாம் ஒத்துக்கொள்ள வேண்டும். மேலும் அவர்கள் இந்தியாவை அநேக தவறுகளினின்றும் காப்பாற்றி விட்டனர். அதுமட்டுமன்றி வேறிடத்தில் ஏற்பட்டிருந்த செலவுகளில் பெரும் பகுதியை மிச்சம் பிடிப்பதற்கும் அவர்கள் காரணமாயிருந்தனர். அந்த நற்பணியின் விளைவாக அரசாங்கத்தினரின் கட்டுக்குள் அடங்கியிருந்த இரயில்பாதை அமைப்புகள் வருடா வருடம் தொடர்ச்சியாக பெரும் இலாபங்களை ஏற்படுத்தித் தந்தன. 1899–1900ஆம் ஆண்டில் முதல் தடவையாக 11 லட்ச ரூபாய் இலாபம் ஏற்பட்டது. அப்பொழுதிலிருந்து 1914ஆம் ஆண்டு வரையிலுள்ள காலத்தில் ஓரே ஒரு

[1] அவை மலைப்பகுதியில் அமைக்கப்பெற்ற குறுகலான (Narrow) கேஜையும், வேறு இடங்களில் அமைக்கப்பெற்றிருந்த சில இருப்புப்பாதைகளையும் உட்கொண்டு இருந்தன.

ஆண்டில்தான் பற்றுக்குறை ஏற்பட்டது. போர் நடைபெற்று வந்த ஆண்டுகளில் பொருள்கள் அதிகளவில் தேவைப்பட்டதால், இருப்புப் பாதை நிறுவனங்கள் மேலும் பெரும் இலாபத்தைத் தேடித்தந்தன.

பல்வகையான கட்டுத் திட்டங்கள் ஏற்படுத்தப் பெற்றிருந்ததன் காரணமாக 1905ஆம் ஆண்டில் 'இரயில்வே போர்டு' நிறுவப்பெற்றது அதனை இருப்புப்பாதை நிறுவனங்களில் காணப்பெற்றக் குறைகளைப் போக்க மேற்கொண்ட முதல் நடவடிக்கை என்று நாம் கூறலாம். முதலாவது உலகப்போருக்குப் பின்னர் ஆக்வொர்த் கமிட்டி விடுத்த அறிக்கையின் விளைவாக அந்த இரயில்வே போர்டு திருத்தியமைக்கப் பெற்றது. இரயில் நிறுவனங்களை அரசாங்கமே நடத்துவதற்காக துரிதமான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. 1925-6ஆம் ஆண்டிலிருந்து இரயில்வே வரவு செலவுத் திட்டம் தனியாக வகுக்கப் பட்டது. இரண்டாவது உலகப்போர் ஏற்படுத்துவதற்கு முன்னரேயே இருப்புப்பாதை அமைப்புகளில் நான்கில் மூன்று பங்கினை அரசாங்கத் தினர் தமது உடைமையாக ஏற்படுத்திக் கொண்டனர். அவைகளுள் சுமார் பாதி அமைப்புகளை அவர்களே நடத்தி வந்தனர். இந்திய இருப்புப்பாதைகளின் நீளம் சுமார் 13000 மைல்களாக இருந்தது.

இருப்புப்பாதை அமைக்கப்பெற்றதால் பெரும் பொருளாதார விளைவுகள் ஏற்பட்டன. முன்னரே குறித்துள்ளபடி, இருப்புப்பாதை அமைப்புகள் பஞ்சப் பிரச்சனையில் பெரும் மாறுதல்களை ஏற்படுத்தி அதனுடைய இயல்பையே மாற்றிவிட்டன. மேலும் அவைகள் பஞ்ச நிவாரண விதியை நடைமுறையில் மேற்கொள்ளத்தக்க திட்டமாகத் தோற்றுவித்தன. 1896-இல் வட இந்தியாவில் ஏற்பட்ட பஞ்சத்தை உணவுப் பஞ்சம் என்று குறிப்பிடாமல் 'வேலைப் பஞ்சம்' (Famine of work) என்று குறிப்பிட்டார்கள். விற்பனைக்கென்று உற்பத்தி செய்வதை மேற்கொள்ளுவதற்கான வழியையும் உள்நாட்டில் பொருளாதாரத்துறையில் பெருமளவில் நடவடிக்கைகள் மேற்கொள்ளு வதற்கேற்ற வாய்ப்பினையும் ஏற்படுத்தி அவற்றின் வாயிலாக வாணிகத் துறையில் பெரு மாற்றங்களை ஏற்படுத்தி விட்டன. உற்பத்தி மேற்கொள்ளப்பட்ட இடங்களிலேயே, அதற்குத் தேவையான இயக்கு சக்தியை அளிக்கவல்ல நிலக்கரியினை கொடுத்து உதவுவதற் கான வாய்ப்பினை ஏற்படுத்தித் தந்தமையாலும், உற்பத்தி செய்யப் பெற்றப் பொருள்களைப் பல இடங்களுக்குக் கொண்டு செல்வதற்கான வாய்ப்பினை ஏற்படுத்தியமையாலும், தோட்டத் தொழிலும், ஆக்கத் தொழிலும் பெருக வழி ஏற்பட்டது. இறுதியில் இந்தியா முழுவதும் உலகப் பொருளாதார ஒழுங்கு முறையின் வரம்புக்குள் கொண்டுவரப் பெற்றது. மேலும் உலக விலைவாசிகளின் ஏற்ற இறக்கத்தின் விளைவுகள் இந்தியாவை பாதிக்கத் தொடங்கின. எடுத்துக்காட்டாக

பருத்தி நெசவுத் தொழில் இப்பொழுது உள்நாட்டுப் பகுதிகளிலும், கடற்கரையடுத்தப் பகுதிகளிலும் நடத்தப்பெறுவதற்கான வாய்ப்பு ஏற்பட்டது. மேலும் சர்க்கரை ஆலைத்தொழில் பெருகுவதற்கும் வழி ஏற்பட்டது. எல்லா விளைவுகளும் நன்மையையே பயந்தன என்று நாம் கூற இயலாது. உதாரணமாக, இந்தியக் கைத் தொழில்களின் அழிவு, பொருள்களின் விலை ஏற்றம், அதிகப்படியான ஏற்றுமதியின் விளைவாக உள்நாட்டுப் பொருளாதார அமைதி நிலையில் காணப்பட்ட நிலை குலைப்பு போன்ற தீய விளைவுகளும் ஏற்பட்டன. ஆனால் இருப்புப்பாதைகளை அமைக்கும் எண்ணம் தோன்றுவதற்கு வெகு நாட்களுக்கு முன்னதாகவே கைத் தொழில்கள் அழிந்து விட்டன. பதினெட்டாம் நூற்றுண்டின் இறுதியில் வங்காள நெசவாளர்கள் அழிவுறத் தொடங்கியவுடன் கைத் தொழில்களும் அழிவுறத் தொடங்கி விட்டன என்று கூறலாம். ஆனால் இருப்புப்பாதை நிறுவனங்கள் கைத் தொழில்களின் அழிவிற்கு முடிவான காரணமாகும் என்பதை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். மேலும் பிற இடங்களில் இருப்புப்பாதை அமைப்புகள் எத்தகைய விளைவுகளை உண்டாக்கினவோ அவைகளையே இந்திய இரயில்பாதை நிறுவனங்களும் உண்டாக்கின. போக்குவரத்து நிலைமையில் பெரிய மாறுதல்களை ஏற்படுத்தி அவைகளின் வாயிலாக கைத்தொழில் முறை அழிந்து இயந்திரத் தொழில் முறை வளர அவை பெரிதும் உதவின. தொழில்வளம் நிரம்பிய இந்தியா உருவாக்கப்படுவதற்கு இருப்புப்பாதைகள் இன்றியமையாத முன்னேற்பாடுகளாக அமைந்திருந்தன. பொருளாதாரத் துறையில் மட்டுமின்றி எல்லா வகைகளிலும் இருப்புப்பாதை நிறுவனங்கள் இல்லையென்றால் தற்கால இந்தியா இல்லை என்று நாம் துணிந்து கூறமுடியும்.

இருப்புப்பாதை நிறுவப் பெற்றதன் விளைவாகத் தோன்றிய புதியத் தொழில்களைப் பற்றியும், அது அளித்த உறுதியின் விளைவாகப் பெருக்கம் அடைந்த தொழில்களைப் பற்றியும் இனி நாம் கவனிப்போம். அவற்றுள் முதலாவது பருத்தி ஆலைத் தொழிலாகும். இத்தொழில் லங்காஷயர் ஆலைத் தொழில் அனுபவித்து வந்த ஏகபோக உரிமையை எதிர்த்து வளர வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டிருந்தது. அவ்வாறு வளர்ச்சி பெற்றுவரும் தொழில் கைத்தறி நெசவாளர்களை ஒழித்துவிட்டது என்று நாம் கூற இயலாது. அதற்கு மாருக, பிளாசிச் சண்டை, கர்நாடகப்போர் ஆகியவைகளுக்குப் பிறகு கிழக்கிந்தியக் கம்பெனி கையாண்டு வந்த அடக்குமுறை நடவடிக்கைகள் பயனுகவும், ஐரோப்பாவுடன் மேற்கொண்டிருந்த ஏற்றுமதி வாணிகம் முறிவடைந்ததன் விளைவாகவும், லங்காஷயரில் இயந்திரங்களைக் கொண்டு உற்பத்தி செய்யப்பெற்றப் பொருள்கள் இந்தியாவில்

இறக்குமதி செய்யப்படுவதால் உள்நாட்டுப் பொருள் உற்பத்திக்கு ஏற்படும் ஆபத்தைத் தடுப்பதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளத் தவறியதாலும், வங்காளத்திலும், கர்நாடகத்திலும் வெகு காலமாக நடைபெற்றுவந்த பருத்தி நெசவுத்தொழில் அழிவடைந்தது. பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இலங்காஷயர் கைத்தொழில்களைக் காப்பாற்றும் எண்ணத்துடன் இங்கிலாந்தில் இந்திய துணி விற்பனை தடைசெய்யப்பட்டது. ஆனால் இறக்குமதியான பொருள்கள் மீண்டும் ஐரோப்பாவிற்கு ஏற்றுமதி செய்யப்பட்டு வந்தன. ஆனால் அமெரிக்க சுதந்திரப்போர் அதனைத் தொடர்ந்த பிரஞ்சுப் புரட்சியின் காரணமாக ஏற்பட்ட போர் ஆகியவை அவ்வாணிபத்தையும் அழித்து விட்டன. அதற்குள்ளாகவே இலங்காஷயரில் இயந்திரங்களைக் கொண்டு பொருள் உற்பத்தி செய்யத் தொடங்கியதால் அங்கு வளர்ந்திருந்த கைத்தொழில் அழிவுற்றது. இலங்காஷயரில் இயந்திரங்களைக் கொண்டு உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை இந்தியாவில் நீர்வழிப் போக்குவரத்துக்குரிய நதிகள் எட்டுந்தொலைவிலுள்ள பகுதிகளில் குறைந்த விலைக்கு விற்கக்கூடிய நல்வாய்ப்பு கிழக்கிந்தியக் கம்பெனிக்கு ஏற்பட்டிருந்ததால், கம்பெனி அப்பொருள்களை இந்தியாவிற்கு இறக்குமதி செய்தது.[1] அதே நேரத்தில் இந்தியாவில் தயாரிக்கப்பெற்ற பொருள்களுக்குப் பதிலாக பருத்தியை இந்தியாவினின்றும் ஏற்றுமதி செய்யும் பணியை மேற்கொண்டது. 1853-இல் தான் வெற்றி வாய்ப்புடன் கூடிய முதல் இந்தியப் பருத்தி ஆலையொன்று பம்பாயில் துவக்கப்பட்டது. அமெரிக்க உள்நாட்டுப் போர் ஏற்பட்டதன் விளைவாக பருத்தியின் விலை ஏறியது. போர் முடிவுற்ற பின்பு மீண்டும் அமெரிக்கப் பருத்தி மீண்டும் சந்தைக்கு கொண்டுவரப் பெற்றதால் படு விலை இறக்கம் ஏற்பட்டது. அதன் விளைவாக இந்தியப் பருத்தி ஆலைத்தொழிலின் வளர்ச்சி தடைப்பட்டது. 1887-இல் J. N. டாடா என்ற பார்சியர் நாகபுரியில் ஏற்படுத்திய எம்ப்ரஸ் ஆலை (Empress Mill) செயற்படத் தொடங்கிய காலத்திலிருந்துதான் உண்மையான வளர்ச்சி ஏற்பட்டது. அப்பொழுதிலிருந்து அத்தொழிலின் வளர்ச்சி தடைபடவேயில்லை என்று கூறலாம். ஷோலாபூர், குஜராத்திலுள்ள ஆமதாபாத், சென்னை, மேலும் பல்வேறு சிறு இடங்களில் ஆலைகள் அமைக்கப்பெற்றன. ஆயினும் எண்பதுக்கு மேற்பட்ட ஆலைகளை உட்கொண்டிருந்த பம்பாய் நகரம், பருத்தி ஆலைத்தொழிலை முதன்மை தாங்கி நடத்தி வந்தது. 1914ஆம் ஆண்டிற்குள்ளாகவே பருத்தியைக்

1 1786 முதல் 1790 வரை இங்கிலாந்தினின்றும் ஆண்டு தோறும் ஏற்றுமதி செய்யப்பெற்றப் பருத்தியைக்கொண்டு தயாரிக்கப்பெற்றப் பொருள்களின் விலை சராசரி ஆண்டு மதிப்பு 1,200,000 பவுன்களாக இருந்தது. 1809-இல் அது 18,400,000 பவுன்களாக உயர்ந்தது.

கொண்டு பொருள்களை ஆக்கும் உலக நாடுகள் அடங்கியப் பட்டியலில் இந்தியா நான்காவதாக வைத்து எண்ணப்பட்டது.[1] 1930-இல் ஏற்பட்ட வாணிப மந்தம், காந்தியடிகளின் கண்டனம், ஜப்பானியர்களுடன் ஏற்பட்ட போட்டி ஆகியவைகளுக்கிடையோ அத்தொழில் தொடர்ந்து நிலைந்திருந்தது. சிலவகை நூலிழைகளைக் கொண்டு தயாரிக்கப்பெற்ற ஆடைகள் கதர் போன்ற மட்டரகக் கைத்தறி ஆடைகள் இன்ப வாழ்க்கைக்குகந்த சில விலையுயர்ந்த ஆடைகள் ஆகியவற்றைத் தவிர ஏனைய ஆடைகளைப் பொருத்தளவில் இந்தியர்களின் தேவைகளை நிறைவேற்றத்தக்க அளவு துணியை இந்தியப் பருத்தி ஆலைத்தொழில் உற்பத்தி செய்து வந்தது எனலாம்.

சணல் தொழில் முதலில் வங்காளத்தில் ஏற்படுத்தப்பெற்ற ஒரு கைத்தொழிலாக விளங்கி வந்தது அங்கு உற்பத்தி செய்யப்பட்ட சணலின் ஒரு சிறு பகுதிதான் ஏற்றுமதி செய்யப்பட்டது. 1838-இல் ஸ்காத்லாந்திலுள்ள டண்டி என்னுமிடத்திற்கு சணல் ஏற்றுமதி செய்யத் தொடங்கிய பொழுதுதான் அதனுடைய மதிப்பு முதன் முறையாக உணரப்பெற்றது. பயிரிடுவதில் தரமுள்ள முறைகள் மேற்கொள்ளத் தவறியதால், வங்காள சணல் மட்டரகமான கோணியை உற்பத்தி செய்வதற்கு மட்டுமே பயன்படத்தக்கதாக இருந்தது. கோணி நெய்வதற்கு துணை செய்யும் இயந்திரத் தறிகளை இயக்குவதற்கு வேண்டிய சக்தியை அளிக்கவல்ல துணைப் பொருள்கள் அங்கு கிடைக்காத காரணத்தால் உள்ளூரிலே சணல் ஆலைத்தொழிலை நிறுவ முடியவில்லை. இத்தொழிலைப் பொருத்தளவில் 1854-இல் ஏற்பட்ட கிரிமியாப் போரை ஒரு திருப்புக் கட்டமாகக் கொள்ளலாம். அப்போர், பிளாக்ஸ், ஹெம்ப் என்ற பெயருடைய சணல் நார்களை ருஷ்யாவினின்றும் டண்டிக்கு அனுப்பப் பெறுவதை தடை செய்தது. மேலும் அப்பொழுது செம்மையான முறைகளைக் கையாண்டு பயிரிடப் பட்ட இந்திய சணல் ருஷ்ய சணலை நிரந்தரமாக டண்டி சந்தைகளினின்றும் அகற்றி விட்டது. அதே நேரத்தில் புதிதாக அமைக்கப் பெற்ற கிழக்கு இந்திய இருப்புப்பாதை நிறுவனம் இந்திய நிலக்கரிச் சுரங்கத் தொழிலை வளர்ச்சியுறச் செய்தது. அதன் விளைவாக வங்காளத்திலேயே கோணி தயாரிக்க வழி ஏற்பட்டது. 1855-இல் செராம்பூர் என்னுமிடத்திற்கருகே முதல் சணல் நூற்பு இயந்திரம் நிறுவப்பெற்றது. 1859-இல் இயந்தரத் தறி அமைக்கப்பெற்றது. முதலில் இங்கு உற்பத்தி செய்யப்பட்ட கோணிகள் டண்டியில் ஆக்கப்பெற்ற கோணியைவிட தரம் தாழ்ந்ததாக இருந்தது. மேலும்

[1] Anstey, Economic Development of India (1949) பக்கம் 262 2-வது குறிப்பைக் காண்க. உகை ஆலைகளின் பயனீட்டளவின் சதவீதத்தைக்கொண்டு இது கணக்கிடப்பட்டது.

அது உள்ளூர் சந்தைகளில்தான் செல்வாக்குப் பெற்றிருந்தன ஆனால் 1870 முதல் 1879 வரை அத்தொழில் வெற்றியுடன் நடைபெற்று வந்தது. அத்துடன் அது தீவிர பெருக்கத்தையும் கண்டது. அவ்வளர்ச்சி யாதொரு தடையின்றி தொடர்ந்து நடைபெற்று வந்தது. 1931-இல் ஏற்பட்ட தொழில் மந்தம் அதன் வளர்ச்சிக்கு கேடு விளைவித்தது. 1908ஆம் ஆண்டிற்குள்ளாகவே இந்தியாவில் உற்பத்தி செய்யப்பெற்ற கோணி டண்டியில் உற்பத்தி செய்யப்பெற்ற கோணியைவிட உற்பத்தியளவில் மிஞ்சி விட்டது. நாம் இப்பொழுது கவனித்துவரும் காலப்பகுதி முழுவதிலும் சணல் உற்பத்தியில் இந்தியா ஏகபோக உரிமையை அனுபவித்து வந்தது என்று கூற முடியும். பருத்தி எவ்வாறு பம்பாய், சென்னை ஆமதாபாத் ஆகியவற்றைத் தொழிற்சாலைகள் நிறைந்த பட்டணங்களாக மாற்றியமைத்ததோ அவ்வாறே சணல் கல்கத்தாவை தொழிற் பட்டணமாக மாற்றியமைத்தது.

சணல் தொழில், மற்றையத் தொழில்கள் ஆகியவற்றில் ஏற்பட்ட வளர்ச்சி இயந்திரங்களை இயக்குவதற்கு வேண்டிய சக்தியை அளிக்க வல்ல நிலக்கரியுடனும், போக்குவரத்து சாதனமாக விளங்கும் இருப்புப் பாதை அமைப்புகளுடனும் மிக நெருக்கமாக பிணைக்கப்பட்டிருந்தது. இருப்புப்பாதை அமைப்புகளின்றி புதுப்பாணியில் அமைந்த தொழில்கள் வளர்ந்திருக்க முடியாது. அந்த இருப்புப்பாதைஅமைப்புகளும் நிலக்கரியின்றி இயங்கி இருக்கமுடியாது. வாரன்ஹேஸ்டிங்ஸ் இடமிருந்து நிலக்கரிக்காக நிலத்தைத் தோண்டுவதற்கான உரிமையைப் பெற்ற சோடா நாகபுரியின் பிரிட்டிஷ் மாஜிஸ்டிரேட்டுதான் நிலக்கரி வெட்டியெடுப்பதற்கான முதற்முயற்சியை மேற்கொண்டவர். அவ்வாறு எடுக்கப்பெற்ற நிலக்கரி தரக்குறைவாக இருந்தது. அதை வேண்டுமென்று கோரிப் பெறுபவர்களும் எண்ணிக்கையில் மிகச் சொற்பமாக இருந்தனர். மேலும் கப்பல் வழியாக வேற்றிடங்களுக்கு அதை அனுப்புவதே மேலானது என்று கிழக்கிந்தியக் கம்பெனியார் கருதினார்கள். 1814-இல் இராணிகஞ்சில் பயனளிக்கத் தக்க வகையில் ஒரு புது முயற்சி மேற்கொள்ளப்பட்டது. பெண்டிங்கு பிரபு அதற்குப் பெரிதும் உதவியாயிருந்தார். 1843-இல் பல சிறிய வாணிக நிலையங்களை ஒன்று சேர்த்து புகழ்பெற்ற வங்காள நிலக்கரி கம்பெனி உருவாக்கப்பெற்றது. 1846-இல் தோண்டப்பெற்ற நிலக்கரி அளவு 91000 டன்களாக இருந்தது. இருப்புப்பாதை அமைப்புகள் நிறுவப்பெற்றதால் நிலக்கரி அதிகளவில் தேவைப்பட்டது. மேலும் இருப்புப்பாதை நிறுவனங்கள் நிலக்கரியை கொண்டு செல்வதில் ஏற்பட்டத் தொல்லைகளை நீக்க உதவின. இருப்புப் பாதை நிறுவனங்கள் வளர்ச்சிப்பெற்றதால் அவைகளே தோண்

டப்பெற்ற நிலக்கரியின் அளவில் மூன்றில் ஒரு பகுதியை பயன்படுத்திக்கொண்டன. வங்காளம், பீகார், ஒரிசா ஆகிய இடங்களில் இருந்த நிலக்கரிக் களங்கள் சாதாரண தரமுள்ள நிலக்கரியைப் பெருமளவில் பெற்றிருப்பதாகக் கண்டுணர்ந்தார்கள்.[1] அப்பொழுதிலிருந்து முன்னேற்றம் தொடர்ந்து ஏற்பட்டது. 1868-இல் 5 இலட்சம் டன்கள் வெட்டியெடுக்கப்பெற்றன. 1880-இல் வெட்டியெடுக்கப்பெற்ற நிலக்கரியின் எடை பத்து இலட்ச டன்களைக் கடந்துவிட்டது. அது 1900-இல் அறுபது இலட்ச டன்களுக்கு மேற்பட்டதாகவும், 1912-இல் ஒரு கோடியே இருபது இலட்சமாகவும், 1917-இல் இரண்டு கோடியே பத்து இலட்சமாகவும் இருந்தது. 1938-இல் அது இரண்டு கோடியே எண்பது இலட்ச டன்களுக்கு மேலாக இருந்தது. கனரகத் தொழில் வளர்ச்சிக்கு இன்றியமையாதப் பொருள்களுள் ஒன்ருக நிலக்கரியைப் பொருத்தளவில் இந்தியா தன்னுடையத் தேவையைத்தானே நிறைவேற்றிக்கொள்ளத்தக்க நிலையைப் பெற்றது.

புதிய நிலக்கரி களங்களுடன் இணைந்து இரும்புத் தொழிலும், எஃகுத் தொழிலும் தோன்றின. வெகுநாள் முதற்கொண்டே உயர் தரமான இரும்பு உருக்கி எடுக்கப்பெற்றுவந்தது. ஐந்தாவது நூற்ருண்டில் ஏற்படுத்தப்பெற்றதாகக் கருதப்பெற்றுவரும் டில்லிக்கருகே நிறுவப்பெற்ற இரும்புத் தூண் இதற்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது. பத்தொன்பதாம் நூற்ருண்டின் தொடக்கத்தில் இரும்புத் தொழில் ஒன்றை தொடங்குவதற்காக முயற்சிகள் பல மேற்கொள்ளப் பெற்றன. ஆனால் அவையனைத்தும் தேவையான எரிபொருள் இல்லாமையாலும் அத்துறையில் போதிய அனுபவம் இல்லாமையாலும் தோல்வியுற்றன. 1875ஆம் ஆண்டு முதற்கொண்டு தான் இரும்புக் கனியை உருக்கி இரும்பைப் பிரித்தெடுப்பதற்காக நிலக்கரியை எரிபொருளாகப் பயன்படுத்தும் வகையில் முன்னேற்றம் ஏற்படலாயிற்று. அப்பொழுதுகூட தொழில் நுட்பம் துறைச்சார்ந்த இடர்ப்பாடுகள் சில நேரங்களில் அம் முன்னேற்றத்திற்கு உதவியும் சில நேரங்களில் அம் முன்னேற்றத்தை தடைசெய்தும் வந்தன. ஜாம்ஷெட் டாட்டா நாகபுரியில்தான் நிறுவிய எம்பிரஸ் ஆலையை நடத்தி வந்த பொழுது இரும்புத் தொழில் தொடங்குவதற்கு அமைந்திருந்த வாய்ப்புக்களைப் பற்றி அறிந்துகொண்டார். ஆகவே அவர் அத்தொழிலை ஏற்படுத்த தீவிர முயற்சிகள் மேற்கொண்டார். அதன் விளைவாக இரும்புத் தொழில் நிறுவப்பெற்றது. 1903-இல் கர்சன் பிரபு இடவகையில் கனிவள வாய்ப்பு ஆராய்தல், நிலத்தில் கனிகளைத் தோண்டி எடுத்தல் ஆகியவை

[1] D. H. Buchanan, Development of Capitalist Enterprise in India பக்கங்கள் 257-9 பார்க்க.

களைப்பற்றி ஏற்படுத்தப்பெற்றிருந்த விதி முறைகளை அத்தகைய பணிகளை மேற்கொள்ளுவோருக்குச் சாதகமாக அமையுமாறு விரிவாக்கினர். ஆனால் சில காலத்திற்கெல்லாம் டாட்டா இறந்துவிட்டார். அவருடைய பிள்ளைகள் 1907-இல் பீகாரில் டாட்டா இரும்பு எஃகுத் தொழிற்சாலையை நிறுவினர்கள். அத்தொழிற்சாலை அமைக்கப்பெற்ற இடத்திற்கு ஜாம்ஷெட்பூர் என்றப் பெயரை வழங்கினர்கள். 1911-இல் இரும்பு உற்பத்தி தொடங்கப்பெற்றது. 1913-இல் எஃகு உற்பத்தி துவக்கப்பெற்றது. நாம் கவனித்துவரும் காலப் பகுதி முடிவுறுவதற்குள் இந்தத் தொழிற்சாலை ஆண்டு தோறும் சுமார் பத்து இலட்சம் டன் இரும்பு உற்பத்தி செய்வதன் வாயிலாக உலகத்திலேயே தனி முழுமையான எஃகுத் தொழிற்சாலைகளுள் மிகப் பெரியதாக விளங்கியது. எஃகு உற்பத்தி நடைபெற்று வந்த நாடுகள் அடங்கிய பட்டியலில் இந்தியா ஆருவது இடம் பெற்றது. இந்திய மூலதனத்தின் துணைகொண்டு நிறுவப்பெற்ற இந்தியர்களின் துணிகர முயற்சிக்கும் செயல் திறத்திற்கும் சான்று கூறும் நினைவுச் சின்னமாக இந்திய எஃகுத் தொழில் விளங்குகிறது.

மேற்கூறிய இரு பெரிய தொழில்களை ஒட்டியோ அல்லது இணைந்தோ தொழிற்துறைச் சார்ந்த எண்ணிறந்த நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டிருந்தன. அவற்றுள் மிக முக்கியமானவை இரசாயனத் தொழில்களாகும். இரசாயனத் தொழில்களுள் முக்கியமானவை தொழிற்துறைச் சார்ந்த திராவகங்கள், சோடா காரங்கள் ஆகியவைகளைத் தயாரித்தல், நச்சுத்தடை மருந்து தயாரித்தல் போன்றவையாகும். இருப்புப்பாதை நிறுவனங்களை ஒட்டியே தொழிற் நுணுக்கத் துறை வளர்ச்சியுற்றது. அரிசி தயாரிக்கும் ஆலை, மாவரைக்கும் ஆலை, கம்பளி ஆடை, பட்டு ஆடை ஆகியவைகளைத் தயாரித்தல், சிமெண்டு தயாரித்தல் (1914ஆம் ஆண்டிலிருந்து) அரக்கு, காகிதம், தீப்பெட்டி ஆகியத் தொழில்கள், சர்க்கரை சுத்தம் செய்தல் போன்ற பல சில்லறைத் தொழில்கள் தோன்றின. 1933ஆம் ஆண்டிற்குள்ளாகவே இந்தியா சிமெண்டைப் பொருத்தளவில் தன்னுடையத் தேவைகளைத் தானே நிறைவேற்றிக் கொள்ளும் நிலையைப்பெற்றது. 1932-இல் காப்பு வரி விதிக்கப்பெற்றதன் விளைவாக சர்க்கரை சுத்தம் செய்யும் தொழிலில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் ஏற்பட்டது. 1860ஆம் ஆண்டு முதற்கொண்டு சதுப்பு உவர் நிலப் பகுதிகளில் ஏற்பட்டிருக்கும் உப்பளங்கழிகளையும், வாய்க்கால்களையும் நீர் கொண்டு நிரப்பும் வெள்ளப் பெருக்குப் போல, இந்தியாவில் ஏற்பட்ட தொழிற் பெருக்கம் இந்திய மக்களின் வாழ்க்கையை மலரச் செய்தது.

இனி எஞ்சியிருப்பவை தோட்டத் தொழில்களேயாகும். இவற்றுள் முதலாவது தேயிலைத் தோட்டத் தொழிலாகும். பதினெட்டாம் நூற்றாண்டில் கிழக்கிந்தியக் கம்பெனி தனக்குத் தேவையானத் தேயிலையை சீனாவிடமிருந்து தருவித்துக்கொண்டிருந்தது அதுவே அதற்கு இலாபம் தேடித்தரும் முக்கிய மூலப் பொருளாக இருந்தது. பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் தானாக வளர்ந்த தேயிலைச் செடிகள் அஸ்ஸாமில் வளர்ந்திருப்பதைக் கண்டார்கள். ஆனால் முதலில் அவைகள் உண்மையானத் தேயிலைச் செடிகள் தானா என்ற ஐயம் ஏற்பட்டது மேலும் அவை பெருமபயன் தரத்தக்கனவாகவும் கருதப்படவில்லை. ஆனால் அவை தேயிலைச் செடியினை இந்தியாவிலும் பயிரிடுவதற்கு வேண்டிய தட்ப வெப்ப நிலை இங்கு இருப்பதை உணர்த்திக் காட்டின. ஆதலால் வில்லியம் பெண்டிங்கு பிரபு 1834-இல் தேயிலை விதைகளையும் தோட்டத் தொழிலாளிகளையும் சீனாவிலிருந்து வரவழைப்பதற்கான முயற்சியை மேற்கொண்டார். அரசினருக்குச் சொந்தமானத் தேயிலைத் தோட்டமொன்று ஏற்படுத்தப்பெற்றது. 1839-இல் அஸ்ஸாம் தேயிலைக் கம்பெனி (Assam Tea Company)க்கு அத்தோட்டம் விற்கப்பட்டது. சீனாவினின்று கொண்டு வரப்பெறும் தேயிலைச் செடிகளைப் பயிரிடுவதற்கான நிலத்தைப் பெற இந்தியாவில் தானாக வளர்ந்திருந்த தேயிலைச் செடிகளை அப்புறப்படுத்தும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. அப்போது பல இடர்ப்பாடுகள் தோன்றின. அச்சமயத்தில்தான் இந்தியத் தேயிலையைச் சந்தைக்குக் கொண்டு சென்று விற்கும் எண்ணம் எழுந்தது. ஆதலால் இந்தியாவில் தானாக வளர்ந்திருந்த தேயிலைச் செடிகளை சீனத் தேயிலைச் செடிகளால் அழிக்க முடியாது போயிற்று. இந்தியத் தேயிலையைச் சந்தையில் விற்க மேற்கொண்ட முயற்சி வெற்றி பெற்றது. 1850ஆம் ஆண்டு முதற்கொண்டு இத்தொழில் விரைவில் வளர்ச்சியுற்றது. அஸ்ஸாம், வங்காளம், வடக்கிலுள்ள மலைச்சரிவுகள்,[1] தென்னிந்தியா ஆகிய இடங்களில் இப்பொழுது தேயிலை பயிரிடப்பட்டு வருகிறது. 1850ஆம் ஆண்டுவரை பிரிட்டன் தனக்குத் தேவையான தேயிலை முழுவதையும் சீனாவிலிருந்தே தருவித்துக்கொண்டிருந்தது. 1869-இல் சீனாவிலிருந்து 100 மிலியன் பவுண்டு தேயிலையும் இந்தியாவிலிருந்து 10 மிலியன் பவுண்டு தேயிலையும் அது தருவித்தது. 1900-இல் சீனாவிலிருந்து 24 மிலியன் பவுண்டு தேயிலையும், இந்தியாவிலிருந்து 137 மிலியன் தேயிலையும் பெற்றது.[2] இதிலிருந்து இந்தியத் தேயிலைத் தொழில் அடைந்த வளர்ச்சியை மதிப்பிட முடிகிறது.

1 டார்ஜிலிங், நைனிடால் ஆகிய இடங்களைச் சுற்றியும் காங்ரா பள்ளத்தாக்கிலும்

2 1929-1930-இல் 377 மிலியன் பவுண்டு தேயிலை இந்தியாவினின்றும் ஏற்றுமதி செய்யப்பட்டது.

தேயிலையுடன் ஒத்திட்டுப் பார்க்குமிடத்து காபி தோட்டத் தொழில் அவ்வளவு சிறப்படைந்ததாகக் காணப்படவில்லை. காபிச் செடி பதினேழாம் நூற்றாண்டிலேயே இந்தியாவிற்குள் புகுத்தப்பட்டது. ஆனால் 1830 முதல் 1839 வரை இடைப்பட்ட ஆண்டுகளில்தான் தென்னிந்தியாவிலும், மைசூரிலும் காபிச் செடியை முறைப்படி பயிரிடும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. 1862 வரை அத்தொழில் வளர்ச்சியடைந்து வந்தது 1862-இல் இருந்து 1885 க்குள்ளாகவே துளை யிடும் வண்டு, செடிப் பேன் ஆகியவைகளின் தாக்குதலின் விளைவாக இத்தொழில் அழிவுற்றது. 1885ஆம் ஆண்டு முதற்கொண்டு இத்தொழில் முன்னிலையை அடையத் தொடங்கியது. ஆனால் இது வரை காபிச் செடிகளைப் பயிரிட்டு வந்த நிலத்தில், தேயிலைச் செடி சிங்கோனா மரம், இரப்பர் மரம் ஆகியவைகள் பயிரிடப்பட்டன. ஆயினும் இறுதியில் கூறப்பட்ட பயிர்த்தொழில்கள் போதிய அளவில் வளர்ச்சியுறவில்லை என்பதை இரண்டாவது உலகப் போர் எடுத்துக் காட்டியது. 1897ஆம் ஆண்டு வரை அவுரிச் செடி வளர்த்தல் முக்கிய மானத் தோட்டத் தொழிலாக இருந்துவந்தது. அவுரிச் செடி தோட்டம் தேயிலை, காபித் தோட்டங்களினின்றும் மாறு பட்ட வகையினைச் சேர்ந்தது என்பதை நாம் கருத்தில் கொள்ள வேண்டும். 1897-இல் ஜெர்மனியில் கிலெண்ணெயிலிருந்து தயாரிக்கப் பெற்றச் சாயப் பொருள்களுடன் அவுரிச் செடியினின்றும் தயாரிக்கப் பெற்ற நீலச் சாயப் பொருள் போட்டியிடவேண்டிய நிலை ஏற்பட்டது. அதன் விளைவாக அவுரிச் செடி தோட்டத் தொழில் வெகு விரைவாக அழிவுறத் தொடங்கியது.

இந்தியத் தொழில், வாணிகம் ஆகியவற்றின் வளர்ச்சிக்கு வேண்டிய மூலதனத்தைப் பெறுவது மிகப் பெரிய பிரச்சனையாக இருந்தது. நாம் முன்னரே குறிப்பிட்டுள்ளபடி 1850 வரை பிரிட்டிஷ் காரர்கள் தங்களுடைய மூலதனத்தை இந்தியத் தொழிலில் ஈடுபடுத்த விருப்பங்கொள்ளவில்லை. அவர்களுடைய மூலதனத்திற்கு பெருங் கேடு நேரலாம் என்று அவர்கள் கருதினார்கள். இந்தியத் தொழில் வளர்ச்சிக்கு ஆதரவாக விளங்கிய சூழ்நிலைமைகளைப் பற்றி அவர்கள் அதிகமாக அறிந்திருக்கவில்லை. மேலும் வேறிடங்களில் அவர்களுடைய மூலதனத்தை இடுவதால் அதிக இலாபம் ஏற்படும் என்று கருதினார்கள். இவையே அவர்கள் தங்களுடைய மூலதனத்தை இந்தியத் தொழிலில் ஈடுபடுத்தத் தயக்கம் கொண்டதன் காரணங்களாகும். 1813ஆம் ஆண்டிற்குப் பிறகு கிழக்கிந்தியக் கம்பெனியின் அலுவலர்கள் சேர்த்துவைத்த சேமிப்புத் தொகையே, 1813ஆம் ஆண்டிற்குப் பிறகு வாணிகத்துறை நிறுவனங்களின் (Agency houses) பயன்படும் மூலதனத்தின் (Working capital) பெரும் பகுதியாக இருந்து வந்தது.

ஆகவே அத்தகைய நிறுவனங்கள், முறிவடைந்த போது அவ்வலு வலர்கள் பல இன்னல்களுக்குள்ளானார்கள். அவ்வின்னல்களின் விளைவாக அவர்களிடம் எழுந்த புலம்பல் வெகு தெளிவாகவும் துன்பம் நிறைந்ததாகவும் காணப்பட்டது இந்தியர்கள் வேறுகாரணங்களுக்காக தங்களுடைய மூலதனத்தைப் புதியத் தொழில்களில் ஈடுபடுத்த விருப்பங்கொள்ளவில்லை. அப்பொழுது ஏற்பட்டிருந்த சூழ்நிலைமை களில் அவர்களுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை மாகாண தலைநகரங் களுக்கு வெளியே முதலீடு செய்யும் வழக்கம் இன்னும் வளர்ச்சியுற வில்லை. இருப்புப்பாதை நிறுவனங்கள் போன்ற 'துணைசெய்யும்' (Enabling) பணிகளின் வளர்ச்சிக்காக பெருமளவில் உற்பத்தியை மேற்கொள்ளும் தொழில்களில் முதலீடு செய்யும் வழக்கத்தை எவரும் அறிந்திருக்கவில்லை. அத்தகைய வழக்கத்தை மேற்கொள்ளுவதில் நல்ல இலாபம் கிடைக்குமோ கிடைக்காதோ என்று ஐயம் ஏற்பட்டி ருந்தது. ஆகவே ஐரோப்பியர்கள் தங்களுடைய மூலதனத்தை இந்தியத் தொழில்களில் ஈடுபடுத்தத் தொடங்கிய பொழுதுதான் தொழில் துறையில் (பெரிய முன்னேற்றங்கள்) ஏற்பட்டன. அவர் களுடைய மூலதனத்தை இந்தியத் தொழில்களில் ஈடுபடுத்த அவர்கள் முன்வந்ததற்கு சில காரணங்கள் உண்டு. இந்திய அரசினர் அவர் களுக்கு சில உறுதி மொழிகளை அளித்தனர். நிலக்கரி, சணல் போன்ற தொழில்களைப் பற்றி அவர்கள் ஏற்கனவே அறிந்திருந்தனர். அத்தகைய தொழில்களின் வளர்ச்சிக்காக தங்கள் மூலதனத்தை ஈடுபடுத்துவதற்கு தாங்களாகவே முன்வந்தனர். இந்தியர்களும் ஐரோப் பியர்களுடைய வழியைப் பின்பற்றி தங்களுடைய மூலதனத்தைத் தொழில்களில் ஈடுபடுத்தலாயினர். குறிப்பாக அவர்கள் நன்கு அறிந் திருந்த பருத்தி போன்றத் தொழில்களில் தங்களுடைய மூலதனத்தை ஈடு படுத்தினார்கள். மேற்கூறியவைகளை நம் கருத்திலே வைத்துக் கொண்டு இரும்பு, எஃகு போன்ற புதிய தொழில்களின் வளர்ச்சிக்காக இந்திய முதலாளிகளான டாட்டாக்கள் தங்களுடைய மூலதனத்தை இட்டு பெரும்வெற்றி அடைந்ததைப் பார்க்கும்போது அவர்களுடைய சாதனை மிகப் பெரியதாகத் தோன்றுகிறது. மேலும் இந்தியத் தொழிலதிபதிகள் மூலதனத்தைப் பற்றி கொண்டிருந்த கவலையைத் தணிப்பதாகவும் அது அமைந்திருந்தது. என்பதை இங்கு குறிப் பிடுதல் அவசியமாகும். இந்தியத் தொழில்களில் இடப்பட்டிருந்த மூலதனத்தின் பெரும் பகுதி பிரிட்டிஷ்காரர்களுடையதாகும். ஆனால் 1900ஆம் ஆண்டிலிருந்து இந்தியர்களுடைய மூலதனத்தின் பரிமாண மும் ஒரே சீராக வளர்ந்துக்கொண்டு வந்தது. 1931-32ஆம் ஆண்டில் அன்னிய நாடுகளில் பதிவு செய்யப்பெற்ற கம்பெனிகளின் மூலதனம் இந்தியாவில் பதிவு செய்யப்பெற்ற கம்பெனிகளின் மூலதனத்

தைப்போல் நான்கு மடங்காக இருந்தது.[1] ஆனால் இதை அப்பொழுது ஏற்பட்டிருந்த சூழ்நிலைமையைத் தக்க முறையில் எடுத்துக்காட்டுவதாகக் கொள்ளலாகாது. ஏனெனில் அப்புள்ளி விவரக் கணக்கில் பிரிட்டிஷ் கம்பெனிகளில் இந்தியர்கள் ஈடுபடுத்தியிருந்த மூலதனத்தையும், அரசாங்கத்தின் மூலதனத்தையும் சேர்த்துக்கொள்ளவில்லை. பொதுவாக நோக்குமிடத்து பருத்தித் தொழிலில் ஈடுபடுத்தப்பட்டிருந்த மூலதனம் இந்தியர்களுடையதாகவும், இரும்பு எஃகுத் தொழிலில் இடப்பட்டிருந்த மூலதனம் முழுவதும் இந்தியர்களுடையதாகவும், சணல் தொழிலில் போடப்பட்டிருந்த மூலதனம் பாதி இந்தியர்களுடையதாகவும், மற்றொரு பாதி பிரிட்டிஷ்காரர்களுடையதாகவும், நிலக்கரித் தொழில், தோட்டத் தொழில் ஆகியவற்றில் இடப்பட்ட மூலதனம் பெரும்பாலும் பிரிட்டிஷ்காரர்களுடையதாகவும் இரயில் பாதை அமைத்தல், நீர்ப்பாசன வசதிகளை ஏற்படுத்துதல் போன்ற பொதுப் பணிகளுக்காகப் பயன்படுத்தப் பெற்றிருந்த மூலதனம் பிரிட்டிஷ்காரர்களுடையதாகவும் இருந்தன. பருத்தி, எஃகுத் தொழில்களை பெரும்பாலும் இந்தியர்களே நடத்திவந்தனர். ஐரோப்பிய தொழில் நுட்ப நிபுணர்கள் பெருமளவில் அத்தொழில்களைச் சார்ந்த பதவிகளில் அமர்த்தப் பெற்றனர். சணல், நிலக்கரி, தோட்டத் தொழில் ஆகியவற்றை ஐரோப்பியர்களே நடத்தி வந்தனர். சணல் தொழில் ஸ்காட்லாந்து மக்களால் நடத்தப்பெற்று வந்தது. அத்தொழில்களுள் அரசினர் நடத்தி வந்த தொழில் துறைச்சார்ந்த நடவடிக்கைகளைத் தவிர ஏனைய தொழில்களில் இடப்பட்டிருந்த மூலதனத்தை கூட்டு பங்கு கம்பெனிகள் (Joint Stock Companies) நிருவாகப் பதிலாளி முறைகள் (Managing Agencies) ஆகியவற்றின் மூலமாக பயன்படுத்தி வந்தனர். நிருவாகப் பதிலாளிமுறை 1813ஆம் ஆண்டிற்குப் பிறகு ஏற்படுத்தப்பெற்றது. அவ்வாண்டில் அதுவரை கிழக்கிந்தியக் கம்பெனி ஏகபோக உரிமை கொண்டாடி நடத்திவந்த வியாபாரத்தை சொந்த சார்பில் வியாபாரம் செய்யும் வணிகர்கள் ஏற்றுக்கொண்டனர். பணம் படைத்த முதலாளிகளில் சிலர் தங்களுடைய முதல் பணத்தை ஏதேனும் ஒரு புதிய இந்தியத் தொழிலில் போட்டு இலாபம் அடைய எண்ணினார்கள். ஆனால் அவர்கள் இந்தியத் தொழில்களை நடத்துவதற்கு வேண்டிய அநுபவத்தினை போதிய அளவில் பெற்றிருக்கவில்லை. ஆகவே இந்தியாவிலே செயலாற்றி வரும் பதிலாட்களைக் கொண்டு அத்தொழிலை நடத்த திட்டமிட்டனர். அதன் விளைவாக தேயிலைத் தோட்டம், நிலக்கரி சுரங்கம், சணல் ஆலை போன்ற தொழில்களை நடத்துவதற்குத் தேவையான மூலதனம் பிரிட்டிஷ்

[1] V. ஆன்ஸ்டே, முன்னர் குறிப்பிடப்பட்ட நூலின் 110 பக்கம் பார்க்க.

முதலாளிகளிடமிருந்து திரட்டப்பெற்றது. ஆனால் அத்தொழில்களை நடத்தும் பொறுப்பு அந்தந்தத் தொழில் நிறுவப்பெற்ற இடத்திலே அமைக்கப்பெற்ற கம்பெனியினிடம் ஒப்படைக்கப்பட்டது. ஆகவே நிருவாகப் பதிலாளி முறை மூலதனத்தையும், அனுபவம், வட்டாரத்தைப் பற்றிய அறிவு ஆகியவற்றையும் ஒன்று சேர்க்கும் ஒரு இணைப்புக் கருவியாக அமைந்தது.

இந்திய நாட்டின் தொழில் வளர்ச்சிக்குப் பயன்படுத்தத்தக்க வழிகளில் தனிப்பட்ட மனிதர்கள் முதலீடு செய்வதற்கும், ஆக்க முறையான முயற்சி மேற்கொள்ளுவதற்கும் வழிகளை வகுத்துக் கொடுப்பதே 1914ஆம் ஆண்டு வரை இந்திய அரசினருடைய கொள்கையாக இருந்து வந்தது. கால்வாய் வெட்டுதல், இரயில் பாதை அமைத்தல் போன்ற பொது நலத்துறைகளில் முன்னேற்றத்திற்கான ஆக்க முயற்சியை அரசாங்கத்தினரே நேரடியாக மேற்கொண்டனர். ஆனால் பருத்தித் தொழிலைப் பொருத்தளவில் தனிப்பட்டவர்களுக்கு உதவி செய்யும் வகையில் அரசாங்கத்தினர் மேற்கொண்ட நடவடிக்கைகளுக்கும், நேரடி நடவடிக்கைகளுக்கும் இடையே இருந்த வேறுபாடு மறையத் தொடங்கியது. அரசினர் குறிப்பிட்ட திட்டங்களை நிறைவேற்றுவதற்காகத் தனிப்பட்டவர்களுக்கு ஊக்கமளிக்கும் கொள்கையைக் கைவிட்டு ஆக்கமுறையான நடவடிக்கைகளைத் தாங்களே மேற்கொள்ள ஆரம்பித்தனர். கர்சன் பிரபு காலத்தில் அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கையில் போக்கு வெகுத் தெளிவாக விளங்கியது. அவர் காலத்தில் விவசாயத் துறையொன்று டில்லியில் நிறுவப்பெற்றது. பூசா (Pusa) என்னுமிடத்தில் விவசாய ஆராய்ச்சி நிலையம் ஒன்றும் அமைக்கப்பெற்றது. தொழில், வாணிபம் ஆகியவற்றை கவனிக்கத் தனி துறையொன்று ஏற்படுத்தப்பெற்றது. அத்துறையைத் தலைமை தாங்கி நடத்தும் பொறுப்பு வைசிராயுடைய கவுன்சிலில் அங்கம் வகித்த ஆறுவது அமைச்சரிடம் ஒப்படைக்கப்பட்டது. முதலாவது உலகப் போர் அரசாங்கத்தினரை தொழில் முன்னேற்றத்திற்காக ஆக்கமுறையான நடவடிக்கைகளை தாங்களாகவே மேற்கொள்ளுமாறு மேலும் தூண்டிற்று. இவ்வாறாக தொழில் துறையில் அரசாங்கத்தினர் பெருமளவில் நேரடி நடவடிக்கைகளை மேற்கொள்ள ஆரம்பித்த காலத்தினை முதலாவது உலகப் போர் துவக்கி வைத்தது என்று கூறலாம். போர் நீடித்து நடைபெற்று வந்ததால், இந்தியாவில் ஆக்கப்பெற்ற பொருள்கள் அதிகளவில் தேவைப்பட்டன. ஆனால் அந்த அரிய வாய்ப்பை இந்தியா பயன்படுத்திக்கொள்ளத் தவறி விட்டது. அதற்கு இரு காரணங்களுண்டு. முதலில் வருங்காலத்தில் இந்தியத் தொழில்களுக்கு இருந்த நன்னிலை வாய்ப்பில் இந்தியத் தொழிலதிபர்களுக்கு ஐயமேற்பட்டிருந்தது.

இரண்டாவதாக திடுமென மேற்கொள்ளவேண்டிய தொழில் பெருக்கத்திற்கான துணை வளங்களை இந்தியா பெற்றிருக்கவில்லை. ஆகவே இந்தியர்கள் தங்கள் நாட்டின் தொழில் பெருக்கத்திற்கு முதல் நடவடிக்கைகளைக் கூட மேற்கொள்ளத் தயங்கிய நேரத்தில் ஜப்பான் அந்நிலையைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டு பெருத்த இலாபம் அடைந்தது. இத்தகைய நிலைமையின் விளைவாகவும், இலண்டனில் இயங்கிவந்த அரசினருடைய செல்வாக்கு வலிமையின் விளைவாகவும் 1916-இல் தொழில் ஆய்வுக்குழு (Industrial Commission) ஒன்று அமைக்கப்பட்டது. அக்குழு இந்தியா தனக்குப் போர்க்காலத்தில் கிடைத்த வாய்ப்பினைத் தவற விடுவதற்குக் காரணமாக அமைந்திருந்த சீரற்ற தொழில் பெருக்கத்தைக் கண்டித்தது. மாகாண அரசுகளில் அமைக்கப்பெற்ற தொழில்துறை வாயிலாக அரசாங்கத்தினர், தொழில் வளர்ச்சிக்கு வேண்டிய ஒத்துழைப்பை அளிக்கத் திட்டமிடப்பட்டது பல்வேறு தொழில்களுக்கு அரசாங்கத்தினர் தொழில் நுட்பம் சார்ந்த உதவியை அதிகளவில் அளிக்க வேண்டும் என்றும், தொழிற் பயிற்சிக்குரிய வாய்ப்பினை பெருக்கவேண்டும் என்றும் யோசனை கூறப்பட்டது. தொழில் துறையில் இந்தியா பிற நாடுகளின் உதவியை நோக்கி காத்திருக்கும் நிலையைப் போக்கும் நோக்கத்துடன் மைய அரசினர் 'பண்டங்கள் சேகரிப்பை கவனிக்கும் துறை' (Stores Department) யொன்றை ஏற்படுத்த வேண்டும் என்றும் யோசனை கூறப்பட்டது. அக்குழுவின் அறிக்கையில் காணப்பெற்ற யோசனைகளில் ஒரு பகுதியே நிறைவேற்றப்பெற்றது. ஆனால் பண்டங்கள் சேகரிப்புத் துறை, மாகாணத் தொழில் துறைகள் ஆகியவைகள் அமைக்கப் பட்டன. தொழில்களுக்கு தொழில் நுட்பம் சார்ந்த உதவியை அளிப்பதற்கான நடவடிக்கையும் ஓரளவு மேற்கொள்ளப்பெற்றது. குடியேற்ற நாட்டு வளத்தை தாய்நாடு பயன்படுத்தும் கொள்கையைச் சார்ந்த கட்டுப்பாடுகள், தனியார்களுக்கு வழங்கப்பட்டிருந்த பொருளியல் சம்பந்தமான சுதந்திரம் ஆகியவைகளை அடிப்படையாகக் கொண்டு உருவாகிய இந்தியப் பொருளியல் கருத்து மாறி பொருளியல் துறையில் தன் விருப்பப்படி செயலாற்றவல்ல நாடாக இந்தியா விளங்க வேண்டும் என்றக் கருத்து தோன்றுவதற்கு அந்த அறிக்கையும் அதனுடைய விளைவுகளும் வழி வகுத்தன. இதுவே அதனுடைய சிறப்புக்குக் காரணமாகும். உலகப்போரை அடுத்து தொழில்துறையில் முறையே ஒரு திடீர் வளர்ச்சியும், மந்தமும் ஏற்பட்டன. அவைகளை அடுத்து 1922-3-இல் இஞ்ச்கேப் செலவு குறைப்புக்கமிட்டி (Inchcape Retrenchment Committee) அமைக்கப் பெற்றது. உலகப்போர் புதிய அரசியல் நோக்குடன் கூடிய மான்ட் போர்டு சீர்திருத்தங்கள் ஏற்படவும் காரணமாக அமைந்தது. அரசியல்

விவகாரங்களில் தனியாட்சியுரிமைக் கருத்தும் பொருளாதாரத் துறையில் தன்னாட்சியுரிமைக் கருத்தும் ஒன்றோடொன்று இணைக்கப் பெற்றன. அவை இரண்டும் நம்மிடையே பரஸ்பரமான விளைவுகளை ஏற்படுத்தின. அவைகளுக்கிடையே ஏற்பட்ட விளைவெதிர் விளைவுகளின் பயனாக 1921-இல் இந்தியாவிற்கு நிதியைப் பொருத்தளவில் தன்னாட்சி வழங்க வேண்டும் என்றக் கொள்கை ஏற்றுக்கொள்ளப் பட்டது. அதைத் தொடர்ந்து அப்புதுக் கொள்கையை நிறைவேற்று வதற்காக நிதிக் கமிஷன் (Fiscal Commission) ஒன்று ஏற்படுத்தப் பட்டது. இந்தப் புதுக் கருத்துத் தோன்றியதன் விளைவாக முதலில் பருத்தியின் மேல் விதிக்கப்பட்டிருந்த உள்நாட்டு வரி தற்காலிகமாக நீக்கப்பெற்றது. பிறகு 1926-இல் அந்த வரி முழுமையாக நீக்கப் பட்டது. புதிய காப்புவரிக் கொள்கையும் நடைமுறைப்படுத்தப் பெற்றது. இக்கொள்கை முன்னர் குறிப்பிட்ட விளைவுகளை விட மேலானவை எனக் கருதலாம். சுங்க வரிகள் அரசாங்கத்தின் வருவாய்க் கெனவே விதிக்கப்பட்ட வரிகளாகக் கருதப்பெற்றன. அதன் பயனாக இந்திய நிதி எளிதில் கையாளத்தக்க புதிய நிலையைப் பெற்றது. மூலப் பொருள்கள், அரைகுறையான ஆக்கப் பொருள்கள் ஆகியவற்றின் மீது குறைந்த வரிகள் விதிக்கப்பட்டன. அதே நேரத்தில் நல்ல எதிர்காலமுடைய தொழில்கள் நிலைத்து நிற்க உதவி செய்வதற்கும், ஏற்கனவே நிலையாக நிறுவப் பெற்றிருந்தத் தொழில் களை அநியாயமான போட்டியினின்றும் காப்பாற்றவும் காப்புவரிகள் விதிக்க இப்பொழுது வழி ஏற்பட்டது. இத்தகைய நோக்கங்களுடன் கூடிய உள்நாட்டுத் தொழில் காப்புத் திட்டத்தை நிறைவேற்ற 1923-இல் காப்புவரி போர்டு (Tariff Board) ஒன்று நிறுவப்பெற்றது. அதனுடைய நடவடிக்கைகளின் விளைவாக இந்திய எஃகுத் தொழில் அந்நியர்களுடைய போட்டியை எளிதில் சமாளித்தது. மேலும் அவற்றின் வாயிலாக 1930ஆம் ஆண்டு தொடங்கிய தொழில் மந்தம் ஏற்படுத்திய நெருக்கடியை எஃகுத் தொழில் சமாளிக்கத்தக்க வழியை ஏற்படுத்தியது. பருத்தித் தொழிலும் ஜப்பானியர்களுடன் ஏற்பட்ட கடும் போட்டியினின்றும் காப்பாற்றப்பட்டது. சர்க்கரை சுத்தம் செய்தல் போன்ற புதிய தொழில்கள் நிலையாக நிறுவப்பெறு வதற்கும் காப்புவரி போர்டு துணை செய்தது. ஆகவே 1921ஆம் ஆண்டு முதல் இந்தியத் தொழில்கள் இந்தியப் பொருளியல் திட்டத் தின் மிகைப்படியான கூறுகளாகத் தோன்றாமல் அத்திட்டத்தின் இன்றியமையாதக் கூறுகளாக விளங்கலாயின. அது முதற் கொண்டு அத்தொழில்களை மிகக் கவனமாகப் பேணி வளர்ப்பதை இந்திய அரசினர் தங்களுடைய முதல் வேலை யாகக் கருதலாயினர்.

மேற்கூறிய முன்னேற்றங்களினால் ஏற்பட்ட விளைவுகளில் ஒன்று மக்கள் தொகைப் பெருக்கமாகும். இந்த விளைவினை அநேகர் கவனிக்கத் தவறி விட்டனர். அக்பர் ஆட்சி புரிந்தக் காலத்தில் இந்தியாவின் மக்கள் தொகை பத்துகோடி என்று மதிப்பிடப்பட்டது. அவுரங்கசீப் பட்டத்திற்கு வருவதற்குள்ளாகவே மக்கள் தொகை அதிகரித்திருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது ஆனால் 1701-இல் பஞ்சம், போர் ஆகியவைகளின் காரணமாக மக்கள் தொகை குறைய லாயிற்று. அரைகுறை மதிப்பீடுகளைக் கொண்டு 1800-இல் இந்தியா முழுவதிலும் பதிமூன்றுகோடி மக்கள் வாழ்ந்திருக்கக்கூடும். என்று கருதப்படுகிறது. 1872-இல் முதன் முறையாக நடத்தப்பெற்ற கணக்கெடுப்புப்படி இந்தியாவின் மக்கள் தொகை இருபதுகோடியே அறுபது இலட்சமாக இருந்தது. ஆனால் அந்த எண்ணிக்கை குறை மதிப்பீடு என்று நாம் கருதக்கூடும். 1901-இல் மக்கள் தொகை இருபத்திஒன்பதுகோடியே நாற்பது இலட்சமாகவும் 1921-இல் முப்பத் தொரு கோடியே எண்பது இலட்சமாகவும் 1941-இல் பர்மா நீங்கலாக 388 மிலியன்களாகவும் இருந்தது. பிரிட்டிஷ்காரர்கள் இந்தியமக்களுக்கு என்ன பயன் அளித்தார்கள்? முதலில் அம் மக்களுக்குத் தக்க பாதுகாப்பு அளித்தும், பஞ்சத்தை சமாளித்தும், நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்கி அவைகளின் வாயிலாக அவர்களுடைய வாழ்வு ஆதாரங்களைப் பெருக்கியும், சாவு வீதம் குறைந்து வருவதற்குக் காரணமான பொது சுகாதார வசதிகளைப் பெருக்குவதற்கான நடவடிக்கைகளை மேற்கொண்டும், நிலவரி திட்டத்தை வரையறுத்தும், வியாபாரம், தொழில் ஆகியவற்றைப் பெருக்கியும். இந்திய மக்கள் தொகை பெருகுவதற்கு பிரிட்டிஷ்காரர்கள் வழிவகை செய்தனர். அக்பர் காலத்தில் வாழ்ந்திருந்த சாதாரண மனிதன், உண்டு அனுபவித்திருந்த வாழ்வு ஆதாரங்களை விட அதிகமாக பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் வாழ்ந்திருந்த மக்கள் பெற்றிருந்தார்களா என்றப் பிரச்சனையைப் பற்றி பொருளியல் நிபுணர்களிடையே கருத்து வேறுபாடு இருந்து வருகிறது. புதிதாகத் தோற்றுவிக்கப்பெற்ற செல்வத்தின் பெரும் பகுதியை மக்கள் முன்னைவிட இப்பொழுது மேலான வாழ்க்கையை நடத்துவதற்குப் பயன்படுத்துவதற்குப் பதிலாக புதியதாகத் தோன்றிய மக்களின் இன்றியமையாதத்தேவைகளை நிறைவேற்றவே பயன்படுத்தப் பட்டது. புதிதாகத் தோன்றிய நடுத்தர வர்க்கத்தினரே மேற்கூறிய முன்னேற்றங்களின் பயனடைந்தவர்களுள் புதிதாகத் தோன்றிய நடுத்தர மக்களே முதலிடம் பெறுகிறார்கள். அவர்களுடைய செல்வ நிலையும் ஒழுக்க நிலையும் பெருமளவில் உயர்ந்தது. மொகலாயர்கள் காலத்தில் அவர்கள் பெற்றிருந்த நிலைக்கும், பிரிட்டிஷ்காரர்களின் ஆட்சியின் கீழ் அவர்கள் பெற்றிருந்த நிலைக்கும் யாதொரு இணைப்பும் இல்லையென்றேக் கூறலாம். ஆனால் இப்புதிய காலத்தில் ஏற்பட்

டிருந்த புதிய வசதிகளின் பயனை பொதுவாக எல்லோருமே பெற்றனர் எனலாம். மக்கள் வாணிபத்தின் பொருட்டோ, அல்லது மாநாடுகளில் கலந்து கொள்ளவோ மக்கள் ஓரிடத்திலிருந்து வேறோரிடத்திற்குச் செல்ல இரயில் வண்டிகள் உதவின. புனித யாத்திரை மேற்கொள்ளவும் துணை செய்தன மோட்டார் வண்டிகள் நாட்டுப்புறப் பகுதிகளிலும் மக்கள் போகவர வாய்ப்பு ஏற்படுத்தித் தந்தன. பொது மக்களின் ஆரோக்கியத்தைப் பாதுகாப்பதற்காக அரசாங்கம் மேற்கொண்ட நடவடிக்கைகள் மக்களுடைய ஆயுட்காலத்தை நீடிக்க வைத்தன. கல்வியைப் பெருக்குவதற்காக அரசினர் மேற்கொண்ட நடவடிக்கைகள் மக்களிடம் மனநிறைவை ஏற்படுத்தியது. புதிய பயிர் வகைகளும், தொழில்களும் அவர்களுடைய வாழ்க்கை மேம்பாடு அடைவதற்கான வாய்ப்புகளை ஏற்படுத்தித் தந்தன. பஞ்சத்தைப் பற்றிய பயம் அவர்களிடமிருந்து பெரும்பாலும் அகற்றப் பட்டு விட்டது. நோயைப் பற்றிய பயமும் குறைந்தது. நடுத்தர வர்க்கத்தினர்களுக்கு வாய்ப்பு வளம்பொருந்திய உலகம் ஒன்று ஏற்படுத்திக் கொடுக்கப்பட்டது. எல்லோரும் முன்பு இருந்ததை விட மன நிறைவான வாழ்க்கை நடத்த வழி வகை செய்து கொடுக்கப் பட்டது. 1920-க்கு முன்னர் நாட்டுப்புறங்களில் வசிக்கும் மக்களிடம் யாதொரு முன்னேற்றமும் விழிப்பும் ஏற்படவில்லை என்றாலும், அவர்களிடமும் கிளர்ச்சி சிறிதளவில் தோன்றலாயிற்று.

# 5. புதிய இந்தியா - மேல்நாட்டு கருத்துக்கள் இந்தியாவில் செல்வாக்குப் பெறுதல்

மேல்நாட்டு நாகரிகத்தின் அடிப்படைக் கருத்துகளுக்கேற்ப இந்தியாவில் பெரும் மாறுதல்களைப் புகுத்த வேண்டும் என்பதை விரும்பிய பிரிட்டிஷ் தீவிரவாதிகளுக்கும், இதுகாறும் இருக்கும் நிலை தொடர்ந்து நீடித்து வருவதை ஆதரிக்கும் பிற்போக்காளர்களுக்கும், ஓரிரு மாறுதல்களை படிப்படியாக புகுத்த வேண்டும் என்றக் கொள்கையை ஆதரிப்பவர்களுக்கும் இடையே ஏற்பட்டிருந்த சொற் போராட்டத்தைப் பற்றி முன்பே கவனித்துள்ளோம். அவர்களுள் முதலாவது வகையினர் பழக்க வழக்கங்களுள் பகுத்தறிவுக் கொவ்வாதன சிலவற்றை நீக்க முற்பட்டனர். சமயத்துறையிலும் மாற்றங்களை ஏற்படுத்த முனைந்தனர். அவ்விரு வகைகளிலும் நேர்மை, மெய்யறிவு, மனித இன நலக்கோட்பாடு ஆகிய அவர்களைச் செயலாற்றத் தூண்டிய கருத்துக்களாக விளங்கின. மக்கள் எழுச்சி ஏற்படுமோ என்ற அச்சம் இரண்டாவது வகையினர் மேற்கொண்ட கொள்கைக்குக் காரணமாக அமைந்தது. நேர்மை, மனித இன நலக்கோட்பாடு, மெய்யறிவு, அச்சம் ஆகிய அனைத்தும் ஒன்று சேர்ந்து மூன்றாவது வகையினரைத் தூண்டக் காரணமாக அமைந்தன. பகுத்தறிவிற்கும், கிறித்தவ பண்பு நலங்களுக்கும் ஒவ்வாத இந்து மத சம்பிரதாயத்தின் மூலத் தத்துவங்களைக் கண்டிப்பதில் இம் மூன்று வகையினரும் ஒன்றுபட்டிருந்தனர். ஆனால் அவர்களுடைய மூலாதாரமான கருத்துக்களும், அவர்கள் பிரச்சனைகளை அணுகித் தெளியும் மாறுபட்டிருந்தன. பிற்போக்காளர்களில் தீவிர நோக்குடையவர் தலையிடாக்கொள்கையை பரப்பலாயினர். ஏனெனில் அவர் மற்றவர்களை அவரவர் வழிகளில் விட்டுவிட வேண்டும் என்ற கருத்தில் நம்பிக்கைக் கொண்டிருந்தனர். அதனால் அவர்கள் அவற்றை ஏற்றுக் கொண்டார் என்று சொல்ல முடியாது. அவருடைய கருத்துப்போக்கு பிராமணக் கோட்பாட்டினுக்குரிய கருத்துப்போக்கினுக்கு நேர்மாறானதாகும். புதுக்கருத்துக்களைப் புகுத்த

வேண்டும் என்பதை ஆதரிப்பவர்கள் அப்பொழுது வெற்றி கண்டனர் என்று நாம் சொல்லலாம். ஏனெனில் மேற்கத்திய முற்போக்குக் கருத்துக்களுடன் இழைந்து அவர்கள் இயங்கி வந்தனர். புதுக் கருத்துக்கள் பார்லிமெண்டு அங்கத்தினர்கள், அமைச்சர்கள், கம்பெனி இயக்குநர்கள், கம்பெனியின் அலுவலர்கள் ஆகியோரின் வாயிலாக இந்தியாவிற்குள் புக தொடங்கின. எடுத்துக்காட்டாக, மௌன்ட் ஸ்டுவர்டு எல்பின்ஸ்டன் (Mount Stuart Elphinstone) மட்டுமே இங்கிலாந்தில் செயலாற்றி வந்த அதிகாரிகளின் கொள்கையினையும், கருத்தினையும் மாற்றியிருக்க முடியாது ஆனால் மாறுபட்டு கொண்டுவரும் கொள்கை, மனநிலை ஆகியவற்றின் பிரதிபலிப்பாகத் தோன்றினார். புது மாறுதல்களை உண்டுபண்ணுவதில் விருப்பங் கொண்டவர்கள் புரட்சி ஏற்படுமளவிற்கு திருத்தங்களை மேற்கொள்ள வில்லை. சாதாரண வணிகர்களாக வந்து நாடாளும் உரிமையைப் பெற்ற புதிய ஏகாதிபத்தியவாதிகள் தாங்கள் ஆட்சி செலுத்திவந்த பரந்த நாட்டினைப் பற்றி சிறிதளவே அறிந்திருந்தனர். ஆகவே அவர்கள் மிக எச்சரிக்கையுடன் நடந்து கொண்டனர் இந்திய மக்களைப் பற்றி அதிகமாகத் தெரிந்துகொண்ட போது, அவர்களி டையே காணப்பட்ட வேறுபாடுகள், உட் சிக்கல்கள் ஆகியவை களிடத்து பெரும் மதிப்பு ஏற்பட்டது. ஆகவே அவர்களுடைய முன்னேற்றத்தினை நோக்கமாகக் கொண்டு மாறுதல்களை புகுத்தும் போது மிகக் கவனமாக நடந்து கொள்ளலாயினர்.

1830 முதல் 1839 வரை மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள் கொள்கையில் கொண்டிருந்த பற்றுறுதியின் விளைவாகத் தோன்றியனவேயாகும். நற்பயன்களை விளைவிக்கும் என்ற திடமான நம்பிக்கையின் விளைவாக அந் நடவடிக்கைகள் மேலும் விரிவாக்கப்பெற்றன. அதே நேரத்தில், இங்கிலாந்தில் 'பெரும் சீர்திருத்த மசோதா தோற்றுவிக்கப்பெற்ற காலம்' நடைபெற்று வந்தது என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. அக்காலத்தில் முற்போக்காளர்கள் உலக வரலாற்றின் சிறப்பு மிக்கக் காலம் புதியதாகத் தொடங்கியதாகக் கருதினார்கள். அந் நூற்றாண்டின் எஞ்சிய காலம் முடியும் வரை அவ்வெண்ணம் மறையவே இல்லை. ஆனால் ஒரே சீரான முன்னேற்றங்கள் ஏற்படுத்தப்பெறவில்லை என்பதை நாம் கவனத்தில் வைக்கவேண்டும் சில நேரங்களில் தீவிர முன்னேற்றங்கள் ஏற்படுத்தப்பெற்றன. சில சமயத்தில் முன்னேற்றத்தில் அவர்கள் கொண்டிருந்த ஆர்வம் குறைந்து காணப்பட்டது. மேல்நாட்டு நாகரிகப் பண்பு மயமாக்கும் இயக்கம் இரண்டு கருத்துக்களை அடிப்படையாக் கொண்டிருந்தது. முதலாவதாக அது இந்தியாவிற்கு நன்மை பயக்கும் என்று கருதப்பட்டது. இரண்டாவதாக தற்கால உலக நாகரிகத்தின் ஒளி இந்தியாவின் மீது பட்ட

மாத்திரத்தில் அந் நாகரிகக் கருத்துக்களை இந்தியா உடனே ஏற்றுக் கொள்ளும் என்றும் கருதினார்கள். 1840 முதல் 1849 வரை அரசினருடைய கவனமெல்லாம் போர் புரிவதிலேயே செலுத்தப்பட்டிருந்தது. ஆனால் போர் நடைபெறாத காலத்தில் முன்னேற்றத்திற்கான நடவடிக்கைகள் தொடர்ந்து மேற்கொள்ளப்பட்டு வந்தன. டல்ஹௌசி பிரபுவின் காலத்தில் தீவிர முன்னேற்றத்தினை ஒட்டி நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. ஆனால் அவர் மேற்கொண்ட போர்கள் கைப்பற்றிய இடங்கள் ஆகியவை ஏற்படுத்தித் தந்த பெருமை நன்கு ஆராய்ந்து அறியும் திறனற்றவர்களை மலைக்கச் செய்து விட்டதால் அவர்கள் முன்னேற்ற நடவடிக்கைகளைக் கவனிக்கத் தவறி விட்டனர்.

1857ஆம் ஆண்டு நடைபெற்ற கலகம் மேற்கத்திய மயமாக்கும் பிரச்சனையை மீண்டும் வெளிப்படையான விவாதத்திற்குரியப் பொருளாக மாற்றியது. இந்தியா யாதொரு மாறுதலையும் ஏற்காது என்பதையும், அதனை திருத்தியமைக்க இயலாது என்பதையும் கலகம் மெய்ப்பித்து விட்டதாகப்பலர் கருதினார்கள். பஞ்சாப்வாதிகள் (Punjab School) போன்றவர்கள் மேற்கூறிய கருத்தை ஏற்றுக் கொண்டனர். என்றாலும் அறமுறையான கடமை, அருளிரக்கம் ஆகியவற்றைக் காரணங்காட்டி முன்னேற்ற நடவடிக்கைகளைத் தொடர்ந்து மேற்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தினார்கள். சீர்திருத்த நடவடிக்கைகள் மனத்திற்கு மகிழ்வளிக்கும் செயலாகக் கருதப்படுவதற்குப் பதிலாக வீரத்தோடு ஏற்றுக்கொள்ள வேண்டிய பெரும் பொறுப்பாகக் கருதப்பட்டது. வேறு பலர் கலகத்தை மாறுபட்டத் தன்மை வாய்ந்த இரண்டு காலப் பகுதிகளைப் பிரிக்கும் நிகழ்ச்சியாகக் கருதினார்கள். அவர்கள் கலகத்தினை பிற்போக்காளர்களின் கடுமையார்ந்த எதிர்ப்பின் விளைவாக ஏற்பட்ட நெருக்கடியாகக் கருதினார்கள். மேற்குறிப்பிடப்பட்ட மூன்றுவகைக் கருத்தினைக் கொண்டவர்களுள், இரண்டாவதாகக் குறிப்பிடப்பட்ட கருத்தினைக் கொண்டவர்களே செல்வாக்குப் பெற்றிருந்தனர். அவர்களுடைய கருத்திற்கேற்பவே அடுத்த இருபது ஆண்டுகளில் நடைமுறையிலிருந்த ஒழுக்கத் தத்துவங்கள், கருத்துப் போக்கு ஆகியவை மாற்றியமைக்கப் பெற்றன. அக் கருத்தினை எடுத்தியம்பியவர்களுள் மிகச் சிறந்தவர்கள் 'பஞ்சாப்வாதிகளே'யாவர். அவர்கள் இங்கிலாந்து மக்களின் பாராட்டிற்குரியவர்களாக இருந்தமையால் அவர்களது கருத்துக்கள் அநேகரால் ஏற்றுக்கொள்ளப்பட்டன. தன்னாட்சி முறை தன்னைத்தானே திருத்திக்கொள்ளும் முறையைச் சார்ந்திருந்தாலும் தன்னைத்தானே திருத்திக்கொள்ளும் இயக்கம் நிதானமாக நடைபெற்று வந்தாலும் தன்னாட்சி முறை வெகு காலத்திற்குப் பிறகுதான் ஏற்பட

விருந்தது. பிரிட்டிஷ்காரர்கள் நீண்ட காலத்திற்கு குத்தகை எடுத்திருந்த பொறுப்பாட்சியாளராக விளங்கினார்கள். மேல்நாட்டு முற்போக்குக் கருத்துக்களின் செல்வாக்குக் குறைந்துவிட்டதன் விளைவாக மேற்கத்திய மயமாக்கும் கொள்கையில் சில மாற்றங்கள் ஏற்பட்டன. பெண்டிங்கு பிரபு காலத்தில் ஒழுக்கத் தத்துவங்கள், சமயம் ஆகிய துறைகளிலே முக்கிய சீர்த்திருத்த நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பட்டன. சதியை ஒழித்தல், கல்வி முறையைப் பற்றிய புது கொள்கை வரையறுத்தல் போன்றவை குறிப்பிடத் தக்கனவாகும். அதற்குப் பின்னர்தான் நீர்ப்பாசனம் போன்ற பொருள்வகை சார்ந்த திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டன. டல்ஹௌசி ஒழுக்கத்தத்துவங்கள், பொருள்வகை ஆகிய இரு துறைகளிலும் முன்னேற்றம் விளைவிக்கிற நடவடிக்கைகளை மேற்கொண்டார். கல்வித்துறையில் புது ஊக்கத்தை உண்டாக்கினார். ஆட்சி முறையில் மேற்கத்திய முறைகளைக் கையாண்டார். பலதிறப்பட்ட பொதுப்பணிகளும் மேற்கொண்டார். 1857ஆம் ஆண்டு ஏற்பட்ட கலகத்திற்குப்பின் பொருள்வகையில் முன்னேற்றத்திற்குரிய நடவடிக்கைகளை மேற்கொள்ளுவதில்தான் அதிக கவனம் செலுத்தப்பெற்று வந்தது. கல்வி, ஒழுக்கத் தத்துவங்கள் ஆகிய துறைகளில் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வந்தது என்பது உண்மையேயென்றாலும், இந்திய சமூக அமைப்பில் தலையிடுவதற்கு விருப்பமின்றி இருந்தனர். பொருள்துறையில் வளமேற்படுவதற்காக மேற்கொண்ட நடவடிக்கைகள் வள ஆக்கம் நாடுகிற எண்ணத்தை நிறைவேற்றி வைத்ததுடன் மற்றொரு கிளர்ச்சி ஏற்படுமோ என்ற அச்சத்தை நீக்கிவிட்டன. அதே நேரத்தில் ஒழுக்கத் தத்துவங்களைச் சீர்த்திருத்த வேண்டும் என்று கருதியவர்களின் மனத்திற்கும் ஆறுதல் அளித்தன. இரயில்பாதை நிறுவனங்கள் பெருகியதால் புது வாய்ப்பு வளங்களுடன் தொடர்புகள் ஏற்பட்டன. அதனால் புதிய செல்வ ஆதாரங்கள் உண்டாக்குவதற்கான வாய்ப்பு ஏற்பட்டது. அத்தகைய வாய்ப்பு அரசாங்கத்தினரின் பொருள்வகை முன்னேற்ற நடவடிக்கைகளை மேற்கொள்ளும் கருத்துப்போக்கினை மேலும் ஊக்கிவிட்டது.

1880 முதல் 1889 வரை இந்தியாவில் ஒரு புதிய முற்போக்குக் கருத்துப்போக்கு செல்வாக்குப்பெற்றது. அது பிரிட்டனில் தோன்றியிருந்த சாம்பெர்லேயனுடைய தீவிரவாத உணர்ச்சியுடனும், கிளாட்சனுடைய கொள்கையின் பிற்கால வளர்ச்சிப் படியுடனும் இணைக்கப் பட்டிருந்தது. இந்தியர்களின் உள்ளக் கருத்தின்பால் மீண்டும் கவனம் செலுத்தப்பட்டது. மேற்கத்திய கருத்துக்கள் இந்திய மக்களின் உள்ளத்தினை தூண்டி விட்டதாக அவர்கள் கருதினார்கள். ஆனால் அவர்களுடைய கருத்துக்கு எதிர்ப்பு தெரிவித்தவர்கள்,

அத்தகைய இயக்கங்கள் இந்தியாவில் தோன்றி இருப்பதை நம்ப மறுத்தனர். இந்தியாவில் பணியாற்றிவந்த அதிகார வர்க்கத்தினர்கள் இந்தியாவில் மேல்நாட்டு கருத்துக்கள் பெற்றிருந்த செல்வாக்கை குறைவாக மதித்தார்கள். அப்படியிருந்தும் முற்போக்குக் கொள்கையினர் இந்தியர்களின் உள்ளக்கிடக்கைக்குப் பதிலளிக்கும் வகையில் மக்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்க முற்பட்டனர். 1885க்குப் பிறகு இந்திய இயக்கத்தின் வளர்ச்சியைப் பற்றி ஐயங்கொண்டவர்கள் பிரிட்டனில் எவருமிலர் என்றே கூறவேண்டும். இனி, வாத எதிர்வாதமனைத்தும் அவ்வியக்கத்தினுடைய பரவெல்லை, வேகம் ஆகியவற்றையேச் சார்ந்திருந்தன. 1900ஆம் ஆண்டிற்கு முன்னரே லிபரல் கட்சியைச் சார்ந்தவர் எல்லோரும் இந்திய இயக்கத்தின் உட்கருத்து நியாயமானது என்று கருதினார்கள். 1890ஆம் ஆண்டிற்குள்ளாகவே கன்சர்வேடிவ் கட்சியின் முக்கிய உறுப்பினர்கள் கிழக்கு நாடுகளைத் திருத்த முடியாதென்றக் கொள்கையினைக் கைவிட்டுவிட்டனர்.

1835ஆம் ஆண்டில் தொடங்கப்பெற்ற புதியக் கல்வி முறைச் சார்ந்தக் கொள்கையினைப் பற்றி முன்னரே கவனித்துள்ளோம். 19ஆம் நூற்றாண்டில் மேற்கொள்ளப்பட்ட பரந்த செயல் விளைவுகளையுடைய நடவடிக்கைகளுள் தலைசிறந்த நடவடிக்கையாக அதனைக் கருதலாம். அந் நடவடிக்கை மேற்கொள்ளப்படவில்லை என்றால் இன்று நாம் காணும் இந்திய நாடு ஏற்பட்டிராது என்று துணிந்து கூறலாம். 1840-இல் ஆக்லாண்டு பிரபு இந்தியாவில் மேல்நாட்டு நாகரிகப் பண்புகள் வளருவதைத் தடுக்கும் வகையில் கிழக்கு நாடுகளில் வழங்கி வந்த கல்வி முறைக்கு அரசாங்க ஆதரவினை மீண்டும் கொடுத்தார். அதே நேரத்தில் மேற்கத்திய கல்வி முறையினை அதிகாரப்பூர்வமான கல்வி முறையின் முக்கியக் கூறாக ஏற்படுத்தும் முயற்சியினை தடுத்து நிறுத்தவில்லை. புதிய கல்வி முறையில் பயிற்சி பெற்றவர்களை மட்டுமே அரசாங்க அலுவலர்களாக நியமிக்க வேண்டும் என்று கட்டளை பிறப்பிக்கப்பட்டது. அதன் விளைவாக புதிய கல்வி முறையில் பயிற்சி பெற பலர் முன் வந்தனர். இலக்கியம், அரசாங்க அலுவல், ஆகிய துறைகளில் ஈடுபட்டு இருந்த வர்க்கத்தினருக்கு முன்பு எவ்வாறு பாரசீக மொழிப் பயிற்சி அவசியமாக இருந்தது அதுபோல இப்பொழுது ஆங்கில மொழியறிவு இன்றியமையாததாக விளங்கிற்று. மேற்குறிப்பிட்ட இலக்கியப் புலமைப்படைத்த வகுப்பைச் சாராதவர்களும் அவ்வகுப்பில் சேர்ந்துகொள்ள ஆங்கில மொழி அறிவு உதவி செய்தது. 1854-இல் சர். சார்லஸ் உட் என்பவரால் தயாரிக்கப்பெற்று டல்ஹௌசி பிரபுவால் மிக்க ஆர்வத்துடன் நடைமுறைப்படுத்தப்பெற்ற கல்வி முறையைப் பற்றிய அறிக்கை (Dispatch) வரலாற்றின் அடுத்த சிறப்புக் கட்டமாக

அமைந்தது. 'ஐரோப்பியர்களிடம் காணப்படுகிற பொது அறிவினை இந்திய மக்களும் பெறுவதற்கான வாய்ப்பினை பெரிதளவில் ஏற்படுத்துவதற்கு நாங்கள் விரும்புகிறோம்' என்று அந்த அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருந்தது. அவ்வறிக்கையின் விளைவாக 1857-இல் கல்கத்தா, பம்பாய், சென்னை ஆகிய இடங்களில் பல்கலைக்கழகங்கள் நிறுவப்பெற்றன. இவையே இந்தியாவில் முதல் முதலில் நிறுவப் பெற்ற 146 பல்கலைக்கழகங்கள் ஆகும். இவைகள் அனைத்தும் இலண்டன் பல்கலைக்கழகத்தைப் போல தேர்வு நடத்தும் நிறுவனமாக விளங்கின. ஆனால் இலண்டன் பல்கலைக்கழகம் ஏற்படுத்தியிருந்த கல்வித் திட்டத்தில் காணப்பெற்ற தரங்கள் இந்தியாவில் ஏற்படுத்தப்பெற்ற திட்டத்தில் காணப்பெறவில்லை. கொடை உதவிமுறை (Grant-in-aid system) புகுத்தப்பட்டது. அதன் விளைவாக நாடு முழுவதும் தனியார் கல்லூரிகள் பல நிறுவப்பெற்றன. அக் கல்லூரிகளுக்கு உதவித்தொகை அளிக்கப்பட்டன. அதற்குப் பதிலாக அவை ஒரு குறிப்பிட்ட கல்வித் திட்டத்தை மேற்கொள்ள வற்புறுத்தப்பட்டன. பழைய காலத்தில் இருந்து வந்த கமிட்டிகளுக்குப் பதிலாக பொது கல்வித் துறைகள் அமைக்கப்பட்டன. அதன் விளைவாக கல்வி முறை பணித்துறை இசைவுடன் கூடியே நடைமுறைப் படுத்தப் பெற்றது. அதனால் அது மாறு நிலையை அடையலாயிற்று. ஆனால் கல்வித்துறையில் பெரும் வளர்ச்சியை ஏற்படுத்துவதற்காக மேற்கொள்ளப்படும் நடவடிக்கைகளை சரிவர முறைப்படுத்துவதற்கும் கட்டுப்படுத்துவதற்கும் அத்தகைய நிலை இன்றியமையாத வளர்ச்சிப் படியாக விளங்கியது. கல்வித்துறைகள் முன்பு பெற்றிருந்ததைவிட இப்பொழுது அதிகமான அளவில் பண வசதிகள் பெற்றிருந்தன. அவைகள் நடைமுறை ஒழுங்கு விதிகளை ஏற்படுத்த அதிகாரம் பெற்றிருந்தன. மேற்பார்வையாளர்களை அமர்த்தும் அதிகாரம் பெற்றிருந்தன. இறுதியில் கல்லூரிகள், பள்ளிகள் ஆகியவற்றிற்குத் தேவையான ஆசிரியர்களைப் பெறுவதற்கு கல்வித்துறை சார்ந்த சர்விசு (Educational Service) ஒன்று ஏற்படுத்தப்பெற்றது.

1857ஆம் ஆண்டு கலகம் ஏற்படுத்திய அதிர்ச்சியிலிருந்து விடுபட்ட சிறிது காலத்திற்கெல்லாம், மேற்குறிப்பிட்ட நடவடிக்கைகளின் விளைவாக உயர் கல்வித்துறையில் பெரும் வளர்ச்சி ஏற்பட்டது. முக்கியமான இடங்களில் அரசாங்கப் பள்ளிகளும் கல்லூரிகளும் நிறுவப்பெற்றன. அவை பிற பள்ளிகளுக்கும், கல்லூரிகளுக்கும் முன் மாதிரியாக அமையுமாறு ஏற்படுத்தப்பெற்றன. உதவித்தொகை வழங்கு முறை தனிப்பட்டவர்களைக் கல்வி நிறுவனங்களை ஏற்படுத்துமாறு ஊக்குவித்தது. பெரிய ஊர்களில் அரசாங்க கல்வி நிறுவனங்களுக்கு துணைபுரியும் வகையில் பல தனியார் கல்வி நிறுவனங்கள்

தோன்றின. அரசாங்கத்தினர் தங்களுடைய கல்வி நிறுவனங்களை ஏற்படுத்தத் தவறிய இடங்களிலும் தனியார் நிறுவனங்கள் அமைக்கப் பெற்றன. அதன் விளைவாக வெகு விரைவிலேயே இந்தியா முழுவதிலும் அரசாங்க கல்வி நிறுவனங்களும் தனியார் கல்வி நிறுவனங்களும் அமைக்கப்பட்டன. கல்வி முறையை இந்திய மக்கள் விரும்பும்படி செய்யவேண்டும் என்பதே அரசாங்கத்தின் முக்கிய நோக்கமாக இருந்தது. அந்நோக்கத்தை நிறைவேற்றுவதில் அரசாங்கத்தினர் வெற்றி கண்டனர் என்பது உண்மையேயாகும். ஆனால் அந்தக் கல்விப்பெருக்கத்துடன் சில பிரச்சனைகளும் தோன்றின. உயர்நிலைப் பள்ளிகள், கல்லூரிகள் ஆகியவைகளின் பால்தான் அரசாங்கத்தினருடைய கவனம் பெரிதளவில் செலுத்தப்பட்டிருந்தது. நாட்டுப் பேச்சு மொழியைப் போதிக்கும் தொடக்க நிலைப் பள்ளிகள் பின்தங்க ஆரம்பித்தன. 1865ஆம் ஆண்டு முதல் 1886ஆம் ஆண்டு வரை பள்ளி மாணவர்கள் எண்ணிக்கையும் பட்டப்படிப்பு மாணவர்கள் எண்ணிக்கையும் 314: 1 என்ற விகிதத்தில் இருந்தது. அதற்கு முன்னர் 390: 1 என்ற விகிதத்தில் இருந்தது. இதனின்றும் பள்ளி மாணவர்களின் எண்ணிக்கை குறைந்தும் உயர்கல்வி கற்கும் மாணவர்களின் எண்ணிக்கை அதிகரித்தும் வருவதையும் நாம் அறியலாம். பெண்கள், கல்வியில் பின்தங்கி இருந்தனர். அதற்கு இரு காரணங்களுண்டு. முதலில் பெண் கல்வியில் பொது மக்களுக்கு பற்று ஏற்படவில்லை. இரண்டாவதாக மரபுவழாதவர்களின் எதிர்ப்பு மிகப் பலமாக இருந்தது, மேல்நாட்டு கல்வி முறையை மக்கள் விரும்பும்படி செய்வதற்காக கல்வித் திட்டத்தின் தரம் குறைக்கப்பட்டது. ஏனெனில் உயர்தரமான கல்வித்திட்டம் இந்திய மக்களின் பெரும் பகுதியினருக்கு ஏற்றதாக இராமையால் அநேகர் கல்வி நிறுவனங்களுக்குச் செல்வதை நிறுத்திக்கொண்டனர். 1857-இல் 13 பேர்களுக்கு இருவர் தான் பட்டம் பெற்றனர். உயர் கல்வி பெறவிழைந்த 464 பேர்களில் 111 பேர்தான் உயர்கல்வி நிறுவனங்களில் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். பள்ளிக்கூடத்திலும், கல்லூரியிலும் போதிய அளவு பயிற்சிபெற்ற சாதாரண திறம்படைத்த ஒவ்வொரு மாணவனையும் பட்டத்திற்குரியவனாக்க வேண்டும் என்ற நோக்கத்திற்கு இத்தகைய உயர்தரமான பாடமுறை ஒவ்வாததாகக் காணப்பட்டது. ஆகவே தான் கல்வித்திட்டத்தின் தரத்தைக் குறைத்தனர். ஒருமுறை திட்டத் தரக்குறைப்பு ஏற்பட்ட பிறகு அதனைத் தடுத்து நிறுத்துவது மிகக் கடினமான செயலாகி விட்டது. ஏனெனில் இந்திய மக்களுக்கு ஏற்ற கல்வித்திட்டத் தரங்களை அளவிடுவதற்கான கருவி ஏதும் அப்பொழுது அவர்களுக்கு கிடைக்கவில்லை. அவர்களுக்குத் தெரிந்த திட்டம் இலண்டன் பல்கலைக்கழகம் ஏற்படுத்தியிருந்த திட்டமேயாகும். அதுவும்

கைவிடப்பட்ட பின்னர் அவர்கள் மேற்கொள்ளத்தக்க திட்டம் வேறெதுவும் கிடைக்கவில்லை. மேற்கத்திய கல்வி முறையை இந்திய மக்கள் விரும்பும்படி செய்வதற்காக கல்வித் திட்டத்தின் தரத்தை குறைத்தனர். இதனை ஆதரிக்கும் வகையில் பல வாதங்கள் தோன்றின. ஆனால் சாதாரணப் பட்டம் பெற்றவர்களுக்கும் தனிச் சிறப்புப் பட்டம் பெற்றவர்களுக்கும் இடையே வேறுபாடு குறித்துக் காட்டப்பட வில்லை. அதன் விளைவாக தரமான கல்வியை அநேகருக்கு வழங்கு வதற்குப் பதிலாக, கல்வி பெறுபவர்களின் எண்ணிக்கையை அதிகரிப்பதற்காக கல்வித் தரத்தைக் குறைத்து விட்டனர். உயர்தர மான மேல்நாட்டு கல்வி முறையின் பயிற்சி பெற பிரிட்டனுக்குச் செல்வது அவசியமாயிற்று. அதனால் இந்தியக் கல்வி முறை இரண்டாந்தரமான புகழைத்தான் பெறத் தொடங்கியது. ஆயினும் புதிய கல்வி முறை மேலை நாட்டவர்கள் பெற்றிருந்த அறிவை இந்தியாவில் பரப்ப வேண்டும் என்ற நோக்கத்தை நிறைவேற்றி விட்டது. ஆனால் மேல்நாட்டுக் கல்வி முறை புகுத்தப்படுவதால் ஏற்படும் நற்பலனான அறிவுசெறிந்த இனக் கொழுந்தை உண்டாக்கத் தவறியது. உண்மையான அறிவாற்றல் இருக்குமேயாயின் மோசமான திட்டங்கள் கூட நற்பலனை அளிக்கும் என்பதை கல்விமுறைச் சார்ந்த வரலாறு நல்லவேளையாக நமக்கு எடுத்துக்காட்டியுள்ளது. இந்தியா தானும் அந்த விதிக்கு விலக்கல்ல என்பதை நமக்கு மெய்பித்துக் காட்டிவிட்டது. பி. ஏ. பட்டம் பெறத் தவறியவர்களும் தட்டுத்தடுமாறி தேர்வு பெற்றவர்களும் பலர் இருந்த போதிலும், தனிச் சிறப்புப் பொருந்தியவர்கள் பலர் அவர்களுடனே சேர்ந்து தோன்றியிருந்தனர்.

புதிய கல்வி முறைக்கு ஆதாரமாக விளங்கிய புதிதாக அமைக்கப் பெற்ற கல்வித் துறையைச் சார்ந்த சர்விசு அரசாங்கத்தினரால் சரிவர நடத்தப்பெறவில்லை. அச் சர்விசில் சேர்ந்தோர்களுக்கு வழங்கப் பெற்ற ஊதியத் தொகை திறம்பெற்றவர்களை கவரத்தக்கனவாக இல்லை. மேலும் திறம்படைத்தவர்களைப்பெற்ற பொழுது, அவர்களைச் சரிவர பயன்படுத்தும் முறையை அரசாங்கத்தினர் அறிந்திருக்கவில்லை. எட்வின் ஆர்னல்டு போன்றோர்களின் வெற்றிகள் தற்செயலாய் நிகழ்ந்தனவேயன்றி திட்டமிட்டு அடையப்பெற்றனவல்ல. மேலும் அந்த சர்விசைச் சார்ந்தோர்கள் பணித்துறைக் கண்டிப்புடன் நடத்தப் பெற்று வந்தனர் அந்த சர்விசுக்காக செலவிடும் பொருளை குறைப்பதற் காக சாதாரண திறம்படைத்தவர்களையே நியமித்தனர். கல்வி முறையில் நல்ல மாற்றங்களை விரும்புவதைக் காட்டிலும், கல்வித் துறையின் நலத்தையே சமீப காலம் வரை பெரிதும் விரும்பி வந்தனர். வரலாற்றுப் பாடங்களைப் போதிப்பதைவிட்டு பௌதிகப் பாடங்களை



(1) பகதூர் ஷா.



(2) சையத் அகமது கான்.

போதிக்க அனுமதி கோருபவர்களையும், கல்வி பயிற்றுவிப்பதைவிட்டு பள்ளிக்கூடங்களை மேற்பார்வையிட அனுமதி கோருபவர்களையும் தான் கல்வித்துறையினர் பெரிதும் விரும்பினார்கள்.[1] இந்தோ-ஐரோப்பிய அறிஞர்கள் பெரும்பாலும் சர்வீசுகளைச் சார்ந்தவர்களாக இருந்தனரேயன்றி கல்வி புகட்டு முறையில் பயிற்சிபெற்ற வர்க்கத்தினைச் சார்ந்தவர்களாக இல்லை. எலியட், வில்லியம் இர்வின், வின்சென்ட் ஸ்மித் பிவெரெட்ஜ் அவர்களுள் தலைசிறந்தவர்களாவார்கள். அம்முறையில் காணப்பட்ட மற்றொரு குறையாதெனில் அது ஒழுக்கத் தத்துவத்தினை உட்பொருளாகக் கொண்டிருக்கவில்லை. மேலும் அது மாணவர்களுக்கு பல்கலைக்கழகத்துடன் நேரடித் தொடர்புகொள்ளு வதற்குரிய வாய்ப்பினையும் ஏற்படுத்தித் தரவில்லை. பல்கலைக்கழகங்கள் என்று கூறுமிடத்து நாம் என்ன எதிர்பார்க்கிறோமோ அது அவற்றினிடத்தில் காணப்படவில்லை. அவை பாடத் திட்டங்களை வகுப்பதற்காகவும், தேர்வுகள் நடத்துவதற்காகவும் ஏற்படுத்தப்பெற்ற நிறுவனங்களாகத் தோன்றின. அநேக மாணவர்கள் அந் நிறுவனங்களின் தலைமைச் செயலகங்களை நேரில் கண்டதேயில்லை. மேற்குறிப்பிட்ட குறைபாடுகள் பெரும்பாலான கல்லூரிகளிலும் காணப்பெற்றன. மிகுந்த பணம் பெறுவதற்காக பல கல்லூரிகளில் அளவுக்கு மீறிய மாணவர்களை ஒவ்வொரு வகுப்பிலும் சேர்த்துக் கொண்டனர். அவ்வகுப்புகளுக்கு உணர்ச்சியற்ற முறையில் ஒழுங்குமுறை தவறாமல் பாடங்கள் கற்றுக் கொடுக்கப்பட்டு வந்தன. ஆனால் மேற்குறிப்பிட்ட சில சமயப் பரப்பாளர்கள் நடத்தி வந்த கல்வி நிறுவனங்களில் ஏற்படவில்லை என்பதை இங்குக் குறிப்பிடுதல் அவசியமாகும். கும்பலாகக் கூடியிருக்கும் மாணவர்களுக்கு சொற்பொழிவாற்றிப் பாடங் கற்பிக்கும் முறை மாணவர்களை நேரில் சந்திக்காமலே எங்கோ இயங்கி வரும் நிறுவனத்தின் வாயிலாக தேர்வு நடத்தும் முறை ஏற்படுவதற்கு வழி செய்தது. அம் மாணவர்களுக்கு அளிக்கப்பட்ட பட்டம் அவர் பெற்ற சிறிதளவு அறிவினை அறிவிக்கும் வகையில்தான் அமைந்திருந்தது. அந்த சிறிதளவு அறிவும் பெரும்பாலும் பொருளுணரா மனப்பாடத்தின் விளைவாக பெறப்பட்டது ஆகும். அத்தகைய முறைகள் கையாளப்பட்டு வந்தபோதிலும், பெரும் விளைவுகள் ஏற்பட்டதை நாம் அறியும்போது உண்மையிலேயே வியப்படைகிறோம்.

ரிப்பன் பிரபு 1882-இல் ஹன்டர் கமிஷனை ஏற்படுத்தி அடுத்த பெரும் நடவடிக்கையினை மேற்கொண்டார். அந்தக் கமிஷன் கல்வித் துறையைச் சார்ந்த எல்லா விஷயங்களையும் பரிசீலனை செய்தது. நீக்கப்பட வேண்டிய குறைபாடுகளை எடுத்துக்காட்டி

[1] H. H. Dodwell, Sketch of the History of India, 1858-1918, P. 205.

அக்கமிஷன் நல்ல சேவையை செய்துள்ளது. தொடக்க நிலைக்கல்வி, பெண்கள் கல்வி ஆகியவற்றையும், விஞ்ஞானம், ஒழுக்கத்தத்துவங்கள் போதனை, ஆகியவற்றையும் ஊக்குவிக்க வேண்டும் என்று வலியுறுத்தியது. அக்கமிஷனின் அறிக்கையின் விளைவாக கல்வி முறையைச் சார்ந்த சர்விசு சீர்த்திருத்தியமைக்கப்பட்டது. இப்பொழுது அந்த சர்விசு மூன்று பிரிவுகளாக்கப்பட்டது. அவை அகில இந்திய கல்வித் துறைச் சார்ந்த சர்விசு, மாகாண சர்விசு, கீழ்ப்பணியாளர் சர்விசு என்பவையாகும். அகில இந்திய சர்விசு முன்னைவிட மேம்பட்ட வகையைச் சார்ந்த பிரிட்டிஷ் பட்டதாரிகளை இப்பொழுது கவரத் தொடங்கியது. மாகாண சர்விசில் இந்தியர்கள் பலர் நியமிக்கப்பட்டனர். அவர்களுடைய எண்ணிக்கை நாள்தோறும் அதிகரித்துக் கொண்டே வந்தது. புதியதாக நிறுவப்பெற்ற நகரசபைகள், மாவட்ட ஆட்சி சபைகள் ஆகியவைகளிடத்தில் தொடக்கநிலைக் கல்வியை அளிக்கும் பொறுப்பை விட்டுவைத்தால் அக் கல்விச் சீராக வளர்க்கமுடியும் என்று கருதினார்கள். ஆனால் நல்லெண்ணத்தோடு மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கை பெரியதொரு முன்னேற்றத்தை ஏற்படுத்தத் தவறிவிட்டது. அதற்கு இருகாரணங்களுண்டு முதலில் நகரசபைகளுக்கும், மாவட்ட ஆட்சி மன்றங்களுக்கும் அளிக்கப்பட்டிருந்த பணந் திரட்டு வகைமுறை வாய்ப்புகள் மிகக் குறைவாக இருந்தன. இரண்டாவதாக அச்செயல், ஒரு மதத்தில் சேராதவனிடம் அம்மதத்தின் கொள்கைகளைப் பரப்பும் பொறுப்பு விடப்பட்டால் எவ்வாறு இருக்குமோ அதைப்போல் இருந்தது. பொதுப் பணியாளர்களின் எதிர்ப்பின் விளைவாக ஒழுக்கத் தத்துவங்களைப் போதிப்பதற்கு மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் தோல்வியுற்றன. இலக்கியப் பாடங்களைக் கற்பதில் காட்டப்பெற்ற விருப்பம் விஞ்ஞானப் பாடங்களைப் பெரிதளவில் போதிக்க மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் வீலாடித்தன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் கல்வி முறையின் பொதுநிலை மேற்குறிப்பிட்டவாறு இருந்தது. தொடக்க நிலைக் கல்வியிலுக்கு செலவழிக்க வேண்டியத் தொகையினை உயர்நிலைக் கல்விக்கு செலவழித்திருந்தனர். அதாவது கல்வி ஒரு சிலருக்குத்தான் என்ற தொன்றுதொட்டுவரும் கருத்து பெரும்பாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது என்று கூறலாம். உயர்நிலைக் கல்வியும் தனிப் பிரிவுகளாக வகைப்படுத்தப்பெறவில்லை. அக்கல்வி மக்களுடைய ஆதரவைப் பெற்றது என்றாலும் அவ்வாதரவைப் பெறுவதற்காக அதனுடைய தரம் குறைக்கப்பட்டது. எனினும் கல்வித் துறை சார்ந்த சர்விசு செம்மையாக்கப்பெற்றது. சில பெரும் பிரச்சனைகளுக்குத் தீர்வு காணப்படவில்லை என்றாலும், அப் பிரச்னைகளின் நுணுக்க விவரங்களை நன்கு அறிந்திருந்தனர். அக் கல்வி முறையின் செயல் விளைவுகள் நாடு முழுவதிலுமுள்ள மக்களைப் பாதித்தது. ஒரு

பொதுவான மொழியையும், மேலைநாட்டு கருத்துக்களையும் மேல்நாட்டவர்கள் பெற்றிருந்த அறிவினையும் கொண்டிருந்த ஒரு புதிய வகுப்பு வெகு வேகமாக வளர்ச்சியுற்றது. அவ்வகுப்பு வளர்ச்சியுற்றதால் ஏற்பட்ட விளைவினைப்பற்றி அடுத்த அத்தியாயத்தில் கவனிப்போம். இதற்கிடையில், அக்கல்வித் திட்டம் முழுவதும் மாற்றியமைக்கப்பட சீர்திருத்தங்களில் நாட்டங்கொண்டு இருந்த கர்சன் பிரபுவின் வருகையை எதிர்நோக்கி அது இருந்தது என்று நாம் கூறலாம்.

1857ஆம் ஆண்டு கலகத்திற்குப் பிறகு இந்திய சமூக அமைப்பில் மாற்றங்கள் ஏற்படுத்த யாதொரு பெரு முயற்சியும் மேற்கொள்ளப்படவில்லை என்று கூறலாம். அத்துறையில் ஏற்படுத்தப்பெற்ற மாற்றங்கள் யாவும் பொதுமக்களின் இசைவுபெற்றே செய்யப்பட்டன.[1] புகுத்தப் பெற்ற மாற்றங்கள் யாவும் தொன்றுதொட்டு வந்த சமூக அமைப்புக்கு உதவியாக அமைந்திருந்த திருத்தங்களாகவே காணப்பெற்றன. மேலும் அம் மாற்றங்கள் சமூக அமைப்பில் யாதொரு விளைவினையும் உண்டாக்கவில்லை. அப்படி ஏதாவது விளைவு ஏற்பட்டிருந்தால் அது மறைமுகமான விளைவாகவே காணப்பட்டது. தல ஆட்சி முறையில் ஏற்படுத்தப்பட்ட முன்னேற்றங்கள் யாவும் மேற்குறிப்பிட்ட வகையினைச் சேர்ந்தது என்று கூறலாம். அநேக பகுதிகளிலுள்ள கிராமங்களில் சுய ஆட்சிமுறை தொடர்ந்து நீடித்து வந்தது. கிராமங்களில் அமையப்பெற்றிருந்த சமுதாயங்களை வைத்து பராமரிக்கும் வகையில் பல அருமையான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன என்றும், அம் முயற்சிகள் பலதரப்பட்ட வெற்றிகளைத் தேடித்தந்தன என்றும் நாம் முன்னரே குறிப்பிட்டுள்ளோம். ஆனால் நகர்ப்புறங்களில் சுயஆட்சி முறையை ஏற்படுத்தி இருந்தனர் என்பதற்கு யாதொரு அறிகுறியும் நாம் காண இயலாது. ஆனால் அவ்விடங்களில் அமைக்கப்பெற்றிருந்த வர்த்தகச் சங்கங்கள், சாதிக் குழுமங்கள், ஆகியவை அங்கும் கூட்டு வாழ்க்கை ஏற்பட்டிருந்தது என்பதைக் குறித்துக் காட்டுகின்றன. மேலும் அவை பெரும்பாலும் மக்களை ஒன்றுபடுத்தும் வகையில் விளைவுகளை ஏற்படுத்துவதற்குப் பதிலாக அவர்களிடையே வேற்றுமை வளரத்தக்க சூழ்நிலையை ஏற்படுத்திவிட்டன. பிரிட்டிஷ்காரர்கள் இந்தியாவில் ஏற்படுத்திய முதல் குடியேற்றப் பகுதிகளில் தல ஆட்சிமுறை ஏற்படுத்தப்பெற்றிருந்தது. ஆனால் வரி செலுத்திவந்த மக்களின் பிரதிநிதிகளைக் கொண்ட ஆட்சிமுறையாக விளங்கவில்லை. கம்பெனியால் நியமிக்கப்பெற்ற நகரத் தந்தைகளும், நகராட்சிமன்ற உறுப்பினர்களும் அங்கு செயலாற்றி வந்தனர். அவர்கள் நியாயம் வழங்கும்

[1] Cambridge History of India, Vol. 6, பக்கம் 394, பார்க்க.

அதிகாரங்களையும், மேன்மையும் பெற்றிருந்தார்கள் மாகாண தலைநகரங்கள் வெகு வேகமாக வளர்ச்சியுற்றதால் பல ஆட்சிமுறைச் சார்ந்த பிரச்சனைகள் எழுந்தன. அப்பிரச்சனைகள் பல நலமளிக்கிற வழிமுறைகள் ஏற்பட வழி வகுத்தன. 1870க்குப் பிறகுதான் உண்மையான பிரதிநிதித்துவக் கொள்கையின் அடிப்படையில் அமையப்பெற்ற முதல் நகரசபைகள் ஏற்படுத்தப்பெற்றன. 1872ஆம் ஆண்டில் பம்பாய் நகரசபையின் உறுப்பினர்களில் பாதிப்பேர் தல வரி செலுத்துபவர்களால் தேர்ந்தெடுக்கப்பெற்றனர். 1878-இல் கல்கத்தா வில் பம்பாய் முறையினை மாதிரியாகக்கொண்டு நகரசபை அமைத்தனர் சென்னையிலும் பிரதிநிதித்துவக் கோட்பாடு புகுத்தப்பெற்றது. இந்த நகரசபைகளே குறிப்பாக பம்பாய் நகரசபையே பிரிட்டிஷ் இந்திய அரசியல் திறத்தைப் பயிற்றுவிக்கும் உண்மையான பள்ளிகளாகத் திகழ்ந்தன.

டல்ஹௌசி பிரபுவினுடைய 1850ஆம் ஆண்டின் சட்டம் மற்ற நகரங்களிலும் சபைகளை அமைக்கவும், அச் சபைகள் மறைமுக வரிகளை விதிக்கவும், அனுமதி வழங்கியது. ஆனால் ஒரு சில நகரசபைகள் மட்டுமே நிறுவப்பெற்றன. மேயோ பிரபு கல்வி, சுகாதாரம் உள்ளூர் பொதுப்பணிகள் ஆகிய துறைகளில் அச் சபைகள் பெற்றிருந்த அதிகாரங்களை விரிவுபடுத்தினார். ஆனால் தற்கால தல சுய ஆட்சி முறையினைத் தோற்றுவித்த பெருமை ரிப்பன் பிரபுவினைச் சார்ந்ததாகும். அவருடைய நடவடிக்கைகள் அவருக்கு முன்னர் மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகளைவிட விரிவானதாக இருந்தன. மேலும் அவைகள் மக்களாட்சிக் கருத்தைப் புகுத்தும் எண்ணத்துடன் மேற்கொள்ளப்பட்டவையாகும். ரிப்பன் பிரபு குறிப்பிட்டது போல், "அரசியல் விவகாரங்களிலும், பொது மக்களைச் சார்ந்த விவகாரங்களி லும் மக்களுககு நல்ல பயிற்சி அளிக்கவல்ல நடவடிக்கை என்ற முக்கியமான காரணத்தால் அவை அமையத் தகுந்தனவாக விளங்கின." அவர் நாட்டுப்புறப் பகுதிகளில் மாவட்ட ஆட்சி மன்றங்களையும், தாசில் அல்லது தாலுகா ஆட்சி மன்றங்களையும், நகரங்களில் நகரசபை களையும் அமைத்தார். அச்சபைகளின் உறுப்பினர்களுள் பாதி முதல் மூன்றில் இருபங்கு மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அரசுப் பணித்துறை சாராதவர்களே (Non-official) அச்சபைகளின் தலைவர் களாகத் தேர்ந்தெடுக்க அவற்றினுக்கு அதிகாரம் வழங்கப்பட்டது. அவை கல்வி, சுகாதாரம், உள்ளூரில் மேற்கொள்ளப்பட்ட பொதுப் பணிகள், மக்கள் நலவாழ்வு ஆகிய துறைகளில் நடவடிக்கை மேற்கொள்ள அதிகாரம் பெற்றிருந்தன. சுங்க வரி, சொத்து வரி, மேலும் இதர வரிகள் ஆகியவற்றை விதிப்பதற்கான நிதிபற்றிய அதிகாரத்தையும் பெற்றிருந்தன. இச்சபைகள் எல்லா காலத்திலும்

ஒரே சீரான நற்பேற்றினை பெற்றிருக்கவில்லை என்பதும் ஆட்சிமுறை பொருந்தளவில் பெருஞ் சாதனைகளைப் புரியவில்லை என்பதும் உண்மையே யென்றாலும் அவை மக்களுக்கு தக்க நிர்வாகப் பயிற்சி அளிக்கவேண்டும் என்ற நோக்கம் பெருமளவில் நிறைவேறியது. இந்தியர்களுக்கு அரசுப் பணியில் (சர்விசுகளில்) இடம் அளிப்பதில் ஏற்பட்ட முன்னேற்றத்தையும் மேற்குறிப்பிட்டுள்ள நடவடிக்கைகளுடன் இணைத்து கவனிப்பது அவசியமாகும். காரன்வாலிஸ் பிரபு மாதம் ரூபாய் 500க்கு மேற்பட்ட சம்பளம் பெறுமான பதவிகளனைத்தையும் கம்பெனியின் 'சிவில் சர்விசில்' சேர்ந்தவர்களுக்கே அளித்திருந்தார். அவருக்குப் பின்னர் கம்பெனி சிவில் சர்விசைச் சார்ந்தோர்கள் அனுபவித்து வந்த அந்த ஏகபோக உரிமை படிப்படியாக மட்டுப்படுத்தப்பட்டு வந்தது. பெண்டிங்கு பிரபு 'சாதர் அமீன்கள்' (Sader Amins) தலைமை சாதர் அமீன்கள் (Principal Sader Amins) என்ற பதவிகளை புதிதாக உண்டாக்கி மேலும் அந்த வகையில் முன்னேறிச் சென்றார். அதே நேரத்தில் 1833–இல் நிறைவேற்றப்பட்ட சாசனச் சட்டம் இனம், மதம் ஆகியவற்றைக் காரணம் காட்டி பதவிபெறும் உரிமையை எவரிடமிருந்தும் பறிக்கலாகாது என்று அறிவித்தது. கம்பெனியுடன் செய்துகொண்ட ஒப்பந்தத்தின் கீழ்ப் பதவி வகித்துள்ளவர்களடங்கிய சர்விசைச் சார்ந்த பதவிகளுக்கு ஆட்களை நியமனம் செய்வதற்குப் பதிலாக போட்டித் தேர்வு முறையை கையாள வேண்டும் என்று எண்ணமிட்டிருந்தனர். ஆனால் அதற்குப் பின் இருபது ஆண்டுகளுக்கு மேல் ஆட்களை அமர்த்துவதில் கம்பெனி டைரக்டர்கள் கையாண்டிருந்த ஏகபோக உரிமையினை அவர்கள் தொடர்ந்து அனுபவித்து வந்தனர். இந்தியாவில் தங்கியிருந்த பிரிட்டிஷ்காரர்களை மாஜிஸ்டிரேட்டுகள் இனம் என்று குறிப்பிடலாம். 'அரசாங்கத்தில் உயர்ந்த பதவிகளைப் பெற்றிருந்த அலுவலர்கள் அக்பர் காலத்தில் ஏற்படுத்தப் பெற்றிருந்த மன்சப்தார்களை விட மிக நெருக்கமாக இணைந்து ஒருவகையான சாதியினையே அமைத்து விட்டனர் என்றும் கூறலாம். அந்நிலை படிப்படியாக மாற்றப்பட்டு விட்டது. 1853ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட பட்டயச் சட்டம் ஒப்பந்தத்தின் கீழ்ப் பதவி வகித்துள்ளவர்களடங்கிய சர்விசைச் சார்ந்த பதவிகளை நிரப்ப போட்டித் தேர்வுமுறை கையாளப்பட வழி செய்தது. ஆனால் போட்டித் தேர்வு பிரிட்டனில் நடத்தப்பெற்றதால் இந்தியர்கள் பிரிட்டனுக்கு பிரயாணம் மேற்கொள்ளுவதுடன் அங்கேயே வெகு காலம் தங்க நேர்ந்தது. பெரும் பணக்காரர்களால் தான் அத்தகைய பிரயாணம் மேற்கொள்ள இயன்றது. அத்தகைய பணக்காரர்களின் எண்ணிக்கையோ மிகச் சொற்பமாக இருந்தது. மத சம்பந்தமான இடர்ப்பாடுகள் ஏதுமின்றி முஸ்லீம்கள்தான் பிரிட்டனுக்குச் செல்ல

முடிந்தது. ஆனால் அவர்கள் பின்தங்கியவர்களாகவும், ஏழைகளாக வும் இருந்தனர். இத்தகைய சூழ்நிலையில்தான் 1863ஆம் ஆண்டில் சத்தியேந்திரநாத்தாகூர் என்ற இந்தியர் முதன் முறையாக சர்விசில் இடம்பெற்றார். முதலாவது உலகப்போர் முடிவுற்ற காலம் வரையிலும் வெகு சில இந்தியர்களே சர்விசில் இடம்பெற்று பணியாற்றி வந்தனர். அஞ்சாமல் பேசுகிற திறன்படைத்தவரும், ஆய்ந்தமைந்த உணர் வில்லாதவருமான லிட்டன் பிரபு ஒருமுறை பின்வருமாறு குறிப்பிட் டிருந்தார். 'இந்திய மக்களுக்கு அளிக்கப்பட்ட வாக்குறுதிகளை ஒழுங்காக நிறைவேற்றத் தவறிவிட்டதை உண்மையென்று ஏற்றுக் கொள்ள வேண்டும்.' அவர் 1879-இல் சட்ட முறையான சிவில் சர்விசை ஏற்படுத்தி அக்குறைக்குப் பரிகாரம் தேடினார். அத்திட்டத் தின்படி சிவில் சர்விசைச் சார்ந்தவர்களுக்கென ஒதுக்கப்பட்டிருந்த பதவிகளில் ஆறில் ஒரு பங்கு மாகாண அரசாங்கத்தினரால் நியமனம் செய்யப்பெற்ற நபர்களைக்கொண்டு நிரப்பப்பெற்றன. கீழ்ப்படியான சர்விசுகள் கவரத்தவறிய நற்குடியைச் சார்ந்தவர்களையே நியமனம் செய்யவேண்டுமென்றும் ஏற்பாடு செய்யப்பட்டது. இவ்வாறாக பழைய நற்குடிமக்களை பிரிட்டிஷ்காரர்களுடன் கூட்டு சேருவதற்கு இணங்கவைக்க முடியும் என்ற நம்பிக்கையை லிட்டன் கொண்டிருந் தார். அந்த வகையில் அதனை வருங்கால கூர் நோக்குடன் அமையப் பெற்றக் கருத்து என்று கூறலாம். ஆனால் அரசாங்கப் பணிப் பொறுப்பை ஏற்பதற்கு பெருங் குடியாளர்களைவிட நடுத்தர வகுப்பினரே விருப்பங் கொண்டிருந்தனர். ஆகவே தேர்வின்றி சட்ட வாயிலாக நியமிக்கப்பெற்ற சிவில் சர்விசில் பணியிடங்களை நிரப்பு வதில் ஊக்கங் குறைந்தது. முடிவில் 1887-இல் இந்தவகை சிவில் சர்விசு ஒழிக்கப்பட்டது. அதற்குப் பதிலாக சிவில் அலுவலர்கள் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டனர். அவை பேரரசு சிவில் சர்விசு, மாகாண சிவில் சர்விசு, கீழ்ப்படியான சர்விசு என்பவையாகும். பேரரசு சர்விசைச் சார்ந்த பணியிடங்களை தேர்வு, நியமனம், பதவி உயர்வு ஆகிய வழிகளைக் கையாண்டு நிரப்பினார்கள். அந்த சர்விசைச் சார்ந்த இடங்களில் ஐந்தில் ஒரு பங்கு மாகாண சர்விசுகளைச் சார்ந்தோர்களுக்கு ஒதுக்கப்பெற்றன. அதே நேரத்தில் அக் காலத்தில் உயர்வகை சார்ந்த பணியிடங்களின் எண்ணிக்கை அதிகரிக்கப்பட்ட தால் இந்தியர்களுக்கு அளிக்கப்பட்டிருந்த வாய்ப்புகளும் அதிகமாயின. என்பதை இங்கு குறிப்பிடுதல் அவசியமாகும். இவை அனைத்தையும் ஒன்று சேர்த்து நோக்குமிடத்து அப்பொழுது ஏற்பட்டிருந்த நிலையைப் பற்றி லிட்டன் கொண்டிருந்த கருத்து சரியானதென்பதை யும் அதே நேரத்தில் அந்த நிலையை சீர்ப்படுத்த அவர் கையாண்ட முறையில் அவருக்கே முழு திருப்தி ஏற்பட்டிருக்கவில்லை என்பதையும் இங்கு குறிப்பிட வேண்டும் அரசாங்க அலுவல்களை நியமிப்பதில்

பிரிட்டிஷ் அரசாங்கத்தினர் தாங்கள் அளித்திருந்த வாக்குறுதிகளை போதிய அளவில் நிறைவேற்றத் தவறினர் என்பது உண்மையேயாகும். அதற்குக் காரணம் அவர்களுடைய கபடத் தன்மையோ அல்லது பகைமை எண்ணமோ அன்று 1800ஆம் ஆண்டு முதற்கொண்டு இந்தியாவில் பல தலைமுறையாக பிரிட்டிஷ் அலுவலர்களை உட்கொண்டிருந்த அதிகார நலக் கும்பல்களின் வலிமையேயாகும். அத்தகைய சீர்திருத்தங்களை முனைப்புடனும், ஆற்றலுடனும் எதிர்ப்பவர்கள் அவற்றினைத் தடுக்க இடைஞ்சல்களை உண்டாக்குவது நிச்சயமாகக் காணப்பட்ட அந்த நேரத்தில் அவற்றை வற்புறுத்தி பிரிட்டிஷ் மக்களின் வாக்குகளைப் பெறுவது கடினமாகத் தோன்றியது. ஆகவே முதலாவது உலகப்போர் ஏற்படும்வரை அப்பிரச்சனை ஒதுக்கி வைக்கப் பட்டது.

மேல்நாட்டு நாகரிகப் பண்புகளைப் புகுத்தத் தொடங்கப்பெற்ற இயக்கத்திற்கு இரண்டு அரசாங்க சார்பற்ற நிறுவனங்கள் துணையுதவி செய்தன. அவைகளைப் பற்றி இப்பொழுது கவனிப்போம். அவற்றுள் முதலாவது பத்திரிகை உலகம் ஆகும். இந்தியாவில் பிரசுரிக்கப்பட்ட முதல் செய்தித்தாள் வங்காள கெஜட்டாகும். (Bengal Gazettee) அது 1780-இல் வெளிவந்தது. ஜேம்ஸ் ஹிக்கி என்பவர் அதனுடைய பதிப்பாசிரியராகப் பணியாற்றினார் ஏற்படுத்தப்பெற்ற சில காலத்திற்குள்ளாகவே அது தனக்கு இழிப் பெயரைத் தேடிக்கொண்டது இரண்டாண்டு ஆரவார ஆர்ப்பாட்ட வாழ்விற்குப் பிறகு அதனை மூட வாரன்ஹேஸ்டிங்க்ஸ் உத்தரவிட்டார். அது முதற்கொண்டு பல பத்திரிகைகள் தொடர்ந்து வெளியிடப்பட்டு வந்தன. பத்திரிகைச் சுதந்திரம் பெறுவதற்காக அரசாங்கத்துடன் போராட்டம் துவங்கியது அப்போராட்டம் 1823-இல் முடிவுற்றது. அப்பொழுது நிறைவேற்றப் பட்ட ஜான் ஆதாமு (Adam) டைய சட்டவிதிகளின்படி ஒவ்வொரு அச்சிடுவோரும் செய்தித்தாள்களை வெளியிடு முன்னர் அரசாங்கத்தினரிடமிருந்து அனுமதி பெறவேண்டும் என்று அறிவிக்கப்பட்டது. ஹேஸ்டிங்ஸ் பிரபு ஏற்படுத்திய சட்ட விதிகளை மீறிய குற்றத்திற்காக ஜான் சில்க் பக்கிங்ஹாம் என்ற பதிப்பாசிரியர் வெளியேற்றப்படுவதற்கும் ஜான் ஆதாமே காரணமாகயிருந்தார். 1835-இல் மெட்காப் பத்திரிகை உலகத்தின் மீது சுமத்தப்பட்டிருந்த எல்லா தடைக் கட்டுகளையும் நீக்கினார். அதன் விளைவாக அவர் நிரந்தரமாக பதவியிலமர்த்தப்படக்கூடிய வாய்ப்பினை இழந்து விட்டார். 1878ஆம் ஆண்டு வரை பத்திரிகை உலகம் அந்த நிலையில் தொடர்ந்து இருந்து வந்தது. அவ்வாண்டில் லிட்டன் பிரபு நாட்டு மொழிப் பத்திரிகைச் சட்டம் ஒன்றை நிறைவேற்றினார். அச்சட்டம் நாட்டு மொழியில் வெளிவந்த பத்திரிகைகள் மீது மட்டுமே கட்டுப்பாடுகளை விதித்தது. அச்சட்டமும்

1882-ல் நீக்கப்பட்டது. தொடக்கத்தில் பத்திரிகைகள் பொறுப்பின்றி மனம்போன போக்கில் செய்திகளை வெளியிட்டு வந்தன. மேலும் அவைகளுடைய வெற்றிவாய்ப்பு நிலை அடிக்கடி மாறுபட்டு வந்தன. அப்படியிருந்தும் கூட நாளடைவில் அவை இந்திய மக்கள் வாழ்க்கை முறை சார்ந்த விவகாரங்களில் மிகுந்த செல்வாக்குப் பெறலாயின. முதலில் ஆங்கிலப் பத்திரிகைகள் பிரிட்டிஷ் வாசகர்களுக்காகவே வெளிவந்தன. அவ்வாசகர்கள் பெரும்பாலும் அரசாங்க அலுவலர்களாகவே யிருந்தனர். அப்பத்திரிகைகளில் வெளிவந்த அநேகக் கட்டுரைகள் பலவற்றை ஹென்றி லாரன்சு, எட்வர்ட்ஸ் போன்ற அரசாங்க அலுவலர்களால் புனை பெயரில் எழுதப்பெற்றன வாகும். அந்தப் பத்திரிகைகள் இந்திய அரசாங்கத்தின் கொள்கைகள் விவாதிக்கப்படும் கருத்து அரங்கமாக விளங்கின. நேபியர், டல்ஹௌசி போன்ற அரசியல் நிபுணர்களின் சிறப்புச் செயல்களையும், அவர்களுடைய தவறுகளையும் அப்பத்திரிகைகள் மனம்விட்டு எடுத்தியம்பின. வெகு விரைவிலேயே அவைகள் விரிந்த மனப்பான்மையை பெற்றுவிட்டன. செராம்பூரைச் சேர்ந்த மார்ஷ்மான் என்பவர் நடத்தி வந்த 'பிரண்ட் ஆப் இந்தியா' பத்திரிகை கிறித்தவ சமயம், சீர்திருத்தம் ஆகிய துறைகளைச் சார்ந்த விவரங்களை வெளியிட்டு வந்தது. நைட் என்பவரால் கல்கத்தாவில் நிறுவப்பெற்ற ஸ்டேட்ஸ்மேன் பம்பாயில் தோற்றுவிக்கப்பட்ட 'டைம்ஸ் ஆப் இந்தியா'[1] மற்ற பத்திரிகைகள் அனைத்தும் மக்களிடையே உலவுகிற பிரச்சனைகள் அன்றாட நிகழ்ச்சிகள் ஆகியவற்றைக் குறித்து பொறுப்பார்ந்த கருத்துக்களை வெளியிடும் சாதனங்களாக விளங்கி வந்தன. ஆங்கில மொழி அறிந்த இந்தியர்களின் எண்ணிக்கை பெருகிய பொழுது அப்பத்திரிகைகள் இந்தியர்களுடைய கருத்துப் போக்கினுக்கு உருவமைத்து கொடுக்க உதவும் முக்கியமான கருவிகளாகவும் விளங்கின. அவைகள் மேலைநாட்டுக் கருத்துக்கள் இந்தியாவில் செல்வாக்குப் பெறும் வகையில் தொண்டாற்றிய அரசாங்க சார்பு அற்ற நிறுவனங்களாக விளங்கின. அவை அரசாங்க சார்பற்று இருந்த காரணத்தாலேயே அவை மிக்க பயன் விளைவுடையனவாக இருந்தன. மேலும் அவை இந்தியர்களாலே நடத்தப்பட்டு வரும் பத்திரிகைகள் வளர்ச்சியடைவதற்கு பெரிதும் உதவி செய்தன. முதலில் இந்தியப் பத்திரிகைகள் உள்ளூர் மக்களால் பேசப்படும் மொழியிலே வெளிவந்தன. பிறகு ஆங்கில மொழியிலும் பத்திரிகைகள் வெளியாயின. பாரசீக மொழியிலே வெளிவந்த மீராத் உல் அக்பர்[2] (செய்திகளைப் பிரதிபலிக்கச் செய்கிற கண்ணாடி),

1 இது "பம்பாய் டைம்ஸ்" என்ற பெயரில் 1838-இல் தோற்றுவிக்கப்பெற்றது.
2 இவற்றுள் முதலாவது 1816-இல் வெளிவந்த "பெங்கால் சமாசார்" என்ற பத்திரிகையாக இருக்கக்கூடும்.

சம்பாத் காம்னுதி (அறிவு தரும் சந்திரன்) ஆகிய பத்திரிகைகளைத் தொடங்கிய ராம் மோகன் ராய் அவர்களை புறக்கணிக்க இயலாத இந்திய பத்திரிகைத் தொழிலுக்கு அடிகோலியவர் என்று குறிப்பிடுவது மிகையாகாது. கலகத்திற்குப் பிறகு சென்னையில் வெளியிடப் பட்ட 'இந்து', அலகாபாத்தில் வெளியிடப்பட்ட 'லீடர்' போன்ற ஆங்கிலப் பத்திரிகைகள் வெள்ளையர்களால் நடத்தப்பட்டுவந்த பத்திரிகைகளுக்கு ஈடாக இருந்தன. மேல்நாட்டுக் கருத்துக்களை ஏற்றுக்கொண்ட புதிய வகுப்பினர்கள் ஓய்வு நேரத்தில் அக்கருத்துக் களைப் பற்றி மேலும் அறிந்துகொள்ள அப்பத்திரிகைகள் உதவி செய்தன. இந்தியா, உலகம் ஆகியவைகளைப் பற்றிய பொது விவகாரங்களை அவர்களுக்கு எடுத்துரைக்கும் சாதனங்களாகவும் திகழ்ந்தன. 1880க்குப் பிறகு அரசியல் பற்றிய சொற் போராட்டம் ஏற்பட்டதன் விளைவாக பொது மக்களிடையே அவற்றினுக்கு இருந்த செல்வாக்கு அதிகமாயிற்று. அந்த அளவிற்கேற்றவாறு அரசியலுக்கு அடுத்தபடியாக வைத்து கருதப்பெற்ற நாகரிகம் சார்ந்த விவகாரங் களில் அப்பத்திரிகைகளுக்கு இருந்த செல்வாக்கு அதிகரித்தது. முழு வளர்ச்சி எய்தப்பெறாத இந்திய சமுதாயத்தைச் சார்ந்த மக்கள் இன்னும் தளராது படிக்கும் வழக்கத்தினை ஏற்படுத்திக் கொள்ள வில்லை. 1870ஆம் ஆண்டிற்கு முன்னர் அவர்கள் தங்களுக்குத் தேவையான புத்தகங்களை எளிதில் பெறும் வாய்ப்பினையும் பெற்றிருக்க வில்லை. அக்காலத்தில் கிடைக்கும் புத்தகங்களில் பலவற்றை வாங்கு வதற்கு வழியின்றி அவர்களுள் பலர் இருந்தனர். அத்தகைய காலத்திலே அத்தகைய மக்களுக்கு செய்தித்தாள்கள் அறிவு புகட்டும் கருவிகளாகவும் நாகரிகப் பண்புகளை எடுத்துரைக்கும் சாதனங்களாக வும் இருந்து ஒப்பற்ற பணியை ஆற்றிவந்தன.

இரண்டாவது வகையான அரசாங்க சார்பற்ற செல்வாக்குரிய வர்கள் கிறித்தவ மதப் பரப்பாளர்களாகும். (Mission) பதினாறும் நூற்றாண்டில் பிரான்ஸிஸ் ஸேவியர் காலம் முதற்கொண்டு கிறித்தவ மதப்பரப்பாளர்கள் இந்தியாவில் தங்களுடைய பணியை ஆற்றி வந்தனர். தென்னிந்தியாவில் தெ நோபிலி (De Nobili) போன்ற கத்தோலிக்கர்களுடைய முயற்சிகள் சில நாட்கள்தான் வெற்றி பெற்றன. பதினெட்டாம் நூற்றாண்டில் அம்முயற்சி தளர்ச்சியுற்றது.[1] பிராடஸ்டண்டுகள் சார்பிலும் ஒரு சில லூதரன் மதப் பிரிவைச் சார்ந்தவர்களே பணியாற்றி வந்தனர். அவர்களுள் தலை சிறந்தவர் ஸ்வார்ட்ஸ் என்பவராவார். கிறித்தவ மதப் பரப்பாளர்களுடைய நடவடிக்கைகளின் காரணமாக நாட்டு மக்களின் உள்ளுணர்ச்சிகள் பாதிக்கப்படுமோ என்ற அச்சங் கொண்டதால், கிழக்கிந்தியக்

[1] Abbe Dubois's, Christianity in India, 1818 என்ற நூலைப் பார்க்கவும்.

கம்பெனி தன்னுடைய ஆட்சிக்குட்பட்ட பகுதிகளில் அவர்கள் குடியிருப்பதற்கு அனுமதி வழங்க மறுத்துவிட்டது. ஆகவே பிரிட்டிஷ் பிராடஸ்டண்டுகளுள் கம்பெனியின் ஆட்சிக்குட்பட்ட பகுதிக்கு வெளியே தங்கினர். அவர்களுள் ஒருவர் செராம்பூரில் தங்கிய பாப்டிஸ்டு வில்லியம் காரி என்பவர். வேறுசிலர் கம்பெனியின் மதகுருமார்களாக பணியாற்றினர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் கல்கத்தாவைச் சார்ந்த டேவிட்பிரெளனும் கேம்பிரிட்ஜிலிருந்து வந்த ஹென்றிமார்டின் ஆகியோராவார். 1813-இல் கிறித்தவ சமயப் பரப்பாளர்கள் கம்பெனியின் ஆட்சிப் பகுதிக்குள் நுழைவதைத் தடுக்கும் கட்டளை நீக்கப்பெற்றது. அதே நேரத்தில் கல்கத்தாவில் கிறித்தவ சமய வட்டத் தலைவர் அமர்த்தப்பட்டார். பிறகு அங்கு மூன்று கிறித்தவ சமய வட்டத் தலைவர்கள் நியமிக்கப் பெற்றனர். கருணை வடிவமான பிஷப் ஹீபர் என்பவரும், துடிதுடிப்புடன் பணியாற்றிய டேனியல் வில்சன் என்பவரும் இந்தியாவில் கிறித்தவ மதத்திலுக்கு தனிச் சிறப்பையும், விறுவிறுப்பையும் உண்டாக்கித் தந்தனர். அது முதற் கொண்டு கிறித்தவ மதப் பரப்பாளர்களடங்கிய குழுமங்களின் எண்ணிக்கை பெருக ஆரம்பித்தது. நாளடைவில் பல அமெரிக்கர் களும், சில ஜெர்மானியர்களும் கிறித்தவ மதத்தைப் பரப்பும் நோக்கத் துடன் இந்தியாவிற்கு வந்தனர். வெகுவிரைவில் மதப் பிரசாரத்தைக் கைவிட்டு, கல்வியைப் பரப்பும் வேலையில் முனைந்து ஈடுபட்டனர். அந்த வகையில் அப்பொழுது ஆங்கில மொழியைக் கற்பதில் இந்தியர் கள் காட்டி வந்த ஆர்வம் அவர்களுக்குத் தக்க துணையுதவி புரிந்தது. பிரஸ்பிடீரியன் மதப் பிரிவைச் சார்ந்த அலெக்சாந்தர் டஃப் (Duff) என்பவர் அந்த வகையில் குறிப்பிடத்தக்க முதல் முயற்சியை மேற்கொண்டார். 1830–இல் அவர் கல்கத்தாவில் ஸ்காட்டிஷ் மத நிறுவனங்களின் சார்பில் ஒரு கல்லூரியை ஏற்படுத்தினார். அது முதற்கொண்டு கிறித்தவ மதப்பரப்பாளர்கள் கிராம மக்கள், சாதாரண மக்கள் ஆகியோரை மட்டுமன்றி, அறிவாற்றலுள்ள உயர்குடி மக்களை யும் கவரத்தொடங்கினார்கள். 1854ஆம் ஆண்டு முதற்கொண்டு உதவிக் கொடைமுறை, கல்வி முறையைச் சார்ந்த புதிய அரசாங்கக் கொள்கை ஆகியவற்றின் விளைவாக கிறித்தவ மதப் பரப்பாளர்கள் ஏற்படுத்தியிருந்த பள்ளிகள், கல்லூரிகள் ஆகியவற்றின் எண்ணிக்கை வெகு விரைவாக வளர்ச்சியுற்றது. அவ்வகைக் கல்வி நிறுவனங்களுள் தலைசிறந்தது சென்னை கிறித்தவக் கல்லூரியாகும். கிறித்தவ மதப் பரப்பாளர்கள் மற்றொரு வகையிலும் தாங்கள் மேற்கொண்ட பணியிலிருந்து விலகிச் சென்றனர். மருத்துவச் சாலைகள் ஏற்படுத்து தல், மருத்துவம் சார்ந்த வேலையில் ஈடுபடுதல், பஞ்ச நிவாரண வேலையில் ஈடுபடுதல், கிராம முன்னேற்றத்திற்குப் பாடுபடுதல் போன்ற சமூக நலப் பணிகளில் அவர்கள் ஈடுபடலாயினர். அவர்களுள்

பலர் பெண்ணினத்தைச் சார்ந்திருந்தனர் என்பதை நாம் இங்கு குறிப்பிடுதல் அவசியமாகும். பல்வேறு வேலைகளில் ஈடுபட்டிருந்த அப்பெண்கள் இந்தியப் பெண்கள் இயக்கத்தின் முன்னோடிகள் என்று குறிப்பிடுவது மிகையாகாது. 1930-இல் இந்தியக் கிறித்தவர் களின் எண்ணிக்கை மொத்த ஜனத்தொகையில் இரண்டு சதவீதமாக இருந்தது. அவர்களுடைய வளர்ச்சியைப் பற்றி நாம் இங்கு கவனிக்க வேண்டுவதில்லையென்றாலும் கிறித்தவர்களின் பொதுநலத் தொண்டுகளின் பயன் விளைவுகளைப் பற்றி நாம் ஆராய்வது அவசிய மாகும். காரிய சாத்தியமான கோணத்தில் பார்க்கும்போது கிறித்தவ சமயப் பரப்பாளர்கள் கிறித்தவ ஒழுக்கக் கோட்பாடுகளை மக்களுக்குப் போதித்து வந்ததையும் அறிவாற்றல் சார்ந்த கோணத்தில் பார்க்கும் போது அவர்கள் குறிப்பாகச் சுட்டிக்காட்டியே மிக்க விளைவுகளை ஏற்படுத்தி வந்தனர் என்பதையும் நாம் காண்கிறோம். அவர்களுள் பலர் கிறித்துவ மதக் கோட்பாடுகளை மேல்நாட்டு கருத்துக்களுடன் இணைத்தே போதித்து வந்தனர். ஆகவே அவர்கள் கிறித்துவ மதத்தை மட்டுமன்றி மேல்நாட்டு நாகரிகக் கருத்துக்களையும் பரப்பும் வகையில் தொண்டாற்றி வந்தனர் என்பதை நாம் பார்க்கிறோம். அவர்களுடைய நடத்தை, ஒழுக்கம், வாழ்க்கை முறை முதலியவற்றின் வாயிலாக மேற்கத்திய கருத்துக்களுக்கேற்ப பல மாறுதல்களைச் செய்தார்கள். மேற்கூறிய வழிகளிலும், வகைகளிலும் கிறித்தவ மதப் பரப்பாளர்கள் புதிய இந்தியாவின் வளர்ச்சிக்குப் பெரிதளவில் உதவி புரிந்தனர். அவர்கள் அளித்த உதவியின் அருமையை நாம் அளவிட முடியாது. அவர்கள் இருவகை விளைவுகள் ஏற்படக் காரணமாயிருந்தனர் என்பதை நாம் உணர வேண்டும். பழைய பழக்க வழக்கங்களைக் கண்டிக்க முற்பட்டு மறுப்புத் தெரிவிக்கிற மனப்பான்மையை வளர்த்தார்கள். பிறருக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் வகையில் நன்னெறியை தங்களுடைய சொந்த வாழ்க்கை யிலும் மற்றவர்களுடன் கூடி ஒரு முழு நிறுவனமாய் இயங்கும் போதும் கடைபிடித்து [illegible]க்க முறையான விளைவுகளையும் ஏற்படுத்தினார்கள்.

பெண்களுடைய இயக்கத்தைப் பொருத்தளவில் அவர்களுடைய செல்வாக்கு வலிமை மிகப்பயனுடைய விளைவுகளை உண்டாக்கின. பெண்களுக்குரிய நாகரிகப் பண்புகள், பொது விவகாரங்களில் அவர் களுக்கிருக்க வேண்டிய பங்கு ஆகியவற்றைப் பற்றியக் கருத்துக்கள் இந்தியாவில் வழிவழி மரபாக வந்து கொண்டிருந்தன. அக்கருத்துக்களைச் சார்ந்த செவிவழி வரலாற்றில் இதிகாச காலத்திய சீதை, திரௌபதி போன்றவர்களும், இரஜபுத்திர வீர மங்கையர்களும் மாளவத்தைச் சேர்ந்த ரூபமதி, இந்தோரைச் சேர்ந்த அகல்யாபாய்

போன்ற இளவரசிகளும் இடம்பெற்று இருந்தனர். ஆனால் 1800ஆம் ஆண்டிற்குள் பெண்களுக்குரிய நாகரிகம், பொது விவகாரங்களில் அவர்கள் கொண்டிருந்த பங்கு முதலியன அடியோடு மறைந்து விட்டது என்று கூறலாம். சமூகத்தில் பெண்களுக்கு அளிக்கப்பட வேண்டிய இடத்தைப் பற்றி இந்துக்கள் கொண்டிருந்த எண்ணத்தின் மட்டரகமான கருத்துக்களே இப்பொழுது ஆதிக்கம் பெற்றிருந்தன. தங்களுக்கு இழைக்கப்பெற்ற இன்னல்களைப் பொறுமையுடன் சகித்துக் கொள்ளுதல், அடக்கமாக இருத்தல் போன்ற தன்மைகளைத் தவிர இந்தியப் பெண்களுடைய நிலையில் பெருமைப்படுத்தி பேசத் தக்கவை வேறொன்றும் இல்லை என்று இந்திய சமுதாயத்துடன் தொடர்புகொண்ட அன்னியர்கள் கருதலாயினர். அதற்குமாறாக அவர்களுடைய நிலையில் குறை கூறத்தக்க பண்புக்கூறுகள் அநேகம் இருப்பதையும் அவர்கள் உணர்ந்தனர். உடன்கட்டை ஏறுதல், குழந்தைகளைக் கொல்லுதல், பெண்கள் வயதடையு முன்னம் மணம் செய்வித்தல், பெண்கள் முகத்திரை அணிதல், சமூக வாழ்வினின்றும் பெண்கள் விலகி இருத்தல், ஒரே நேரத்தில் பல மனைவிகளை மணம் செய்து கொள்ளும் வழக்கம், தேவதாசி முறை ஆகியவை அவர்களுடைய கண்டனத்திற்குள்ளாயின. இந்து விதைவைகளின் துன்பம் சூழ்ந்த வாழ்க்கையினையும் கண்டித்தனர். மேற்கூறப்பட்ட குறைபாடுகள் அனைத்தும் ஒரே காலத்தில் கண்டிக்கப்பெறவில்லை என்பதை நாம் இங்குக் குறிப்பிடுதல் அவசியமாகும். அக் குறைபாடுகளுள் முதலிரண்டும் முன்னரே விவரிக்கப்பட்டது போல் பொது ஒழுக்க முறையைச் சார்ந்த குறைபாடுகளாகக் கருதப்பெற்றன. ஆகவே அரசாங்கத்தினரே அவைகளை எதிர்த்து போராடினர். அவைகளைத் தடுக்க சட்டங்கள் இயற்றினார்கள். பிறகு அவற்றை தடுக்க தங்களுடைய செல்வாக்கு வலிமையைப் பயன்படுத்தும் முறையுடன் அறிவுறுத்தி இணங்கவைக்கும் முறையையும் கையாண்டனர். ஏனையவை பழக்கவழக்கங்கள் இந்தியா முழுவதற்கும் பொதுவானவை என்று கருதப் பெறுமையால் அவற்றைத் தடுக்க அரசாங்கம் சட்ட முறையான நடவடிக்கை மேற்கொள்ள மறுத்துவிட்டது. கிறித்தவ சமயப் பரப்பாளர்கள் அக் குறைபாடுகளை நீக்க பலவகையில் உதவி புரிந்தனர். அவர்கள் அக் குறைகளைக் கண்டித்துப் பேசினார்கள். அன்றைய இந்திய மக்களுக்குப் புதியதாகத் தோன்றிய பெண்மையை பற்றியக் கருத்தை அவர்களுடைய முன்னிலையில் வைத்தார்கள். அந்தப் பெண்மையின் தன்மைகளை அக்காலத்தில் வாழ்ந்திருந்த மாதிரிப் பெண்களைக் கொண்டு விளக்கி வந்தார்கள். இவ்வாறாக அரசாங்கத்தினருடைய மறைமுக நடவடிக்கைகளுக்கு பயன்தரத்தக்க பின்னணி போல் அவர்களுடைய நடவடிக்கைகள் அமைந்திருந்தன. மகளிர் வசிக்கும் பகுதிகளிலும், கல்வித் துறையிலும் அவர்கள்

மேற்கொண்ட நடவடிக்கைகளின் மூலமாக மேற்குறிப்பிட்ட விளைவுகளை அவர்கள் ஏற்படுத்தினார்கள். புதியக் கருத்துக்கள் திரைமறைவில் வாழ்ந்துவரும் பெண்களிடையே இப்பொழுது பரவத் தொடங்கியது. 1830-இல் பெண்களுக்கென்றே அமைக்கப்பெற்ற பள்ளிகள் பஞ்சாபைத் தவிர வேறெங்கும் இல்லை என்று சொல்லலாம். 1820 முதல் 1829 வரை கல்கத்தாவில் பள்ளிக்கூடங்கள் தொடங்கப் பெற்றன என்றாலும், அவைகள் பெரும்பாலும் கீழ் வகுப்பைச் சார்ந்த பெண்களுடைய கல்விக்கென ஏற்படுத்தப்பெற்றவையாகவே இருந்தன. 1849-இல் நிறுவப்பெற்ற பெத்யூன் பள்ளி உயர்குடியைச் சார்ந்த பெண்களுக்கு கல்வி புகட்டும் பணியை மேற்கொள்ளத் தொடங்கியது. ஐந்து ஆண்டுகளுக்கு அப் பள்ளியை நடத்துவதற்காக டல்ஹௌசி பிரபு தன்னுடைய சொந்த பணத்திலிருந்து செலவழித்து வந்தார் அதன் பிறகு அது அரசாங்கத்தினர் நடத்திவரும் முதல் பெண்கள் கல்லூரியாக மாறியது. அதைத் தொடர்ந்து பெண்கள் மருத்துவ வேலையில் ஈடுபடலாயினர். நாளடைவில் கல்வி கற்பிக்கும் வேலையைவிட மருத்துவ வேலையே பெண்களை அதிகமாகக் கவர்ந்தது. 'மருத்துவர்களிடமும் மருத்துவ சாலைகளிடமும் மக்கள் கொண்டிருந்த நம்பிக்கை பள்ளிகளிடமும், பள்ளி ஆசிரியர்களிடமும் கொண்டிருந்த நம்பிக்கையைவிட மிகப் பரவலாக இருந்தது.' கல்வித் துறையில் பெண்கள் முன்னேற்றம் அடைந்த பிறகு தான் அவர்கள் மருத்துவத் துறையில் முன்னேற்றம் அடைந்தனர். 1874-இல் இந்தியாவை வந்தடைந்த க்ளாரா ஸ்வெயின் என்ற அமெரிக்கப் பெண்மணி தான் இந்தியாவில் பணியாற்றிய முதல் பெண் மருத்துவராவார். அவருக்கு அடுத்து அப்பணியில் ஈடுபட்டவர் 1880-இல் இந்தியாவிற்கு வந்த பானி பட்லர் (Fanny Butler) என்ற ஆங்கிலேய பெண்மணியாவார். அதன் பிறகு 1885-இல் டப்பரின் கோமாட்டியினுடைய நிதி தோற்றுவிக்கப்பட்டது. 1914-இல் பெண்களுக்கென தனி மருத்துவ சர்வீசு ஏற்படுத்தப்பெற்றது. 1916-இல் லேடி ஹார்டிஞ்சு மருத்துவக் கல்லூரி டில்லியில் நிறுவப்பெற்றது. பெண்கள் கல்லூரிகளையும் மருத்துவச் சாலைகளையும் அமைப்பதில் கிறித்தவ சமயப் பரப்பாளர்களே வழிகாட்டிகளாக விளங்கினார்கள். இந்திய நாடு சுதந்திரம் அடைவதற்கு முன்பு இந்தியாவில் அமைக்கப் பெற்றிருந்த நிறுவனங்களில் பாதி சமயப் பரப்பாளர்களால் ஏற்படுத்த பெற்றனவாகும்.

மற்றொரு வகையிலும் கிறித்தவ சமயப் பரப்பாளர்கள் பயன்தரத் தக்க விளைவுகளை உண்டாக்கி யிருந்தார்கள். அவர்கள் இந்திய மக்களுக்கு அறிவுறுத்தி வந்த கோட்பாடுகளின் பெரும்பகுதி நாள்தோறும் வளர்ச்சியுற்றுவரும் கிறித்தவ சமுதாயத்தினரால் கடைப்

பிடிக்கப்பெற்று வந்தது. கிறித்துவ சமுதாயத்தைச் சேர்ந்த பெண்களில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களின் எண்ணிக்கை ஏனைய சமுதாயங்களைச் சேர்ந்த பெண்களில் எழுதப்படிக்கத் தெரிந்தவர்களின் எண்ணிக்கையை விட அதிகமாக இருந்தது. பெண்களுக்கு என்று ஒதுக்கப்பட்டிருந்த வாழ்க்கைத் தொழில்களில் கிறித்தவப் பெண்களே நிரம்பியிருந்தனர். புதியக் கருத்துக்களைப் போதிப்பதுடன் நிறுத்திக் கொள்ளாமல் அவர்களுடைய கருத்துக்களுக்கு எடுத்துக்காட்டாக அமையும் வகையில் பலருடைய வாழ்க்கை முறையைத் திருத்தியமைத் திருந்தார்கள்.

மேலே குறிப்பிட்ட நடவடிக்கைகளின் விளைவாக, வழிவழியாக வெகுகாலம் வளர்ந்திருந்த அறியாமை, மனவருத்தம், நோய் ஆகியவற்றை எதிர்த்து நிற்கக்கூடும் என்ற நம்பிக்கையை இந்தியப் பெண்கள் பெறலாயினர். பெண்கள் சமூகத்தில் முக்கியமான இடம் பெறத் தகுதியும், தனித் தன்மையும் பெற்றவர்கள் என்றக் கருத்தும் தோன்றலாயிற்று. மேலும் ஆண் மக்களின் கருத்தையும் அவை கவரத் தொடங்கின. இதுவரை மக்கள் கவனிக்கத் தவறிய காரிய சாத்தியமான செயல்களை வெளிப்படுத்தின. இதுகாறும் உள்ள நிலையில் தேவையற்றதும் விரும்பத்தக்கதுமான பற்றினைத் தொடர்ந்து மேற்கொண்டிருப்பதை எதிர்க்கும் வகையில் மக்கள் உணர்ச்சிகளைத் தூண்டிவிட்டன இவ்வாறாக இந்திய சமூகத்தைச் சேர்ந்தவர்களிடை யிலேயே சீர்திருத்த இயக்கம் ஒன்று ஏற்பட்டது. நாளடைவில் சீர்திருத்தங்கள் மேற்கொள்ளும் முயற்சியில் அன்னியர்களைவிட இந்தியர்களே முந்திக் கொள்ளத் தொடங்கினார்கள். சீர்திருத்த வாதிகளுள் பலர் இந்து சம்பிரதாயத்தின் துணை நாடும் வகையில் செயலாற்றி வந்தனர். ஆனால் அவர்கள் காலத்தில் அன்னியர்கள் மேற்கொண்டு இருந்த பழக்கங்களே அவர்களுடைய எழுச்சிக்குக் காரணமாக அமைந்தன.

சதி, குழந்தைகளைக் கொல்லுதல் போன்ற தீய வழக்கங்களுக்கு எதிராக இராம் மோகன் ராய் என்பவர் மேற்கொண்ட போராட்டத்தை பற்றி ஏற்கனவே கவனித்துள்ளோம். அவ்விருவகைகளிலும் பொதுப் படையான ஒழுக்கத் தத்துவ அடிப்படையைக் காரணம்காட்டி அரசாங்கத்தினர் தலையிட்டிருந்தனர். அதன்பிறகு சீர்திருத்த நோக்கத்துடன் தொடங்கப்பெற்ற பிரம்மோ சமாஜம், புத்துயிர் அளிக்கும் நோக்கத்துடன் தொடங்கப்பெற்ற ஆரிய சமாஜம் போன்ற நிறுவனங்கள் பெண்களின் முன்னேற்ற இயக்கத்திற்கு மதச் சம்பந்த மான ஆதரவைத் தேடித் தந்தன. பிரம்மசமாஜ இயக்கத்தைச் சேர்ந்த கேஷப் சந்தர் சென் என்பவர் பெண் கல்வி, விதவை விவாகம்,

மதத்துறையில் பெண்களுக்கு சம உரிமை ஆகியவற்றை ஆதரித்தார். ஆரிய சமாஜத்தை சேர்ந்த தயானந்தர் வேதக் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு பெண் கல்வியை ஆதரித்துப் பேசினார். சமயப்பரப்பு பணி அமைப்போடு தொடர்பு கொண்ட உத்தியைக் கையாண்டு வந்த இராமகிருஷ்ண இயக்கம் பெண்களை ஆசிரியைகளாகவும், போதகர்களாகவும் பணியாற்ற ஊக்குவித்தது. விரிந்த மனப்பாங்குடைய பிரம்மஞான சங்கம் வெகு நாட்களாக இரண்டு சிறந்த பெண்மணிகளாலேயே நடத்தப்பெற்று வந்தது.

இந்த வழிகளில் இந்தியப் பெண்கள் இயக்கம் இந்திய சமூகத்தினரிடையே புகுத்தப்பெற்றது. 1860–இல் திருமண விவகாரத்தில் சட்டப்படி இணக்கம் தெரிவிக்கவல்ல வயது உயர்த்தப்படுவதற்கு காரணமாக அமைந்த முதற் சட்டத்தை இயற்றுவதற்கு பண்டித வித்யாசாகரர் உதவி புரிந்தார் வட மொழியிலே புலமைப் பெற்றவரும் கிறித்தவ மதத்தைச் சேர்ந்தவருமான பண்டித இராமாபாய் (1858–1922) என்பவர் தன்னுடைய இல்லத்தில் விதவைகளை வைத்துப் பராமரித்தார் பேராசிரியர் கார்வே பூனாவில் தான் நிறுவிய பெண்கள் பல்கலைக்கழகத்தை விரிவுபடுத்தினார். க. நடராசன் என்பவர் பம்பாயில் தன்னுடைய வேலையில் தொடர்ந்து ஈடுபட்டிருந்தார். சீதையையோ அல்லது மேரியையோ இப்பொழுது மக்கள் பின்பற்றத் தக்கப் பெண்களாகக் கருதவில்லை. வழி மரபாக வந்திருந்த ஐரோப்பிய மனித இன இயற் பண்பாய்வாளர்கள் உருவமைத்துக் கொடுத்திருந்த பெண்ணையை மக்கள் பின்பற்றத்தக்கப் பெண்ணாகக் கருதினார்கள். பெண்கள் தன்னுரிமையாகத் தனித் தன்மைமையைப் பெற்றவர்களாகவும், வீட்டு விவகாரங்களில் சரி சமமான பங்குடையவர்களாகவும், குடும்பத்தைப் பேணி வளர்க்கும் பொறுப்புள்ளவர்களாகவும், சமூக நாகரிகம், சமூகப்பண்பு ஆகியவற்றை உறுதியுடன் கடைபிடித்து வருபவர்களாகவும், பொது விவகாரங்களில் பங்குடையவர்களாகவும் விளங்க வேண்டும் என்றக் கருத்து வளரலாயிற்று. இந்தியாவில் வாழ்ந்திருந்த இரண்டு பெரும் சமுதாயங்களைச் சேர்ந்த முன்னேற்றமடைந்திருந்த வகுப்பினர்களால் அக்கருத்து ஏற்றுக் கொள்ளப்பட்டது. அவர்கள் அக்கருத்தினுக்கு மரபு வழியாக வந்திருந்த கருத்திற்கேற்றார்போல் உருவமைத்து கொடுப்பதற்குப் பதிலாக அப்புதிய கருத்தினுக்கு ஆதரவளிக்கத்தக்க ஆதாரங்களை திருமறை நூல்களில் தேடிப்பெற முற்பட்டனர்.

பெண் இனத்தைச் சார்ந்தோர்கள் தாங்கள் ஏற்றுக்கொண்ட புதிய கருத்துக்களை அரசியல் துறையிலும், ஏனைய துறைகளிலும் வெளிப்படுத்த முயற்சிக்கலாயினர். அவர்களுடைய இயக்கம் புதிய

இந்தியாவினுடைய அரசியல் கருந்துருவம் என்று கருதப்பெறும் இந்திய தேசிய காங்கிரஸுடன் தவிர்க்க முடியாத அளவில் இணைந்து நடைமுறைப்படுத்தப்பெற்றது. 1926ஆம் ஆண்டில் நிறுவப்பெற்ற அகில இந்திய பெண்கள் மகாநாடு விரைவாகவே அரசியல் பண்புச் சாயலைப்பெறத் தொடங்கியது. காங்கிரஸ் நிறுவனத்தின் அதிகார முத்திரைப் பெற்றிராத துணை நிறுவனமாக அது செயற்பட்டு வந்தது. ஆனால் அது தன்னுடைய முக்கியமான கொள்கையில் உண்மையானப் பற்றுடன் தொடர்ந்து செயற்பட்டு வந்தது. அது புது டில்லியில் லேடி இர்வின் கல்லூரி நிறுவுவதற்குத் துணைபுரிந்தது. மான்ட்போர்டு சீர்திருத்தங்கள் பெண்களுடைய அரசியல் சார்ந்த குறிக்கோள் நிறைவேறுவதற்கு துணை செய்தன. அவற்றின் பயனாக ஆண்களுக்கும் பெண்களுக்கும் ஒரே மாதிரியான நிபந்தனைகளின் பேரில் ஓட்டுரிமை வழங்கப்பட்டது.[1] சொந்துள்ளவர்களுக்கு ஓட்டுரிமை வழங்கப்பெற்ற தால் அவர்களுக்கு அளிக்கப்பெற்றிருந்த ஓட்டளிக்கும் அதிகாரம் வெகு குறைவாகவே இருந்தது. ஆயினும் பொது வாழ்க்கையில் பெண்களுக்குப் பங்களிக்கும் வகையில் ஏற்படுத்தப்பெற்ற உண்மையானத் தொடக்கத்தை அது குறிந்துக் காட்டுகிறது. 1930–1–இல் ஆரம்பிக்கப்பட்ட சாத்துவிக சட்டமறுப்பு இயக்கம் பெண்கள் இயக்கத்தை மேலும் ஊக்குவித்தது. அது ஏற்படுத்திய ஆர்வ எழுச்சியின் விளைவாக ஆயிரக்கணக்கான பெண்கள் தாங்கள் இதுகாறும் ஒதுங்கி வாழ்ந்திருந்த வழக்கத்தைக் கைவிட்டு தெருக்களில் சென்று ஆர்பாட்ட வகையைச் சேர்ந்த ஊர்வலங்களிலும் கள்ளுக்கடைகளுக்கு முன் நடத்தப்பெற்று வந்த மறியல்களிலும் கலந்து கொண்டனர். 1930 முதல் 1932ஆம் ஆண்டுவரை சுமார் 2000 பேர்களுக்கு மேல் அரசியல் காரணங்களுக்காக சிறைவாசம் மேற்கொண்டனர். நகர்ப்புறங்களில் அமைக்கப்பெற்றிருந்த இந்து சமுதாயம் அப்பொழுதிலிருந்து பல மாறுதல்களுக்குட்பட்டது. அதே சமயத்தில் சிறப்பு வாய்ந்த சில பாரதப் பெண்மணிகள் தாய்க் குலத்தின் குறிக்கோளுக்கு தனி மேம்பாடை ஏற்படுத்தித் தந்தனர். மேலும் அவர்கள் தங்களுடைய இனத்திற்கும் மேன்மையைத் தேடித் தந்தனர். அவர்களுள் தலைசிறந்தவர் தனித் தன்மை, கூரறிவு, சொல்வன்மை, இலக்கியப் புலமை ஆகியவற்றை ஒருங்கே பெற்றிருந்த சரோஜினி நாயுடு என்பவராவார். பிற்காலத்தில் இலட்சுமி பண்டிட் உலகப் புகழ்பெற்றார். பஞ்சாபில் பீகம்ஷா நாவாஜ் என்பவர் மொகலாய இளவரசிகள் பெற்றிருந்த புகழினை நினைவுபடுத்தும் வகையில் வாழ்ந்திருந்தார்.

[1] 1925–இல் வெளியிடப்பட்ட மட்டிமான் கமிட்டியின் அறிக்கையின் விளைவாக.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் அரசாங்கம் ஒழுக்க முறையைச் சார்ந்த துறைகளில் முன்னேற்றம் விளைவிக்கும் பணியை அரசாங்க சார்பற்ற நிறுவனங்களிடம் ஒப்படைத்துவிட்டு பொருள் வகை சார்ந்த துறைகளில் முன்னேற்றம் விளைவிப்பதற்கான நடவடிக்கைகளை மட்டும் மேற்கொள்ளத் தொடங்கியது. அக்காலத்தில் அநேகப் பொதுப்பணிகள் மேற்கொள்ளப்பட்டன. அரசாங்கப் பொதுப்பணித் துறையை ஏற்படுத்திய டல்ஹௌசி பிரபு நாடு பிடிப்பதில் காட்டிய ஆர்வத்தினையே பொதுப்பணி மேற்கொள்ளுவதிலும் காட்டினூர். பொதுப்பணிகளை மேற்கொண்ட காரணத்தால் லாரன்சு பிரபு காலத்தில் பற்றுக்குறை எற்பட்டது. அவர் ஆக்கவளமுள்ள பணிகளை மேற்கொள்ளுவதற்காக அரசாங்கம் கடன் வாங்கும் முறையை ஏற்படுத்தினூர். அவரைப் பின்தொடர்ந்தவர்கள் அம்முறையை ஒழுங்கு படுத்தினூர்கள். அதன் பின்னர் அது விரிவாக்கப்பெற்றது. அப்பணிகளுள் தலைசிறந்தது இரயில் பாதைகளை அமைத்தலேயாகும். 1857-இல் ஏற்படுத்தப்பெற்றிருந்த இரயில் பாதையின் நீளம் 200 மைல்களாகும் 1940-இல் அதன் நீளம் 10,000 மைல்களாக உயர்ந்தது. அதைப் பற்றி முந்திய அத்தியாத்தில் விரிவாக கவனித்துள்ளோம். மக்களுக்கு நலம் பயக்கும் நடவடிக்கைகள் என்று அவைகளைக் கருதுவதைவிட நலம் பயக்கும் நடவடிக்கைகளை மேற்கொள்ள வழிவகை செய்த நடவடிக்கைகள் என்று நாம் அவற்றைக் கருதலாம். இப்பொழுது பொருள்வகையில் நேரடி நலம் விளைவித்த இரண்டு பெரிய திட்டங்களைப் பற்றி குறிப்பிடுதல் அவசியமாகும். அவைகளுள் முதலாவது நீர்ப்பாசனத் திட்டமாகும். நீர்ப்பாசனம் இந்தியாவில் தொன்று தொட்டு வந்த கலையாகும். முதல் முதலில் இந்தியாவிற்கு வந்த பிரிட்டிஷ்காரர்கள் தென்னிந்தியாவில் ஆண்டு வந்திருந்த அரசர்கள் கட்டுவித்த ஏரிகள் அழிவுற்ற நிலையில் இருப்பதைக் கண்ணுற்றனர். அவைகளுள் பல இன்னும் பயன்படுத்தத்தக்க நிலையில் இருந்தன.[1] பிரோஷ்ஷா துக்ளக் ஹிஸ்ஸார் வரை ஒரு கால்வாயை வெட்டினூர். ஷாஜஹான் அதனைச் செப்பனிட்டதோடு நில்லாமல் டில்லிவரை விரிவுபடுத்தினூர். சீக்கியர்கள் கூட ஒரு சில சிறு கால்வாய்களை வெட்டியிருந்தனர். ஹேஸ்டிங்ஸ் பிரபு பழைய நீர்ப்பாசன சாதனங்களைப் புதுப்பித்து அதன் வாயிலாக பொதுப்பணி வகையில் முதல் வளர்ச்சிப்படியைத் தொடங்கி வைத்தார். 1820-இல் டில்லிக்கு மீண்டும் கால்வாய் மூலமாகத் தண்ணீர் கொண்டுவரப் பெற்றது. அதைக் காண மக்கள் கண்ணைப்பறிக்கும் ஆடைகளை அணிந்து பெருந்திரளாகச் சென்றனர். அதன் பிறகு புதிய நீர்ப்பாசனத்

[1] 4000 ஏரிகள் சென்னையில் அப்பொழுது இருந்தனவாகவும், அதே எண்ணிக்கை ஏரிகள் மைசூரில் இருந்தனவாகவும் கணக்கிடப்பட்டது.

திட்டங்களை ஏற்படுத்த முற்பட்டனர். தண்ணீர் பெருமளவில் கிடைக்கும் இடங்களில் அத்திட்டங்கள் முதலில் மேற்கொள்ளப் பட்டன. அதன் பயனாக சிறிதளவே பயிரிடப்பட்டு வந்த விளைநிலங் கள் இப்பொழுது பெரும் பயனை ந்தரத் தொடங்கின. மழையின்மை யின் காரணமாக பயிர்கள் அழிவுறுவதும் தடுக்கப்பட்டது. வட இந்தியாவில் அமைக்கப்பெற்ற இந்த வகையான நீர்ப்பாசன கட்டுமான வேலைகளுள் மிகப் பெரியது கங்கை கால்வாயாகும். 1856-இல் டல்ஹௌசி அக்கால்வாயைக் குறிப்பிடும்போது பின்வரு மாறு எழுதினார். 'நாகரிகப் பண்புகளுடன் கூடிய நாடுகள் மேற்கொண்ட முயற்சிகளின் விளைவாகத் தோன்றிய அவ்வகை நீர்ப்பாசன கட்டுமான வேலைகளுள் தலைசிறந்து விளங்கத் தக்கனவாக அவை அமைந்திருந்தன.' 1835-6-இல் தென்னிந்தியாவில் இரண்டு மைல் நீளமுள்ள கிராண்ட் அணைக்கட்டு காவேரி ஆற்றின் குறுக்கே கட்டப்பட்டது மழை பெய்யாத இடங்களிலும், சிறிதளவு மழை பெய்யும் இடங்களிலும் இருந்த தரிசு நிலங்களுக்கு நீர்ப்பாசன வசதிகளை அளிப்பதற்காக 1892ஆம் ஆண்டிலிருந்து பல கால்வாய்களை வெட்டத் தொடங்கினார்கள். அதன் விளைபயன்களை அனுபவித்த மாகாணங்களுள் தலைசிறந்தவை பஞ்சாபும், சிந்துவுமாகும். பஞ்சாபில் ஏற்படுத்தப்பெற்ற கால்வாய்களும், அவைகளின் விளைவாகத் தோன்றிய குடியேற்றங்களும் பஞ்சாபை செழிப்புமிக்க மாகாணமாக மாற்றி யமைத்தன. நீர்ப்பாசன வசதிகளை அளிப்பதற்கு மேற்கொள்ளப் பட்ட முயற்சிகளின் விளைவாக சிந்து மாகாணத்தில் சுக்கூர் அணை அமைக்கப்பட்டது. பாகிஸ்தான் அரசாங்கத்தினர் சுக்கூர் அணையை விரிவுபடுத்துவதற்கு முன்னரே உலகத்தில் அமைக்கபபட்டிருந்த அவ்வகை அணைகளுள் மிகப் பெரியதாக அது கருதப்பட்டது கோதாவரி கால்வாய்த்திட்டம் 2500 மைல்களுக்கு மேல் பரவியிருந்தது. கங்கை நதியின் மேற்பகுதியைச் சார்ந்த கால்வாய்களும், கீழ்ப் பகுதியில் அமைக்கப்பெற்றிருந்த கால்வாய்களும் சுமார் 8000 மைல்கள் வியாபித்திருந்தன. பஞ்சாபில் நீர்ப்பாசன வசதிகளைப் பெற்றிருந்த விளை நிலங்களின் பரப்பு எகிப்தில் அத்தகைய வசதிகளைப் பெற்றி ருந்த பயிர் நிலங்களின் பரப்பைவிட இரண்டு பங்காக இருந்தது. 1940க்குள் இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சிக்குட்பட்ட பகுதிகளில் பயிர்த்தொழில் மேற்கொள்ளப்பட்டிருந்த நிலங்களில் 32½ மிலியன் ஏக்கராக்கள் அல்லது ஐந்தில் ஒரு பங்கு நிலப்பரப்பு நீர்ப்பாசன வசதிகளைப் பெற்றிருந்தன.

இரண்டாவது வகையான நலம் பயக்கும் பெரும் பணி பஞ்சக் கொள்கையில் ஏற்படுத்தப்பெற்ற முன்னேற்றமேயாகும். மழை பெய்யத் தவறி விடுவதால் பஞ்சங்கள் அடிக்கடி இந்தியாவின் எல்லா

பகுதிகளிலும் ஏற்பட்டிருந்தன. போக்குவரத்து சாதனங்கள் ஏற்பட்டிராமையாலும், நடைமுறையிலிருந்த போக்குவரத்து சாதனங்கள் ஓரிடத்திலிருந்து மற்றொரிடத்திற்கு வேகமாகப் பொருள்களையும், மக்களையும் கொண்டு செல்லத்தக்கனவாக அமைந்திராமையாலும் பஞ்சங்களைத் தடுப்பதற்கான நடவடிக்கையை மேற்கொள்ள வழியில்லாமல் இருந்தனர். ஆகவே அக்காலத்தில் மக்கள் இயற்கையின் விருப்பு வெறுப்புக்கு அடங்கி யிருப்பதைத் தவிர வேறொன்றும் செய்யத்தக்க நிலையில் இல்லை. பஞ்ச காலத்தில் மக்களுடையத் துயரைத் தீர்க்கும் வகையில் அக்பர் சில முயற்சிகளை மேற்கொண்டார். ஆனால் அத்துறையில் குறிப்பிடத்தக்க விளைவுகள் ஏற்படவில்லை. பிரிட்டிஷ் இந்தியாவைச் சார்ந்த வங்காளத்தில் 1769–70–இல் முதற் பஞ்சம் ஏற்பட்டபோதும் குறிப்பிடத்தக்கப் பணிகள் மேற்கொள்ளப் படவில்லை. அப்பஞ்சத்தின் விளைவாக மூன்றில் ஒருபங்கு முதல்பாதி பேர் வரை உயிரிழந்தனர். முதலில் நிவாரணமளிக்க மேற்கொள்ளப் பட்ட முறைகள், விட்டு விட்டு மேற்கொள்ளப்பட்டனவாகவும், குறிப்பிட்ட பணிகளை நிறைவேற்றுவதற்காக மேற்கொள்ளப்பட்டன வாகவும் உறுதியற்றனவாகவும் இருந்தன. கங்கை யமுனை நதிப் பிரதேசத்தின் மேல் பகுதியில் 1837–8–இல் பஞ்சம் ஏற்பட்டபோது நிவாரணப் பணியை மேற்கொள்ள முயன்றனர். 1866-இல் ஒரிசாவில் பஞ்சமேற்பட்ட போது வங்காள அரசாங்கத்தினர் நடவடிக்கைகளை குறித்தக் காலத்தில் மேற்கொள்ளத் தவறியதால் மக்கள் தொகையில் நான்கில் ஒரு பங்கு அழிவுற்றனர். 1876–8–இல் பெரிய பஞ்சம் ஏற்பட்டது. அப்போது அரசாங்கத்தினர் விடாமுயற்சியோடு அப் பஞ்சத்தை சமாளிக்க முயன்றனர். ஆனால் அம் முயற்சிகள் ஒழுங்கு முறையாக மேற்கொள்ளப்படவில்லை. ஆனாலும் அதன் விளைவாக லிட்டன் பிரபு காலத்தில் 1880-இல் சர். ரிச்சர்டு ஸ்ட்ராச்சி என்பவரின் தலைமையின் கீழ் பஞ்சக் கமிஷன் ஒன்று அமைக்கப் பெற்றது அக் கமிஷனுடைய முயற்சியின் விளைவாக 1883-இல் பஞ்ச நிவாரண விதி வரையப்பட்டது. அச்சட்டத் தொகுப்பு, உணவுப் பற்றுக்குறையை அறிவதற்கும், பற்றுக்குறை நிலை ஏற்பட்டிருப்பதை அறிவிப்பதற்கும், பிறகு பஞ்சம் ஏற்பட்டிருக்கிறது என்பதை அறிவிப்பதற்கும் கையாளப்பட வேண்டிய வழி முறையை ஏற்படுத்தியது. பஞ்சத்தால் பீடிக்கப் பெற்றிராத இடங்களிலிருந்தும், வெளிநாடுகளிலிருந்தும் தானிய வகைகளைக் கொண்டு வருவதற்கு இரயில் வண்டிகளையும், கப்பல்களையும் பயன்படுத்த வேண்டும் என்பதையும் நிவாரணம் அளிக்கும்போது கவனிக்க வேண்டிய ஒழுங்கு முறைகளையும், வேலை செய்யக்கூடிய நிலையில் இருப்பவர்களை ஆக்க வளமுடைய வேலைகளில் ஈடுபடுத்த வேண்டும் என்பதையும் அத்தொகுப்பு தன்னுடைய முக்கியக் கூறுகளாகக்

கொண்டிருந்தது. அந்த புதிய விதிகள் மாகாண அரசுகள் தயாரித்த பஞ்சயவாரண விதியை சேர்த்துக்கொள்ளப்பட்டன. 1896 முதல் 1900 வரை ஏற்பட்டிருந்த பஞ்சங்களின் விளைவாக 1901-இல் மாக்டோனல் கமிஷனுடைய அறிக்கை வெளியிடப்பட்டது. அவ்வறிக்கையின் பயனாக பஞ்ச நிவாரண விதி செம்மைப்படுத்தப் பெற்றது. பஞ்ச சட்டத் தொகுப்பு பஞ்சத்தைத் தடுக்கவில்லை என்பது உண்மையே யாகும். ஆனால் பயங்கரமான விளைவுகளை உண்டாக்கத்தக்க உணவுப் பஞ்சங்களை சகித்துக் கொள்ளத்தக்க வேலைப் பஞ்சங்களாக மாற்ற அது உதவியது. பஞ்ச சட்டத்தொகுப்பு விஞ்ஞானம், திட்டம் வகுக்கும் முறை ஆகியவற்றின் துணைகொண்டு இந்தியாவில் ஏற்படும் பஞ்சங்களின் கொடிய விளைவுகளைத்தடுக்கப் பயன்பட்டது.

## 6. புதிய இந்தியா - இந்தியர்களின் பதில்

அந்நிய அரசாங்கத்தினரின் அன்புச் செயல்கள், ஆட்சிமுறைச் சார்ந்த நடவடிக்கைகள், ஆகியவை மட்டுமே புதிய இந்தியாவை உருவாக்கி இருக்க முடியாது. உள்நாட்டு மக்களிடையே விழிப்பு ஏற்படாதிருந்தால் அந்நடவடிக்கைகள் விளைவாக அமையப்பெற்ற புதிய இந்தியா உணர்ச்சியற்றதாக அமைந்திருக்கும் ஆகவே அரசாங் கத்தினையும், வெளிநாட்டிலிருந்து கொண்டுவரப்பெற்ற நடவடிக்கை களையும் எதிர்க்கும் வகையில் எவ்வாறு இந்திய மக்கள் செயலாற்றினர் என்பதைப் பற்றி நாம் கவனிக்க வேண்டியது அவசியமாகும். முதன் முதலில் ஐரோப்பியர்களைப் பற்றி அறிந்துகொள்வதற்கு ஆசையும் அக்கறையும் கொண்டனர். போர்ச்சுகீசியரைப் பொருத்தளவில் அந்த ஆசையும் அக்கறையும் விரைவில் வெறுப்பாக மாறிவிட்டது. போர்ச்சுகீசியர் ஆதிக்கம் பெற்றிருந்த கடற்கரைப் பகுதிகள் நீங்கலாக, ஏனைய பகுதிகளில் ஐரோப்பியர்களைப் பற்றி அறிந்துகொள்ள வேண்டும் என்ற எண்ணம் மொகலாயர்கள் ஆட்சி புரிந்த காலத்தில் செல்வாக்குப் பெற்றிருந்தது. அக்பர் (Jesuit) ஏசு சங்கத்தைச் சார்ந்த சமயப் பரப்பாளர்களை அழைத்துஅவர்கள்மூலம்தகவல்களைச்சேகரித்தார் ஜஹாங்கீர், ஹாகின்ஸ், சர் தாமஸ்ரோ போன்ற ஐரோப்பியர்களுடன் போதை தரும் பானங்கள், படங்கள் போன்றவைகளைப் பரிமாறிக் கொண்டார் வியாபாரத் துறையிலும், போர்த் துறையிலும், ஐரோப் பியர்கள் நலமளிக்கும் வகையில் பயன்படுத்தத் தக்கவர்களாகக் காணப் பெற்றனர். பதினெட்டாம் நூற்றாண்டில் ஐரோப்பியர்கள் தங்களு டைய படைப்பலத்தைப் பெருக்கியபொழுது உள்ளூர்ச் சண்டைகளில் ஈடுபட்டிருந்தவர்கள் அவர்களுடைய உதவியை நாடினார்கள். அவர் களுடைய படைப்பலம் இந்திய அரசர்களுடைய ஆட்சிக்கு ஆபத்து விளைவிக்கக்கூடும் என்ற அச்சம் ஏற்பட்டபோது, அவர்களைப் படை கொண்டு எதிர்க்கத் தலைப்பட்டனர். இராஜாக்களும், நவாபுகளும் ஐரோப்பிய போர்க் கருவிகளைத் தருவிக்க முற்பட்டனர். அவர்கள்

கையாண்டு இருந்த இராணுவ பயிற்சி முறைகளையும், இராணுவ அமைப்பு முறையையும் கோரிப்பெற முயற்சித்தார்கள். ஐரோப்பியத் துணைப் படைகளைக் கொண்டு வெளி நாட்டவர்களைத் துரத்தியடிக்க முற்பட்டனர். தங்களைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்குத் தேவையான புதிய அன்னிய நாட்டைச் சார்ந்த நாகரிகப் பண்புகளை மட்டும் தருவித்துக் கொண்டதுடன் அவர்கள் நின்றுவிட்டனர். அதற்குமேல் அவர்கள் முன்னேறவில்லை. அவ்வாறு இந்தியர்கள் தற்காப்புக்குத் தேவையான அன்னிய நாட்டு நாகரிகப் பண்புகளை மட்டும் தருவித்துக் கொள்ளும் வழக்கம் மீர் காசிம் காலந்தொடங்கி இரஞ்சித் சிங் காலம் வரை மேற்கொள்ளப்பட்டு வந்தது. இறுதியில் 1849-இல் குஜராத்தில் அவ்வழக்கம் கைவிடப்பட்டது.

1820ஆம் ஆண்டிற்குள்ளாகவே வெறும் படைத்திறன் வாயிலாக மட்டும் வேண்டாத அன்னியர்களை விரட்டியடிக்க முடியாது என்பதை இந்தியா முழுவதிலும் மக்கள் உணர்ந்தனர். பிரிட்டிஷ்காரர்களுடன் நெருக்கமான தொடர்புகள் கொண்டு இருந்தவர்கள் கூட மேலை நாட்டவர்களுடைய வல்லந்த நுழைவினால் அரசர்கள், படைவீரர்கள் ஆகியோர் மட்டும் பாதிக்கப்படமாட்டார்கள் என்பதை நன்குணர்ந்திருந்தார்கள். புதிதாக இந்தியாவிற்கு வந்த பிரிட்டிஷ்காரர்கள் பழைய மொகலாயர்கள் போல் நடக்க மாட்டார்கள் என்பதும் தெளிவாயிற்று. அவர்கள் ஏற்படுத்திய ஆட்சி முறையைச் சார்ந்த திட்டங்கள், முன்னேற்றங்களை ஏற்படுத்த வேண்டும் என்னும் ஆர்வம் ஆகியவற்றின் வாயிலாக அவர்கள் பழைய வாழ்க்கை முறைகளை நிலைகுலையச் செய்தனர். அவர்களுடைய நாகரிகத்தில் அவர்கள் கொண்டிருந்த எல்லையற்ற தன்னம்பிக்கை இந்தியாவில் அதனைப் புகுத்துவதற்காக ஏற்பட்டிருந்த வாய்ப்புகளைப் பயன்படுத்த அவர்களைத் தூண்டின. அவர்களுடைய நடவடிக்கைகளால் ஏற்படும் விளைவுகளைப் பற்றி மிக்க எச்சரிக்கையுடன் இருக்க வேண்டியது அவசியமாக இருந்ததாலும், வழிவழி மரபாக வந்திருந்த இந்திய நாகரிகத்திற்கு சிறிது மதிப்பை அவர்கள் கொடுத்து இருந்தமையால், அவர்களுடைய பேரார்வம் ஓரளவு மட்டுப் படுத்தப்பெற்றது. அமைதியை மீண்டும் நிலைநாட்ட மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள் இந்தியாவில் ஏற்படவிருக்கும் சமுதாயப் புரட்சியை முன்குறித்துக் காட்டுவதாகத் தோன்றின. பதினெட்டாம் நூற்றாண்டில் இந்திய அரசர்களுடைய 'வக்கீல்'கள் (Vakils) வாரன் ஹேஸ்டிங்ஸுடன் பயனளிக்கக்கூடிய பேச்சு வார்த்தைகளை மேற்கொண்ட கால முதற் கொண்டும், மாறிக்கொண்டுவரும் காலங்களைப் பற்றி குலாம் உசேயின் கான் என்பவர் தன்னுடைய சிந்தனைகளை எழுதத் தொடங்கிய கால முதற்கொண்டும், தங்களுடைய கலாச்சாரத்திற்கு நேரவிருக்கும் பேரா

பத்திற்கு எதிராக எவ்வாறு செயற்பட வேண்டும் என்பதைக் குறித்து இந்திய மக்கள் சிந்திக்கத் தொடங்கினார்கள். அதன் பயனாக முதலில் இந்து, முஸ்லிம் சமுதாயத்தினரிடையே பழமையைக் கடைபிடித்து வரவேண்டும் என்றக் கருத்தே ஓங்கி வளரலாயிற்று. அரசியல் விவகாரங்களில் அந்நியர்களுக்கு அடங்கி நடக்கும் நிலை ஏற்பட்டதைத் தொடர்ந்து தங்களுடைய கலாச்சாரத்தைத் தாங்களே அழித்துவிட அவர்கள் விரும்பவில்லை. ஆகவே ஐரோப்பிய சீருடைகள், தட்டுமுட்டுப் பொருள்கள், புதுமையானப் பொருள்கள், மதுபான வகைகள் போன்ற பொருள்களைத் தருவித்துக் கொண்டதுடன் நிறுத்திக் கொண்டனர். ஏனைய வகைகளில் அவர்கள் ஐரோப்பியர்களுடன் ஒட்டாமல் தனியாக இருக்கவேண்டுமென்னும் மனப்பான்மையை வளர்த்திருந்தார்கள். புதிய உலக அமைப்பில் பங்கேற்றுக் கொள்ள முற்படாமல் அதனின்றும் விலகி நிற்க பழைய அரசாங்கப் பணியில் ஈடுபட்டிருந்த வகுப்பினர்கள் முடிவு செய்தனர். பிரிட்டிஷ் இந்தியாவில் அவர்களுக்குப் புகலிடம் அளித்தவை அவர்களுடைய நில புலன்களும், அவர்கள் பெற்றிருந்த புகழுமேயாகும். வேறிடங்களில் இன்னும் தொடர்ந்து இருந்துவந்த சிற்றரசர்கள் ஏற்படுத்தியிருந்த அரசவைகள் அவர்களுக்குப் புகலிடம் அளித்தன. மத விவகாரங்களில் பழைமையை விரும்பும் பிராமணர்களும், மௌல்விகளும் அதே வழியை மேற்கொண்டார்கள். அவர்களும் புதிய மாறுதல்களை எதிர்த்தார்கள். அவற்றுடன் தொடர்பு வைத்துக் கொள்ள விரும்பவில்லை. அதற்கு மாறாக அவற்றை விட்டு வெகுதூரம் விலகி நிற்க விருப்பங்கொண்டனர். ஆனால் அவற்றினின்றும் முற்றிலும் விலகி நிற்க அவர்களால் முடியவில்லை. ஏனெனில் பெண்டிங்கு இந்திய சமூக விவகாரங்களில் தலையிடும் வகையில் மேற்கொண்ட நடவடிக்கைகளை அவரைப் பின் தொடர்ந்த ஆக்லாண்டு, எல்லன்பரோ, டல்ஹௌசி ஆகியோரும் மேற்கொண்டனர். மேல்நாட்டு கல்வி முறையைப் புகுத்துதல், மத சம்பந்தமான காரியங்களுக்காக ஏற்படுத்தப்பெற்றிருந்த வரியற்ற நில உரிமைத் திட்டங்களை ஒழித்தல், பாரசீக மொழியைப் புறக்கணித்தல், தந்தி முறை, இருப்புப்பாதை ஆகியவற்றை ஏற்படுத்துதல், நீராவி சக்தியினைப் பயன்படுத்துதல் கிறித்துவ மதத்தைப் பரப்புதல் போன்ற அவர்களது நடவடிக்கைகள் மக்களிடையே வெறுப்புணர்ச்சியைத் தோற்றுவித்தன. 1857 ஆம் ஆண்டு கலகத்தைப் பின்னிருந்து ஊக்குவித்த மக்களுடைய எதிர்ப்புணர்ச்சியும் மேற்கூறிய நடவடிக்கைகளின் விளைவாகும். அவ்வுணர்ச்சி கலகத்தின் வாயிலாக வெளிப்பட்டது என்பதை இங்குக் குறிப்பிடுதல் அவசியமாகும்.

ஆனால் பழைய பழக்கவழக்கங்களில் பற்றுறுதி கொண்டிருந்த மக்கள் பெருமளவில் இருந்த போதிலும், வருவதை முன் உணர்கிற திறத்தினை ஓரளவு கொண்டிருந்த மக்களும் இருந்தனர். பின் செல்லப் பட்டவர்களுள் சிலர் அரசியல் சச்சரவுகளில் அன்னியர்களிடம் சரண் அடைந்தது போல கலாசாரத்துறையில் நடைபெற்றுவரும் சண்டையிலும் அவர்களிடம் சரண் அடையத் தயாராய் இருந்தனர். அவர்களது எண்ணிக்கை மிகச் சிறியதாக இருந்தது. அக்கூட்டத்தினர் பெரும் பாலும் கல்கத்தாவிலே வாழ்ந்திருந்தனர். அங்கு அவர்கள் கைக்கடி காரங்களை தயாரிப்பதில் புகழ்பெற்ற டேவிட் ஹேர் (David Hare) போன்ற பிரிட்டிஷ்காரர்கள், டெரோஜியோ (Derozio) என்ற ஒரு இளம் ஆங்கிலோ இந்தியர் ஆகியவர்களிடம் தோன்றியிருந்த பகுத்தறிவாதம், அலக்சாண்டர் டஃப் என்பவர் பரப்பி வந்த கிறித்தவ சமயக்கோட்பாடு ஆகியவை அவர்களிடம் செல்வாக்குப் பெற்றிருந்தன. இளம் அறிஞர்களிடையே இந்து மதத்தையும் அதனுடைய சாதனை களையும் கைவிட்டு விடவேண்டும் என்ற நோக்கத்துடன் கூடிய இயக்கம் ஒன்று தோன்றியது. கிறித்தவ கோயில் சமய நுழைவு சடங்கு, மாட்டுக்கறி உண்ணுதலை ஆதரிக்கும் கழகங்கள் ஆகியவை அவ்வியக்கத்தின் கண்ணுக்குப் புலனாகிற தனிச் சிறப்புக் குறிகளாகும். ஆனால் அவ்வியக்கம் வெகுநாள் நீடித்திருக்கவில்லை. 1840க்குப் பிறகு அது அழிவுற்றது. முன்குறிப்பிட்ட வருவதை முன் உணர்கிற திறத்தினை பெற்றிருந்த மக்களுள் பலர் இந்திய கலாச்சாரத்திலும், மதத்திலும் உண்மையான பற்றுக் கொண்டிருந்த போதிலும் அன்று இருந்த நிலையில் இந்து மதம் அன்னியர்களுடைய செல்வாக்கு வலிமைக்குத்தக்க பதில் அளிக்கக்கூடிய நிலையில் இல்லை என்று எண்ணினார்கள். ஆகவே அவர்கள் பழையனவற்றை தூய்மைப் படுத்தி அதன் வாயிலாக அவற்றை வலுப்பெறச் செய்ய முயன்றார்கள். தங்களுடைய மதத்தின் மூல ஆதாரங்களைக் கொண்டு அதைத் தூய்மைப்படுத்த முயன்றனர். அவர்களுள் இந்து மதம், இஸ்லாம் மதம் ஆகியவற்றிற்கு இந்த வகையில் புரிந்த நற்பணிகளை ஐரோப்பாவில் கிறித்துவ மதத்திற்கு பிராடெஸ்டண்டு சீர்திருத்தவாதிகள் புரிந்த பணிக்கு ஒப்பிடலாம்.

அத்தகைய இயக்கங்களுள் முதலாவதாகத் தோன்றிய இயக்கம் பிரம்ம சமாஜமாகும். 1828-இல் இராம் மோகன் ராய் என்பவர் அவ்வியக்கத்தைத் தொடங்கிவைத்தார். முதலில் ஒரு சிலரே அவரைப் பின் தொடர்ந்தனர். அவர்களுடைய முக்கிய நோக்கம் பல காலங் களாக இந்து மதத்தினுடன் சேர்க்கப்பட்டு வந்திருந்த அன்னியக் கருத்துக்களை ஒழித்து அதன் வாயிலாக இந்து மதத்தைக் குறை கூறுபவர்களை எதிர்கொள்வதேயாகும். இராம் மோகன் ராய் தன்னுடைய

கருத்துக்கு ஆதாரங்கள் தேட உபநிஷத்துகளை நாடினார். விழுமிய அறிவுக்குகந்த இறைமைக் கோட்பாட்டை உணர்த்தும் மெய்யறிவினை அவர் அங்கே கண்டார். பிற்காலத்தில் நடைமுறையிலிருந்த இந்து மதத்தில் காணப்பட்ட கற்சிலை வழிபாடு, ஒருவர் பல பெண்களை ஒரே நேரத்தில் மணம் செய்து கொள்ளும் வழக்கம், உடன்கட்டையேறுதல் பெண் குழந்தைகளைக் கொன்றுவிடுதல் போன்ற தீய வழக்கங்களை உபநிஷத்துக்களின் துணைகொண்டு கண்டித்தார். இந்து மதத்தில் குறைகாணும் ஐரோப்பியர்களுக்கு எதிராக அவர்களுடைய பகுத்தறிவு வாதத்தை கொண்டே அவர்களுக்குத்தக்க பதிலளித்தார். அதன் விளைவாக கிறித்தவ சமயப் பரப்பாளர் ஒருவர் கடவுள் வடிவு மூன்றல்ல ஒன்றே என்ற தனியொருமைக் கோட்பாளராக (Unitarian) மாறினார். 'இராம் மோகன் இந்துக்களின் வழிபாட்டு முறையில் பண்டைய காலத்தில் காணப்பெற்றிருந்த தூய்மையினை மீண்டும் ஏற்படுத்தியதாக எண்ணிவந்தார்.[1] என்று டாக்டர் பார்க்குவார் (Dr. Farquhar) கூறியுள்ளார். துவாரகாநாத் தாகூர் சமாஜத்தில் சேர்ந்தார். அவருடைய மகனான தேவேந்திர நாத் சமாஜத்தின் தலைவரானார். கேஷப் சந்தர் சென் என்னும் மூர்க்கத் தன்மை வாய்ந்த மேதை சமாஜம் விரிவடைவதற்கும் பிளவு படுவதற்கும் காரணமாக இருந்தார். சென்னை, பம்பாய், லாகூர் ஆகிய இடங்களில் இதைப் போன்ற சமாஜங்கள் ஏற்படுத்தப் பெற்றன. உருவில் சிறியதாக காணப்பெற்றாலும், பிரம்மோ சமாஜம் மிகவும் செல்வாக்குப் பெற்றிருந்தது. அதைச் சேர்ந்தோர்கள் சகிப்புத் தன்மையையும், அறிவாற்றலையும் பெற்றவர்களாயிருந்தனர். ஆனால் அதற்குப் பொதுமக்களுடைய ஆதரவு அதிகளவில் கிடைக்கவில்லை. மேலை நாட்டவர்களின் குற்றச்சாட்டுகளுக்கு அறிஞர்கள் அளித்த பதில் வாசகமாக விளங்கியதேயன்றி பொதுமக்கள் அளித்த பதிலாக அது அமைந்திருக்கவில்லை.

பிரம்ம சமாஜம் மிகக் கவனமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களடங்கிய கழகமாக இருந்தது. அந்த நிலையை மாற்ற கேஷப் சந்தர் சென் மேற்கொண்ட முயற்சிகள் யாவும் வீணாயின. ஆரிய சமாஜம் பண்டைய வழிகளைப் பின்பற்றி அமைக்கப்பெற்ற சமயக் கோட்பாட்டு முறையாகும். இராம் மோகன் ராய் தான் செயலாற்றுவதற்கு வேண்டிய தூண்டுதலைப்பெற உபநிஷத்துகளை நாடினார். ஆனால் ஆரிய சமாஜத்தை தோற்றுவித்த தயானந்த சுவாமி[2] நான்கு வேதங்களின்

[1] புத்தகம் 8, அத்தியாயம் 7–யைக் காண்க.

[2] தயானந்த சுவாமி 1883–இல் இறந்தார். ஆரிய சமாஜத்தின் உறுப்பினர்களுள் மிகச் சிறந்தவர்கள் லாலா லஜபதிராயும், இராய் சாகிப் ஹார்பிலாஸ் சார்தா என்பவரும் ஆவார்கள். லஜபதிராய் மக்களுடைய பணியாளர்களின் சங்கம் (Servants of the People Society) என்ற கழகத்தை நிறுவினார். இராய் சாகிப் ஹார்பிலாஸ் சார்தா, சாரதா சட்டத்தை ஆதரித்தவராவர்.

துணையை நாடினார். தயானந்தர் 1824ஆம் ஆண்டில் குஜராத்தில் பிறந்தார். மரபுவழாத துறவறத்தை கையாண்டு ஞானம் பெற்றார். 1875-இல் அவருடைய சமாஜத்தை ஏற்படுத்தினார். அவர் பக்தியுள்ள வர். உறுதியான உள்ளம் படைத்தவர். போராட்ட மனப்பாங்கு கொண்டவர். மூல முதலான சமய நூல்களைத் தனக்கு உதவியாகப் பயன் படுத்தியலும் பிராமணீயத்தின் பால் தான் கொண்டிருந்த வம்பிற் கிழுக்கிற மனப்பான்மையிலும் அவருக்கும் இராம் மோகன்ராய்க்கும் ஏற்பட்டிருந்த தொடர்பு லூதருக்கும் இராஸ்மஸிக்கும் ஏற்பட்டிருந்த தொடர்பை ஒத்திருந்தது. சிலை வழிபாடு, ஒருவர் ஒரே சமயத்தில் பல மனைவிகளை மணம் செய்து கொள்ளும் வழக்கம், சாதி பாகுபாடு ஆகிய வற்றைக் கண்டித்தார். வேத காலத்தில் மக்கள் கையாண்டு வந்த, மதச் சடங்கு முறைகளையும் அவர்கள் மேற்கொண்டிருந்த ஆடம்பர மற்ற பழக்க வழக்கங்களையும் மீண்டும் மக்கள் கடைப்பிடித்து வர வேண்டுமென்றும் பிரசாரம் செய்தார். எல்லா வகையான மெய்யறிவும் நான்கு வேதங்களில் காணக் கிடக்கின்றன என்று அவர் வாதாடினார். அவருடைய இயக்கம் அறமுறையான ஆற்றல் வளம் பெற்றிருப்பதாகக் காணப்பட்டது. பஞ்சாபில் அவ்வியக்கம் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தது. ஏனைய இடங்களிலும் அது விறுவிறுப்புடன் செயற்பட்டு வந்தது. பழைய கருத்துக்களுடன் புதிய கருத்துக்களையும், பரந்த மனப்பான்மையுடன் குறுகிய மனப்பான்மையினையும் அதில் காணக் கூடும். இந்து சமூகத்தில் பிராமணர்கள் பெற்றிருந்த சிறப்புரிமைகளை எதிர்த்தது. அதில் காணப்பட்ட குறைகளைத் திருத்த தன்னுடைய ஆற்றலைப் பயன்படுத்தியது. இஸ்லாமிய மதத்தை கடுமையாக எதிர்த் தது. கிறித்தவர்களுடைய மத சம்பந்தமான நடவடிக்கைகளை பலமாக எதிர்த்துப் போராடியது. கல்வி போன்ற விவகாரங்களில் அது மேற்கொண்டிருந்த தற்காலத்திற்குகந்த மனப்பான்மைக்கும் மதம் போன்ற விவகாரங்களில் பண்டைய நூல்களிலே கூறப்பட்டிருப்பதை அப்படியே ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற அதனுடைய வாதத்திற் கும் இடையே காணப்பட்ட முரண்பாடு அதனுடைய வெற்றிக்குப் பெருந்தடையாக இருந்தது. பிரமணீயக் கோட்பாட்டை எதிர்க்கும் வகையில் செயலாற்றிய காரணத்தால் அவ்வியக்கத்தில் கலந்து கொள்ள விருப்பங்கொண்ட அநேகர் அது பகுத்தறிவுக் கொவ்வாத சில கருத்துக்களை ஆதரித்த காரணத்தால் அதனின்றும் விலகி நிற்கலா யினர். பிராமணர்களுடைய செல்வாக்கு அதிகளவில் ஏற்பட்டிராத வடக்குப் பகுதிகளில் ஆரிய சமாஜம் மக்களின் கவனத்தை பெருமள வில் கவர்ந்தது. ஆனால் இந்தியாவின் கிழக்கு, தெற்குப் பகுதிகளில் அது செல்வாக்குப் பெறவில்லை. புதிய இந்தியாவில் விழிப்புணர்ச்சி ஏற்பட அது உதவி செய்த போதிலும், இந்தியரிடம் ஒற்றுமை வளர்ப்பதில் வெற்றி காணவில்லை.

இராமகிருஷ்ண பரமஹம்சரைப் பின் தொடர்ந்தவர்களும் மேலைநாட்டவர்களின் குற்றச்சாட்டுகளுக்கு மற்றொரு பதில் வாசகத்தை அளித்தார்கள். இராம் மோகன்ராயை புதிய இந்தியாவின் உள்ளமாகவும் தயானந்தரை அதனுடைய கைகளாகவும், இராமகிருஷ்ணரை அதனுடைய ஆன்மாவாகவும் கருதலாம். இராமகிருஷ்ணர் தன்னுடைய வாழ்க்கையின் பெரும் பகுதியை கல்கத்தாவிற்கருகேயுள்ள கோயில் ஒன்றில் கழித்தார்.[1] பக்தி மார்க்கம் வாயிலாக இறைவனை கருத்துருவாகப் புனைந்து காண முயன்ற பக்திமான்கள் மரபைச் சேர்ந்தவர். பன்னிரண்டு ஆண்டுகளாக அவருடைய உள்ளத்தில் பெருங் கொந்தளிப்பு ஏற்பட்டிருந்தது. அதன் பிறகு அவர் மனவமைதிபெற்றார். அப்பொழுதிலிருந்து அவருடைய வாழ்நாளை அவரைப்பின்பற்றுபவர்களுடனும், சீடர்களுடனும், இறைவனைப் பற்றிய உண்மையை அறிய விரும்புபவர்களுடனும், அவருடைய கருத்துக்களை அறிய ஆர்வமுள்ளவர்களுடனும் உரையாடுவதில் செலவிட்டிருந்தார். தன்னையே சமர்ப்பிக்கும் முறையைத் தன்னுடைய சொந்த வாழ்வில் மேற்கொண்டார். வேதாந்தத்தை அவருடைய சமய சித்தாந்தமாகக் கொண்டிருந்தார். அவருடைய சீடர்கள் அவருடையக் கொள்கைகளைப் பரப்புவதில் முனைந்து ஈடுபட்டிருந்தனர். சுவாமி விவேகானந்தர்[2] அவர்களுக்குத் தலைவராக விளங்கினார். அயர்லாந்து நாட்டைச் சேர்ந்த நிவேதிதா[3] என்பவர் அவ்வியக்கத்தில் சேர்ந்திருந்த செயற்திறம் வாய்ந்த பெண் அங்கத்தினராக விளங்கினார். மரபு வழியாக வந்திருந்த இந்துக்களுக்குரிய கடவுட்பற்றுடன் சமூக சேவையையும் தன் திற நம்பிக்கையும் ஒன்று சேர்த்து செயற்பட்டார். தான் மேற்கொண்ட உலக சுற்றுப்பயணங்கள் வாயிலாகவும், 1893–இல் சிகாகோவில் நடைபெற்ற அகில உலக சமய மகாநாட்டில் இந்துமத சார்பில்தான் வற்புறுத்திய வாதங்கள் மூலமாகவும் இந்திய நாட்டிற்குள்ளும், அதற்கு வெளியிலும் இந்து மதத்தை முன்னைய நிலையில் மீட்டும் அமர்த்தினார்.

அவர் விட்டுச் சென்ற செல்வங்கள் இரண்டு. ஒன்று இராமகிருஷ்ண மிஷன், மற்றொன்று எல்லா மதங்களும் ஒரே அடிப்படையின் மேல் உருவாக்கப்பட்டுள்ளன என்ற மாபெரும் கருத்தும் ஆகும். இராமகிருஷ்ண மிஷன் பல அரிய தொண்டுகளை ஆற்றிப் புகழ் பெற்றது. இராமகிருஷ்ணரும் அவருடைய சீடர்களும் தங்களுடைய மதத்தின் திறத்தில் இந்துக்களுக்கு நம்பிக்கையை உண்டாக்கினார்கள்.

1 கல்கத்தாவிலிருந்து 4 மைல் தூரத்திலிருந்த தக்ஷிணேஸ்வர் என்னுமிடத்தில் வாழ்ந்தார். அவர் 1834–இல் பிறத்தார் 1886–இல் மறைந்தார்.

2 அவர் 1862–இல் பிறந்தார். 1902–இல் மறைந்தார்.

3 அவருடைய முதற்பெயர் மார்க்கரெட் நோபில் என்பதாகும். அவர் 1911–இல் மறைந்தார்.

மேலும் உலக மதங்களிடையே அதற்கு இருந்த மதிப்பு நிலையில் அவர்களுக்கு ஏற்பட்டிருந்த நம்பிக்கை மீண்டும் ஏற்படுவதற்கு அவர்கள் உதவி செய்தார்கள். தயானந்தரைப் போல இவரும் ஒரு புதிய புத்தராக விளங்கவில்லை அவர் கடந்த காலத்தில் கொண்டிருந்த பற்றுக்கும், தற்கால உலகத்திற்கும் இடையே ஏற்பட்டிருந்த இடைவெளி அதிகமாக இருந்தது எனலாம். தற்கால இந்திய மக்களின் ஆன்மீக வாழ்வில் ஏற்பட்டிருந்த குறையை அகற்றும் வகையில் ஓரளவு வெற்றி கண்டார். ஆனால் அப்பொழுது வாழ்ந்திருந்த மக்களை எதிர்நோக்கி இருந்த காரிய சாத்தியமான பிரச்சனைகளுக்கும், அறிவு ஆற்றலைச் சார்ந்த பிரச்சனைகளுக்கும் முடிவு காண அவர் கூறிய வழி அவைகளினின்றும் விலகி இருந்தநிலையாகும். மேற்குறிப்பிட்ட சீர்திருத்தவாதிகள் மக்களிடையே ஒரு எழுச்சியை ஏற்படுத்தினார்கள். அவர்களுக்கு ஆறுதல் அளித்தார்கள். ஆனால் அவர்களைத் தங்களுடைய வழிகளைப் பின்பற்றச் செய்வதில் தோல்வியுற்றனர். அவர்களை புதிய இந்தியா அமைபப்போவதை முன்கூட்டி அறிவித்தவர்கள் என்று கூறலாமேயொழிய அதனுடைய அவதாரப் புருடர்கள் என்று கூற இயலாது.

மற்றொரு இயக்கத்தைப் பற்றியும் இங்குக் குறிப்பிடுதல் அவசியம். 1875-இல் பிலாவாட்ஸ்கி என்ற திறமையும் முனைப்பான தோற்றமும் கொண்ட ருஷ்யப் பெண்மணி பிரம்ம ஞான சங்கத்தை நிறுவினார். அச்சங்கம் முதலில் ஆன்மீகத் துறையில் மட்டும் கவனம் செலுத்தி வந்தது சென்னையைச் சார்ந்த அடையாரில் அதனுடைய தலைமைக் காரியாலயம் நிறுவப்பெற்றது. அங்கே அன்னிபெசன்ட் அம்மையாரின் தலைமையின் கீழ் அது மிக்க செல்வாக்குப் பெறலாயிற்று. ஆன்மிகக்கொள்கை வளர்ச்சியுற்றதன் விளைவாக இமாலய மலைப்பகுதிகளில் வாழும் ஞானிகள் ஆன்ம இயலான உண்மைகளின் கருவூலங்களாகக் கருதப்பட்டனர். பிரம்ம ஞானம் ஒரு சமயக் கோட்பாடு என்ற முறையில் மக்களின் ஆதரவை இழந்தது. அதற்கு இரு காரணங்கள் உண்டு. முதலாவது அதைப் பற்றி ஏற்பட்டிருந்த சொற் போராட்டங்களாகும். இரண்டாவதாக பெசன்ட் அம்மையார் வாழ்நாட்களின் பிற்பகுதியில் தோன்றிய மெசையா கோட்பாடு ஆகும் (Cult of Messiah) அதனுடைய நோக்கங்கள் தெளிவாக இராமையால் ஒரு சமயமாகவோ அல்லதுசமய உட்பிரிவுகளில் ஒன்றாகவோ, வளர்ச்சி யுறவில்லை. அதற்குமாறாக அது செல்வாக்குரிய ஒரு வித நிறுவனமாகவே இருந்து வந்தது. இந்து மதத்தைப் பற்றி தற்காலத்தில் நடைபெற்று வந்த திறனாய்வுக்கெதிர்ப்பு தெரிவிக்கும் வகையில் இந்து மதத்தில் இந்தியர்கள் மீண்டும் நம்பிக்கை கொள்ளுவதற்கான வழிகளை மேற்கொள்ள வேண்டும்

என்று கருதியவர்களுக்கு பிரம்ம ஞான சங்கத்தின் மத சம்பந்தமான சமரசப் பண்பு திருப்தியை அளித்தது. இராமகிருஷ்ணருடைய மனக் கிளர்ச்சியைத் தூண்டிவிடும் போக்கை விரும்பாதவர்கள் பிரம்ம ஞான சங்கத்தினுடைய போலியான ஆய்வறிவுக் கோட்பாட்டினால் கவரப் பெற்றனர். அது மேற்கத்திய சிறப்புச் சொற்களைப் பயன்படுத்தி இந்து மதத்தைப் புகழ்ந்தது. ஆனால் சிறப்பான நடவடிக்கையொன்றையும் அது வற்புறுத்தவில்லை. அக்காரணத்தால் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மேல்நாட்டுக் கருத்துக்களை ஏற்றுக்கொண்ட வகுப்பினர்களிடையே அது செல்வாக்குப் பெற்றிருந்தது. பெசன்ட் அம்மையார் பொது விவகாரங்களிலும் சிறந்து விளங்கினார். பண்டித மதன் மோகன் மாளவியாவுடன் இணைந்து அவர் பனாரஸ் இந்து பல்கலைக்கழகத்தை நிறுவினார். 1915-இல் தன்னாட்சி இயக்கத் (Home Rule) தைத் தொடங்கி அரசியல் துறையிலும் புகழ்பெற்றார். ஆனால் அவ்வியக்கம் திட்டமற்று இருந்தமையால் அது இந்தியாவில் நிலைத்து இருக்கவில்லை. மேலும் வரையறுக்கப்பெற்ற திட்டத்தைப் பெற்றிராத காரணத்தால் அது வெகு நாட்களுக்கு நாட்டு மக்களுடைய ஆதரவைத் தொடர்ந்து பெற்றிருக்கவில்லை. ஆயினும் தேசிய இனம் சார்ந்த இந்திய நாடு உருவாக்க மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகளுள் ஒன்றாக அதனைக் கருதலாம்.

முஸ்லீம் சமுதாயத்தினரிடையிலும் அத்தகைய இயக்கங்கள் தோன்றின. ஆனால் அவை இந்து சமுதாயத்தினரிடையே ஏற்பட்டிருந்த இயக்கங்களைப்போல் முன்னேற்றம் அடைந்திருக்கவில்லை. முஸ்லீம்கள் ஒரே சமயத்தில் தங்களுடைய ஆட்சி அதிகாரத்தையும், தன்னம்பிக்கையும் இழந்து விட்டார்கள். அதனால் ஏற்பட்ட அதிர்ச்சியிலிருந்து மீண்டும் சுய உணர்வு பெறுவதற்கு சில காலம் பிடித்தது. ஆயினும் இந்துக்கள் தோற்றுவித்த இயக்கங்களைப் போலொத்த இயக்கங்களை முஸ்லீம்கள் சமுதாயத்தினரிடையிலும் காண முடிகிறது. ஆனால் அவ்வியக்கங்கள் முழு வளர்ச்சி அடைய வெகுகாலம் பிடித்தது. பாட்னாவிலும் ஹைதராபாத்திலும் வாஹாபிகள் தோன்றினார்கள்.[1] பண்டைய இஸ்லாமிய மதத்தில் காணப்பெறும் எளிய தன்மைகளை மக்கள் கடைபிடிக்க வேண்டும் என்று வற்புறுத்தினார்கள். பஞ்சாபில் அஹமதியா இயக்கம் தோன்றியது. வழக்கத்திலுள்ள கொள்கைக்கு மாறான கொள்கைகளை இவ்வியக்கம் கொண்டிருந்தது.[2] பாரசீகத்தில் ஏற்படுத்தப்பெற்றிருந்த பாஹாயிசம்

[1] அரேபியாவில் இதே பெயருடைய இயக்கம் தோன்றியிருந்தது. அந்த இயக்கத்துடன் இணைக்கப்பட்டிருக்கவில்லை என்றாலும் அதை ஒத்து இருந்த காரணத்தால் இதற்கு அப்பெயர் அளிக்கப்பட்டது.

[2] 1838 முதல் 1908 வரை வாழ்ந்திருந்த மீர்ஜா குலாம் அஹமத் என்பவரால் 1879-இல் இது தொடங்கப்பெற்றது.

(Bahaism) என்ற இயக்கத்தின் பண்புகளும் அஹமதியா இயக்கத்தின் பண்புகளும் ஒத்திருந்தன. தொகுத்துப் பார்க்கும் மனம் படைத்த சையிது அஹமத்கான்[1] என்பவர் இஸ்லாமிய மதப் பண்புகளுக்கும், மேலை நாட்டவரின் தற்காலப் பண்புகளுக்கும் இடையே சமரசம் ஏற்படுத்த முயன்றார். சில விஷயங்களில் அவருடைய பணி இராம் மோகன்ராயினுடைய பணியைவிட எளிதாகக் காணப்பட்டது. ஏனெனில் மேலை நாட்டு கருத்துக்களுக்கும் முஸ்லீம்களின் கருத்துக் களுக்கும் இடையே இருந்த ஒற்றுமை இந்துக் கருத்துக்களுக்கும் மேலை நாட்டவரின் கருத்துக்களுக்கும் இடையே இருந்த ஒற்றுமையை விட அதிகளவில் இருந்தது. ஏனைய விஷயங்களில் அவருடைய பணி இராம் மோகன்ராயின் பணியைவிட மிகக் கடினமாக இருந்தது. ஏனெனில் முஸ்லீம்கள் மேலை நாட்டவர்களை தங்களுடைய அரசியல் சார்ந்த அதிகாரங்களைப் பிடுங்கி எறிந்தவர்கள் என்று கருதியதால் இந்துக்களை விட முஸ்லீம்கள் மேலை நாட்டவர்களை அதிகமாக வெறுத்திருந்தனர். மேலும் அவர்கள் இந்துக்களைப் போல் கல்வியறிவு பெற்றிருக்கவில்லை. அவர்களைப் போல் புதிய கருத்துக்களை ஏற்றுக் கொள்ளத் தயாராகவும் இல்லை. அதற்கு மாறாகத் தொன்றுதொட்டு வரும் கருத்துகளில் அவர்கள் இந்துக்கள் கொண்டிருந்ததைவிட அதிகமான பற்றுக் கொண்டிருந்தார்கள். 1875-இல் அலிகாரில் ஆங்கிலோ-அராபிக் கல்லூரியை ஏற்படுத்தி ஒரு ஒப்பற்ற பணியினை சையது அஹமத்கான் ஆற்றினார். அக்கல்லூரியே பிற்காலத்தில் அலிகார் முஸ்லீம் பல்கலைக்கழகமாக நிறுவப்பெற்றது. இந்தியாவில் தற்கால இஸ்லாமிய மதம் அடைந்த வளர்ச்சியைப் பற்றி பின்வரும் அத்தியாத்தில் விரிவாக கவனிக்கலாம்.[2]

மேலைநாட்டுப் பண்புகளைப்பெற்ற வகுப்பினர்கள் அனைவரையும் ஒன்றாகப் பிணைத்த கோட்பாடு தேசியக் கோட்பாடாகும். இதுவும் மேல்நாட்டினின்றும் பெறப்பட்ட கோட்பாடாகும். இராம் மோகன்ராய் என்பவரே இந்நிலை ஏற்படுவதற்கு காரணமாவார். இக்காரணத்தால் பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றியிருந்த படைக்கும் திறனுள்ள வர்களுள் முக்கியமானவர் என்று அவர் குறிப்பிடப்படுகிறார். அவர் பிரம்ம சமாஜத்தை மட்டும் ஏற்படுத்தியவர் அல்ல. அவர் சுறுசுறுப்பு டன் பணியாற்றி வந்த பொது மனிதராவார். 1813 முதல் 1830 வரை யுள்ள 17 ஆண்டுகளில் அவர் மேற்கொண்டிருந்த பொதுபிரச்சனைகளை சார்ந்த நடவடிக்கையின் வாயிலாக இந்திய தேசிய இயக்கம் தோன்று வதற்கான முக்கியமான முன்னேற்ற வழிகளை ஏற்படுத்தித் தந்தார்.

[1] இவரது காலம் 1815 முதல் 1898 வரை.

[2] புத்தகம் 10, அத்தியாயம் 5. பாகிஸ்தான் இயக்கம்.

ஐரோப்பிய நாகரிக உலகத்திற்கு அடிபணிவதையும், அதனின்றும் விலகி நிற்பதையும் அதனுடன் சண்டையிடுவதையும் அவர் விரும்ப வில்லை. அதற்கு மாறாக அதைப் பற்றி நன்றாகப் புரிந்துகொள்ள வேண்டும் என்பதை விரும்பினார். அதன் பயனாக மேல்நாடுகளின்றும் தருவிக்கப்பெற்ற புதியக் கருத்துக்களைக் கொண்டு அமைக்கப்பட விருக்கும் இந்தியா பழைய இந்திய சமுதாயத்தினுக்கு துணையாக இருக்க வேண்டும் என்று விரும்பினார். அதைக்கொண்டு பழைய இந்தியாவை அகற்றிவிட விருப்பங்கொள்ளக்கூடாது என்று வலியுறுத்தினார். இந்து மதத்திற்கு அப்பொழுது ஏற்பட்டிருந்த இக்கட்டு நிலையிலிருந்து தன்னைக் காப்பாற்றிக்கொள்ள அவர் காட்டிய வழி இரு கருத்துக்களையும் ஒன்றாக்குவதேயாகும். அவர் குறிப்பிட்ட கருத்து கூட்டாக்கம், சமயக் கிளைகளிடையே ஏற்படுத்தப்பெறும் சமரச இணைப்பினின்றும் மாறுபட்டதாகும். அவர் குறிப்பிட்ட கருத்து கூட்டாக்கம் மெய்யறிவின் வாயிலாகப் பெறவேண்டும் என்று கூறினார். அந்த மெய்யறிவுக் கொள்கை உபநிஷத்துக்கள் உட்கொண்டிருப்பதை அவர் கண்டறிந்தார். ஐரோப்பியர்களிட மிருந்து கருத்துக்களை கடன் வாங்குவதால் இந்தியக் கொள்கைகளை கைவிட்டுவிட வேண்டியது அவசியமன்று என்றும் கூறினார். இந்தியக் கருத்துக்களிடம் பற்றுறுதிகொள்ளுதல் அவைகளைச்சீர்திருத் தும் வகையில் முயற்சி மேற்கொள்ளுதல் ஆகிய இரண்டும் ஒரே நேரத்தில் மேற்கொள்ள இயலும் என்று அறிவித்தார். இந்த அடிப்படையில் இராம் மோகன் ராய் கடவுள் உண்டு என்னும் கொள்கையை ஒரு உபநிஷத்துக் கருத்தாகக்கொண்டு அதனை ஏற்றுக் கொண்டார். அவர் அதே உபநிஷத்துகளை ஆதாரமாகக்கொண்டு தனி மனிதனின் தனிச் செயலுரிமையை ஆதரிக்கும் சமுதாயக் கோட் பாட்டை ஒத்துக்கொண்டார். அதனுடன் அரசியல் உரிமைகளைப் பற்றிய முற்போக்குக் கொள்கையினையும் ஏற்றுக்கொண்டார். 1830-இல் பிரான்சில் புரட்சி ஏற்பட்டபோது, அந்நிகழ்ச்சியைக் கொண்டாடுவதற்கு ஒரு விருந்தை ஏற்பாடு செய்தார். அவர் சதி என்னும் கொடிய பழக்கத்தை ஒழிக்க மிகவும் பாடுபட்டார். அதுவே அவரது சிறப்புமிக்க சாதனையாகும். அவர் அறமுறை யான காரணங்களைக் காட்டி அப்பழக்கத்தைக் கண்டித்தார். அவருடைய கருத்தினுக்கு ஆதாரமாகத் திருமறை நூல்களிலிருந்து மேற்கோள்களை எடுத்துக் காட்டினார் அவருடைய கருத்தினை எதிர்த் தவர்கள் எடுத்துக்காட்டிய மேற்கோள்களை மறுத்து வாதிட்டார். மேலை நாட்டவர்களின் ஒழுக்க தத்துவம் சார்ந்த பகுத்தறிவு வாதத்தை இந்துக்கள் ஏற்றுக்கொள்வதில் தவறில்லை என்றார். இந்து மதம் ஒழுக்கத்தத்துவம், பகுத்தறிவு ஆகியவற்றுடன் தொடர்பு கொண்டிருப் பதையே அக்கருத்தினுக்கு ஆதாரமாகக் காட்டினார். இத்தகைய

கருத்து சரியா தப்பா என்று நாம் இங்கு ஆராய வேண்டியது அவசியமில்லை. ஆனால் நாம் அதனுடைய வரலாற்றுத் தொடர்பை மட்டுமே இங்கு கவனித்தல் அவசியமாகிறது. அது வளர்ச்சியுற்று வரும் மேலைநாட்டுப் பண்புகளைப்பெற்ற மக்கள் வகுப்பினருக்குத் தேவைப்பட்டிருந்த பழைய சமுதாயக் கோட்பாடுகளுடன் மேலைநாட்டுப் பண்புகளை இணைக்கவல்ல ஒரு சாதனமாக அது அமைந்தது.

இனி அந்த வகுப்பினர்கள் பெற்றிருந்த நல்வாய்ப்பு நிலையைப் பற்றி கவனிப்போம். நடுத்தர வகுப்பினர் இந்திய விவகாரங்களில் குறைந்த முக்கியத்துவம் வாய்ந்த பங்கே பெற்றிருந்தனர். தூரம், மொழி, சாதி உணர்ச்சி, தொழில் ஆகியவை அவர்களைப் பல கூறுகளாகப் பிரித்திருந்தன. அவர்கள் பொதுவான எண்ணம் பெற்றிருக்கவில்லை. எல்லா இடங்களிலும் அவர்கள் அறிவாற்றல் மிகுந்த பிராமண உயர்குடியாளர்கள் நிலச் சொந்துடைய உயர்குடியாளர்களான சர்தார்கள், ஜமீன்தார்கள் ஆகியோருடைய ஆதரவில் வாழ்ந்து வந்தனர். வியாபாரிகள், அரசாங்க அலுவலர்கள், மருத்துவர்கள், வழக்கறிஞர்கள் ஆகியோரை ஒருவரோடு ஒருவரை பிணைக்கவல்ல பொது கருத்தோ இயல்போ காண இயலாது. உயர்குடியாளர்களும், கீழ்த்தர மக்களும், ஒரு உட்பிரிவுக்கும் மற்றொரு உட்பிரிவுக்கும் இடையே ஏற்பட்டிருந்த ஒதுங்கி வாழ்கிற மனப்பான்மையைத் தகர்த்தெறியும் வரை பொதுவான எண்ணம் வளருவதற்கு வழியில்லாதிருந்தது. அந்த வகையில் பிரிட்டிஷ்காரர்களின் ஆட்சியின் தொடக்கத்தில் மேற்கொள்ளப்பட்ட முதல் நடவடிக்கை பழைய உயர்குடியாளர்களை பதவிகளினின்றும் நீக்கி விடுதலேயாகும். 1793-இல் காரன் வாலிஸ் பிரபு கம்பெனிக்குப் பதிலாக அரசாங்க வேலைகளைக் கவனித்து வந்த உயர் பதவியிலிருந்த இந்திய நிருவாகிகளை பதவியிலிருந்து நீக்கினார். பழைய காலத்தில் ஆண்டு வந்திருந்தவர்கள் இப்பொழுது மான உணர்ச்சியுடன் வறுமை வாழ்க்கையை மேற்கொண்டனர். தங்களுடைய பழைய பெருமைகளை எண்ணமிட்டுக்கொண்டு ஒதுங்கி வாழத் தலைப்பட்டனர். மதிப்பிற்குரிய வேலையைத் தரக்கூடிய அன்னிய மொழியைக் கற்க வேண்டிய அவசியத்தை அவர்கள் ஆராய்ந்து பார்க்கவில்லை. புதிதாக ஏற்படுத்தப் பெற்றத் திட்டங்கள் பழைய நிலச்சொத்துடைய நடுத்தர மக்கள் தங்களுடைய செல்வாக்கை இழக்கக் காரணமாய் அமைந்தன. சென்னையில் பாளையக்காரர்கள் அழிவுற்றனர். வங்காளத்தில் ஜமீந்தாரி திட்டத்தின் கீழ் கொண்டு வரப்பெற்றிருந்த நிலங்கள் கைமாறின. ஜாகீர்களின் எண்ணிக்கை குறைக்கப்பட்டது. வரியின்றி நில உடைமை உரிமையைப் பெற்றிருந்தவர்கள் தங்களுடைய உரிமைகளைப் பற்றி

அரசாங்கம் ஐயம் கொள்வதைக் கண்டார்கள்.[1] இவற்றினின்றும் தப்பிப் பிழைத்திருந்தவர்கள் தங்களுடைய தகுதிக்கு ஏற்ற பதவிகளைப் பெறலாம் என்ற நம்பிக்கையின்றி வாழ்ந்திருந்தனர். அவர்கள் பெற்றிருந்த சட்டம் சார்ந்த அதிகாரங்கள், அரசியல் வருவாய் சார்ந்த அதிகாரங்கள் அவர்களிடமிருந்து நீக்கப்பெற்றதால் அவர்கள் தங்களுடைய வட்டாரங்களில் பெற்றிருந்த செல்வாக்குக் குறையலாயிற்று. அவர்கள் தங்களுடைய தகுதிக்கு ஏற்ற பதவிகளைப்பெற முடியவில்லை. மேலை நாட்டு கல்வி முறையில் பயிற்சி பெற்று அதன் வாயிலாக புதிதாக உருவாக்கப்பெற்ற அமைப்பில் பங்கு பெறுவதற்குத் தங்களைத் தகுதி பெற்றவர்களாகச் செய்துகொள்ளவும் முற்படவில்லை.

இவ்வாறாக புதிய நடுத்தர வகுப்பு ஒன்று தோன்ற வழி ஏற்பட்டது. இந்திய சமூகத்தை மூடியிருந்த திரை நீக்கப்பெற்றது. அத்துடன் இந்திய சமூகத்தினருடைய பேரார்வத்தைத் தடைப்படுத்தியிருந்த தடைகளும் நீக்கப்பெற்றன. ஆனால் முதன் முதலில் ஏற்பட்ட வளர்ச்சி ஒரு சார்புடையதாகவும், ஏறுமாறானதாகவும் இருந்தது. பயனடைந்த மக்கட் பிரிவுகளுள் பிரிட்டிஷ் ஆட்சியின் இருப்பிடங்களில் வாழ்ந்திருந்த வியாபாரிகளும், கொடுக்கல் வாங்கல் செய்பவர்களும் முதலிடம் பெறுகிறார்கள். அவர்கள் புதிய அமைப்பில் தரகர்களாகப் பணியாற்றி வந்தனர். அவர்களுள் பணம் சம்பாதிப்பதில் வெற்றி கண்டவர்கள் அநேக ஜமீந்தாரிகளை விலைக்கு வாங்கினார்கள். 1793-இல் ஏற்படுத்தப்பெற்ற நிலையான நிலவரித்திட்டம் தவணை கடந்து செல்லுபடியற்ற நிலையினை அடைந்த பொழுது அநேக ஜமீந்தாரிகளை அவர்களுள் பணம் தேடுவதில் வெற்றி கண்டவர்கள் விலைக்கு வாங்கினார்கள். புதிதாக ஏற்படுத்தப்பெற்ற பாதுகாப்பு வணிகர்களுக்கு பெருத்த இலாபத்தை தேடித்தந்தது. பிரிட்டிஷ் ஆளுகைக்குட்பட்ட துறைமுகப் பட்டணங்களில் வாழ்ந்திருந்த வணிகர்கள் கொடுக்கல் வாங்கலில் ஈடுபட்டிருந்தவர்கள் ஆகிய வகுப்புகளைச் சார்ந்தவர்கள் ஆங்கிலம் கற்க முற்பட்டார்கள். தொழில் காரணங்களுக்காகவே அவர்கள் ஆங்கிலம் கற்க முன் வந்தனர் என்பதைப் பொதுவாக எல்லோருமே ஏற்றுக்கொண்டனர். ஆயினும் அவர்களும் அவ்வகுப்பைச் சேர்ந்த மற்ற உட்பிரிவுகளும் தங்களுக்கிடையே ஒருமைப்பாட்டுணர்வை இன்னும் வளர்க்க முற்படவில்லை. பனியா அல்லது சவுக்கார், காயஸ்த் அல்லது காத்திரியுடனும், ஹகீம்கள், வாயிதுகள் ஆகியோர் மௌல்விகளுடனும், பண்டிதர்களுடனும் தொடர்பு வைத்துக்கொள்ளவில்லை. அவர்களை இணைக்கக்கூடிய பிணைப்புகளும், சமயத்துறைச் சார்ந்த இடை இணைப்புகளும் தோன்றி

[1] பெண்டிங்கு காலத்தில் இது ஏற்பட்டது. குறிப்பாக பம்பாயில் இனம் கமிஷன் இவ்வேலையில் ஈடுபட்டிருந்தது.

யிருக்கவில்லை. பெண்டிங்கும் அவரைப் பின்தொடர்ந்த கவர்னர் ஜெனரல்களும் 1830 முதல் 1839 வரை மேற்கொண்ட நடவடிக்கை கள் அத்தகைய இணைப்புச் சாதனங்களை ஏற்படுத்தித் தந்தன. ஆங்கில மொழியைக் கற்பிக்க அரசாங்கத்தினர் மேற்கொண்ட முயற்சி பயனுேக்கிய நடவடிக்கையாக அமைந்திருந்தது. பிற்போக்கு கருத்துக்களைக் கொண்டிருந்த இராஜா இராதாகாந்த் தேப் என்பவர் கூட அக்காரணத்திற்காக அதனை வரவேற்ருர். ஆனுல் அதனுடன் மேல் நாட்டவர்கள் பெற்றிருந்த அறிவும், விஞ்ஞானமும் சேர்த்து கற்பிக்கப்பட்டது. ஆகவே புதிய மொழியுடன் புதிய அறிவும் இந்தியாவிற்குள் புகத் தொடங்கியது. அரசாங்கக் காரியங்களுக்கும், உயர்நீதிமன்றங்களிலும் பாரசீக மொழிக்குப் பதிலாக ஆங்கிலமே பயன்படுத்தப் பெற்றதால் ஆங்கிலம் கற்பதற்கு பலர் முன் வந்தனர். மேலும் ஆங்கில மொழி முன்னைவிட அதிகமான அளவில் பயன்படுத்தப் பெற்றது. டல்ஹெளசி காலத்தில் உதவிக்கொடை முறை நடைமுறைப் படுத்தப்பெற்றதால் பள்ளிகளும், கல்லூரிகளும் பெருக்கம் கண்டன.

பணித்துறையில் கீழ்ப் பதவிகளை வகிப்பவர்களுக்கும் ஆங்கில மொழி அறிவு தேவைப்பட்டதால் ஆங்கில மொழி கற்க பலர் முன் வந்தனர். அத்துடன் பல புதிய வாழ்க்கைத் தொழில்களும் ஏற்பட்டன. அப்புதிய வாழ்க்கைத் தொழில்கள் திறமையானவர் களுக்கு முன்னேற்ற வாய்ப்பையும், மதிப்பையும் ஏற்படுத்திக் கொடுத்தன. புதிய கல்லூரிகளும், பள்ளிகளும் துவங்கப்பெற்றதால் ஆசிரியர்கள் அதிகளவில் தேவைப்பட்டனர். அவ்வாசிரியர்கள் சமூகத்தில் மதிப்புக்குரிய இடத்தைப் பெற்றிருந்தார்கள். புதிய சட்டமுறை ஏற்படுத்தப்பெற்றதால் வழக்கறிஞர்கள் பலர் தோன்றினர். அவ்வழக்கறிஞர்கள் சுதந்திரமும், சமூகத்தில் மதிப்பும் பெற்றிருந் தனர். பெண்டிங்கு பிரபு காலத்தில் கல்கத்தாவில் மருத்துவக்கல்லூரி தொடங்கப்பெற்றதுடன் அதன் பயனுக மேல்நாட்டு வைத்திய முறையை வாழ்க்கைத் தொழிலாக மேற்கொண்டவர்கள் தோன்றலா யினர். ஆட்சி முறையைச் சார்ந்த உயர் பதவிகளை இந்தியர்கள் வகிக்க வழிவகை செய்யப்பட்டதன் விளைவாகவும், தாசில்தார் போன்ற சிறிது கீழ்ப்படியான பதவிகளின் மதிப்பு உயர்த்தப்பட்ட காரணத்தா லும், ஆட்சி முறையில் இந்தியர்களுக்கு ஏற்படுத்தப் பெற்றிருந்த வாய்ப்புகள் அதிகரித்தன. மேல் நாட்டவர்க்குரிய தொழில் நுட்ப முறைகள் வளர்ச்சியுற்றது. அதன் விளைவாக இரயில் பாதை நிறுவனங்கள், (1856 முதல்) பொதுப்பணித்துறைகள், பொறியியல் சார்ந்த பணித்துறை, காட்டு இலாகா, ஏனைய பணித்துறைகள் ஆகி யவை மிக்க ஆர்வ எழுச்சியுடையவர்களுக்கு மேலும் பல வாய்ப்புகளை ஏற்படுத்திக் கொடுத்தன. கீழ்ப்படியான பதவிகளை வகிப்பதற்கு

விருப்பங்கொண்டிராத மட்டு மீறிய தன் மதிப்புடையவர்கள் அத் துறைகளில் சேர்ந்து பணியாற்றும் வாய்ப்பை இழந்திருந்தனர். ஆனால் அத்துறைகளில் சேர்ந்து முன்னுக்கு வர விரும்பியவர்களுக்கு அத்துறைகள் அவர்களுக்கு துணையுதவி செய்தன. ஆகவே உயர்குடி மக்கள் ஆட்சியாளர்களிடமிருந்து விலகி தனித்து வாழ்ந்து கொண்டிருந்தனர். நடுத்தர வகுப்பினர் பெருக்கம் அடைந்ததுடன் நல்ல இலாபத்தையும் அடைந்தார்கள். லிட்டன் பிரபு காலத்தில் அமைக்கப் பெற்ற தேர்வின்றி சட்ட வாயிலாக நியமனம் செய்யப் பெற்ற சிவில் சர்விசு கூட உயர்குடி மக்களைக் கவரத் தவறியது. ஆனால் அதற்கு ஏற்படுத்தப் பெற்ற மாகாண சர்விசில் இடம் பெற நடுத்தர வகுப்பினர் மிகுந்த ஆர்வத்துடன் முயன்றனர். இவ்வாறாக ஆட்சி முறையைச் சார்ந்த துறையில் அடக்க வொடுக்கமான நடுத்தர வர்க்கத்தினர் பெரும் செல்வாக்கைப் பெற்றனர்.

புதிதாக ஏற்படுத்தப் பெற்றிருந்த முன்னேற்ற வாய்ப்புகள் நடுத்தர வர்க்கத்தினருடைய பெருக்கத்திற்கும், ஊக்க வெழுச்சிக்கும் காரணமாக அமைந்திருந்தன. அதுமட்டுமின்றி இதுவரை ஏற்பட்டிராத வகையில் அவர்கள் அனைவரையும் இப்பொழுது ஒன்று பட்டு இயங்கத் தொடங்கினார்கள். புதிய கல்விமுறை அவர்களுக்குப் பொதுவான ஒரு மொழியையும், பொதுவானக் கருத்துக்களையும், அறிவையும் அளித்திருந்தது. அதே நேரத்தில் அவர்களுடைய உட்பிரிவுகளைச் சார்ந்த வழிவழி மரபான கருத்துக்களையும் உடன் கொண்டிருந்தனர். புதிதாக ஏற்படுத்தப் பெற்ற பத்திரிகை நிறுவனங்கள் அறிவாற்றல் பொருந்திய புதிய உலகத்துடன் அவர்கள் ஏற்படுத்தியிருந்த தொடர்பு நீடித்திருக்க உதவின. மேலும் அந்தொடர்பால் அவர்களிடம் தோன்றிய எதிர்ச் செயல்களை பரப்புவதற்கும் அவை துணை செய்தன. புதிதாக நிறுவப் பெற்ற போக்குவரத்து சாதனங்கள் சென்னையிலிருப்பவர்கள் டில்லியில் இருப்பவர்களுடன் நேரடி பேச்சுத் தொடர்பு வைத்துக் கொள்ளவும், பம்பாயில் இருப்பவர்கள் கல்கத்தாவில் இருப்பவர்களைச் சந்திக்கவும் வாய்ப்பு அளித்தன. இவ்வாறாக புதிய கல்விக் கொள்கை நடைமுறைப் படுத்தப் பெற்ற கால முதற் கொண்டு, இல்பர்ட் மசோதா இயற்றப்பட்ட காலம் வரையுள்ள ஐம்பது ஆண்டுகளில் நடுத்தர வகுப்பினர்களிடையேயிருந்து ஒரு புதிய ஒருமைப்பாடுடன் கூடிய அனைத்து இந்திய வகுப்பு ஒன்று தோன்றியது. அவ்வகுப்பைச் சார்ந்தோர்கள் பல பின்னணிச்சூழல்களில் வளர்ந்திருந்த போதிலும், பொதுவான அறிவு, கருத்து, பண்புகள் ஆகியவைகளைப் பெற்றிருந்தார்கள். இந்திய சமுதாயத்தில் அவர்கள் சிறுபான்மையினராக இருந்தனர் என்பது உண்மை. ஆனால் அவர்கள் ஒற்றுமை, செயல் நோக்கம், நம்பிக்கைக்கு ஏதுவாக இருக்கும் பொருள் ஆகிய

வற்றை நுணித்தறியும் திறம் கொண்டவர்களாயிருந்தனர். அவ்வகுப்பினை தற்கால இந்தியாவின் புதியதாக ஏற்பட்ட உயிர்நிலை என்று கூறலாம். வெகு விரைவில் இந்திய மக்கள் அனைவருக்கும் தன்னுடைய உணர்ச்சியை ஊட்டவல்லதாக இருந்தது.

இந்தகைய வகுப்பைச் சார்ந்தவர்கள் தங்களுடைய கருத்துக்களை அரசியல் சார்ந்த வழிகளிலே தெரிவிக்க ஆசைப்பட்டனர். அத்தகைய விருப்பம் தவிர்க்க முடியாத ஒன்றாக இருந்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் முற்போக்குக் கருத்துக்களைக் கொண்டவர்கள் தொடங்கிய இயக்கம் முழுவதும் அரசியல் சார்ந்த வழிகளிலேயே விளக்கப்பட்டு வந்தன. அதே முறையில் இந்தியாவில் தோன்றிய புதிய வகுப்பினரும் கையாண்டு வந்தனர். இந்த வகையில் அவர்கள் ஐரோப்பாவிலிருந்து தாம் பெற்றக் கருத்துக்களை ஏற்றுக்கொள்வதுடன் நிறுத்திக் கொள்ளாமல் அவைகளை கடைப்பிடித்து வருபவர்களாகவும் தோன்றினார்கள். மேலும் அன்னிய நாட்டிலிருந்து வந்த ஆட்சியாளர்களுக்கும் இந்திய மக்களுக்கும் இடையே தகராறு ஏற்படுவதையும் தவிர்க்க இயலாதிருந்தது. ஆளப்படுபவர்கள் வெகு விரைவான முன்னேற்றம் காண விழைந்தார்கள். ஆனால் ஆளுபவர்கள் அந்த வேகத்தில் ஆட்சி முறையை அவர்களிடம் ஒப்படைத்துவிட்டு இந்தியாவினின்றும் விலக விருப்பங் கொள்ளவில்லை. அதோடு இணைந்திருந்த பிரச்சனைகள் எல்லாம் எந்த அளவிற்கு அவர்களுக்கு அரசியலில் பங்களிக்க வேண்டும், எவ்வளவு காலம் அன்னிய ஆட்சி நிலைபெற்றிருக்க வேண்டும் எத்தகைய விளைவுகளுடன் மாறுதல்கள் ஏற்படுத்த வேண்டும் என்பவைகளைப் பற்றியிருந்தன. 1830ஆம் ஆண்டிற்குப் பின் இருந்தே பிரிட்டிஷ்காரர்கள் இந்தியர்களுக்கு முடிவாக தன்னாட்சியுரிமையை வழங்க எண்ணமிட்டிருந்தனர் என்பதை முன்னரே கவனித்துள்ளோம். ஆனால், 1857ஆம் ஆண்டு கலகத்திற்குப்பிறகு 'முடிவாக' என்ற சொற்றொடருக்கு நெகிழும் தன்மைவாய்ந்த பொருளைக் கொடுக்கத் தொடங்கினார்கள். இவ்வாறாக அவர்களுடைய முக்கிய நோக்கங்கள் ஒன்றாகவே இருந்தன. ஆனால் அந்நோக்கங்களை எப்பொழுது நிறைவேற்ற வேண்டும் என்பதில் ஆரம்பத்திலிருந்தே கருத்து வேற்றுமை ஏற்பட்டிருந்தது. மேலும் இரண்டு மூலக் கருத்துக்கள் இப்பொழுது குறுக்கிட்டன. முதலாவதாக புதிய இந்தியாவைத் தலைமை தாங்கி நடத்தும் பொறுப்பை ஏற்கத்தகுதிபெற்றவர்களை தேட முயன்றபோது அவர்கள் சரியான திசையில் செல்லவில்லை. பிரிட்டிஷ் ஆட்சியை நடத்தி வந்த முதல் நிருவாகிகள், பண்டைக் காலத்தில் ஆட்சி நடத்தும் பொறுப்பை மேற்கொண்டிருந்த வகுப்பிலிருந்துதான் இந்தியத் தலைவர்கள் தோன்றுவார்கள் என்று கருதிவந்தார்கள். பம்பாய் மகாணத்தின் ஒரு மாவட்டத்தை இந்தியர்களைக் கொண்டு ஆட்சி புரிய வேண்டும் என்று

எல்பின்ஸ்டன் யோசனை கூறிய பொழுது, அந்த யோசனையை அந்த வகுப்பைக் கொண்டுதான் நிறைவேற்ற முடியும் என்று கருதினார்கள். அதனையொத்த சில யோசனைகளை மால்காம் கூறியபோதும் முன் போலவே இப்பொழுதும் கருதலாயினர். டல்ஹௌசி ஏற்படுத்திய புதிய சட்டசபையில் அங்கம் வகிக்க இந்தியர் ஒருவரை நியமிக்கும் போதும் அந்த வகுப்பையே நாடினார்கள். ஹென்றி லாரன்சு சீக்கிய சர்தார்கள் புது வாழ்வு பெறுவதற்கு தன்னுடைய வாழ்க் கையைப் பணயமாக வைத்தார். 1862-இல் புதிய சட்டசபையொன்று ஏற்படுத்தப் பெற்றபோது அதில் அங்கம் வகிக்க வேண்டிய இந்திய உறுப்பினர்களை இவ்வகுப்பிலிருந்தே காணிங்கு பொறுக்கி எடுத்தார். லிட்டன் பிரபு சட்ட முறையான சிவில் சர்விசை அமைத்தபோது அதனை இவ்வகுப்பினர்களைக் கொண்டே நிரப்ப முடிவு செய்தார். இந்திய நாட்டின் தலைமைப் பொறுப்பை ஏற்க இவ்வகுப்பினின்றும் முன் வரமாட்டார்கள் என்பது தெளிவாக விளங்கியபோது அனேக பிரிட்டிஷ் நிருவாகிகள் அவ்வகுப்பை அணுகுவதை நிறுத்திக் கொண் டார்கள். அரசியல் சார்ந்த கருத்தறிவிக்கும் செயற் குறிப்புகளை புதிய நடுத்தர வகுப்பினர்கள் வெளிக்காட்டியபோது, பிரிட்டிஷ் நிரு வாகிகள் அவைகளை முறைப்படியமைத்த குறிப்புகளாக ஏற்க மறுத்து விட்டனர். அவ்வகுப்பினர்களிடமிருந்து யாதொரு நற்செயலும் ஏற் படாது என்பதே அவர்களுடைய கருத்தாகும். அப்பொழுதிலிருந்து இந்தியாவிலும், இங்கிலாந்திலும் வாழ்ந்திருந்த பிரிட்டிஷ் மக்களி டையே நடுத்தர வகுப்பைச் சாரந்தவர்களுடைய தேசிய இயக்கத்தின் இயல்பைக் குறித்து மாறுபட்டக் கருத்து தோன்றியது. 1914ஆம் ஆண்டிற்கு முன் அவர்களுள் பெரும்பான்மையினர் அதனுடைய முக்கியத்துவத்தை குறை மதிப்பிட்டார்கள். 1925க்குப் பிறகுதான் பிரிட்டிஷ்காரர்களில் பெரும்பான்மையினர் இந்திய தேசிய இயக் கத்தின் உண்மை நிலையினை உணர்ந்தனர். அப்போது அதனை இந்திய அரசியல் துறையில் காணப் பெற்ற பெரும் சக்தியாக ஏற்றுக் கொண் டனர். அதற்கு காரணம் ஹாலிபாக்ஸ் மேற்கொண்ட கடும் முயற்சி யாகும். இரண்டாவதாக, நாட்டில் அமைதி ஏற்படத் தொடங்கியது முதல், பிரிட்டிஷ் நிருவாகிகள் அரசியற்கலையில் காட்டிவந்த அக்கறை குறைந்து வரலாயிற்று. அதே நேரத்தில் அவர்கள் நிருவாகத்தில் காட்டி வந்த அக்கறை நாளுக்கு நாள் பெருகிக் கொண்டே வந்தது. நிருவாகத்தில் குறிப்பிட்ட பயனை நிறைவேற்றி விடவேண்டும் என்னும் நோக்கம் மேற்கொள்ளப்பட்டதால் மக்களுடைய கஷ்ட நஷ்டங்களை அறிந்துக் கொள்ளும் மனப்பான்மை மறையலாயிற்று. நிறைவேற்றப்பட வேண்டியவை அதிகமாக இருந்தமையால் மக்களுடைய தலைவர்களைக் கலந்து ஆலோசித்து நடவடிக்கைகள் மேற் கொள்ள போதிய நேரம் இருக்கவில்லை. இந்தியப் பேச்சாளர்களும்,

தலைவர்களும் தங்களுடைய பொது விவகாரங்களைச் சார்ந்த கருத்துக் களை ஐரோப்பாவிலும், பிரிட்டனிலும் வெளியிடப்பட்ட முற்போக்குக் கருத்துக்களடங்கிய புத்தகங்களின் வாயிலாகப்பெற்றிருந்தனர். மேலும் அவர்களுக்குப் பொது விவகாரங்களில் போதிய அநுபவம் இல்லை. ஆகவே பிரிட்டிஷ் நிருவாகிகளுக்கு அவர்கள் வெறும் கற்பனையாளர் களாகத் தோன்றினார்கள். இத்தகைய சூழ்நிலையில் ஏற்பட்ட மனப் பான்மை சார்ந்த போராட்டம் தவிர்க்க முடியாததாக இருந்தது.

அந்த புதிய வகுப்பினர்கள் ஒரு சமயம் பிரிட்டிஷ்காரர்களின் ஆதரவைப் பெற்றும், மற்றொரு சமயம் அவர்களை எதிர்த்தும் இருந்தனர். அவ்விரு நேர்மாறான செயல்களுக்குட்பட்டிருந்ததின் விளைவாக அவ்வகுப்பு பெரும் வளர்ச்சியுற்றது. பெண்டிங்கு காலத் திலிருந்து பதவி வகித்திருந்த கவர்னர் ஜெனரல்களின் மனப்பான்மை, 1833-இல் இயற்றப்பட்ட சாசனச் சட்டம், 1858ஆம் ஆண்டின் அரசியல் அறிக்கை ஆகியவற்றில் காணப்பெறும் உறுதி மொழிகள், சட்டசபை, நீதிமன்றங்கள், அரசாங்கப் பணித்துறைகள் ஆகியவற்றை இந்திய மயமாக்க மேற்கொள்ளப்பட்ட முதல் நடவடிக்கைகள், இங் கிலாந்தில் இருந்த முற்போக்காளர்கள் அளித்து வந்த ஆதரவு ஆகியவை அதன் வளர்ச்சியைத் தூண்டிவிட்டன. இந்த வகையில் கிளாட்சன் ஆற்றிய தொண்டு மிகவும் சிறப்பானதாகும். மேலும் ஐரோப்பியர்கள் இந்திய கலாச்சாரத்திலும், இந்திய இலக்கியங்களிலும் அக்கறை கொள்ள ஆரம்பித்தார்கள். சர் வில்லியம் ஜோன்ஸ் என்பவர் பதி னெட்டாம் நூற்றாண்டில் இந்த வகையில் ஒரு தொடக்கத்தை ஏற்படுத்தினர். பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஐரோப்பா முழுவதிலும் இத்தகைய அக்கறை ஏற்பட்டிருந்தது. இது இந்தியரின் தன்மான உணர்ச்சியைப் பெருக்கியது. இதன் பயனாகவும் அவ் வகுப்பு வளர்ச்சி யுற்றது. புதிய வகுப்பிற்கு ஏற்பட்டிருந்த எதிர்ப்பைப் பற்றி இனி கவனிப்போம். இந்திய மயமாக்கும் முறையில் காணப்பெற்ற மெத்தன மும், வரம்பு மீறுந்தன்மையும், இந்திய மக்களை பொறுமையிழைக்கச் செய்துவிட்டன. இந்திய ஒழுங்கமைப்பு முறைகளை கடுமையாகக் கண்டித்ததன் விளைவாகவும், அவ்வமைப்பு முறைகள் அனைத்தும் நாகரிகப் பண்புகளை பெற்றிராதனவாக அனேகர் கருதி வந்ததன் விளை வாகவும்[1] இந்திய மக்களிடையே மனக்கசப்பு ஏற்பட்டிருந்தது. வாணிப விவகாரங்களில் நேர்மையற்ற வகையில் ஓரங்காட்டப்பட்டது என்ற கருத்து வளர்ச்சியுற்றதாலும் மக்கள் குறிப்பாக மேற்கு இந்தியா வில் வசித்து வந்தவர்கள் மனக்கசப்பு அடைந்தார்கள். ஐரோப் பியர்கள் இந்தியர்களைவிட நாகரிகப் பண்பில் உயர்ந்தவர்கள் என்று

[1]. J. Mill, History of India II & IIIம் புத்தகங்கள் பார்க்கவும். மெகாலேயும், அநேக லிபரல்களும் இந்த வகையில் நிந்திழைத்தவர்கள் ஆவார்கள்.



(a) கர்சன் பிரபு.



(b) இர்வின் பிரபு.

கருதியதால், இந்தியர்களை அவமதித்து வந்தனர். அதிலும் கீழ்ப்படிநிலையிலிருந்த ஐரோப்பியர்கள் இத்தகைய செய்கையில் அடிக்கடி ஈடுபட்டிருந்தனர். அதன் விளைவாகவும் இந்திய மக்களிடையே மனக்கசப்பு தோன்றியது.

பேச்சுத் திறனையும், கிளர்ச்சி மனப்பான்மையும் கொண்டிருந்த மக்கள் வாழ்ந்திருந்த கல்கத்தா நகரத்தில்தான் முதல் முதலில் அரசியல் நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது. ஒழுக்கவியல், சமூக சீர்திருத்தங்கள் ஆகிய துறைகளில் விவாதங்கள் ஏற்கனவே மேற்கொள்ளப்பட்டிருந்ததால் அரசியல் துறையிலும் அவைகளை மேற்கொள்ளுவது எளிதாக இருந்தது. 1840க்குப் பிறகு நிறுவப் பெற்ற 'பிரிட்டிஷ் இந்தியர் சங்கம்' முதன் முறையாக ஏற்படுத்தப் பெற்ற அரசியல் சார்ந்த சங்கமாகக் கருதலாம். அது மதிப்புடைய நிலம் படைத்தவர்களை உறுப்பினர்களாகக் கொண்டிருந்தது. அதனுடைய உறுப்பினர்களின் நலன்களைப் பாதுகாப்பதிலேதான் தன்னுடைய கவனத்தை அதிகமாகச் செலுத்தியிருந்தது. அது கோரிக்கைகளைவிட விண்ணப்பங்களையே சமர்ப்பித்து வந்தது. 1876-இல் 'இந்தியர் சங்கம்' என்ற சங்கத்தை சுரேந்திர நாத் பானர்ஜி நிறுவினார். சுரேந்திர நாத் பானர்ஜி ஒரு குறுகிய காலம் வரை இந்திய சிவில் சர்விசில் சேர்ந்து பணியாற்றி வந்தார். அதன் பிறகு அவர் ஆசிரியத் தொழிலை மேற்கொண்டார். அவர் பேச்சுத் திறனும், படைப்புத் திறனும் ஒருங்கே பெற்றிருந்தார். அவருடைய ஆற்றலைப்பயன் படுத்தத்தக்க நோக்கங்கள் அநேகம் இருப்பதை அவர் விரைவிலேயே கண்டறிந்தார். இந்தியர்கள் சிவில் சர்விசில் சேருவதற்கு ஏற்படுத்தப் பெற்றிருந்த வாய்ப்பினை தடை செய்யும் நோக்கத்துடன், அந்த சர்விசில் சேருவதற்காக ஏற்படுத்தப் பெற்றிருந்த வயது வரம்பு குறைக்கப்பட்டது. சுரேந்திர நாத்தினுடைய ஆற்றலை வெளிக்காட்டுவதற்குரிய வாய்ப்பை அந்த நடவடிக்கை ஏற்படுத்தித் தந்தது. நாடெங்கும் அதனுடைய கிளை நிறுவனங்கள் அமைக்க அது துணை செய்தது. லிட்டன் பிரபுவினுடைய பத்திரிகைச் சட்டம் (1878) அவருக்கு மற்றொரு வாய்ப்பை ஏற்படுத்தித்தந்தது. பத்திரிகைச் சட்டம் தோற்றுவித்த பிரச்சனை பொது மக்களின் கவனத்தை ஈர்க்க வல்லதாக அமைந்திருந்தது.

அதன் பிறகு ரிப்பனுடைய ஆட்சி தொடங்கியது. அவர் கிளாட்சனுடைய முற்போக்குக் கருத்துக்களை இந்தியாவிற்கு கொண்டு வந்தார். அவர் இன்னும் அதிகமான ஆற்றல் பெற்றிருந்தால் காங்கிரஸ் நிறுவனத்தின் தோற்றத்தை தடுத்து நிறுத்தி இருக்க முடியாது எனினும் பிரிட்டிஷ்காரர்களுடன் சேர்ந்து ஒத்துழைப்பைதன் வாயிலாக தங்களுடைய நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்ள எண்ணியவர்

களின் கைகளை அவர் வலுப்படுத்தி யிருக்கமுடியும். அவருடைய முதல் நடவடிக்கைகள் புதிய தேசியவாதிகளின் தன்னம்பிக்கையும், பெருமையையும் உயர்த்தின. அதன் பிறகு இல்பர்ட் மசோதா பெரும் கிளர்ச்சி ஒன்றை ஏற்படுத்தியது. அப்பொழுது இந்தியர்களுக்கும் ஐரோப்பியர்களுக்கு இடையே ஏற்பட்டிருந்த இனம் சார்ந்த பகைமை உணர்ச்சியும், சமுதாய மனப்பான்மையும் வெளிப்படையாகத் தெரிவிக்கப்பட்டன. அதிகார பீடத்தில் அமர்ந்திருப்பவர்கள் அசட்டை செய்யப்பெற்றனர். வங்காளத்தில் வாழ்ந்திருந்த அரசாங்கப் பணியில் சேர்ந்திராத ஐரோப்பியர்கள் திட்டமிட்டு போராட்டத்தை நடத்தி வந்தார்கள். இதுவே, இளமை மிடுக்குடன் கூடிய இந்திய தேசிய வாதிகளை உறுதியான நடவடிக்கையை மேற்கொள்ளத் தூண்டியது. அதன் விளைவாக இந்திய தேசிய காங்கிரஸ் ஏற்படுத்தப் பெற்றது. வெற்றிகரமாக நடத்தப் பெற்ற அக்கிளர்ச்சி பிறகு பின்பற்றத்தக்க வழிகாட்டியாக அமைந்தது. தானியச் சட்ட எதிர்ப்புச் சங்கம், அயர்லாந்து நிலக்கிழார்களை எதிர்க்கும் சங்கம், அயர்லாந்து தேசிய சங்கம் போன்ற நிறுவனங்களைப் பற்றியும் மக்கள் அதிகமாகத் தெரிந்து கொண்டிருந்தனர். வெற்றிகரமாக நடத்தப் பெற்ற கிளர்ச்சியும், மேற்குறிப்பிட்ட சங்கங்களைப் பற்றிய அறிவும் அவைகளைப் போலொத்த நடவடிக்கைகளை இந்தியர்கள் மேற்கொள்ளத் தூண்டின.

1885ஆம் ஆண்டில் டிசம்பர் மாதத்தில் பம்பாயில் இந்திய தேசிய காங்கிரசின் முதற் கூட்டம் நடத்தப் பெற்றது. தொடக்கத்தில் முற்போக்கு மனப்பான்மையைக் கொண்டிருந்த சில ஆங்கிலேயர்கள் அதற்கு ஆதரவளித்தார்கள். அவர்களுள் ஒருவர் A. O. ஹ்யூம் என்பவராவர். அவர் ஜோசப் ஹ்யூம் என்ற தீவிரவாதியின் புதல்வராவர். ஓய்வு பெற்ற சிவில் அதிகாரியான சர். W. வெட்டர் பர்ன், சர் டேவிட் யூல், சர். ஹென்றி காட்டன் ஆகியோரும் அதற்கு ஆதரவளித்தார்கள்.[1] முதல் கூட்டத்தில் எழுபத்திரண்டு பேர்களே கலந்து கொண்டனர். அவர்கள் அனைவரும் ஒரு சிறு தொகையைச் செலுத்தி தங்களை அக்கூட்டத்தில் கலந்து கொள்ள தகுதி பெற்றவர்களாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டனர். அப்பொழுதிலிருந்து மேற்கொண்ட காரியத்தில் அது தயக்கங் கொள்ளவில்லை. ஒவ்வொரு ஆண்டும் பெருமளவில் மகாநாடு நடத்தப் பெற்றது. அதில் எல்லா சமுதாயப் பிரிவினர்களின் பிரதிநிதிகளும், மாகாணங்களின் பிரதிநிதிகளும் கலந்து கொண்டனர். சர். சையது அஹமத் கானின் கருத்துக்கு இணங்க முஸ்லீம்கள் கலந்து கொள்ள தயங்கினார்கள். மக்கள் ஆட்சி ஏற்படுத்தப் பெற்றால் அது இந்துக்களின் ஆட்சியாகவே அமையும் என்று சையது அஹமத்கான்

[1] மூன்று ஆங்கிலேயர்கள் 1885 முதல் 1900 வரையுள்ள ஆண்டுகளில் காங்கிரஸ் தலைவர்களாக பணியாற்றியுள்ளார்கள்.

கூறினர். ஆண்டுதோறும் தேர்ந்தெடுக்கப் பெற்றத் தலைவர் காரியக் கமிட்டி, பொதுக் கமிட்டி, முழுமை பெற்ற கூட்டம் ஆகிய அமைப்பு முறைகளை ஏற்படுத்தினர்கள். தலைவர் பேருரை, விவாதங்கள், தீர்மானங் கள் ஆகிய நடைமுறைகளையும் ஏற்படுத்தினர்கள் வட்டாரங்களில் கிளை நிறுவனங்கள் நிறுவப் பெற்றன. காங்கிரஸ் நிறுவனத்திற்குரிய தனி இயல்பை அது ஏற்படுத்திக் கொண்டது. வெகு விரைவில் அது இயக்கமாக மட்டுமன்றி கட்சியாகவும் மாறிவிட்டது. அதனுடைய அங்கத்தினர்களின் எண்ணிக்கையை விட ஆதரவாளர்கள் எண்ணிக்கை அதிகமாயிற்று. பெரிய பட்டணங்களுக்கு வெளியே, அந்த நிறுவனத் தில் அங்கத்தினராகச் சேர்ந்து கொள்ளுவது ஒரு துணிச்சலான காரிய மாகக் காணப்பட்டது. அதனுடைய கூட்டங்களில் கலந்து கொள் வதும் துணிவான செய்கையாகக் கருதப்பட்டது.

அரசாங்கம் அதனுடைய வளர்ச்சியைக் கண்டபோது விழிப்புட னும், நேச மனப்பான்மையுடனும் நடந்து கொண்டது. டஃப்பரின் பிரபு அதனுடைய முக்கியத்துவத்தை ஓரளவு உணர்ந்திருந்தார். ஆகவே அதற்கு அருள் நலமார்ந்த வாழ்த்துக்களை சிறிதளவு அளித்தார். அதனுடைய தோற்றத்தைப் பயன் படுத்தி சபைகளைக் கொண்டு ஆட்சி நடத்தும் முறையை விரிவு படுத்த வேண்டும் என்று வற்புறுத்தினர். நான்கு ஆண்டுகளாக நடைபெற்று வந்த விவாதத்திற்குப் பின்னர், 1892-இல் இந்திய கவுன்சில் சட்டம் நிறைவேற்றப்பட்டது. அச்சட் டம் இந்தியர்களுக்கு முழு திருப்தியை ஏற்படுத்தவில்லை. ஆயினும் அது சில திண்ணிய விளைவுகளை உண்டாக்கியது. உறுப்பினர்களை நியமனம் செய்ய வேண்டும் என்று சிபாரிசு செய்திருந்த போதிலும் நடைமுறை யில் அங்கத்தினர்களை தேர்ந்தெடுக்கும் முறையினை மேற்கொள்ளும் வகையில் அது அமைந்திருந்தது. அதன் பயனுக காங்கிரஸ்காரர்கள் இதுவரை உயர் குடி மக்களே அங்கம் வகித்திருந்த சபைகளில் உறுப் பினர்களாக இருந்து பணியாற்றத் தொடங்கினர்கள். G. K. கோகலே மத்திய சட்டசபை உறுப்பினரானர். வெகு விரைவில் அச்சபையின் சிறப்புமிக்க உறுப்பினர்களுள் ஒருவராகத் திகழ்ந்தார். சட்டசபை யின் அதிகாரங்களும் விரிவாக்கப் பெற்றன. அதன் விளைவாக அரசாங் கத்தின் வரவு செலவு திட்டத்தைப்பற்றி விவாதிக்க அதிகாரம் அதற்கு வழங்கப் பெற்றது. அதனல் பொது வாழ்வு சார்ந்த அரசாங்கக் கொள்கையைப் பற்றிய பிரச்சனைகளையும், குறிப்பிட்ட திட்டங்களைப் பற்றிய பிரச்சனைகளையும் விவாதிக்க இப்பொழுது வாய்ப்பு ஏற் பட்டது. ஆண்டுதோறும் வரவு செலவு திட்டத்தைப்பற்றி கோகலே சட்டசபையில் நிகழ்த்திய சொற்பொழிவும், காங்கிரஸ் தலைவரின் தொடக்கப் பேருரையும், புதிய தேசிய உலகத்தில் ஏற்பட்ட இரண்டு அரசியல் சார்ந்த பெரும் நிகழ்ச்சிகளாகக் கருதப்பட்டன.

காங்கிரஸ் நிறுவனத்திலேயே கருத்து வேறுபாடுகளும், நெருக்கடிகளும் ஏற்பட்டன. முதலில் கிளாட்சனுக்குரிய முற்போக்குக் கருத்துக்களும் இத்தாலியக் கருத்தியற் கோட்பாட்டினைச் சார்ந்த சில கருத்துக்களும் காங்கிரஸ் உறுப்பினர்களிடையே செல்வாக்குப் பெற்றிருந்தன.[1] அக்கருத்துக்களை ஏற்றுக்கொண்ட அங்கத்தினர்களே நீண்டகாலமாக ஆதிக்கம் பெற்றிருந்தனர். ஆனால் முற்போக்குக் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்ட சீர்த்திருத்தங்களை ஏற்படுத்துவதுடன் மன நிறைவு அடையலாகாது என்றும், அத்தகைய நடவடிக்கைகள் மற்றொரு சீரிய நோக்கத்தை நிறைவேற்றுவதற்கு உதவி செய்யத்தக்க முறையில் அமைய வேண்டும் என்றும் ஒரு சிலர் துவக்கத்திலிந்தே எண்ணமிட்டு வந்தனர். அவர்கள் மற்றவர்களைப் போலவே தன்னாட்சி முறையை ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்கத்தைக் கொண்டிருந்தனர். ஆனால், அது எவ்வாறு அமைய வேண்டும் என்பதைப்பற்றி அவ்விரு சாரார்கள் மாறுபட்ட கருத்துக்களைக் கொண்டிருந்தனர். அவர்களுள் ஒரு பிரிவினர், அது வழி வழிமரபாக வந்திருக்கும் இந்தியக்கருத்துக்களுக்கேற்ப அமைக்கப்பட வேண்டும் என்றும் மற்றவர்கள் அது ஐரோப்பிய மக்களாட்சிக் கருத்துக்களுக்கேற்ப அமைக்கப்பட வேண்டும் என்று கருதினார்கள். தொடக்கத்திலிருந்தே காங்கிரஸ் நிறுவனத்தின் அமைவு நோக்கங்களை வரையறுப்பதில் பம்பாயைச் சார்ந்தவர்கள் கல்கத்தாவைச் சேர்ந்தவர்களுக்குச் சமமாகப் பங்கு கொண்டிருந்தார்கள். தாதாபாய் நௌரோஜி காங்கிரசின் இரண்டாவது தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் ஒரு பார்சியர். முற்போக்கு எண்ணம் கொண்டவர். சில ஆண்டுகள் பிரிட்டிஷ் பார்லிமெண்டின் லிபரல் கட்சியைச் சார்ந்த உறுப்பினராகப் பணியாற்றி வந்தவர். அவருக்கு அடுத்தபடியாக காங்கிரசின் தலைவராகப் பணியாற்றியவரும் பம்பாயைச் சார்ந்த ஒரு முஸ்லீமே ஆவார். மேலும் பம்பாயில்தான் காங்கிரஸ் உறுப்பினர்களிடையே தோன்றிய கருத்து வேறுபாடு தெளிவாக வெளிப்படுத்தப் பெற்றது. பூனாவைச் சேர்ந்த இரண்டு சித்பாவன் பிராமணர்கள் வாயிலாக அவ்விருவகை கருத்துக்கள் வெளிப்பட்டன. அவர்களுள் ஒருவர் G. K. கோகலே என்பவர். அவர் ரானேடே என்ற பெயருடைய நீதிபதியின் சீடராவார். மற்றவர் பாலகங்காதர திலகராவார். அவர் 'கேசரி' என்ற மராத்தியப் பத்திரிகையின் ஆசிரியராவார். திலகர், சிவாஜியின் சாதனைகள், மராத்தியப் பேரரசு பெற்றிருந்த மேம்பாடுகள் ஆகியவற்றில் தன்னுடைய சிந்தனையைச் செலுத்தி இருந்தார். கோகலே, முற்போக்குத் தன்மையுடன் கூடிய பகுத்தறிவு வாதத்தின் அடிப்படையில் நிறுவப்பெறும் பார்லிமெண்டு ஆட்சி முறையில் தன்

[1] சுரேந்திரநாத் பானர்ஜி உட்பட காங்கிரஸ்தாபனத்தின் தலைவர்களுள் பலர் ஆரம்பத்தில் மாட்சினி (Mazzini) யைப் பின்பற்றுபவர்களாகயிருந்தனர்.

னுடைய கவனத்தைச் செலுத்தி வந்தார். 1897-இல் பம்பாயில் 'பிளேக்' என்னும் கொள்ளை நோய் பரவியது. அப்பொழுது ஏற்பட்ட நெருக்கடியின் போது தான் அவர்களுக்கிடையே ஏற்பட்டிருந்த கருத்து வேறுபாடு வெளிப்படுத்தப் பெற்றது. அப்பொழுது அர்சாங்கம் மேற்கொண்ட தேக நலம் சார்ந்த தடுப்பு நடவடிக்கைகளை எதிர்த்து வந்த சம்பிரதாயப் பற்றுள்ளவர்களுக்குத் திலகர் ஆதரவளித்தார். மேலும் அப்சல்கானுக்கு எதிராக சிவாஜி மேற்கொண்ட வன்முறைச் செயலைப் புகழ்ந்து பேசினார். சிவாஜி மேற்கொண்ட வன்முறைச் செயல் அற விதிகளுக்கு அப்பாற்பட்டது என்று விளக்கம் கூறினார். மக்களை கிளர்ச்சி செய்யுமாறு தூண்டி விட்டார் என்ற காரணத்திற்காக அவர் சிறையிலிடப்பட்டார். இவ்வாறாக காங்கிரஸ் நிறுவனத்தில் மிதவாதிகள், தீவிரவாதிகள் என்ற இரு உட்பிரிவினர்கள் தோன்றினார்கள்.

இவ்வாறாக, பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில், அதாவது காங்கிரஸ் நிறுவனம் ஏற்படுத்தப் பெற்ற பதினைந்து ஆண்டுகளுக்குள்ளாகவே, அதனுடைய அங்கத்தினர்கள் இந்திய உள்நாட்டு விவகாரங்களைச் சார்ந்த பிரச்சனைகளுக்குத் தீர்வு காணும் வகையில் மேற்கொள்ளப்படும் முயற்சியை தொடங்கும் உரிமையைக் கைப்பற்றி விட்டனர். அதனுடைய உறுப்பினர்கள், 'மிக நுட்பமான சிறுபான்மையினர்' என்று 1888-இல் டஃப்பரின் பிரபு குறிப்பிட்டிருந்த வகுப்பைச் சேர்ந்தவர்களாவார்கள். புள்ளி விவரக் கணக்குப்படி அவருடைய கூற்று சரியானதென்றே நாம் கொள்ளவேண்டும். ஆனால் அவர்கள் சிறுபான்மையினராகவே இருந்த போதிலும், அவர்கள் அனைவருமே படைக்கும் திறனுள்ளவர்களாக இருந்தனர். அவர்கள் பெற்றிருந்த படைப்புத்திறன், நாளடைவில் செயலடங்கியிருந்த மக்கள், மயக்க நிலையில் இருந்த உயர் குடியாளர்கள், ஆகியோரின் தலைவர்களாக செயற்படுவதற்கான வாய்ப்பினை அவர்களுக்கு ஏற்படுத்தித் தந்தது. அவர்கள் சிறுபான்மையினர் என்றாலும், அவர்கள் படைப்புத்திறனையும், செயல் திறத்தையும் ஒருங்கே பெற்றிருந்தார்கள். இந்திய மக்களிடையே சுதந்திர உணர்ச்சி தோன்றுவதற்கு அரும்பாடுபட்ட வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்று நாம் அவர்களைக் குறிப்பிட்டுக் கூறலாம். அதே நேரத்தில் அவர்கள் மேல் நாட்டு கருத்துக்களையும், வழிகளையும் பின்பற்றி வந்தனர் என்பதை நாம் இங்குக் குறிப்பிடுதல் மிக மிக அவசியமாகும்.

# 7. சுதேச இராச்சியங்கள்

சுதேச இராச்சியங்களுக்கும், கம்பெனி, பிரிட்டிஷ் அரசாங்கம் ஆகியவற்றிற்கும் இடையே ஏற்பட்டிருந்த தொடர்புகளைப் பற்றி இந்த அத்தியாயத்தில் சிறிது கவனிப்போம். கிழக்கு இந்தியக் கம்பெனி முதன் முதலில் அரசாங்கப் பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தைக் கொண்டிருக்கவில்லை. எவ்வெவ் விடங்களில் பாதுகாப்பு அளிக்கவல்ல அரசாங்கம் ஒன்றை இந்தியர்கள் ஏற்படுத்தப் பெற்றிருந்ததோ, அங்கெல்லாம் அவ்வரசாங்கத்தின் ஆதரவின் கீழ் செயற்பட்டுவர விருப்பங்கொண்டது. அத்தகைய அரசாங்கம் ஏற்படுத்தப் பெற்றிராத இடங்களில், அக்கம்பக்கத்தி லுள்ள இந்திய அரசாங்கம் ஏதாவதொன்றின் வாயிலாக செயற்பட்டு வந்தது. 1750ஆம் ஆண்டு வரை முதலில் குறிப்பிடப்பட்ட முறையைக் கம்பெனி கையாளுவதற்கு மொகலாய அரசு உதவி செய்தது. அதன் பிறகு ஐம்பது ஆண்டுகளாக கர்நாடகத்தில் ஏற்படுத்தப் பெற்றிருந்த அரசாங்கத்தை அகற்றிவிட்டு ஆட்சிப் பொறுப்பைத் தானே ஏற்றுக்கொள்ளுவதற்குப் பதிலாக, அவ்வரசாங் கத்தின் வாயிலாக கம்பெனி மேலாட்சி செய்து வந்தது. கம்பெனி, கர்நாடக அரசு ஆகிய இவ்விருசாராரும் ஒருவருக் கெதிராக மற்றவர் இழைத்த தவறுகள், தீங்குகள் காரணமாக நவாப் தன்னுடைய அரசாங்க வருவாய் முழுவதையும் வட்டி செலுத்துவதற்கே செலவழிக்க வேண்டிய அளவிற்கு கடன்பட்ட போதுதான் கம்பெனி 1801-இல் ஆட்சிப் பொறுப்பைத் தானே ஏற்றுக்கொண்டது. சுபாதாரின் வாயிலாக அரசாங்கக் காரியங்களை நடத்தி வரவேண்டும் என்ற எண்ணத்தினால் கிளைவ் வங்காளத்திற்குச் சென்றாரேயொழிய அவர்கள் மீது கம்பெனியின் ஆட்சியைச் சுமத்துவதற்காக அல்ல. அதே முறையைத்தான் அதற்கு முன்னர் ஐதராபாத்தில் புஸ்ஸி என்ற பிரஞ்சுக்காரர் மிக வெற்றிகரமாகக் கையாண்டு வந்தார் என்பதை நாம் கருத்தில் கொள்வது அவசியமாகும். பிளாசிச் சண்டைக்குப் பிறகு கிளைவ் தன்னுடைய அறிவைச் சரிவர பயன்படுத்தத் தவறியதாலும்,

கம்பெனி தன்னுடைய அலுவலர்களைக் கட்டுப்படுத்த முடியாத நிலையில் இருந்தமையாலும் கம்பெனியே ஆட்சி நடத்தும் பொறுப்பை, சட்டப்படி எப்படி இருந்தாலும் சரி, நடைமுறையில் ஏற்றுக்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஏனைய இடங்களில் கம்பெனி தன்னுடைய ஆதிக்கத்தைப் பரப்பி வந்தது போல, மகாராஷ்டிரத்தில் தன்னுடைய ஆதிக்கத்தை விரிவுபடுத்த இயலவில்லை. அங்கு அதனுடைய ஆதிக்கம் ஏற்படுத்தப்பெற்ற இடங்கள் அனைத்தும் அது வென்ற இடங்களேயாகும். அவ்வாறு வென்ற இடங்களும் சால்செட், பிரோச் என்ற சிறு பகுதிகளேயாகும்.

1765-இல் கிளைவிற்கு மொகலாயப் பேரரசர் வங்காளம், பீகார், ஒரிஸ்ஸா என்னும் மாகாணங்களில் திவாணி அல்லது வரி வசூல் செய்யும் உரிமையை அளித்த நாள் முதற்கொண்டு கம்பெனி வரையறுக்கப்பெற்ற நிலப்பரப்பை உட்கொண்ட பேரரசை ஆண்டு வரத் தொடங்கியது என்று நாம் கூறலாம். அன்று முதற்கொண்டு தான், மேலே குறிப்பிட்ட இரண்டு ஆட்சிப் பகுதிகளைத் தவிர ஏனைய சார்புநிலை இராச்சியங்களுடன் கம்பெனி தொடர்புகொள்ளத் தொடங்கியது. அத்தகைய சார்பு நாடுகளுள் முதலாவது அயோத்தி யாகும். பக்ஸார் சண்டைக்குப் பிறகு தப்பியோடித் திரிந்துகொண்டிருந்த அயோத்தியின் நவாபான சுஜா உத் தௌலாவை கிளைவ் 1765-இல் மீண்டும் பதவியில் அமர்த்திய நாள் முதற்கொண்டு அயோத்தி, கம்பெனியின் ஆதரவை நம்பி வாழ்ந்துவரும் நாடாக இருந்து வந்தது. நவாப் கிளைவிடமிருந்து பெற்ற நன்மைக்காக 50 இலட்ச ரூபாய் கம்பெனிக்கு அளித்தார். மேலும் நவாபும், கம்பெனியும் ஒருவருக்கொருவர் உதவியளிக்க ஒப்பந்தம் செய்து கொண்டனர். அவ்வொப்பந்தத்தின் நிபந்தனைகள் பார்ப்பதற்கு நியாயமானதாகத் தோன்றியது. ஆனால் உண்மையில் அவை ஒரு சாராருக்கு மட்டுமே நன்மையைப் பயக்கத்தக்கனவாக அமைந்திருந்தன. ஏனெனில் நவாப் வஜீருக்குத்தான் அடிக்கடி உதவி தேவைப்பட்டது. அதன் விளைவாக எல்லைப்புறத்தில் கம்பெனியின் படைகளை நிறுத்த வேண்டிய நிலை ஏற்பட்டது. ஆகவே அவர் கம்பெனியினுடைய பேராதரவை நம்பி வாழவேண்டிய நிலை ஏற்பட்டது. ஆயினும் அவர் 1801ஆம் ஆண்டு வரை பெயரளவில் சுதந்திரமான சிற்றரசராக செயற்பட்டு வந்தார். நவாப் கம்பெனியிடமிருந்து தான் பெற்றுவந்த படைத்துறை உதவிக்கு ஈடு செய்யும் வகையில் உதவித்தொகை யொன்றை கம்பெனிக்கு வழங்கி வந்தார். அத் தொகையைக் குறித்த காலத்தில் செலுத்தத் தவறினார். ஆகவே 1801-இல் அந்த நிலுவைத் தொகையைச் சரிகட்டும் வகையில் அந்த இராச்சியத்தின் ஒரு பகுதியை வெல்லஸ்லி பிரபு கம்பெனியினுடைய நேரடி ஆட்சிக்குட்பட்ட பகுதி

களுடன் இணைத்துக் கொண்டார். அதன் விளைவாக அயோத்தி இராச்சியம், ஒரு பக்கத்தில் நேபாள இராச்சியம், ஏனைய பக்கங்களி லெல்லாம் கம்பெனியினுடைய ஆட்சிக்குட்பட்ட பகுதிகள் ஆகிய வற்றால் சுற்றி வளைக்கப்பட்டிருந்தது. 1798ஆம் ஆண்டிற்கு முன்னர் ஏற்படுத்தப்பெற்ற உடன்படிக்கைகள் அனைத்தும் கம்பெனியும், சிற்றரசர்களும் சமநிலையில் உள்ளவர்கள் என்றக் கருத்தின் அடிப்படை யில் ஏற்படுத்தப் பெற்றனவாகும். நைஜாமுடன் ஏற்படுத்தப்பெற்ற உடன்படிக்கைகளும் அந்தக் கருத்தினையே அடிப்படையாகக் கொண்டிருந்தன.

வெல்லஸ்லி பிரபுவினுடைய பதவிக் காலம் முதற்கொண்டுதான் உண்மையான சார்புநிலை இராச்சியங்கள் தோன்றின என்று நாம் கூறலாம். அவர் காலத்தில் மைசூர் இராச்சியத்தைக் கம்பெனி வென்று, அதனை அதனுடைய பழைய இந்து அரசர்களுக்கு கம்பெனி திருப்பிக் கொடுத்தது. அதற்குப் பதிலாக மைசூர் அரசர்கள் ஆங்கிலேயர்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்க இசைந்தார்கள். அயோத்தி இராச்சியத்தின் பாதி பகுதி ஆங்கிலேயர்களுடைய ஆட்சிப் பகுதிகளு டன் இணைக்கப்பெற்றது. எஞ்சியிருந்த பகுதி, வேறெந்த இராச்சி யத்துடனும் தொடர்பு கொள்ளாதவாறு பிரித்து வைக்கப்பெற்றது. ஆனால் அவர் கையாண்டு வந்த முக்கியமான கருவி துணைப்படை உடன்படிக்கைத் திட்டமேயாகும். முதலில் அத்திட்டத்தை நைஜாமை ஏற்றுக்கொள்ளச் செய்தார். அத்திட்டத்தின் கீழ் மேற்கொள்ளப்பட்ட ஒப்பந்தத்தின் நிபந்தனைகளைப் பற்றியும், அது எவ்வாறு நடைமுறைப் படுத்தப்பெற்றது என்பதையும் நாம் முன்னரே கவனித்துள்ளோம். (ஏழாவது புத்தகம், பத்தாவது அத்தியாயம் காண்க) அதனுடைய முக்கியக் கூறுகள் பின்வருமாறு. அதனை ஏற்றுக்கொண்ட சிற்றரசர் தன்னுடைய பாதுகாப்பிற்காக தன்னுடைய இராச்சியத்தில் ஒரு துணைப் படையை நிலைநிறுத்த வேண்டும். அப்படையை வைத்து பராமரிப்பதற்கு செலவிடப்படும் தொகையை அவர் அளிக்க வேண்டும். துணைப்படை ஒப்பந்த முறையைக் கையாண்டு இந்தியா முழுவதிலும் கம்பெனியினுடைய மேதகவான ஆட்சியை ஏற்படுத்த வேண்டும் என்று வெல்லஸ்லி விரும்பினார். ஹோல்கார், ஜாட் மக்கள் ஆகியோருடைய எதிர்ப்பு துணைப்படை உடன்படிக்கைத் திட்டம் சுதேச இராச்சியங்களில் கம்பெனியினு டைய உச்ச உயர் மேலாட்சி மட்டுமே ஏற்படுத்தும் வகையில் மேற்கொள்ளப்பட வேண்டிய முதல்படி நிலையாக அமைய வேண்டும் என்பதை வெகு தெளிவாகக் குறித்துக் காட்டியது. துணைப்படை உடன்படிக்கைகள் சரி சமமான நிலையிலுள்ளவர்களுக்கிடையே ஏற்படுத்தப்பெற்ற உடன்படிக்கைகளாகவே இன்னும் கருதப்பெற்று

வந்தது. உடன்படிக்கை செய்துகொண்ட சிற்றரசர்கள் தங்கள் விருப்பப்படி வெளிநாட்டு உறவு முறைகளை அமைக்க இயலாது என்றாலும், அவர்களுடைய உள்நாட்டு விவகாரங்களில் அவர்கள் பெற்றிருந்த ஆட்சியுரிமையில் கம்பெனி தலையிடவில்லை என்பதை இங்குக் குறிப்பிடுதல் அவசியமாகும். இந்திய அரசாங்கத்தினருக்குக் கடிதம் எழுதும்போது நைஜாம் தன்னைப் பற்றிக் குறிப்பிடும் போது அரசருக்குரிய தனிச் சிறப்புப் பண்மையாகிய 'நாம்' என்னும் வார்த்தையை பயன்படுத்தினார். நைஜாம் தன்னுடைய பதவியின் உயர் தன்மையினை விளக்கி வந்தார்.

இந்திய சிற்றரசுகளுக்கும் கம்பெனிக்கும் இடையே ஏற்படுத்தப் பெற்ற உறவு முறைகளைப் பற்றிய அடுத்த குறிப்பிடத்தக்க நடவடிக்கை 1818-இல் மேற்கொள்ளப்பட்டது. அப்பொழுது பிண்டாரிகள் ஒடுக்கப்பெற்றனர். நடு இந்தியாவில் அமைதி ஏற்படுத்தப்பெற்றது. இராஜபுத்திர இராச்சியங்கள் பிரிட்டிஷ் அமைப்பிக்குள் கொண்டுவரப்பெற்றன. துணைப்படை உடன்படிக் கைகள் செய்துகொண்டு பெயரளவில் சுதந்திர அரசுகளாகச் செயற்பட்டு வந்த இராச்சியங்கள், மைசூரைப் போன்ற சில சார்புநிலை இராச்சியங்கள் ஆகியவற்றுடன் இராஜபுத்திர இராச்சியங்களைப் போன்ற தொன்றுதொட்டு இருந்துவந்த பல சிறு இராச்சியங்களும், பிறருடைய ஆதரவை நாடி இருப்பதைத் தவிர வேறொன்றும் அறிந்திராத பல சிறு தலைவர்களுடைய ஆட்சிக்குட்பட்ட பகுதிகளும் இப்போது சேர்க்கப்பட்டன. துணிகரச் செயல்களில் ஈடுபட்டு இருந்தவர்களுடன் சண்டையிடுவதால் நாட்டின் அமைதி குலையும் என்று அஞ்சியதன் விளைவாக அத்தகையவர்கள் ஆதிக்கம் பெற்றிருந்த பகுதிகளை அவர்களே ஆண்டுவர பிரிட்டிஷ் அரசாங்கத்தினர் அனுமதி வழங்கினார்கள். அவைகளுள் ஒன்று அமீர்கானுடைய ஆளுகைக்கு உட்பட்டிருந்த டோங்க் இராச்சியமாகும். பிரிட்டிஷ்காரர்களுக்கு புரிந்த சேவையைப் பாராட்டும் வகையில் சில இராச்சியங்கள் வெகுமதியாக சிலருக்கு அளிக்கப்பெற்றன. அவற்றுள் ஒன்று பிரோஸ்பூர் என்பதாகும்.

பிரிட்டிஷ் இந்தியாவின் பரப்பில் மூன்றில் ஒரு பங்கிற்கு அதிக மாகவே சுதேச இராச்சியங்கள் உட்கொண்டிருந்தன. அந்த இராச் சியங்களுக்கும் புதிதாக ஏற்படுத்தப்பெற்ற ஆங்கிலேய அரசாங்கத்திற் கும் இடையே ஏற்படுத்தப் பெற வேண்டிய உறவு முறைகளைப் பற்றிய பிரச்சனைகள் கம்பெனியினுடைய சிறந்த நிருவாகிகளின் கவனத்தைக் கவர்ந்திருந்தன. மொகலாய பேரரசர்களின் வாரிசு என்ற முறையில் மேலாட்சி உரிமையைக் கொண்டாட கம்பெனி தகுதி

பெற்றுள்ளது என்று மெட்காஃப் வாதிட்டார். ஆனால் அப்பிரச்சனை இன்னும் முழுமையாக ஆராயப்படவில்லை. அதற்கு யாதொரு முடிவும் காணப்பெறவில்லை. அப்பொழுது "கீழ்ப்படியான தனிமை நிலை" (Subordinate Isolation) என்று அழைக்கப் பெற்ற கொள்கையினைத் தான் கடைபிடித்து வந்தது. அதன்படி வெளிநாட்டு உறவு முறைகளை பொறுத்த வரையில் சுதேச மன்னர்கள் மேலாட்சியாளர்களுக்கு அடங்கி நடக்க வேண்டும் என்று ஏற்பாடு செய்யப்பட்டது. ஆனால் அவர்கள் அத்துறையில் சுதந்திரமாக இயங்க முயற்சிக்கும் போது மேலாட்சியுரிமை பெற்றிருந்த கம்பெனி உடனடியாகத் தக்க நடவடிக்கை மேற்கொள்ள வழிவகை செய்யப்பட்டது.[1] ஆனால் உள்நாட்டு விவகாரங்களில் அவர்களுக்கு முழு உரிமை அளிக்கப் பட்டது. சுதேச மன்னர்களுடைய உள்நாட்டு விவகாரங்களில் தலை யிடுவதை எவ்வளவு குறைத்துக் கொள்ள முடியுமோ அவ்வளவு குறைத்துக் கொள்ள கம்பெனி ஒத்துக்கொண்டது. மைசூர், கம்பெனி யின் ஆட்சிக்குக் கீழ்படிந்த இராச்சியமாக உடன்படிக்கை வாயிலாக நிறுவப்பெற்றிருந்த போதிலும், அதனைப்பொறுத்தளவில் கூட முறை கேடான ஆட்சியை காரணம் காட்டி அதனை பிரிட்டிஷ் ஆட்சிக்குட் பட்ட பகுதிகளுடன் இணைத்துக் கொள்ள முற்படவில்லை. அதற்கு மாறாக கம்பெனி அதனுடைய நிருவாகப்பொறுப்பை மட்டுமே ஏற்றுக் கொண்டது. அயோத்தியில் ஏற்பட்டிருந்த முறைகேடான ஆட்சியைக் கம்பெனி அடிக்கடி கண்டித்துப் பேசி வந்தது. ஐதராபாத் அரசாங்கம் உதவித் தொகையைச் செலுத்துவதில் அடிக்கடி தாமதித்து வந்தக் காரணத்தால்தான் அதனுடைய விவகாரங்களில் கம்பெனி தலை யிட்டது. பொதுவாக பணம் காரணமாக கம்பெனி சுதேச மன்னர் களுடைய விவகாரங்களில் தலையிட்டதேயொழிய ஆட்சி முறையைச் சார்ந்த காரணங்களால் அன்று என நாம் கூறலாம். பஹவல்பூர் இராச்சி யத்தில் வாரிசுப்போர் ஏற்பட்ட போது டல்ஹௌசி தலையிட மறுத்தார். அவருடைய செய்கை கம்பெனி கையாண்டு வந்த கொள்கைக்கு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கியது.

டல்ஹௌசி பிரபு காலத்தில் சிற்றரசர்களை கம்பெனி கையாண்டு வந்த கொள்கையில் அடுத்த மாறுதல் ஏற்படுத்தப் பெற்றது. டல்ஹௌசி சுதேச இராச்சியங்களை மூன்று வகையாகப் பிரித்திருந்தார். அந்த பாகுபாட்டில் சில திருத்தங்களை சர் சார்லஸ் உட் 1854-இல் ஏற்படுத்தினார்.[2] அவைகளைப்பற்றி முதலில் நாம் தெரிந்துகொள்வது

[1] உதாரணமாக ஆக்லாண்டு பிரபு கர்நூலையும், பென்டிங்கு பிரபு குடகு இராச்சி யத்தையும் இதைக் காரணம் காட்டி பிரிட்டிஷ் பேரரசுடன் இணைத்தார்கள்.

[2] Sir W. Lee Warner, Life of the Marquis of Dalhousie Vol. II. pp. 155-6. (இரண்டாவது புத்தகம் பக்கம் 155-6.)

அவசியமாகும். அவைகளுள் முதல்வகையான இராச்சியங்கள் கம்பெனியின் ஆட்சி இந்தியாவில் ஏற்படுவதற்கு முன்னர் முழு சுதந்திரம் பெற்ற நாடுகளாகவோ அல்லது ஓரளவு சுதந்திரம் பெற்ற நாடுகளாகவோ இருந்து வந்தனவாகும். அவை தங்களுக்கு மேம்பட்ட இராச்சியத்தின் தலைவர் எவருக்கேனும் கப்பம் கட்டியோ அல்லது அவரது மேலுரிமையை ஏற்றுக் கொண்டோ இருந்ததில்லை. இரண்டாவது வகையான இராச்சியங்களும் கம்பெனியின் ஆட்சி ஏற்படுவதற்கு முன்னரே தோன்றியிருந்தனவாகும். ஆயினும் அவை யாரேனும் ஒரு ஆட்சியாளர் அளித்த பட்டயத்தின் வாயிலாக ஏற்படுத்தப் பெற்றனவாகும். அவ்வாறு ஆட்சி உரிமையைப் பட்டயங்கள் வாயிலாக அளித்திருந்த மேல் ஆட்சியாளர்களுடைய மேலுரிமையை கம்பெனி இப்பொழுது மரபுரிமையாகப் பெற்றிருந்தது. மூன்றாவது வகையான இராச்சியங்கள் கம்பெனி அளித்த பட்டயங்கள் வாயிலாக ஏற்படுத்தப் பெற்றனவாகும்.

1818ஆம் ஆண்டிற்குப் பின் முப்பது ஆண்டுகளில் இந்திய சுதேச இராச்சியங்களைப் பற்றி பிரிட்டிஷ்காரர்கள் கொண்டிருந்த கருத்து மாறியது. அதற்கு முன்னர் இந்தியாவின் பெரும்பகுதி சுதேச மன்னர்களால் ஆளப்பட்டு வந்தமையால், அதனை நேரடியாக ஆளும் பொறுப்பு தங்களிடமிருந்து நீக்கப் பெற்றது என்று மனமகிழ்ச்சி அடைந்திருந்தனர். ஆனால் இப்பொழுது அங்கு ஏற்பட்டிருந்த நிலைமைகள் அவர்களைக் கவலைக்குள்ளாக்கின. அரசாங்கத்தினருடைய முதல் நோக்கம் பாதுகாப்பையும், அமைதியையும் ஏற்படுத்தித்தருவதே யாகும் என்று எண்ணியிருந்த காலத்தில், அந்த நோக்கத்தை நிறைவேற்றுவதற்கு தங்களுடைய மேல் ஆட்சிக்குக் கீழ்ப்பட்டிருந்த சுதேச இராச்சியங்களை பொருத்தமான கருவிகளாகக் கருதி வந்தார்கள். மேலும் அவ்விராச்சியங்களின் வாயிலாக அமைதியையும் பாதுகாப்பையும் ஏற்படுத்துவதால் பொருட் செலவு குறையும் என்று எண்ணினார்கள். ஆனால் இப்பொழுது அவர்கள் சுதேச இராச்சியங்களில் நல்லாட்சியை ஏற்படுத்த வேண்டும் என்று கருதினார்கள் அதன் விளைவாக அவர்கள் பாதுகாப்பை ஏற்படுத்துவதில் மட்டுமே கவனம் செலுத்தாமல், மக்களுக்கு நலம் பயக்கும் நடவடிக்கைகளை மேற்கொள்ள முனைந்தார்கள். பிரிட்டிஷ்காரர்கள் சுதேச இராச்சியங்களை ஆளும் பொறுப்பை தாங்களே ஏற்றுக்கொண்டால்தான் அத்தகைய நல்லாட்சியை அங்கு ஏற்படுத்த முடியும் என்ற கருத்து வளர்ந்து வந்தது. மேலும் மக்களுடைய வாழ்வு பிரிட்டிஷ் நிருவாகிகள் வாயிலாகத்தான் வளம் பெற முடியும் என்ற கருத்தும் செல்வாக்குப் பெற்றிருந்தது. இந்தக் கருத்தை டல்ஹௌசி தன்னுடைய புகழ் பெற்ற அறிக்கை

யின் வாயிலாக வெளிப்படுத்தினர்.[1] "பிரிட்டிஷ் அரசாங்கம் நேர்மை வாய்ந்ததும், விவேகமுடையதுமானக் கொள்கையைக் கையாளும்போது சுதேச இராச்சியங்களை பிரிட்டிஷ் இந்தியாவுடன் சேர்த்துக் கொள்வதற்கும், தன்னுடைய வருமானத்தைப் பெருக்கிக் கொள்வதற்கும் அவ்வப்பொழுது உரிமைப்படி ஏற்படும் வாய்ப்புக்களைத் தள்ளி விடவோ, அசட்டை செய்யவோ கூடாது என்ற என்னுடைய திடமான ஆர்ந்து அமர்ந்து முடிவு செய்யப் பெற்றக் கருத்தை இங்கு குறித்து வைக்கத்தான் இந்த வாய்ப்பை பயன் படுத்துகிறேன். கம்பெனியின் மேலாட்சிக்குட்பட்ட சார்பு நிலை சுதேச இராச்சியங்களைப் பொறுத்தளவில் அத்தகைய வாய்ப்புகள் யாதொரு வாரிசு உரிமையாளர்கள் தோன்றத் தவறியபோது ஏற்படலாம். அப்போது ஆட்சி வகையில் முன்னுரிமை பெற்றிருந்த கம்பெனி அந்த உரிமையை மீட்டுப்பெற வழி ஏற்படலாம். வேறு சில இராச்சியங்களில் பிறப்பினால் வாரிசு உரிமையைப் பெறத் தகுதியுள்ளவர்கள் தோன்றாவிடில் இந்து சட்டப்படி தத்து எடுத்துக் கொள்ளும் வழக்கம் இருந்தது. அவ்வாறு தத்து எடுத்துக்கொள்ளப் பெற்றவர்களுக்கு வழங்கப் பெற்ற அரசப்பதவியுரிமை கம்பெனி அரசாங்கத்தின் ஒப்புதலைப் பெற்ற பிறகே உறுதி செய்யப்பட்டது. அந்த வகைப்பட்ட இராச்சியங்களில் பிறப்பினால் வாரிசுரிமையைப் பெறத் தகுதியுள்ளவர்கள தோன்றாமல் இருந்த பொழுது அவைகளை பிரிட்டிஷ் பேரரசுடன் இணைத்துக் கொள்ளக் கூடிய வாய்ப்புகள் ஏற்படலாம். அத்தகைய சந்தர்ப்பங்களை பிரிட்டிஷ் அரசாங்கம் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்".

மேற்குறிப்பிட்ட கருத்தின் அடிப்படையில் டல்ஹௌசி தன்னுடைய நாடு பிடிக்கும் கொள்கையினை விரிவு படுத்தலானார். அதற்காக அவர், வாரிசுதார்கள் தோன்றியிராவிடில் உடமைப் பொருளை முன்னுரிமையாளர் மீட்டுப் பெறும் முறையை ஒரு காரணமாகவும், ஏனைய காரணங்களையும் காட்டினார். வாரிசு உரிமையாளர்கள் தோன்றி இராவிடில் அத்தகைய இராச்சியத்தைக் கம்பெனி மீட்டுப் பெற வேண்டும் என்ற கொள்கையினை கம்பெனியின் மேலாட்சிக்கு உட்பட்டிருந்த இராச்சியங்களில் மட்டும் அவர் கைப்பற்றி வந்த பொழுதிலும், வேறு காரணங்களைக் காட்டி அவர் பிரிட்டிஷ் பேரரசுடன் சேர்த்துக் கொண்ட இராச்சியங்களில் எண்ணிக்கை மீட்டுப் பெறும் முறையினைக் கையாண்டு பிரிட்டிஷ் பேரரசுடன் இணைத்துக் கொள்ளப் பெற்ற இராச்சியங்களின் எண்ணிக்கையை விட அதிகமாகவே இருந்தது.

[1] 1848ஆம் ஆண்டு ஆகஸ்டு 30ஆம் தேதியிடப்பட்ட நடவடிக்கைச் சுருக்க குறிப்பேடு. சார்பு நிலை இராச்சியங்களைப் பற்றி மட்டுமே இதில் குறிப்பிட்டிருப்பதாக பின்னர் தெளிவு படுத்தினர். ஆனால் அக்குறிப்பேடு அப்போது தோன்றிய புதியக் கருத்தைத் தெளிவாக்குகிறது.

ஆகவே நாடு சேர்க்கும் எண்ணம் கம்பெனியின் ஆளுகைக்கு உட்பட்டிருந்த இராச்சியங்களுடன் நின்று விடாது என்ற அச்சம் வளர்ந்து வந்தது. மேலும் ஒரு இராச்சியத்தைப் பிரிட்டிஷ் பேரரசுடன் சேர்த்துக் கொள்வதற்கு ஒரு சாக்குப் போக்கு போதியதாக அமைய வில்லை என்றால் வேறொரு சாக்குப் போக்கு காட்டப் பெறும் என்ற அச்சமும் தோன்றியிருந்தது. டல்ஹௌசியினுடைய நடவடக்கைகளைப் பற்றிய முழுவிவரங்கள் 8வது புத்தகத்தில் 8வது அந்தியாயத்தில் கூறப்பட்டுள்ளன.

1857ஆம் ஆண்டில் ஏற்பட்ட கலகம் இத்திட்டங்களுக்கும் அச்சங்களுக்கும் ஒரு முடிவு கட்டியது. கம்பெனியினுடைய மேலாட்சிக்குட்பட்டிருந்த சிற்றரசர்கள் ஆங்கிலேயரிடத்தில் கொண்டிருந்த பற்றினில் ஐயம் கொள்வதால் ஏற்படும் ஆபத்தினையும் அத்தகைய பற்றினால் கம்பெனியின் அரசாங்கம் பெறக்கூடிய நன்மையையும் இப்பொழுது கம்பெனி உணர்ந்தது. ஆகவே சுதேச மன்னர்களை தன் கீழ் தனிமை நிலையில் வைத்திருப்பதிற்குப் பதிலாக அவர்களை தன்னுடன் இணைத்து தன் கீழ் வைத்திருக்க பிரிட்டிஷ் இந்திய அரசு முற்பட்டது. பிரிட்டிஷ் இந்தியாவினின்றும் வேறுபட்ட இராச்சியங்களாக அவை இப்பொழுது கருதப்படவில்லை. அதற்குமாறாக சீர்திருத்தப் பணியில் முனைந்து இருந்த இந்திய அரசாங்கம் சுதேச இராச்சியங்களில் ஏற்பட்டிருந்த மந்த நிலையைக் கண்டு வெட்கப்படலாயிற்று. மேலும் அவ்விராச்சியங்களிலும் முன்னேற்றங்களை ஏற்படுத்தி இந்தியப் பேரரசில் ஏற்படுத்தப் பெற்றிருந்த முன்னேற்ற நிலைக்கு அவற்றையும் கொண்டு வர திட்டமிட்டனர். அவை இந்திய அரசியல் அமைப்பின் இன்றியமையாதக் கூறுகளாக விளங்க வேண்டும் என்று கருதினார்கள். கானிங்கு பிரபு அவைகளை புயலின் கடுமையைத் தாங்கவல்ல அலை தாங்கிகள் என்று விவரித்திருந்தார் என்பதை நாம் முன்னரே கண்டறிந்தோம். அவருடைய வருணனை அந்த இராச்சியங்களின் முக்கியத்துவத்தை ஆங்கிலேய அரசாங்கம் உணர்ந்திருந்தனர் என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. மேற்குறிப்பிட்ட புதிய நோக்கத்தை நிறைவேற்றுவதற்காக பல நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. அவற்றுள் முதலாவதாக மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கை பல ஆண்டுகளுக்கு முன்னரே மேற்கொள்ளப்பட்டிருக்க வேண்டிய ஒரு நடவடிக்கையாகத் தோன்றியது. கம்பெனியினுடைய அரசாங்கம் ஒழிக்கப் பெற்ற பிறகு, பிரிட்டிஷ் அரசாங்கம் மொகலாய அரசர்களின் வாரிசு என்ற முறையில் இந்தியாவை ஆளும் தலைமை உரிமையைப் பெற்றது. ஆகவே இப்பொழுது அரசாங்கத்திற்கும் சிற்றரசர்களுக்கும் இடையே நேரடியான நெருங்கிய தனிப்பட்ட தொடர்பு ஏற்படுத்தப் பெற்றது. 1876–இல் அரசியார் பேரரசி

என்ற பட்டத்தைச் சூட்டிக் கொண்டார். லிட்டன் காலத்தில் பகட்டாரவாரக் காட்சிகளும், அவைகளைத் தொடர்ந்து டில்லியில் கூட்டப் பெற்ற தர்பார்களும், புதிதாக ஏற்படுத்தப் பெற்ற தொடர்புகளை நாடகக் காட்சிகள் போல் அமைக்க உதவின. இனி சிற்றரசர்கள் மறைந்து கொண்டு வருகிற முன் மரபெச்சங்களாகக் கருதப் பெறுவதற்குப் பதிலாக மொகலாயர்கள் காலத்தில் விளங்கி வந்தது போல ஒரு ஒழுங்கான அமைப்பாகக் கருதப் பெற்றனர். ஆற்காடு, அயோத்தி ஆகிய இடங்களில் வாழ்ந்து வந்த அரச குடும்பங்களின் தலைவர்களுக்கு சிற்றரசர் பட்டத்தை வழங்கினார்கள். ஏனையோர் வீரப் பெருந்தகை அமைப்புகளில் (Orders of Chivalry) இடமளிக்கப் பெற்றனர். லிட்டன் பிரபு இந்தியாவில் உயர்படிப்பெருமனார் நிலையை (Peerage) ஏற்படுத்த வேண்டும் என்று யோசனை கூறினார். பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு எதிராக யாதொரு உரிமையையும் அவர்கள் பெற்றிருக்கவில்லை என்பது உண்மையேயாயினும் அவர்கள் அதனுடைய பாதுகாப்பையும் பராமரிப்பையும், ஆதரவையும் பெற்றிருந்தனர்.

கர்சன் பிரபு பஹவல்பூரில் உரை நிகழ்த்தும்போது 'பிரிட்டிஷ் அரசாங்கம் பெற்றிருந்த ஆட்சித் தலைமையுரிமையினை எதிர்க்க வல்ல சக்தி எவ்விடத்திலும் ஏற்பட்டிருக்கவில்லை என்றும், அதனுடைய உரிமையினைக் கட்டுப்படுத்தும் வகையில் அதாகவே சில தடைக் கட்டுகளை ஏற்படுத்திக் கொண்டது என்றும் கூறி அப்பொழுது ஏற்படுத்தப்பெற்றிருந்த புதிய நிலைமையை விளக்கிக் காட்டினார்.[1] ஹைதராபாத் அரசாங்கம் சில உரிமைகளைக் கோரிய போது ரீடிங்கு பிரபு பிரிட்டிஷ் அரசாங்கம் அனைத்திற்கும் மேலான ஆட்சித் தலைமையுரிமையினை பெற்றுள்ளது என்று கூறினார். மேலே குறிப்பிடப்பட்டுள்ள கருத்தினை கடைசி முறையாக வலியுறுத்தியவர் அவரேயாவார்.

அடுத்த படியாக சிற்றரசர்களிடையே ஏற்பட்டிருந்த குழப்பத்திற்கு காரணமாக இருந்த சில தனிப்பட்ட குறைகளைப் போக்க முயற்சி மேற்கொள்ளப்பட்டது. சந்ததியற்றுப்போகும் போது இராச்சியத்தை ஆளும் உரிமையை பிரிட்டிஷ் அரசாங்கமே மீட்டுப் பெற வேண்டும் என்ற கொள்கை கைவிடப்பட்டது. கானிங்கு பிரபு பட்டயங்கள் (Sanads) வழங்கி சுவீகாரம் எடுத்துக்கொள்ளும் உரிமையை அவர்களுக்கு அளித்தார். மேலும் சிற்றரசர்களுடைய ஆட்சிப் பகுதிகளின் கூறுபடா நிலையைக் காப்பதாக உறுதி

[1] Sir. T. Raleigh (ed.) Lord Curzon in India, p. 227.

கொடுத்தார்கள். அதன் விளைவாக சுதேச இராச்சியங்களைப் பிரிட்டிஷ் நேரடி ஆட்சிக்குட்பட்ட பகுதியுடன் இணைத்துக்கொள்ளும் பழக்கம் நிறுத்தப்பட்டது. அதற்கு மாறாக சில இராச்சியங்களைப் பொருத்தளவில் அவைகளின் ஆட்சிப் பரப்பெல்லை விரிவாக்கப்பெற்றது. கலகத்தின் போது பிரிட்டிஷ் அரசாங்கத்தினிடம் விசுவாசத்துடன் நடந்துகொண்ட காரணத்திற்காக நிலங்கள் பரிசாக அளிக்கப்பட்டன. ஐம்பது ஆண்டுகளாக பிரிட்டிஷ் அரசாங்கத்தின் ஆட்சியின் கீழ் இருந்துவந்த மைசூர் இராச்சியம் 1881-இல் அதனுடைய அரசருக்குத் திருப்பி அளிக்கப்பெற்றது. 1912-இல் பனாரஸ் ஜமீன் சிற்றரசு நிலைக்கு உயர்த்தப்பட்டது. 1903-இல் பீரார்களைப் பற்றி கர்சன்பிரபுவிற்கும் நைஜாமுக்கும் இடையே நடைபெற்ற கடிதப் போக்குவரத்துகள் டல்ஹௌசி பிரபு காலத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட நிலையையே மீண்டும் உறுதிப்படுத்துவதாகத் தோன்றியது. சுதேச இராச்சியங்களில் முறைகேடுகள் மிகும்போது அவ்விடங்களில் பிரிட்டிஷ் அரசாங்கப் பிரதிநிதிகளை (Regent) அமர்த்தி அவர்கள் வாயிலாக பிரிட்டிஷ் நிருவாகத்தினை அங்கு ஏற்படுத்தினார்களேயொழிய முன்போல் அவைகளை தங்களுடைய ஆட்சிப் பகுதிகளுடன் இணைத்துக் கொள்ளவில்லை.

இந்த நடவடிக்கைகளும், இந்த புதிய மனப்பான்மையும் பிரிட்டிஷ் இந்தியாவிற்கும், சிற்றரசர்கள் ஆளுகைக்குட்பட்ட இந்தியாவிற்கும் இடையே ஏற்பட்டிருந்த தொடர்புகளை மாற்றி அமைத்தன. முன்பு இராச்சியங்கள் வருத்தப்படும் அளவிற்கு பிரிட்டிஷ் ஆட்சியாளர்களின் ஆதரவிலிருந்தன. அவைகளிடையே வெளியிற் காணப்படாத அளவில் சமுதாய மனப்பான்மை தோன்றியிருந்தன. மேலும் மூடி மறைக்கப்பட்ட பகைமை உணர்ச்சியும் வளர்ந்திருந்தன. ஆனால் இப்பொழுது அவற்றிற்குப் பதிலாக உறுதியான நம்பிக்கை உணர்ச்சியும், ஆக்க முறையான ஒத்துழைப்பு அளிக்க வேண்டும் என்ற மனப்பான்மையும் வளர்ந்திருந்தன. சுதேச அரசர்கள் தங்களுக்கு நல்ல எதிர்காலம் தோன்றியிருப்பதாக உணர்ந்தனர். அவர்களுள் தலைசிறந்தவர்கள் புதிதாக ஏற்படுத்தப்பெற்ற நிலைக்குத்தக்கவாறு நடக்கும் ஆற்றலுடையவர்களாக விளங்கினர். பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம், சுதேச மன்னர்கள் ஆகிய இவ்விருவரும் ஒருவருடன் மற்றொருவர் கொண்டிருந்த நம்பிக்கை உணர்ச்சி வளர்ந்திருந்ததன் விளைவாக பேரரசு இராணுவ பயிற்சி பெறும் மாணவர் படை (Imperial Cadet Corps) டஃப்பரின் பிரபு காலத்தில் ஏற்படுத்தப்பெற்றது. அந்தத் திட்டத்தின்படி சுதேச மன்னர்கள் படைப் பிரிவுகளை ஏற்படுத்தினார்கள். அவைகள் அனைத்தும் இந்தியர்களைப் படைத் தலைவர்களாகக் கொண்டிருந்தன. தேவை ஏற்படும்போது

அப்படைகளை பிரிட்டிஷ் இந்திய அரசாங்கத்தின் ஆணைக்குட்படுத்த ஒத்துக்கொண்டனர். இரண்டு உலகப் போர்களில் அப்படைப் பிரிவுகள் பங்குகொண்டு தங்களுடைய பயன் மதிப்பை நன்கு உணர்த்திக் காட்டின. இரண்டாவது உலகப் போர் ஏற்பட்ட போது அப்படையினர் எண்ணிக்கை சுமார் 27000 ஆக இருந்தது. மற்றொரு வகையிலும் புதிதாகத் தோன்றிய நம்பிக்கை உணர்ச்சி வெளிப்பட்டிருந்தது. சிற்றரசர்கள் பேரரசைச் சார்ந்த நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டனர். பிரிட்டனை ஆண்ட விக்டோரியா அரசியினுடைய ஆட்சியின் அறுபதாவது ஆண்டு நிறைவு விழாவிலும், அவரைப் பின்தொடர்ந்த அரசருடைய முடிசூட்டு விழாவிலும் கலந்துக் கொண்டனர். இந்தியாவில் நடத்தப்பெற்ற தர்பார்களிலும் அவர்கள் பங்கு கொண்டார்கள். முதலாவது உலகப்போருக்குப் பிறகு, இந்தியா சர்வதேச சங்கத்தின் அங்கத்தினராக சேர்ந்தபொழுது, பிகானீர், பாடியாலா ஆகியவற்றின் அரசர்கள் இந்தியாவின் பிரதிநிதிகளாக சர்வதேச சங்கக் கூட்டங்களில் பங்கு கொண்டார்கள். பிரிட்டன் மொகலாயர்களுடைய வழியைப் பின்பற்றி சுதேச மன்னர்களுடைய ஒத்துழைப்பை இன்னும் பல துறைகளில் நாடியிருந்திருந்தால், மேலும் பல குறிப்பிடத்தக்க விளைவுகள் ஏற்பட்டிருக்கக்கூடும் என்று துணிந்து கூறலாம். 1935-இல் ஏற்படுத்தப்பெற்ற கூட்டாட்சி முறையை அப்பொழுதே சிறப்பாக நடைமுறைப்படுத்தியிருக்க முடியும். பிற்காலத்தில் ஏற்படவிருக்கும் வளர்ச்சிக்குச் சாதகமான பல முக்கியமான விளைவுகளும் அப்பொழுதே ஏற்பட்டிருக்கக்கூடும்.

புதிய மனப்பான்மை வளர்ச்சிபெற்ற போது சிற்றரசர்களுடைய பண்புகளும், ஒழுக்க நிலையும் மாறுதல் அடைந்தன. கலகத்திற்குப் பிறகு ஐம்பது ஆண்டுகள் வரை பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம், இந்திய சிற்றரசர்களின் ஆட்சிப் பகுதிகளில் ஏற்படுத்தப்பெற்றிருந்த அரசாங்கங்கள் ஆகியவற்றின் மனப்பான்மை ஒரே மாதிரியாக இருந்து வந்தது. அவ்விருவகை அரசினர்களும் நல்லெண்ணத்துடன் குடிமக்கள் மீது தேவையற்றக் கட்டுப்பாடுகளைச் சுமத்தும் கொள்கையை மேற்கொண்டிருந்தனர். பிரிட்டிஷ் இந்தியாவில் கையாளப்பெற்ற நல்லெண்ணத்துடன் குடிமக்கள் மீது தேவையற்றக் கட்டுப்பாடுகளைச் சுமத்தும் கொள்கைக்குச் சமமாக இராச்சியங்களில் ஏற்பட்டிருந்த எதேச்சை நல்லாட்சிக் கொள்கை அமைந்திருந்தது. அந்த நல்லாட்சி பழைய பாணியில் அமைந்திராமல் புதிய பாணியில் அமைய வேண்டும் என்று பிரிட்டிஷ் அரசாங்கத்தினர் விரும்பினார்கள். தங்கள் விருப்பத்தை நிறைவேற்ற பல வழிகளைக் கையாண்டனர். முதலில் தாங்களே அம் முறைகளை கையாண்டு சுதேச மன்னர்களுக்கு வழிகாட்டியாக விளங்கினார்கள். அவற்றை அம்மன்னர்கள்

கையாளுமாறு ஊக்குவித்தனர். அவர்களுக்கு அந்த வகையில் நக்க பயிற்சி அளித்தனர், நிறைவேற்ற முற்பட்டனர். சுதேச மன்னர்கள் தங்களுடைய இராச்சியத்தில் படைப் பயிற்சி பெறும் மாளைவ படையினருக்கு ஐரோப்பியர்களுடைய முறைகளைக் கையாண்டு பயிற்சி அளிக்குமாறு ஊக்குவித்தனர். மேலும் அவர்கள் தற்கால ஆட்சி முறைகளைக் கற்றுணரும்படியும், வெளிநாடுகளுக்குச் சென்று தங்களுடைய அறிவை வளர்த்துக்கொள்ளுமாறும் வற்புறுத்தப் பெற்றனர். மேயோ பிரபு சுதேச மன்னர்களும் ஏனைய ஆட்சித் தலைவர்களும் கல்வி பயிலுவதற்காக கல்லூரி ஒன்றை ஏற்படுத்தினர். அக்கல்லூரியில் கையாளப்பெற்று வந்த ஒழுங்கு முறைகள் இங்கிலாந்திலிருந்த பெருமக்கள் பள்ளிகள் கையாண்டுவந்த ஒழுங்கு முறைகளை ஓரளவு ஒத்திருந்தது. ஆனால் அது நன்கு வரையறுக்கப்பட்ட ஒழுக்கந் திறத்தினைப் பெற்றிருந்தது. அது ஆக்க முறையான செல்வாக்கினையும் பெற்றிருந்தது. முன்காலத்தில் இளவரசர்கள் அந்தப்புரங்களில் வளர்க்கப்பட்டு வந்தனர். வழிவழி மரபாக வந்திருந்த தீய ஒழுக்கங்கள் அவர்களுடைய ஆண்மையைக் குறைத்து விட்டிருந்தன. மேலும் அவர்களிடம் காணப்பெற்ற குறை, வழி மரபாக அரசியல், போர் ஆகிய துறைகளில் ஏற்பட்டிருந்த இடையூறுகளால் சிறிதளவும் மட்டுப்படுத்தப் பெறாமல் இருந்தன. இப்பொழுது அந்நிலை மாறியது அவர்களுள் பலர் இப்பொழுது தற்காலத்திற்குரிய பரந்த மான்மையை பெற்றிருந்தார்கள். அதன் விளைவாக அவர்கள் தங்களுடைய ஆட்சிப் பகுதிகளில் முன்னேற்றம் ஏற்படுத்த விரும்பினார்கள். சுதேச மன்னர்கள் மேற்கொண்டிருந்த இப்புதிய முறைகள் நன்மை தீமை இரண்டையும் விளைவிக்கக் கூடிய நிலையில் இருந்தன. ஆட்சி முறைகளில் கவனம் செலுத்துவதற்குப் பதிலாக கேளிக்கைகளில் ஒரு சிலர் ஈடுபட்டிருந்தனர். வேறு சிலர் இரண்டிலும் கவனம்செலுத்தியிருந்தார்கள். சுதேச இராச்சியங்களில் ஒரு புதிய மனவெழுச்சி ஏற்பட்டிருந்தது போல சுதேச மன்னர்களிடையிலும் ஒரு புதிய வகுப்பினர் தோன்றினர். கலகத்திற்கு முன் திறம்படைத்த சுதேச மன்னர்களையும், ஆற்றல்வாய்ந்த அமைச்சர்களையும் காணுவது மிகவும் அரிதாக இருந்தது. சலார்ஜங், தின்கர் ராவ் போன்றவர்கள் இடையிடை தோன்றியிருந்தனர். அதன் பிறகு ஆட்சித் திறத்தில் சுதேச மன்னர்கள் தங்களுடைய அமைச்சர்களுக்கு நிகரானவர்களாக இருந்தனர். அரசர்களும் அமைச்சர்களும் சேர்ந்து மேற்கொண்ட முயற்சிகள் பிரிட்டிஷ் இந்திய அரசாங்கத்தினிடமிருந்து அதிகாரிகளை இரவல் பெறுவதின் வாயிலாகவும், பரிமாற்றம் செய்துகொள்வதின் வாயிலாகவும் இன்னும் மிகுதியான அளவில் மேற்கொள்ளப்பட்டன. மைசூரை ஆண்டுவந்த சர். சாம இராஜேந்திரர் (1868-1896) அவருடைய மகன் கிருஷ்ண இராஜா, சாயாஜி இராவ் கெய்க்வார்

(1875–1936), குவாலியரை ஆண்டுவந்த சர். மாது இராவ் சிந்தியா, (1886-1925) பிகானிரைச்சேர்ந்த சர் கங்காசிங் ஆகியோர் முற்போக்குக் கருத்துக்களைகொண்ட புதுவகையான சுதேச மன்னர்களின் மாதிரிகளாக விளங்குகிறார்கள். போபாலில் தொடர்ச்சியாகத் தோன்றியிருந்த மூன்று பீகம்கள்[1] அறிவாற்றலிலும், நல்லாட்சியில் கொண்டிருந்த பற்றுறுதியிலும் பதினெட்டாம் நூற்றாண்டில் இந்தோரில் தோன்றியிருந்த அகல்யா பாயை ஒத்திருந்தனர். திவான்களும் இப்பொழுது தனிப்பட்ட இனத்தவர்களாகக் கருதப் பெறவில்லை. அவர்களுள் பலர் பிரிட்டிஷ் ஆட்சி முறைகளில் நல்ல பயிற்சி பெற்றிருந்தார்கள். அத்தகையோர்களில் குறிப்பிடத் தக்கவர் R. C. தத், சர் அக்பர் ஹைதாரி, சர் மீர்ஜா இஸ்மெயில் என்பவர்கள் தலைசிறந்தவராவார்கள் வேறுபலர் பிரிட்டிஷ் இந்தியாவைச் சார்ந்த பொதுப்பணியில் ஈடுபட்டிருந்தவர்களாவார்கள். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர் தாதாபாய் நௌரோஜி என்பவராவார். முன்னேற்றம் எல்லா இடங்களிலும் ஒரே மாதிரியாக அமையவில்லை. இராஜபுதனத்திலிருந்த உதயபூர் போன்ற சில பெரிய சுதேச இராச்சியங்களும், பல சிறு சுதேச இராச்சியங்களும் பழைய முறைகளையும் நில மானிய முறையையும் கையாண்டு வந்தன. ஆனால் பரோடா, மைசூர் போன்ற இராச்சியங்களில் நடைபெற்று வந்த ஆட்சித் தரம் பிரிட்டிஷ் இந்திய அரசினர்களின் நிருவாகத்திறத்திற்கு நிகராக அமைந்திருந்தது. சில விஷயங்களில் பிரிட்டிஷ் இந்திய அரசினர்களின் நிருவாகத்தை விஞ்சும் நிலையில் அவர்களது அரசும் நடைபெற்று வந்தது. நல்ல முறையில் ஆட்சி செய்யப்பட்டு வந்த இந்திய சுதேச இராச்சியம் பழைய கருத்துக்களையும் முற்போக்குக் கருத்துக்களையும் கவரத்தக்க வகையில் கலந்திருப்பதை வெளிக்காட்டியது. அத்தகைய இராச்சியங்கள், தற்கால பாணியில் இந்தியா முன்னேற்றம் அடைவதற்குரிய வழி இதுதான் என்று அநேகரை எண்ணுமாறுத் தூண்டியது. அவ்வாறு எண்ணக்கூடியவர்களைத்தான் மால்காமும், எல்பின்ஸ்டனும் முடிவாக சுய ஆட்சிப் பொறுப்பை ஏற்று நடத்தத் தகுதிபெற்றவர்களாகக் கருதியிருப்பார்கள். ஆனால் அத்தகையோர் குறித்த காலத்திற்குப் பிறகுதான் தோன்றினார்கள். மேலும் அவர்கள் சரியான தூண்டுதலை இன்னும் பெற்றிருக்கவில்லை. அவர்கள் இடைவிடாது முயற்சிக்கும் திறனையும் பெற்றிருக்கவில்லை. மேலும் அவர்கள் வரம்பு மீறிய செயல்களில் ஈடுபடுவதற்கு வேண்டிய துணிச்சலையும் பெற்றிருக்கவில்லை. அவர்கள் தங்க விளைவுகளை உண்டு பண்ணுவதற்கும் அவர்கள் பிறருடைய கவனத்தைக் கவருவதற்கும் முன்பே மற்றொரு வகுப்பினர் தொடங்கும் உரிமையைப் பெறுவதில்

[1] நவாப் சிக்கந்தர் பீகம், ஷாஜஹான் பீகம், சுல்தான் ஜஹான் பீகம்.

மூழ்கிக்கொண்டு, இடர்ப்பாடுகள் நிறைந்த தேசிய இயக்கத்தில் பெரும் பங்கு ஏற்றுக் கொண்டனர்.

சுதேச மன்னர்கள் இப்பொழுது இடர்க்காப்புறுதியையும், பரந்த மனப்பான்மையையும் மேற்கொண்ட பணியில் புத்தார்வமும் பெற்றனர். ஆனால் அதே நேரத்தில் பிரிட்டிஷ் இந்திய அரசினர் அவர்களுடைய விவகாரங்களில் முன்பு இருந்ததை விட இப்பொழுது அதிகளவில் தலையிடுவதைக் கண்டார்கள். மேலும் சுதேச மன்னர்கள் தங்களது அதிகாரங்கள் குறைக்கப்பட்டிருப்பதையும் உணர்ந்தனர். இப்புதிய நிலையினை அவர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. அதற்கு இரண்டு சட்டபூர்வமான அடிப்படைகள் உண்டு. ஒன்று பிரிட்டிஷ் இந்திய அரசினர் மொகலாயர்களுடைய வாரிசுதார்கள் என்ற முறையில் மேலாட்சி உரிமை அல்லது தனிச் சிறப்புரிமை பெற்றிருந்தனர். இரண்டாவதாக சிற்றரசர்களுடன் ஏற்படுத்திக் கொண்டிருந்த உடன்படிக்கைகளின் நிபந்தனைகளுக்கு புதிய சூழ்நிலைக்குகந்த விளக்கங்கள் இப்பொழுது அளிக்கப்பட்டன. இராச்சியங்களின் விவகாரங்களில் தலையிடாமல் இருத்தல் வேண்டும் என்ற கொள்கை அவற்றின் ஆட்சிப் பொறுப்பை பிரிட்டிஷ் இந்திய அரசாங்கமே ஏற்க வேண்டும் என்ற கொள்கை, ஆகிய இவ்விரு கொள்கைகள் இருந்த போதிலும், அவ்வப்போது சுதேச மன்னர்களுக்கு ஆலோசனை கூறுதல், அவர்களது விவகாரங்களில் தலையிடுதல் போன்ற நடவடிக்கைகளைக் கையாள நிறைய வாய்ப்புகள் ஏற்பட்டிருந்தன. மேலாட்சி உரிமைக் கோட்பாடு ஏற்றுக்கொள்ளப்பட்டதால் இராச்சியங்களின் நிருவாகத்தில் முறைகேடுகள் நேர்ந்தபோது பிரிட்டிஷ் அரசாங்கம் அவற்றின் விவகாரங்களில் தலையிடும் உரிமையினையும் கூடவே பெற்றிருந்தது. சுதந்திரமாகவோ அல்லது சுய ஆட்சி உடையதாகவோ இருந்து வந்த இராச்சியங்கள் இப்பொழுது பிரிட்டிஷ் அரசாங்கத்திற்குக் கீழ்ப்படிந்த நிலையில் இருந்து வந்த காரணத்தால், அவற்றின் விவகாரங்களில் ஆக்க முறையான தலையீட்டை மேற்கொள்ள பிரிட்டிஷ் இந்திய அரசினர் உரிமை பெற்றனர். சுதேச மன்னர்கள் பேரரசின் உட்கூறுகளாகக் கருதப்பட்டதால், அவர்களுடைய ஆட்சிப் பகுதிகளில் ஒழுங்கான ஆட்சி நடைபெறுகிறதா இல்லையா என்பதை கவனிப்பது பிரிட்டிஷ் இந்திய அரசினரின் கடமைகளுள் ஒன்றாகக் கருதப்பெற்றது. ஆகவே எழுத்து மூலமாக வெளியிடப்பெற்ற உரிமைகளும், நடைமுறையிலிருந்த உரிமைகளும் ஏறத்தாழ ஒத்திருக்கச் செய்வதற்காக உடன்படிக்கைகள் வாயிலாகப் பெற்ற உரிமைகளை விரிவு படுத்துவது அவசியமாகத் தோன்றியது. இதற்கு ஆக்கமுறையான வகையில் உடன்படிக்கைகளின் உட்கருத்தை வெளிப்படுத்துதல் என்ற பெயர் வழங்கப்பட்டது. மேலும் ஒரு

காரணத்திற்காக பிரிட்டிஷ் இந்திய அரசினர் சுதேச இராச்சியங்களின் விவகாரங்களில் தலையிட்டனர். அதாவது மேலாட்சி தலைமையுரிமைக் கோட்பாட்டினை ஏற்றுக்கொண்டதன் விளைவாக பிரிட்டிஷ் இந்திய அரசினருக்கு அனைவருக்கும் பாதுகாப்பு அளிக்கவேண்டிய கடமை ஏற்பட்டது. ஆகவே பாதுகாப்பை ஒட்டி சுதேச இராச்சியங்களின் விவகாரங்களில் தலையிட வேண்டிய அவசியம் வலியுறுத்தப்பெற்றது.

இனி எந்தெந்த வகைகளில் பிரிட்டிஷ் இந்திய அரசினர் சுதேச மன்னர்களின் விவகாரங்களில் தலையிட்டது என்பதையும், அவ்விராச்சியங்களில் பிரிட்டிஷ் அரசினர் பெற்றிருந்த அதிகாரங்களை எவ்வாறு பெருக்கினர் என்பதையும் கவனிப்போம்.

இராச்சியங்களில் அமர்த்தப்பெற்றிருந்த கவர்னர் ஜெனரலின் பேராளர் அல்லது ரெஸிடெண்டு (Resident) வரையற்ற செல்வாக்குப் பெற்றிருந்தார். முன்பு அவர் உள்நாட்டு விவகாரங்களில் அதிகமாகத் தலையிடுவதில்லை. இராச்சியங்களுடைய நிதிநிலை சீரழிந்த போதும், அவை பிரிட்டிஷ் அரசாங்கத்திற்குச் செலுத்த வேண்டிய உதவித் தொகைகளைச் செலுத்துவதில் தாமதம் ஏற்பட்ட போது மட்டுமே அவர் தலையிட்டனர். சார்லஸ் மெட்காப், சர் ஹென்றி லாரன்சு போன்ற தனிச் சிறப்பு வாய்ந்த நேர்மையுணர்வுடையவர்கள் தனிப்பட்ட வகையில் தங்களுடைய செல்வாக்கைப் பயன்படுத்தி வந்தனர். அத்தகையோர் ஒரு சிலரேயாவார். ஆயினும் அவர்கள் நடைமுறைக்கு விலக்காக இருந்து விதி உண்மையை உறுதிப்படுத்தியவர்களாகக் கருதலாம். ஆனால் புதியதாக ஏற்படுத்தப்பெற்ற அமைப்பில் ரெஸிடெண்டினுடைய ஆலோசனை எல்லா விவகாரங்களிலும் எப்பொழுதும் கோரிப் பெறவேண்டிய நிலை ஏற்படுத்தப்பெற்றது. சில சூழ்நிலையில் அவரே நடைமுறையில் இராச்சியத்தின் அரசராக இருந்து வந்தார்.[1] சில இராச்சியங்களில் இராச்சிய அரசாங்கமும் ரெஸிடெண்டும் கூட்டுப் பங்காளிகளாக இருந்து சீர்திருத்தம் மேற்கொண்டார்கள். சில இராச்சியங்களில் அவ்விருவருக்கும் இடையே பிணக்குகளும், சூழ்ச்சிகளும் உள்ளடக்கப்பெற்ற மனக் கசப்பும் தோன்றியிருந்தன. மேற்குறிப்பிட்ட பொது செல்வாக்கைத் தவிர பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் சில வரையறுக்கப்பெற்ற அதிகாரங்களையும் செலுத்தி வந்தது. அரச பதவியுரிமையைப் பற்றிய விவகாரங்களை ஒழுங்கு படுத்துவதற்கும், உரிமையைப்பெறத் தகுதி பெற்றவர்களின் நியமனத்தை அங்கீகரிக்கவும் பிரிட்டிஷ் இந்திய

[1] ஏழாவது எட்வர்டு மன்னர் 1876-இல் வேல்ஸ் இளவரசராக இந்தியாவிற்கு விஜயம் செய்தபோது சில ரெஸிடெண்டுகளின் நடத்தையைப் பற்றி அவர்களுக்குப் பாதகமான வகையில் குறிப்பிட்டார்.

அரசாங்கத்திற்கு உரிமை அளிக்கப்பட்டிருந்தது. மொகலாயர்கள் காலத்தில் ஏற்பட்டிருந்தது போல அரச பதவியுரிமைக்கு நியமனம் செய்யப்பட்டவர்களை பிரிட்டிஷ் இந்திய அரசாங்கத்தின் அங்கீகாரம் பெறவேண்டும் என்று ஏற்பாடு செய்யப்பட்டது. இந்துக்களின் ஆட்சிக்குட்பட்ட இராச்சியங்களில் அரசர்களுக்கு சுவீகாரம் எடுத்துக் கொள்ளும் உரிமை வழங்கப்பெற்றது. அவ்வாறு சுவீகாரம் எடுத்துக் கொள்ளும் போது அவர்கள் பிரிட்டிஷ் இந்திய அரசாங்கத்தின் அனுமதி பெறவேண்டும் என்று வலியுறுத்தப்பட்டது. அரச பதவி யுரிமையை யாருக்கு வழங்க வேண்டும் என்பதில் ஐயமேற்பட்ட போது பிரிட்டிஷ் அரசாங்கமே அப்பிரச்சனையைத் தீர்த்து வைத்தது. 1885-இல் காஷ்மீரிலும், 1876-இல் குவாலியரிலும், 1870-இல் ஆல்வாரிலும் பிரிட்டிஷ் அரசாங்கம் தலையிட்டு அரச பதவியுரிமையை பற்றிய விதிகளை ஒழுங்குப்படுத்தியது. நல்ல ஆட்சியை சுதேச இராச்சியங்களில் ஏற்படுத்துவதற்காக மேலாட்சி யுரிமையைப் பெற்ற பிரிட்டிஷ் இந்திய அரசாங்கத்திற்கு சிற்றரசர்களைப் பதவியிலிருந்து நீக்கவும், அவர்களை பதவியிலிருந்து தாமே விலகும்படி வற்புறுத்தவும் அதிகாரம் இருப்பதாகக் கூறப்பட்டது. இதுவே மேலாட்சியுரிமைப் பெற்ற அரசாங்கத்தின் முடிவான கருவியாகும். ஆனால் அந்த அதிகாரம் அடிக்கடிப் பயன்படுத்தப்படவில்லை. மேலும் அதைப் பயன்படுத்த அதிக விருப்பமும் கொண்டதில்லை. 1831-இல் அந்த அதிகாரத்தைப் பயன்படுத்தி பென்டிங்கு மைசூர் இராச்சியத்தின் ஆட்சிப் பொறுப்பைத் தாமே ஏற்றுக்கொண்டார். ஆனால் ஐம்பது ஆண்டுகளுக்குப் பிறகு மைசூர் அரசர் தமது இராச்சியத்தை திருப்பிப் பெற்றார். 1876-இல் பிரிட்டிஷ் ரெஸிடெண்டை விஷமிட்டுக்கொல்ல முயற்சித்தார் என்ற காரணத்தால் பரோடாவின் கெய்க்வார் பதவியி னின்றும் நீக்கப்பெற்றார். அதன் பின்னர் 1903-இல் இந்தூரின் துகோஜிராவ் ஹோல்கார் தன்னுடைய நாட்டிற்குள் ஏற்பட்ட கொலைக்கு பொறுப்பாளியாக இருந்தார் என்பதற்காக பதவியினின்றும் விலகும்படி வற்புறுத்தப்பட்டார். 1926-இல் அவருடைய மகன் அந்த மாதிரியான காரணத்திற்காக அத்தகைய தண்டனைக்குட்படுத்தப் பட்டார். 1921-இல் வயது முதிர்ந்த உதயபூர் இராணு தன்னுடைய ஆட்சி அதிகாரங்களை தன்னுடைய மகனிடம் ஒப்படைக்குமாறு வற்புறுத்தப்பெற்றார். அதற்கடுத்த ஆண்டில் நாபாவை ஆண்டுவந்த சீக்கியத் தலைவர் அநேக விதமான தவறான நடத்தைகளுக்காக பதவியி னின்றும் நீக்கப்பெற்றார். 1933-இல் ஆல்வார் இராச்சியத்தின் தலைவரும் அவ்வாறே பதவியைவிட்டு நீக்கப்பெற்றார் மேற்குறிப்பிட்ட பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நடவடிக்கைகள் பிற்காலத்தில் மிகக் கடுமையானதென்று கருதப்படவில்லை. அதற்கு மாறாக பிரிட்டிஷ் இந்திய அரசாங்கத்தினர் அடிக்கடி தலையிடவில்லையென்றும் தகுந்த

காலத்தில் தலையிடவில்லை என்றும் குற்றம் சாட்டப்பட்டது. பாட்டியாலா அரசர் இந்த வகையில் மிகவும் நற்பேறு பெற்றவராகப் பலர் எண்ணினார்கள்.

சுதேச இராச்சியங்களின் உள்நாட்டு விவகாரங்களில் பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் பெற்றிருந்த அதிகாரம் பலவகைகளில் விரிவு படுத்தப் பெற்றது. இராணுவம் சார்ந்த காரணங்களைக் காட்டி ஆங் காங்கே படையினர் நகரங்களும் (Cantonments) படைத்துறை சாராத மக்கள் வசிக்கும் நகரங்களும் ஏற்படுத்தப் பெற்றன. அவை களுள் மிகச் சிறப்பானவை மைசூரிலுள்ள பெங்களூரும், ஹைதரா பாத்திலுள்ள செகந்தராபாத்தும் ஆகும். இராச்சியங்களின் ஆணைக் குட்பட்டிருந்த படையினரின் எண்ணிக்கை குறைக்கப்பட்டது. ஆனால் பேரரசு படைப்பணி (Imperial Service Corps) ஏற்படுத்தப் பெற்றதால் அவர்களுடைய தரமும், பெருமையும் உயர்ந்தன. நெடுந் தூர போக்குவரத்துக்கும், போர்த்திற நடவடிக்கைகள் மேற் கொள்ளுவதற்கும் இன்றியமையாத இருப்புப்பாதைகள் இராச்சியங் களிலும் அமைக்கப் பெற்றன. அதே நேரத்தில் இராச்சிய அர சாங்கங்கள் தங்களுக்குச் சொந்தமான இரயில் பாதைகளை அமைக்க அனுமதிக்கப் பெற்றன. அத்தகைய இரயில்பாதை அமைப்புகள் மைசூர், ஹைதராபாத் ஆகிய இராச்சியங்களில் ஏற்படுத்தப் பெற்றன. சிறிய இராச்சியங்களில் தபால் தந்தி முறைகள் ஏற்படுத்தப்பெற்றன. அங்கிருந்த நாணய முறைகளுக்குப் பதிலாக பிரிட்டிஷ் இந்திய நாணய முறையும் அங்கு புகுத்தப் பெற்றது. கடல் வழியாக ஏற்றுமதி இறக்குமதி செய்யப்படும் பொருட்கள் மீது வரி விதிக்கும் முறையை யும் கட்டுப்படுத்தினார்கள். இராச்சியங்களில் வசித்து வந்த குடி மக்களும் இனி மேலாட்சியுரிமையுடைய பிரிட்டிஷ் இந்திய அரசாங் கத்திற்கு நேரடியாக கீழ்ப்படிய வேண்டிய நிலை ஏற்பட்டது. அந்த இராச்சியங்களின் நலன்களை இந்தியாவிற்கு வெளியேயும் பிரிட்டிஷ் அரசாங்கம் பாதுகாத்து வந்தது. அதற்குப் பதிலாக அந்த இராச்சியங் களின் தலைவர்கள், இந்திய அரசினர் அன்னிய நாட்டவர்களுடன் செய்துகொண்ட உடன்படிக்கைகளுக்கு கட்டுப்பட்டு நடந்து வந்தனர்.

பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் கையாண்டு வந்த நல்லெண்ணத் துடன் கட்டுப்பாடுகளைச் சுமத்தும் கோட்பாடும், சிற்றரசர்கள் கையாண்டு வந்த நலம் பயக்கும் வல்லாட்சிக் கோட்பாடும் ஒன்றோடு ஒன்று இணைந்தாற்போல் வளர்ச்சியடைந்து வந்தன. அந்த வளர்ச்சி நிலை 20ஆம் நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகளில் நடை பெற்று வந்தது. கர்சன் பிரபுவின் ஆட்சிக் காலத்தின் போது அந்த வளர்ச்சி நிலை எல்லோருடைய கவனத்தை ஈர்க்கும் வகையில் அமைந்திருந்தது.

கர்சன் காலத்தில் நல்லெண்ணத்துடன் கட்டுப்பாடுகள் சுமத்தும் கோட்பாடு மிக்க ஆர்வத்துடன் வெளிப்படுத்தப் பெற்றது. கர்சன் பிரபு சுதேச இராச்சிய விவகாரங்களிலும் தன்னுடைய ஆற்றலைப் பயன் படுத்தினார். அவர் சீர்திருத்தும் வகையில் அளித்த தூண்டுதலின் விளைவாக இராச்சியங்களுடைய விவகாரங்களில் அதிகளவில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் தலையீடு ஏற்பட்டது. கர்சனுடைய குறிப்பிடத் தக்க நடவடிக்கைகளுள் ஒன்று 1903-இல் நைஜாமுடன் ஏற்படுத்திக் கொண்ட புதிய ஏற்பாடு ஆகும். அந்த ஏற்பாட்டின் படி பீராரை ஆளும் பொறுப்பை எப்பொழுதும் நிலையாக இருக்கும் குத்தகை ஒப்பந்தத்தின் வாயிலாகப் பிரிட்டிஷ் இந்திய அரசு பெற்றது. ஆனால் உண்மையில் பீரார் பிரிட்டிஷ் இந்தியாவுடன் இணைக்கப் பெற்ற பகுதியாகவே இருந்து வந்தது. அந்த ஏற்பாட்டை உருவாக்கிய பொழுது நைஜாம் மிகவும் திருப்தி அடைந்தவராகக் கூறினார். ஆனால் பிற்காலத்தில் நைஜாம் அந்த ஏற்பாட்டை அவர் ஏற்றுக் கொள்ளும்படி கட்டாயப்படுத்தப் பெற்றார் என்று அறிவித்தார். இந்த நடவடிக்கை டல்ஹௌசி (1853-இல் டல்ஹௌசி முதல் பீரார் ஏற்பாடு செய்திருந்தார்) மேற்கொண்ட வழிகளை சுதேச மன்னர்களுடைய நினைவிற்கு மீண்டும் கொண்டுவரத்தக்கதாகக் காணப் பட்டது. ஆகவே சுதேச மன்னர்களுடைய மனதிற்குப் பிடித்தமான தாக அது அமையவில்லை. அதற்கு மாறாக தங்களுடைய சுதந்திரம் பாதிக்கப் படத்தக்கவகையில் பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் நடவடிக்கைகள் மேற்கொள்ளும் என்று அவர்கள் அச்சம் கொண்டனர். அவரை அடுத்து பதவியிலமர்ந்த இரண்டு அரசப் பிரதிநிதிகள் திறமையான முறைகளைக் கையாண்டு அந்த அச்சத்தைப் போக்கினார் கள். 1914-இல் தொடங்கிய முதலாவது உலகப் போர் சிப்பாய்க் கலகத் திற்குப் பிறகு கையாளப்பட்டு வந்த சுதேச இராச்சியங்களைப் பற்றியக் கொள்கையை வெற்றிகரமாக முடிப்பதற்குரிய வாய்ப்பை ஏற் படுத்தித் தந்தது. பிரிட்டிஷ் இந்திய அரசாங்கத்திடம் சிற்றரசர் களுக்கு ஏற்பட்டிருந்த நம்பிக்கை உணர்ச்சி, மன நிறைவு ஆகிய வற்றின் விளைவாக அவர்கள் தங்களுடைய அரசப்பற்றை பெருமளவில் வெளிப்படுத்தினார்கள். மேலும் அவர்கள் பேரரசுக்கு உதவி செய்ய முன் வந்தார்கள். இராச்சியங்களில் பல முன்னேற்றங்கள் ஏற் பட்டிருந்தமையால் அவர்களுடைய உதவி உண்மையிலேயே பயன் தரத்தக்கதாக அமைந்திருந்தது. அவர்கள் தலைமை தாங்கி நடத்து வதற்கு வேண்டிய உயர்ந்த செயற்திறத்தை இப்பொழுது பெற்றிருந்த காரணத்தால் பிகானீர் அரசர் போன்றவர்கள் தங் களுடைய படைகளை போர்களத்தில் தாமே நடத்திச் செல்ல முடிந்தது. மேலும் அவர்கள் 1917ஆம் ஆண்டில் நடைபெற்ற

'பேரரசு போர் மகாநாடு' போன்ற பேரரசைச் சார்ந்த நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளவும் முடிந்தது.

அதுவே சுதேச மன்னர்களுக்கு ஏற்பட்டிருந்த சிறப்பான காலமாகும். அக்காலந் தொட்டு பிரிட்டிஷ் இந்திய அரசாங்கமும், அதே அரசுகளடங்கிய இந்திய அரசாங்கமும் மாறுபட்ட வழிகளிலே செல்லத் தொடங்கின. ஆனால் அந்த மாறுதல் இன்னும் சரியாக அனைவருக்கும் தெரியவில்லை. 1917-இல் பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் வெளியிட்ட அறிக்கையின்படி இந்திய அரசாங்கம் பிரிட்டிஷ் இந்தியாவில் மக்கள் பிரதிநிதிகளைக் கொண்ட அமைப்புகளை நிறுவுவதாகவும் முடிவாக தன்னாட்சி முறையை ஏற்படுத்துவதாகவும் உறுதி செய்திருந்தது. இவ்வாறிருக்க சுதேச மன்னர்கள் மக்கள் நலன்களைப் பேணும் வல்லாட்சிக் கொள்கையில் இன்னும் தொடர்ந்து பற்றுக் கொண்டு இருந்தனர். அவர்கள் அனைவரும் ஒரு மித்தோ அல்லது மிகுந்த ஆர்வத்துடனோ புதியதாகத் தோன்றியிருந்த அரசியல் அமைப்பு முறையைச் சார்ந்த கருத்துக்களை ஏற்றுக் கொள்ளவில்லை.[1] சிற்றரசர்கள் மக்களாட்சிக் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்ட இந்திய தேசிய காங்கிரஸினுடைய வளர்ச்சி தங்களுடைய வல்லாட்சிக்கு பங்கம் விளைவிக்கும் என்று பயந்தனர். ஆகவே தங்களுடைய இராச்சியங்களில் காங்கிரஸின் நடவடிக்கைகளை தடை செய்தார்கள். காங்கிரசும் அவர்களுடைய ஆட்சி முறையைப் பலமாக கண்டித்தது. ஆகவே சிற்றரசர்கள் பிரிட்டிஷ் இந்திய அரசாங்கத்தின் ஆதரவை நாடினார்கள். அவர்களுக்கு உடன்படிக்கைகள் வாயிலாக அளிக்கப்பட்டிருந்த உரிமைகளை வலியுறுத்தினார்கள். முன்னர் அவர்கள் பெற்றிருந்த தன்னம்பிக்கையும் முற்போக்கு மனப்பான்மையும் படிப்படியாக மறையத் தொடங்கின. இப்பொழுது அவற்றிற்குப் பதிலாக வருங்காலத்தைப் பற்றிய அச்சம் ஏற்பட்டிருந்தது. ஆகவே தங்களுடைய உரிமைகளை வற்புறுத்தலாயினர் தங்களுக்கு வரவிருக்கும் இடர்களைப் பற்றி முன்னரே உணர்ந்திருந்தமையால் அவர்களுடைய கூரறிவு இருளடைந்து கிடந்தது புறத்தோற்றம் எவ்வாறு இருப்பினும் பிரிட்டிஷ் இந்தியாவும், சுதேச மன்னர்கள் ஆளுகைக்குட்பட்ட இந்தியாவும் தனித்தனியே மீண்டும் பிரிந்து செல்லத் தொடங்கிவிட்டன. அதன் பயனாக சுதேச மன்னர்கள் அனைவரும் பாதிக்கப்பட்டனர். அதே நேரத்தில் சுதேச மன்னர்களுடைய ஆளுகைக்குட்பட்டிருந்த மக்கள் அனைவரும் சிறப்படைந்தார்கள் என்று[2] ஐயத்துக்கிடமின்றி கூறவும் இயலாது.

[1] இந்த வகையில் மைசூர், பரோடா, திருவாங்கூர் ஆகியவை வெகு தீவிரமாக முனைந்திருந்தன.
[2] 1929-இல் வெளியிடப்பட்ட பட்லர் கமிட்டி அறிக்கை இதனை தெளிவாக்குகிறது.

மேலாட்சி உரிமை பெற்றிருந்த பிரிட்டிஷ் அரசாங்கமும் மிகவும் இக்கட்டான நிலையிலிருந்தது. உடன்படிக்கைகளில் குறிப்பிடப் பட்டிருந்த உரிமைகளை உறுதியுடன் கடைப்பிடிக்க வேண்டும் என்னும் எண்ணம் சுதேச மன்னர்களுக்கு உதவிபுரியுமாறு அவர்களைத் தூண்டியது. அதே நேரத்தில் பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் கடைப்பிடித்து வரும் புதியதாக தோற்றுவிக்கப்பட்ட மக்களாட்சிக் கொள்கை பழைய இந்தியாவின் கருத்துக்கு முழுவதற்கும் ஒவ்வாததாக அமைந்திருப் பதைக் கண்டார்கள். பிரிட்டிஷ் அரசாங்கம் சுதேச மன்னர்களுக்கு உதவி புரியத் தலைப்பட்டால் அத்தகையக் கொள்கையை முரண்பாடானது என்றும், நேர்மையற்றது என்றும், பழித் துரைப்பாளர்கள் என்று கருதினார்கள். அதற்கு மாறாக அந்த சுதேச மன்னர்கள் மீது முற்போக்குக் கருத்துக்களை வலுக்கட்டாயமாக திணித்தாலும் சரி அல்லது அவர்களைப் புறக்கணித்தாலும் சரி பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் உடன்படிக்கைகளுக்கு எதிராக நடப்பவர்களாவார்கள் என்பதையும் உணர்ந்தார்கள். இத்தகைய சூழ்நிலையில் இரட்டைக் கொள்கையைக் கடைப்பிடிக்க முயற்சி மேற் கொள்ளப் பட்டது. சுதேச மன்னர்களுக்கு அளிக்கப்பட்டிருந்த உரிமைகள் அழியாமல் பாதுகாக்கப்பட்டன. அதனால் சில சமயங்களில் அநேக இடர்ப்பாடுகள் தோன்றின. உதாரணமாக பாட்டியாலா கிளர்ச்சியின் போதும், காஷ்மீர் கிளர்ச்சியின் போதும் அத்தகைய இடர்ப்பாடுகள் தோன்றின. அதே நேரத்தில் சுதேச மன்னர்களை எல்லாம் ஒன்றாக்க வேண்டும் என்ற கொள்கை கைப்பிடிக்கப் பெற்றது. சுதேச மன்னர் களும் தங்களுடைய ஆட்சி முறையை முற்போக்குக் கருத்துக்களின் அடிப்படையில் அமைக்க வேண்டும் என்று வற்புறுத்தப் பெற்றனர். அதாவது சுதேச மன்னர்களுக்கு நயந்து சொல்லி முற்போக்குக் கருத் துக்களை ஏற்றுக்கொள்ளுமாறு செய்து அதன் வாயிலாக புரட்சி கர மான மாறுதல்களை உண்டாக்குவதே அவர்களுடைய நோக்கமாக இருந் தது. மான்ட்போர்டு சீர்திருத்தங்கள் பிரிட்டிஷ் இந்தியாவில் மட்டும் நிறைவேற்றப்பட ஏற்பாடாயிற்று. அதே நேரத்தில் சிற்றரசுகள் சங்கம் (Chamber of Princes) ஒன்று ஏற்படுத்தப் பெற்றது. அச்சங் கத்தின் உறுப்பினர்கள் ஆண்டுக்கொருமுறை கூடினார்கள். நிரந்தர குழுக்கள் அமைக்கப்பெற்றன. அவற்றின் விளைவாக சுதேசமன்னர்கள் அரசாங்கத்தின் கொள்கையுடனும் புதிய தேசியக் கருத்துப் போக்கு களுடனும், நெருங்கியத் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள தொடங்கினார் கள். அதைப் போலவே சுதேச மன்னர்கள் சர்வதேச சங்கத்திலும், பேரரசைச்சார்ந்த மகாநாடுகளிலும் பிரதிநிதிகளாக பங்கு கொண்ட தால் அவர்கள் அகில இந்திய விவகாரங்களிலும் பங்கு கொள்ளத்துவங் கினர். இந்த வழிகளில் அவர்களிடையே கூட்டு மனப்பான்மை பொது வான உள்ளக்கருத்து ஆகியவற்றை ஏற்படுத்தக் கூடும் என்று கருதி

ஞர்கள். மேலும் அவர்களை நாளடைவில் புதிய இந்திய அமைப்புக்கு ஏற்றவாறு தங்களை மாற்றிக் கொள்ள வேண்டிய அவசியத்தையும் அவர்களுக்கு அறிவிக்க முடியும் என்றும் கருதினார்கள். பிகானீர் மகாராஜா, நவநகர் ஜாம்சாகிபுகள் போன்ற தொலை நோக்குடைய அரசர்கள் காலப்போக்கின் சின்னங்களை அறிந்து கொள்ளமுடிந்தது. ஆனால் நைஜாமைப் போன்றவர்கள் ஒதுங்கி நிற்கலாயினர். நைஜாம் தன்னை சுதந்திரமான நாட்டினுடைய தலைவராகக் கருதவேண்டும் என்று கோரிக்கை விடுத்தார். 1926-இல் ரீடிங் பிரபு அக்கோரிக்கையை நிராகரித்தார். ஒருபுறம் புதிதாகத் தோன்றியிருந்த நிலைமையை திடமனதுடன் எதிர்கொள்ள வேண்டும் என்ற எண்ணம் தோன்றியிருந்தது. மற்றொருபுறம் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு ஏற்பட்டிருந்த இடையூறுகளை பயன் படுத்திக் கொண்டு எவ்வளவு சுதந்திரத்துடன் வாழ முடியுமோ அவ்வளவு சுதந்திரத்துடன் தாங்கள் தொடர்ந்து வாழ வேண்டும் என்ற எண்ணமும் தோன்றியிருந்தது. இந்த இரு எண்ணங்களின் காரணமாக அவர்கள் ஒரு பொதுவான கொள்கையோ அல்லது கூட்டணியையோ ஏற்படுத்தவில்லை. சிற்றரசர்கள் பொதுவான கருத்தைக் கொள்ளுமாறு செய்ய வேண்டும் என்ற கோட்பாடு அல்லது அவர்களிடையே ஒருமைப் பாட்டுணர்ச்சி வளரவேண்டும் என்ற கொள்கை முதலாவது வட்டமேஜைமகாநாட்டில் பெருமிதமான வெற்றியை அடைந்தது. அப்பொழுது சுதேசமன்னர்கள் அகில இந்திய கூட்டாட்சியில் சேருவதற்கு ஒத்துக் கொண்டனர் அதனால் அவர்கள் கூட்டரசின் மைய அமைப்புக்குரிய அதிகாரங்களை அகில இந்திய நிர்வாகக்குழு, சட்டசபை ஆகியவற்றிற்கு அவர்கள் விட்டுக்கொடுக்க வேண்டும் என்பது தெளிவாக்கப் பெற்றது. மேலும் இனி சுதேசமன்னர்களும் புதிய இந்திய அமைப்பின் இன்றியமையாதக் கூறுகளாக விளங்குவார்கள் என்பதும் தெளிவாயிற்று. இனி அவர்கள் அகில இந்திய விவகாரங்களில் தங்களுடைய செல்வாக்கைப்பயன்படுத்துவார்கள் என்பதும் விளங்கிற்று. அதனை நாம் புரட்சிகரமானக்கருத்து என்று கூறலாம் ஏனெனில் அது பிரிட்டிஷ் இந்தியாவையும், சுதேசமன்னர் ஆளுகைக்குட்பட்டிருந்த இந்தியாவையும் ஒன்றோடு ஒன்று நெருக்கமாகப் பிணைத்து வைக்க வழிசெய்தது. இப்புதிய கொள்கை 1935-ஆம் ஆண்டில் இயற்றப் பெற்ற இந்திய அரசியல் சட்டத்தில் இடம் பெற்றது. சுதேசமன்னர்கள் கூட்டரசின் மைய அமைப்பைச்சார்ந்த சட்டசபை (Federal Assembly) அல்லது கீழ்ச்சபையின் அங்கத்தினர்களுள் மூன்றில் ஒருபங்கினரையும், இராச்சிய சபை (Council of State) யின் அங்கத்தினர்களுள் ஐந்தில் இரண்டு பங்கினரையும், நியமனம் செய்யும் உரிமையை அச்சட்டம் அவர்களுக்கு வழங்கியது. அவர்கள் உடன்படிக்கைகள் வாயிலாகப் பெற்றிருந்த உரிமைகளைக் காக்கும் பொருட்டு கூட்டாட்சியில் சுதேசமன்னர்கள் தாமாகவே இணைந்து கொள்ளவேண்டும் என்றும், அதற்

காக அவர்களை வலுக்கட்டாயப் படுத்தலாகாது என்றும் அச்சட்டத்தில் குறிப்பிடப்பட்டது. அதுமட்டுமன்றி சுதேசமன்னர்களுக்கு மேல் சபையில் அளிக்கப் பெற்றிருந்த இடங்களில் பாதி இடங்களைக் கட்டுப்படுத்த வல்லவர்கள் கூட்டாட்சியில் சேர்ந்த பிறகே கூட்டாட்சியின் மைய அமைப்பு செயற்பட ஏற்பாடு செய்யப்பட்டது. அத்துடன் அந்தகைய மன்னர்கள் சுதேச இராச்சியங்களில் வாழ்ந்திருந்த மக்களின் பாதி பேரை ஆண்டுவருபவர்களாகவும் இருத்தல் வேண்டும் என்ற நிபந்தனையும் இணைக்கப்பட்டது. அந்த நிபந்தனை சுதேச மன்னர்கள் மன உறுதியற்றவர்கள், கூட்டாட்சியில் நம்பிக்கையற்றவர்கள், அதனை நேரடியாக எதிர்ப்பவர்கள் ஆகியோர் கூட்டாட்சியில் சேராமல் இருப்பதற்கு ஒரு வாய்ப்பை அளித்தது. அதன் பயனாக அவர்கள் பிரிட்டிஷ் இந்தியாவில் கூட்டாட்சியின் மைய அமைப்பு செயற்படுவதையும் தடுத்து நிறுத்தவும் அவர்களுக்கு ஒரு வாய்ப்பினை அளித்தது. அந்த வாய்ப்பை அவர்களும் பயன் படுத்திக் கொண்டார்கள். 1939-இல் இரண்டாவது உலகப் போர் ஏற்படும் வரை அவர்கள் வெற்றிகரமாக தங்களுடைய முடிவை அறிவிக்காமல் காலந்தள்ளினார்கள். போர் ஏற்பட்டபோது இரண்டாவது முறையாக தங்களுடைய அரசப்பற்றை வெளிப்படுத்தினார்கள். முன்னர் அந்த அரசப்பற்று தன்னியல்பாக வெளிப்பட்டது. ஆனால் இப்பொழுது அந்த அளவிற்கு அது தானாக வெளிப்படவில்லை. சுதேச மன்னர்கள் உலகப்போரின் போது தங்களுடைய அரசப்பற்றை வெளியிட்டபோதிலும், அதைக்கொண்டு அவர்கள் 1931-இல் அளித்த வாக்குறுதிகளை நிறைவேற்றத் தவறிவிட்டனர் என்பதையும், அதனால் அவர்களுடைய அமைப்பு ஒழுங்காக வளர்ச்சியுறுவதை தடை செய்தனர் என்பதையும், பிரிட்டிஷ் இந்தியாவின் வளர்ச்சியையும் தடுத்து நிறுத்தினர் என்பதையும் மறைக்க முடியவில்லை. அவர்களுடைய நடவடிக்கையின் காரணமாக, பிரதிநிதிகளைக் கொண்ட புதிய மைய அமைப்புகள் இன்றியே இந்தியா பெரிய நெருக்கடியைச் சமாளிக்க வேண்டிய நிலை உண்டாயிற்று. இந்திய தேசியவாதிகளுடன் சமரசம் செய்து கொள்ளவேண்டும் என்ற நோக்கத்துடன் ஏற்படுத்திய திட்டத்தை தடை செய்தார்கள் என்ற காரணத்தால் அவர்கள் பிரிட்டிஷ்காரர்களுடைய ஆதரவை இழந்தார்கள். தங்களுடைய எண்ணங்களை பிடிவாதமாக எதிர்ப்பவர்கள் என்ற காரணத்தால் தேசியவாதிகளின் ஆதரவையும் அவர்கள் இழந்தார்கள். ஆனால் தேசிய உணர்ச்சி இந்த வகைகளால் தடைசெய்து நிறுத்தப்படக் கூடிய நிலையில் இல்லை. சுதேச மன்னர்கள் விட்டுக்கொடாப் பண்பு பெற்றிருந்தமையால், அவர்களின்றியே தேசிய இயக்கம் நடைபெறத் தொடங்கியது. அரசியல் அமைப்பைப்பற்றிய முடிவான விவாதங்கள் மேற்கொள்ளப்பட்டபோது சுதேச மன்னர்கள் நடைமுறையில் அசட்டை

செய்யப் பெற்றனர். பிரிட்டிஷ்காரர்கள் தங்களுடைய மேலாட்சி உரிமையை யாதொரு முன்னேற்பாடும் இன்றி திரும்பப்பெற்றுக் கொண்டார்கள். சுதேச மன்னர்கள் தங்களால் எத்தகைய நிபந்தனைகளை ஏற்படுத்திக்கொள்ள முடியுமோ அத்தகைய நிபந்தனைகளை செய்துக் கொள்ள அவர்கள் வழியிலேயே விடப்பட்டனர். புதிய இந்தியாவில் அவர்கள் மேம்பட்ட நிலையை மதிப்பான வகையில் அடைந்திருக்க முடியும். ஆனால் அதற்கு மாறாக உரிமையை விட்டுக்கொடுப்பதற்காக உதவிச்சம்பளம் பெறுவதற்கும், தனிப்பட்ட உரிமைகளைப் பெறுவதற்கும், ஒழுங்குகேடான வகையில் போட்டியிட்டனர்.

ஆகவே முதலில் சுதேச மன்னர்களை தங்களுடைய ஆட்சி முறையைதற்காலக் கருத்துக்கேற்றவாறு அமைத்துக்கொள்ளுமாறு வற்புறுத்துவதன் வாயிலாகவும், பிறகு அவர்களுடைய ஆட்சி முறையை பரந்த கருத்துக்களுக்கேற்ப அமைத்துக் கொள்ளுமாறு அவர்களை வற்புறுத்துவதன் வாயிலாகவும் பழைய இந்தியாவைப் புதிய இந்தியாவுடன் ஐக்கியப்படுத்த மேற்கொண்ட முயற்சி தோல்வியுற்றது என்றே தாம் கூறவேண்டும். அது தோல்வியுறுவதற்கு சுதேச மன்னர்களே பெருங்காரணமாக அமைந்திருந்தனர். ஏனெனில் அவர்கள் பெரும்பாலும் முன்னறிந்திறம் அற்றவர்களாயிருந்தனர்; தங்களுடைய இனத்திற்குரிய சுயநலம் மிக்கவர்களாயிருந்தனர்; முக்கிய மற்ற குலப்பெருமைக்கு முக்கியத்துவம் அளித்தார்கள் கடைசி காலத்தில் அவர்கள் தலைமையேற்று நடத்தும் ஆற்றல் அற்றவர்களாயிருந்தனர். பிரிட்டிஷ்காரர்களும் ஓரளவு அதனுடைய தோல்விக்குப் பொறுப்பு ஏற்க வேண்டியவர்களாவார்கள். தொடக்கத்தில் தற்கால வழக்குக்கு ஏற்றவாறு ஆட்சி முறையை அமைக்கும் கோட்பாட்டினை போதிய அளவு விறுவிறுப்புடன் கடைப்பிடிக்கவில்லை. புதிய அமைப்பை உருவாக்குவதில் தங்களுடைய முழு கவனத்தைச் செலுத்துவதற்குப் பதிலாக மற்றொரு கலகத்தைத் தடுப்பதிலேயே தங்களது கவனத்தை அதிகமாகச் செலுத்தியிருந்தார்கள். இரண்டாவதாக பல சிறு இராச்சியங்களை இணைத்து பெரிய இராச்சியங்களை உருவாக்கத் தவறினார்கள். அவ்வாறு செய்திருப்பின் செல்வாக்குடன் கூடிய இராச்சியங்களும் தற்கால ஆட்சி முறைகளைக் கொண்ட இராச்சியங்களும் ஏற்பட்டிருக்கக் கூடும். மேற்குறித்த வகையில் நடவடிக்கைகளை பிரிட்டிஷ்காரர்கள் மிக்க செல்வாக்குப் பெற்றிருந்த காலத்தில் மேற்கொண்டிருக்கலாம். கர்சன் பிரபு காலத்திலும் கூட அவற்றை மேற்கொண்டிருக்கக்கூடும். ஆனால் அந்த வகையில் நடவடிக்கைகளை மேற் கொள்ள வேண்டும் என்று விரும்பிய போது, அவற்றை நிறைவேற்றுவதற்குரிய அதிகாரம் பெற்றிருக்கவில்லை. இவ்வாறாக நல்வாய்ப்புடன் கூடிய பெரியதொரு முயற்சி படுதோல்வியுற்றது. இதற்கு இரு காரணங்கள் உண்டு. முதலாவதாக

பிரிட்டிஷ்காரர்கள் வருங்காலத்தைப் பற்றிய திட்டமானக் கருத்துக்களை துவக்கத்தில் கொண்டிருக்கவில்லை. இரண்டாவதாக சுதேச மன்னர்கள் முன்னேற்றத்திற்குரிய நடவடிக்கைகளை தொடங்கும் ஆற்றலையும், பொது விவகாரங்களில் பரந்த மனப்பான்மையும் பெற்றிருக்கவில்லை.

# 8. கர்சன் பிரபு

டல்ஹௌசியும் கலகத்திற்குப் பின்னர் ஆட்சி செலுத்தி வந்த அரசப் பிரதிநிதிகளும் நிறுவிய பேரரசு கர்சன் பிரபு காலத்தில் உச்ச நிலையை அடைந்தது. மெகாலே முடிவாக தன்னுட்சி முறை ஏற்படுத் தப் பெறவேண்டும் என்னும் கொள்கையை அறிவித்தார். பெண்டிங்கு அத்தகைய ஆட்சி ஏற்படுத்தப் பெறும் நாளை எதிர் நோக்கி யிருந்தார். ஆனால் அந்தக் கொள்கை எக்காலத்தில் முறையாக நிரா கரிக்கப்படவில்லை என்பதை நாம் கண்டிப்பாக சொல்ல இயலாது. சில சமயங்களில், குறிப்பாக ரிப்பன் காலத்தில், அந்தக் கொள்கை ஆட்சியாளர்களின் மனதை வெகுவாக கவர்ந்திருந்தது. ஆனால் அந்தக் கொள்கையை முழுமையாக நிறைவேற்றப்படும் நாள் தள்ளிக் கொண்டே போகப்பட்டது. இவ்வாண்டுகளில் தன்னுட்சி ஏற்படுத்து வதில் மேலும் தாமதம் ஏற்பட்டது. அது நேற்று தன்னுட்சி, நாளை தன்னுட்சி என்று கூறப்பட்டு வந்ததேயன்றி இன்று தன்னுட்சி ஏற்படுத்தப் பெறும் என்று கூறப்படவில்லை. கிப்லிங் என்பவரை தீர்க்கதரிசியாகவும் சேம்பர்லேன் என்பவரை செயலாற்றும் பாங்குள்ள மேலாளராகவும் கொண்டு செயற்பட்டு வந்த ஏகாதிபத்தியக் கொள்கை அப்பொழுது பெரும் வெற்றியைக்கண்டு இருந்தது. பிரிட்டிஷ்காரர் கள் தங்களுடைய ஆட்சித் திறமையில் பெருமளவில் தன்னம்பிக்கை கொண்டிருந்தார்கள். ஏனைய மக்கள் தங்களைத் தாங்களே ஆளுவதற்கு முயற்சிக்க அனுமதி வழங்கினாலும், அவர்களால் ஆட்சியை சரிவர நடத்த இயலாது என்று கருதினார்கள். ஆகவே ஆட்சி முறையில் இந்தியர்களுக்கு பயிற்சி அளிப்பதற்குப் பதிலாக இந்தியர்கள் சார்பில் தாங்களே ஆளும் பொறுப்பை ஏற்றுக் கொண்டனர். அம்முறையும், இந்தியர்களும் ஒரு காலத்தில் ஆளும் பொறுப்பை ஏற்று நடத்தும் வகையில் அமையவில்லை. இந்த வகையான மட்டுமிஞ்சிய தன்னம் பிக்கையுடன் ஒரு ஏமாற்றமும் ஏற்பட்டிருந்தது. இந்திய மக்களி டையே மேல்நாட்டுக் கருத்துக்களுக்கேற்ப சீர்திருத்தங்கள் வேகமாக வளர்ச்சி ஏற்படா நிலையே அந்த ஏமாற்றத்திற்குக் காரணமாகும்.




இருபதாம் நூற்றாண்டில் இந்தியா.

முதலில் தன்னாட்சி முறையை ஏற்படுத்த வேண்டும் என்று எண்ணிய போது, அந்த எண்ணம் விரைவாக மேல்நாட்டுப் பண்பு மயமாக்க முடியும் என்ற அவா நம்பிக்கையுடன் இணைக்கப்பட்டிருந்தது. அவர்கள் ஏறபடுத்தவிருந்த தன்னாட்சி பெற்ற இந்தியா மேல்நாட்டுப் பண்பு மயமாக்கப்பெற்ற இந்தியாவாக விளங்க வேண்டும் என்று எண்ணினார்கள். மேல்நாட்டுக் கருத்துக்களுக்கேற்ப மேற்கொள்ளப் பட்ட சீர்திருத்த நடவடிக்கைகள் மெதுவாக முன்னேறி வருவதாக அவர்களுக்குக் காணப்பட்டது. ஆகவே பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் தன்னாட்சி உரிமையை இந்தியர்களுக்கு வழங்குவதை ஒத்திப்போட்டுக் கொண்டு வந்தனர். மேல்நாட்டுக் கருத்துக்களுக்கேற்றவாறு சீர்திருத்த மேற்கொண்ட நடவடிக்கைகள் ஒரு சிலருக்கு விட்டு விட்டு ஒளி விடுகிற மங்கலான விளக்கு போல் தோன்றின. ஏனையோருக்கு அது கொள்ளிவாய் பேய் போல் காட்சியளித்தது. சாதாரண ஆற்றலைப் படைத்திருந்த ஆட்சியாளர் மேற்குறித்த கருத்தை ஏற்றுக் கொண்டதினால் பெரிய தவறை செய்திருந்தனர் என்று கருதப்பட்டது. ஏனெனில் அவர் மேல்நாட்டுக் கருத்துக்களுக்கேற்ப சீர்திருத்த நடவடிக்கைகளை உயர் குடியாளர்கள்தான் மேற்கொள்ளுவார்கள் என்று இன்னும் எதிர் பார்த்திருந்தார். புதிதாகத் தோன்றியிருந்த நடுத்தர வர்க்கத்தினர் அடைந்திருந்த முக்கியத்துவத்தை அவர்கள் அறிந்து கொள்ளவில்லை. கர்சன் பிரபு அந்த தவறை இழைத்திருந்தார். அவருடைய நடவடிக்கையின் வாயிலாக திடீர் எழுச்சி ஒன்றினை ஏற்படுத்தினார். அவர் பதவியலமர்த்தப்பட்ட போது, கன்சர்வேடிவ் கட்சியைச் சார்ந்த ஏகாதிபத்தியக் கொள்கையை ஆதரிப்பவர்களு டைய நம்பிக்கைக்கு உகந்தவராக அவர் காணப்பட்டார். அப்பொழுது அவருக்கு வயது நாற்பது. அதற்கு முன்னர் அவர் இந்தியாவிற்கு நான்கு முறை வந்திருந்தார். மேலும் ஏனைய கிழக்கு நாடுகளிலும் சுற்றுப் பயணம் செய்து இருந்தார். மேலும் அவர் மூன்று ஆண்டுகாலம் வெளிவிவகார துணை அமைச்சராகப் பணிபுரிந்து வந்தார். அவர் சிறந்த பேச்சாளர். மிக்க உறுதியான உள்ளம் படைத்தவர். விடாமுயற்சியுடன் பணியாற்றும் ஆற்றல் படைத்தவர். அவருக்கும் டல்ஹௌசி பிரபுவிற்கும் இடையே காணுதற்கு அரிய ஒற்றுமைகள் சில உண்டு. அவ்விருவரும் தங்களுடைய அரசியல் வாழ்வு முற்றிலும் மலர்ச்சி பெற்றிராத காலத்தில் இந்தியாவிற்கு வந்தனர். அவர்கள் தங்களுக்கு நல்ல எதிர்காலம் இந்தியாவில் உண்டு என்ற கருத்துடன் வந்திருந்தனர். அவர்கள் இருவரும் அதிகார மனப்பான்மையைப் பெற்றிருந்தனர். அவர்கள் இருவரும் மாறுதல்களைப் புகுத்த இடைவிடாது முயற்சிகள் மேற்கொண்டிருந்தனர். இந்தியாவில் பணியாற்றி வரும் அதிகாரிகளின் முடிவைவிட தங்களுடைய முடிவே மேலானதென்று கருதி அதனைக் கடைப்பிடித்து வந்தனர். ஆட்சி

முறையில் இருவரும் ஒரு புதிய ஆற்றலைப் புகுத்தியிருந்தனர். இருவரும் முடிவாக தேவைக்கு மேற்பட்ட வேகத்தில் வெகு தூரம் சென்றுவிட்டனர். ஆகவே அவர்கள் குற்றச்சாட்டிற்கு இலக்கானார்கள். மேலும் அவர்கள் பெருத்த ஏமாற்றமும் அடைந்தார்கள். அவர்களிருவரில் டல்ஹௌசி பிரபு படைப்புத்திறனைப் பெரிதளவில் பெற்றிருந்தார் என்று கூறலாம். டல்ஹௌசி அப்பொழுது தோன்றி வரும் காலத்தின் சிறப்பியல்புகளைத் தன்னிடத்தில் அடக்கியிருந்தார். ஆனால் கர்சன் பிரபு அவர் காலத்தில் மறைந்து கொண்டுவரும் காலத்தின் பண்பியல்புகளைத் தன்னிடம் உட்கொண்டிருந்தார். டல்ஹௌசி மேற்கொண்ட நடவடிக்கைகளுள் பல முற்றிலும் புதியனவாகும். ஆனால் கர்சன் பிரபுவின் நடவடிக்கைகள் ஏற்கனவே மேற்கொள்ளப்பட்டவைகளை விரிவு படுத்தும் வகையாகவும், அல்லது செம்மை படுத்தும் வகையாகவும் அமைந்திருந்தன. ஆனால் அவர்கள் இருவரில் எவரேனும் இந்தியாவின் கவர்னர் ஜெனரலாகப் பணியாற்றாது இருந்திருப்பாரேயானால் தற்கால இந்தியா இன்றிருக்கும் நிலைமையை அடைந்திருக்க முடியாது என்று நாம் திட்டவட்டமாகக் கூற முடியும். கர்சனைப் பற்றிக் குறிப்பிடும்போது, அவருடைய நடவடிக்கைகளுள் பல ஒழிக்கப்பெற்றன. என்றாலும், ஏனைய நடவடிக்கைகள் தொடர்ந்து நிலைத்திருந்து இந்திய அமைப்பின் ஒருகூறாக அமைந்து சிறப்படைந்தன என்று நாம் உறுதியாகக் கூற முடியும். அவரிடம் சில குறைபாடுகள் இருந்தன என்பதை மறுக்க இயலாது. அவரிடம் காணப்பெற்ற அடக்கி ஆர்ப்பரிக்கிறத் தன்மை, நயமற்ற பேச்சு, ஊறுபடுத்தும் விளக்க உரைகள் ஆகியவை ஒரு சிலரைத்தான் பாதித்தன. அவர்களுடைய மறைவிற்குப் பின்னர் அக்குறைபாடுகளும் மக்களுடைய மனதினின்றும் அகன்றன. ஆனால் அவருடைய இடைவிடா உழைப்பு, நுணுக்கமான விவரங்களில் கூட அவர் செலுத்தியிருந்த கவனிப்பு, அவர் கொண்டிருந்த தெளிவான கருத்துக்கள், அரசியல் மதிநுட்பம் ஆகியவற்றின் பயனை இந்தியா தொடர்ந்து அனுபவித்து வந்தது.

கர்சன் பிரபுவினுடைய ஆட்சியை மக்கள் நலம் பேணும் வல்லாட்சி என்று நாம் குறிப்பிட முடியும். அதே நேரத்தில் தன்னாட்சி முறை பிற்காலத்தில் நிகழக்கூடிய வகையிலும் அது அமைக்கப்பட்டிருந்தது. ஆட்சி அதிகாரங்களைப் பயன்படுத்துவதில் மிக்க ஆர்வம் கொண்டிருந்தார். ஆட்சி முறையைச் செம்மைப்படுத்தி அமைப்பதிலும் பேரார்வம் கொண்டிருந்தார் இந்திய மக்களுக்குச் சேவை செய்ய வேண்டும் என்று உளமாற விரும்பியிருந்தார். அந்த விருப்பத்தை நிறைவேற்றுவதற்குத் தேவையான சட்டமுறையான அதிகாரங்களையும், பதவியையும் பெற்றிருந்தார். அவர் பதவியேற்ற

வுடன் இந்திய ஆட்சி முறையைத் திருத்தியமைக்கும் வேலையில் முனைப்புடன் இறங்கினர். முதலில் அவருடைய எல்லைப்புறம் சார்ந்த நடவடிக்கைகளைப் பற்றிக் கவனிப்போம். எல்லையை ஓரளவு முந்தித் தள்ள வேண்டும் என்ற கொள்கை கடைபிடிக்கப் பெற்றதன் விளைவாக 1893-இல் 'டூரண்டு கோடு' அமைக்கப்பட்டது என்றும், அக்கொள்கை கடைபிடிக்கப்பெற்றதன் பயனாக எதிர்ப்பும், அவநம்பிக்கையும் ஏற்பட்டது என்றும், அதன் விளைவாக எல்லைப் புறப் பகுதியில் கிளர்ச்சி ஏற்பட்டது என்றும், அக்கிளர்ச்சியின் பயனாக எல்லைப்புறப் பகுதியில் அமைதியற்ற நிலை ஏற்பட்டிருந்தது என்றும் நாம் முன்னரே கவனித்தோம். 1899ஆம் ஆண்டின் தொடக்கத்தில் கர்சன் பிரபு இந்தியா வந்தடைந்த பொழுது அந்தப் பகுதி இன்னும் தொடர்ந்து அமைதியற்ற நிலையில் இருந்தது. ஆட்சி முறைச் சார்ந்த எல்லைக்கு அப்பால் 10,000க்கு மேற்பட்ட படைவீரர் கள் இருந்து வந்தனர். அவர்கள் அவ்விடத்தினின்றும் திருப்பி அழைக்கப்படுவார்கள் என்ற நம்பிக்கைத் தோன்றவில்லை. அவர்கள் பக்கத்திலிருந்த போக்குவரத்து சாதனங்கள் வாயிலாக அவர்களுடன் தொடர்பு கொள்வதற்கு யாதொரு முயற்சியும் மேற்கொள்ளப்பட வில்லை. அதற்கு மாறாக அரண் பாதுகாப்புகளுடன் கூடிய படைத் தளங்களை அமைப்பதற்காக திட்டங்கள் உருவாக்கப்பெற்றன, அத்திட்டங்கள் நிறைவேற்றப்பட்டால் கணக்கற்ற முற்றுகைச் சண்டைகளும், முற்றுகைகளினின்றும் விடுவிப்பதற்காக துணை உதவியாக படைகளை அனுப்ப வேண்டிய நிலையும் ஏற்பட்டிருக்கும். மேலும் அவற்றுள் ஏதேனும் ஒரு படைத்தளம் கைப்பற்றப் பெற்று விட்டால் நிலையான சிக்கல் தோன்றவும் வழியிருந்தது. அத்தகைய சிக்கல் எல்லைப்புற முழுவதிலும் கிளர்ச்சி உருவாகி இருக்கக்கூடும். கர்சன் பிரபு இந்தியா வந்தடைந்தபோது எல்லைப்புற மாவட்டங்களில் தோன்றியிருந்த நிலையை திறந்த புண்பட்ட இடத்தில் எரிச்சல் தரும் பொருளை இட்டால் எத்தகைய நிலை உண்டாகுமோ அத்தகைய நிலைக்கு ஒப்பிடலாம் அங்கு தோன்றியிருந்த அமைதியான நிலை மறைந்து கொந்தளிக்கும் நிலை ஏற்பட்டது. அச்சத்தைத் தூண்டு வதாகவும் அது அமைந்திருந்தது. நாளுக்கு நாள் மென்மேலும் சீர்குலைந்து வருவதாகவும் காணப்பட்டது. கர்சன் பிரபு சினமூட்டுகிற நடவடிக்கைகளை கைவிட்டார். எல்லையில் வாழ்ந்திருந்த மக்களினங் களைக் கொண்டே அவர்களுக்குத் தேவையான பாதுகாப்பை அமைத்துக் கொடுத்தார். நிலையானப் படைவீரர்களை ஒருமுகப்படுத்தி இடம் விட்டு இடம் எளிதில் செல்லத்தக்க இடர்காப்புச் சேமப்படை யினை ஏற்படுத்தினர். இதன் பயனாக எவ்விடத்தில் தாக்குதல் நேரும் என்ற அச்சம் தோன்றுகிறதோ அவ்விடத்தில் படைகளை பெருமளவில் குவிக்க இயன்றது. கர்சன் குறிப்பிட்டபடி,

எல்லையைத் தாண்டி சென்று படை நிலைகளை அமைத்திருந்த பிரிட்டிஷ்காரர்கள் அவ்விடத்தைவிட்டு மீண்டும் தங்களிடத்திற்கே திரும்பிவிட வேண்டும், எல்லைப்புற சாதியினருக்குச் சொந்தமாக இருந்த பகுதியின் பாதுகாப்பை அவர்களுடைய துருப்புக்களின் வாயிலாகவே ஏற்படுத்த வேண்டும்; பிரிட்டிஷ் ஆட்சிக்குட்பட்ட பகுதியில் பிரிட்டிஷ் துருப்புக்களை ஒருமுகப்படுத்தி வைக்கவேண்டும்; அந்துருப்புக்கள் எல்லைப் பாதுகாப்புக்கு மட்டுமன்றி, துணையுதவி அளிக்கத்தக்கனவாகவும் அமைய வேண்டும்; பிரிட்டிஷ் துருப்புகள் நிலைநிறுத்தப் பெற்றிருக்கும் இடங்களுக்குப் பின்புறத்தில் அமைக்கப் பெற்றிருக்கும் போக்குவரத்து சாதனங்கள் சீரமைக்கப்பட வேண்டும் என்பவையே அவருடைய எல்லைப்புறக் கொள்கையின் முக்கிய கூறுகளாகும்.

இந்தக் கொள்கையைப் பின்பற்றி, கர்சன் பிரபு சித்ரால், கைபர், குர்ரம் பள்ளத்தாக்கிலிருந்து பிரிட்டிஷ் படைகளை திருப்பி அழைத்துக் கொண்டார். கணவாய்களையும், மலை சாதியினர் வசிக்கும் இடங்களையும் காவல் புரிவதற்காக மலை சாதியினரைக் கொண்ட படைகளை ஏற்படுத்தினார். அவைகளுக்கு 'காசாதார்கள்' என்ற பெயர் வழங்கப் பெற்றது. பெஷாவர், கோஹாத், போன்ற இடங்களை மூலப்படைத் தளங்களாகக் கொண்ட பிரிட்டிஷ் படைகள் அங்கும் இங்கும் திரிந்து கொண்டு அவற்றினுக்கு உதவி புரிய எப்பொழுதும் ஆயத்தமாக இருந்தன. சாலைகளும் இருப்புப்பாதைகளும் அமைக்கப்பெற்றன. பாரசீகத்தின் எல்லைக்கருகேயுள்ள நுஷ்கி என்னும் இடம் வரைக்கும் குவெட்டா இரயில் பாதை விரிவு படுத்தப்பெற்றது. இது எல்லைப் பிரச்சனைக்கு உடனடியான பயன்தரத்தக்க தீர்வு முடிவினை ஏற்படுத்தித் தந்தது. முதலாவது உலகப்போர் முடியும்வரை எல்லைப்பகுதியில் அமைதி நிலவி இருந்தது.

அடுத்தபடியாக கர்சன் வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தை தோற்றுவித்தார். டல்ஹௌசி காலமுதற்கொண்டே வடமேற்கு எல்லைப்புற மாகாணம் ஏற்படுத்த வேண்டும் என்ற வகையில் பலர் சிந்தித்து வந்திருந்தனர். லிட்டன் பிரபு சிந்து மாகாணத்தில் கராச்சி நீங்கலாக ஏனைய பகுதிகளையும், பஞ்சாபின் சில பகுதிகளையும் இணைத்து ஒரு புதிய மாகாணத்தை அமைக்கத் திட்டமிட்டிருந்தார். அதற்கு ஈடாக மத்திய மாகாணங்களை பம்பாய்க்கு அளிக்கவேண்டும் என்றும் திட்டமிட்டார். எல்லைப் பகுதியிலிருந்த மாவட்டங்களின் முக்கியத்துவம் நாள்தோறும் பெருகிக் கொண்டு வந்ததே அத்தகைய நடவடிக்கை மேற்கொள்ளுவதற்கு தவிர்க்க முடியாத காரணமாகும். பிரிட்டிஷ் பேரரசுடன் புதிதாக இணைக்கப்பட்ட பஞ்சாபிற்கும் வலு

வற்றிருந்த ஆப்கானித்தானத்திற்கும் இடையே கட்டுக்குள் அடங்காத மலை சாதியினர் வசித்து வந்த பெரிய நிலப்பரப்பு இருந்த பொழுது அந்த மலை சாதியினருடன் மேற்கொள்ள வேண்டிய உறவு முறைகளை நிர்ணயிக்கும் பொறுப்பை அங்கேயே பணியாற்றி வந்த அனுபவமிக்க அதிகாரிகளிடத்தில் பத்திரமாக ஒப்படைக்க முடிந்தது. ஆனால் ஆப்கானித்தானம் பற்றிய விவகாரங்கள் முன்னைவிட அதிகமான முக்கியத்துவம் அடையத் தொடங்கியதாலும், அவ்விவகாரங்கள் பலநாடுகளைப் பாதிக்கும் சிக்கல்களை உட்கொண்டிருந்ததாலும், பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் இடையீட்டாளர் இன்றி நேர்முகமாக அவ்விவகாரங்களைக் கவனிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. முன்பெல்லாம், எல்லையைப் பற்றிய விவகாரங்கள் பஞ்சாப் அரசாங்கத்தின் வாயிலாகவே இந்திய அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டு வரப்பெற்றன. அந்த முறை மிக்க காலதாமதத்தை ஏற்படுத்தியது. ஆனால் அப்பிரச்சனைகளுக்கு வெகுவிரைவாக தீர்வுகாண வேண்டிய அவசியம் உணரப்பட்டது. மேலும், பஞ்சாபில் அமைதி அதிகளவில் ஏற்படுத்தப்பெற்றதால் பஞ்சாப் அரசாங்கம் தன்னுடைய ஆட்சிக்குட்பட்ட பகுதியில் முன்னேற்றத்திற்குரிய பிரச்சனைகளை நோக்கித் தன் கவனத்தைச் செலுத்தத் தொடங்கியது. சுருங்கக்கூறின், இந்திய அரசாங்கம் எல்லைப் பிரச்சனையில் அதிக கவனம் செலுத்தத் தொடங்கிய போது, ஞ்சாப் அரசாங்கம் அதில் காட்டி வந்த அக்கரையை குறைத்துக் கொள்ளத் துவங்கியது. கர்சன் பிரபு பதவி யேற்றத்தால் எல்லைப்புற மாகாணம் அமைக்க வேண்டும் என்ற முடிவு தவிர்க்க முடியாத முடிவாகக் காணப்பட்டது. வெகு நாட்களாகப் பேசப்பட்டு வந்திருந்த தனி மாகாணம் அவர் காலத்தில் அமைக்கப்பட்டது. அந்த மாகாணத்தை நிறுவும் போது தோன்றிய பரபரப்பை மனத்தில் கொண்டு அதனுடைய முக்கியத்துவத்தை குறை மதிப்பிடலாகாது. புதிதாக ஏற்படுத்தப்பெற்ற மாகாணம் பத்தானியர்கள் வசித்து வந்த பாகம் முழுவதையும், ஹஜாரா, பெஷாவர், கோஹத், பன்னு, டேரா இஸ்மெயில்கான் என்ற ஐந்து ஒழுங்குபட்ட மாவட்டங்களையும் உட்கொண்டிருந்தது. தலைமைக் கமிஷனர் ஒருவர் அதற்குத்தலைவராக அமர்த்தப்பெற்றார். அவர் வைசிராயிக்கு நேரடியாக கட்டுப்பட்டு நடக்கவேண்டிய நிலை உருவாக்கப்பட்டது. அவருக்கு உதவியாக அமைக்கப்பெற்ற அலுவலகத்தைச் சார்ந்தவர்கள் அரசியல் துறையைச் (Political Dept.) சார்ந்தவர்களாகவே இருந்தனர். பஞ்சாபை டல்ஹௌசியின் படைப்பு என்று கூறுவது எவ்வாறு பொருத்தமாகுமோ அவ்வாறே வடமேற்கு மாகாணத்தை கர்சன் பிரபுவின் படைப்பு என்று கூறலாம். இனி எல்லைப்புறத்தைப் பற்றிய விவகாரங்களை கவனிக்கும் பொறுப்பு எல்லைப்புற விவகாரங்களில் அக்கறை செலுத்தி யிருந்த அரசாங்கத்தின

ரிடம் ஒப்படைக்கப்பெற்றது. எல்லைப்புற மாகாணம் அமைக்கப் பெற்றதால் விளைந்த நற்பயன்கள் அந்த நடவடிக்கை உட்கொண்டிருந்த கூர்நோக்கை எடுத்துக் காட்டுகின்றன. மற்றொரு விளைவினையும் அந்த நடவடிக்கை ஏற்படுத்தியது. மனக்குழப்பத்தைத் தடுக்க எண்ணி, பழைய வடமேற்கு மாகாணங்கள் இப்பொழுது ஆக்ராவையும், அயோத்தியையும் உள் அடக்கிய ஐக்கிய மாகாணங்கள் என்ற பெயரைப் பெற்றன. இவ்வாறாக சாதாரணமாக வழக்கிலிருக்கும் உ.பி. (U.P.), ஐக்கிய மாகாணங்கள் ஏற்படுத்தப் பெற்றன. (இன்று அதனை உத்தர பிரதேசம் என்று அழைக்கிறோம்.)

எல்லைக்கு அப்பால் ஆப்கானித்தானம் இருந்தது. பிரிட்டிஷ் காரர்கள் கையாண்டு வந்த மேற்குப் புறக்கொள்கை 1880ஆம் ஆண்டி லிருந்து கையாளப்பெற்று வந்த கொள்கையை முக்கியக் கூறுகளைப் பொருத்தளவில் ஏறக்குறைய ஒத்து இருந்தது என்று கூறலாம். ஆனால் முன்பு ருஷ்யாவின் ஆதிக்கத்தை விரிவு படுத்துவதற்காக மேற் கொள்ளப்பட்ட திட்டங்களை எதிர்கொள்ளும் வகையில் பிரிட்டிஷ் காரர்கள் ஆப்கானித்தானத்தில் நேர்முகமாகத் தலையிட்டு வந்தனர். ஆனால் ஆப்கானியர்கள் தங்களுடைய சுதந்திரத்தைக் காப்பதில் பேரார்வம் கொண்டிருந்ததனால் அவர்களே ருஷ்யாவின் ஆதிக்கம் ஆப் கானித்தானத்தில் ஏற்படுவதை முறியடிப்பார்கள் என்றக்கருத்து வளர்ந்தது. ஆகவே அவர்களுடைய விவகாரங்களில் நேரடியாகத் தலையிடுவதற்குப் பதிலாக அவர்களுடைய சுதந்திர வேட்கையில் நம் பிக்கை கொள்ள முற்பட்டனர். அப்துர் ரஹ்மான் உயிருடன் இருந்த வரை அந்தக்கொள்கை வெற்றிகரமாகக் கைப்பிடிக்கப்பெற்று வந்தது. ஆயினும் ஓரிரு சமயங்களில் அதனை நடைமுறைப் படுத்துவதில் சில தடங்கல்கள் தோன்றியிருந்தன. 1897-இல் ஏற்பட்ட கிளர்ச்சிகள் உண்டாக்கிய கடுஞ்சோதனையில் அக்கொள்கை வெற்றி கண்டது என்றே கூறவேண்டும். ஏனெனில் ஆப்கானிய அமீர் அடிக்கடி மாறும் இயல்பு படைத்த மலை சாதியினரிடத்தில் செல்வாக்குப் பெறுவது அல்லது புனித சமயப்போரில் துணிச்சலுடன் ஈடுபட்டு கீர்த்தி அடை வதுபோன்றவைகளை விட ருஷ்யாவிற்கு எதிராக பிரிட்டனுடைய உதவி யைப் பெறுவதே மேலானது என்று எண்ணினார். அவருடைய மகனான அபீபுல்லா 1901-இல் யாதொரு போட்டியின்றி அமீரானார். அத்தகைய நிகழ்ச்சி வழக்கத்திற்கு மாறானது என்றே நாம்கருதவேண்டும். முதலில் அவர் பிரிட்டிஷ்காரர்களுக்குத் தொல்லை கொடுத்தார். சில ஆண்டுகள் வரை உதவிப்பணம் பெறுவதை நிறுத்திக் கொண்டார். ஆனால் ஆம்ப்டில் பிரபு இடைக்கால அரசப் பிரதிநிதியாக பணியாற்றிய காலத்தில் சர் லூயி டேன் என்பவர் அமீரிடத்தில் தூது சென்றார் அதன் பயனாக அமீருக்கும் பிரிட்டிஷ்காரர்களுக்கும் இடையே மீண்



விக்டோரியா மெமோரியல் ஹால், கல்கத்தா.



வைசிராய் மாளிகை, புது டில்லி.

டும் நட்புறவு ஏற்படுத்தப் பெற்றது. பழைய ஒப்பந்தம் புதுப்பிக்கப் பெற்றது. அமீருக்கு 'மாட்சிமை தங்கிய' என்ற (மன்னருக்குரிய) பட்டம் வழங்கப்பெற்றது. அவர் மீண்டும் உதவித் தொகையைப் பெறச் சம்மதித்தார்.

இந்திய அரசாங்கத்தின் கொள்கையில் யாதொரு மாற்றமும் ஏற்படவில்லை யென்றாலும், ஆப்கானித்தானத்திற்கு மேற்கேயிருந்த இடங்களில் ஐரோப்பிய அரசியல் சூழ்நிலைக்கு ஏற்றவாறு அதனைப் பயன்படுத்த வேண்டியதாயிற்று. 1887ஆம் ஆண்டு முதல் ருஷ்யா தன்னுடைய கவனத்தை தூரக்கிழக்கு நாடுகளின் பக்கமாகச் செலுத்தியிருந்தது. அந்நாடுகளில் ருஷ்யா கையாண்டு வந்த கொள்கையின் விளைவாக 1904-இல் ருஷ்யாவிற்கும் ஜப்பானுக்கும் இடையே போர் மூண்டது. மத்திய ஆசியாவிலிருந்த சிற்றரசுகள் அழிக்கப்பட்ட பின்னர் ருஷ்யா பிறரை அச்சுறுத்தும் நிலையில் இருந்தது என்றாலும் மத்திய ஆசியாவில் அதனுடைய செல்வாக்கு வலிமை குறைந்தே இருந்தது. வடக்கு பாரசீகத்தில் ஊடுருவல் செய்வதிலும், பாரசீகத்தைத் தற்காலக் கருத்துக்களுக்கேற்ப மாற்றியமைக்க வேண்டும் என்னும் நோக்கத்துடன் மேற்கொள்ளப்படும் நடவடிக்கைகளைத் தடுப்பதில் மட்டுமே ருஷ்யா முனைந்து செயற்பட்டு வந்தது. பிரிட்டிஷ்காரர்கள் ருஷ்யாவின் மேற்குறிப்பிட்ட நடவடிக்கைகளுக்குப் பதிலளிக்கும் வகையில் தெற்குப் பாரசீகத்தில் தங்களுடைய செல்வாக்கைப் பெருக்கிக்கொள்ள முற்பட்டிருந்தனர். அத்துடன் பிரிட்டன் பாரசீக வளைகுடா பிரதேசத்தில் பெற்றிருந்த செல்வாக்கு நிலையும் சேர்த்து இணைக்கப் பெற்றிருந்தது. பதினேழாம் நூற்றாண்டிலிருந்து போர்ச்சுகீசியரின் வாரிசு என்ற முறையில் அவ்விடத்தில் முக்கியமான செல்வாக்குகளைப் பெற்றிருந்தார்கள்[1]. அதே நேரத்தில் ஏனைய நாடுகளும் அந்தப் பகுதியில் கவனம் செலுத்தின. 1890ஆம் ஆண்டிலிருந்து ஏடனிலிருந்து அரபிக்கடலை யடுத்த கடற்கரைப் பிரதேசம், பாரசீக வளைகுடா பிரதேசம் ஆகியவற்றின் மீது பிரிட்டன் செலுத்தியிருந்த பொதுவான மேலாட்சியை எதிர்த்தார்கள். அவ்வெதிர்ப்பு நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டேயிருந்தது. 1899-இல் பிரான்சு, ஓமான் நாட்டின் சுல்தானிடமிருந்து நிலக்கரி ஏற்றும் துறைமுகமொன்றைப் பெற்றது. ஆனால் அத்துறைமுகத்தைத் தாக்கப்போவதாக பயமுறுத்தி அதனை கைவிடும்படி செய்தது. 1900-இல் ருஷ்யா மேற்கொண்ட அத்தகைய முயற்சியும் தடுக்கப்பட்டது. பெர்லின்-பாக்தாத் இரயில் பாதை அமைப்பின் முடிவிடத்தை குவெயிட் என்னுமிடத்தில் ஏற்படுத்த

[1] 1621-இல் போர்ச்சுகீசியரை ஆர்மூசிலிருந்து கிழக்கிந்தியக் கம்பெனி விரட்டியடித்தது.

ஜெர்மனி முயன்றபோது, குவெயிட்டின் தலைவருடன் ஒரு ஒப்பந்தம் செய்துக்கொண்டு, அந்த முயற்சியையும் தோற்கடித்தது. அந்தக் காலத்தில் தான் ஐரோப்பிய அரசுகளின் வெளிநாட்டுக் கொள்கை களில் மாற்றம் ஏற்படத் தொடங்கின. பிரிட்டனுடைய கடலாதிக் கத்தை தனித்திருந்து எதிர்க்க எந்த நாடும் ஆயத்தமாக இல்லை. அதற்கு எதிராக ஏனைய நாடுகளை ஒன்ருக இணைக்கவும் முடியவில்லை. 1903-இல் லாண்ட்ஸ்டவுன் பிரபு விடுத்த அறிக்கையில் பாரசீக வளை குடா பகுதியில் வேறு எந்த நாடாகிலும், அரண் பாதுகாப்புடன் கூடிய படைக்களம் அல்லது தளம் அமைக்க மேற்கொள்ளப்படும் நடவடிக்கை 'பிரிட்டனுடைய தனி நலன்களைப் பாதிப்பதாகக் கருதப்பெறும் என் றும், அத்தகைய நடவடிக்கையை பிரிட்டன் தன் கைவசமிருக்கும் எல்லாவித கருவிகளைப் பயன்படுத்தி தடுக்க முற்படும்' என்றும், குறிப் பிடப்பட்டிருந்தது. 1903-இல் தோன்றியிருந்த நிலை முதலாவது உலகப்போர் ஏற்பட்ட நாள்வரை நீடித்திருந்தது அதைத் தொடர்ந்து பகட்டாரவாரத்திலும், வலிமையிலும் வளர்ச்சி ஏற்பட்டது. அதனை அடுத்து பிரிட்டிஷ் பேராட்கள் அவ்விடங்களில் அமர்த்தப்பெற்றனர். வியாபாரத் தூது குழுக்களும் அவ்விடங்களுக்கு அனுப்பப்பெற்றன. கர்சன் பிரபு பிரிட்டிஷ்காரர்களின் வலிமையும் பகட்டாரவாரமும் பெருக்கமடைந்ததைக் கண்ணுற்றபோது உண்மையிலேயே பூரிப் படைந்தார். இனி மேற்குப் பகுதியில் கர்சன் பிரபு கையாண்டு வந்த கொள்கையின் மூலக்கருத்தைக் கவனிப்போம். அவர், பிரிட்டிஷ்காரர் களுடைய படை வலிமையை ஒருமுகப்படுத்தியும், புத்திசாலித்தன மாக தங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ளுமாறு செய்தும், ஆப்கானியர் கள் மீண்டும் பிரிட்டிஷ்காரர்களிடம் நம்பிக்கைக்கொள்ளுமாறு செய் தார். ருஷ்யா வடக்குப் பாரசீகத்தில் ஊடுருவல் செய்திருந்த பொழுது பிரிட்டிஷ்காரர்கள் தெற்குப் பாரசீகத்தில் பெற்றிருந்த செல்வாக்கு நிலையை வலுப்படுத்தி ருஷ்யர்களுடைய ஆதிக்கம் பெருகவொட்டாமல் தடுத்தார். பிரிட்டிஷ் கடற்படையின் வலிமையை சாமர்த்தியமாகவும் தெளிவாகவும் வெளிப்படுத்தி இந்தியாவிற்கு பாரசீக வளைகுடா பகுதி யிலிருந்து கடல் வழியாக நேரவிருந்த ஆபத்துகளைப் போக்கினர். அவருடைய கொள்கை மிக்க மேன்மையுடையது என்று சொல்வதற் கில்லை. ஆயினும் அக்கொள்கையின் பயன் விளைவுகளை அனைவருமே அறிந்து கொள்ள முடிந்தது.

கர்சன் பிரபு திபெத் விஷயத்தில் மேற்கொண்ட நடவடிக்கைகள் அவ்வளவு மகிழ்ச்சியைத் தரத்தக்கனவாக அமையவில்லை. திபெத் இந்தியாவினின்றும் ஒதுங்கிய நிலையில் இருந்தது. யாதொரு பாதுகாப்புமின்றி இருந்தது. அங்கு பௌத்த மதத்தைச் சார்ந்த சந்நியாசிகளினுல் கட்டுப்படுத்தப்பெற்று வந்த அசாதாரணமான

அமைப்புடன் கூடிய ஒருவகையான சமய ஆட்சி நடைபெற்று வந்தது. புத்தருடைய அவதாரமாகக் கருதப்பெற்ற தலாய் லாமா பண்டைக் காலத்திலிருந்து ஆட்சி செலுத்தி வந்த மன்னர்களை அரச பீடத்தினின் றும் அகற்றிவிட்டார். மேலும் அவரைக்காட்டிலும் அதிக புனிதத் தன்மை வாய்ந்த தாஷி லும்போவில் (Tashi Lhumpo) இருந்த தாஷி லாமா (Tashi Lama) வினும் மேம்பட்டவராக விளங்கினார். சில புனிதமான குறிகளைப் பெற்றிருந்த குழந்தைகளையே அவ்வப் பொழுது தலாய் லாமாவாக தேர்ந்தெடுத்தார்கள். அத்தகைய தலாய் லாமாக்கள் தகுந்த வயதை அடையும்வரை பகர ஆட்சிக்குழு (Regency Council) அரசாங்கத்தை நடத்தி வந்தது. அத்தகைய நிலை அடிக்கடி நிகழ்வதுண்டு. இருநூறு ஆண்டுகளாக திபெத் சீனாவின் மேலாட்சி உரிமையை ஏற்றுக்கொண்டு இருந்தது, சீனா, திபெத்தில் தான் பெற்றிருந்த மேலாட்சி உரிமையை லாசாவில் அமைர்த்தப்பட்டி ருந்த இரண்டு 'அம்பான்கள்' (Ambans) அல்லது ஆணையாளர்கள் வாயிலாக செயலாற்றி வந்தது. வாரன்ஹேஸ்டிங்ஸ் கால முதற்கொண்டு பிரிட்டிஷ்காரர்கள் திபெத்துடன் தொடர்புகொண்டு இருந்தார்கள். வாரன்ஹேஸ்டிங்ஸ் காலத்தில் திபெந் நாட்டிற்கு இரண்டு தூதுவர்கள் அனுப்பப்பெற்றனர். ஆனால் சீனர்கள், இந்தியாவுடன் திபெத் நெருங்கிய தொடர்பு கொள்ளுவதை தடை செய்து வந்தனர். ஆனால் பிற்காலத்தில் சீனாவின் வாயிலாக திபெத்துடன் தொடர்பு கொள்ளு வது மிக எளிதான காரியம் என்று கருதப்பெற்றது. 1885-6ஆம் ஆண்டில் திபெத்துக்கு வாணிக தூதுக்குழு யொன்றை அனுப்ப பிரிட்டிஷ்காரர்கள் திட்டமிட்டனர். அத்திட்டத்தை ஆதரிக்குமாறு சீனாவை வற்புறுத்தினார்கள். அதற்கிடையில் மேற்கு பர்மாவை பிரிட்டிஷ் பேரரசுடன் இணைத்துக் கொள்ளுவதற்கான வாய்ப்பு ஏற்பட்டது. அதற்கு சீனாவின் ஒப்புதல் பெறவேண்டிய அவசிய மேற்பட்டது. அவ்வொப்புதலைப் பெற திபெத்துக்கு வாணிகக்குழு ஒன்றை அனுப்பும் யோசனையை பிரிட்டிஷ்காரர்கள் கைவிட நேரிட்டது. அதன் பின்னர் பேச்சுவார்த்தைகள் இடை இடையே நடைபெற்றன. ஆயினும் உண்மையான வாணிகத் தொடர்பு ஏற்படுத்தப்பெறவில்லை. பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதியில் மூன்று நிகழ்ச்சிகள் ஏற்பட்டதன் பயனாக நிலைமை மாறியது. சீனாவில் மஞ்சு அரசர்கள் அனைவரும் காணும் வகையில் தங்களுடைய வலிமையை இழந்திருந்தார்கள். அதன் பயனாக திபெத்தில் சீனர்கள் பெற்றிருந்த செல்வாக்கும் யாவரும் உணரக்கூடிய அளவில் அழிவுறத் தொடங்கியது. திபெத்து மக்கள் சீனர்களுடைய செல்வாக்கை முற்றிலும் அழிக்கக்கூடிய வலிமை பெற்றவர்களைத் தேட ஆரம்பித்தனர். அப்பொழுது தலாய் லாமா ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளத்தக்க வயதை அடைந்து விட்டதால் பகர ஆட்சிக்

குழுவைக் கலைத்து விட்டார். அவர் ஆற்றல் பொருந்திய தலைவராக விளங்குவதற்கு வேண்டிய தகுதிகளைப் பெற்றிருந்தார். அவரும் தன்னுடைய குடிமக்களைப் போலவே சீனர்களுடைய பிடியிலிருந்து தன்னாட்டை விடுவிக்க பேரார்வம் கொண்டிருந்தார். அவருடைய நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்ள ருஷ்யர்களுடைய உதவியை நாடினார். மேற்குறிப்பிட்ட எண்ணம் தலாய் லாமாவின் உள்ளத்தில் தோன்றுவதற்கு பெரிதும் உதவியாக இருந்தவர் டோர்ஜியேப் என்ற மங்கோலியாவைச் சார்ந்த ருஷ்யக்குடி மகனாவார். டோர்ஜியேப் ருஷ்யாவிற்குப் பல பயணங்களை மேற்கொண்டார். அந்தப் பயணங்கள் அனைத்துக்கும் தலாய் லாமாவே காரணமாயிருந்தாரேயன்றி ருஷ்யர்கள் அல்ல என்று நாம் கருதுவதற்குப் போதிய காரணங்கள் உண்டு. இந்தப் புதிய கொள்கை திபெத்து மக்களில் சிலருடைய எதிர்ப்புக்கு இலக்காகி இருந்தது. ருஷ்யாவினுடைய பேராள் ஒருவர் லாசாவை வந்தடைந்தார் என்ற செய்தி புனைவாற்றலும், ஏகாதிபத்திய மனப்பான்மையும் கொண்டிருந்த கர்சனிடத்தில் எத்தகைய விளைவுகளை உண்டுபண்ணியிருக்கும் என்பதை நாம் கற்பனை செய்து பார்ப்பது எளிதான காரியமாகும். திபெத் நாட்டை வேறெந்த வல்லரசும் கட்டுப்படுத்தி வரக்கூடாது என்ற கொள்கை கர்சன் பிரபுவை வெகுவாகக் கவர்ந்திருந்தது. ஆசியாவின் பூச்சாண்டி என்று கருதப்பெற்ற ருஷ்யாவைப் பற்றி அச்சம் ஏற்பட்டிருந்தது. பிரிட்டிஷ்காரர்கள் திபெத்துடன் வியாபாரத் தொடர்பு வைத்துக் கொள்ள பெரிதும் விரும்பினார்கள். மேற்கூறிய மூன்று காரணங்களும் கர்சன் பிரபுவை தகுந்த நடவடிக்கை மேற்கொள்ளுமாறு தூண்டின. 1878-இல் ஆப்கானித்தானத்தில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளைப் பற்றி அவர் நினைத்து பார்த்திருந்தாலும் கூட அவர் திபெத்திற்குப் படை அனுப்புவதை நிறுத்தியிருக்கமாட்டார் ஏனெனில் திபெத்தியர்கள் தற்கால படைக் கருவிகளைக் கொண்டு பிரிட்டிஷ்காரர்களின் படையெடுப்பைத் தடுக்கும் நிலையில் இருக்கவில்லை. அவர்கள் பெற்றிருந்ததெல்லாம் வழிபாட்டு வாசகங்களே என்பதையும் அவர் அறிந்திருந்தார். திபெத் விவகாரங்களில் இந்திய அரசாங்கத்தினர் தலையிடுவதை பிரிட்டிஷ் அரசாங்கம் ஆதரிக்க விருப்பங்கொள்ளவில்லை ஆயினும் ஒருமுறை பிரிட்டிஷ் தூதுக் குழுவினை எல்லையைக் கடந்து 15 மைல்கள் முன்னேற அனுமதி வழங்கிய பிறகு அந்த முன்னேற்றத்தைத் தொடர்ந்து மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகளை தடுக்க இயலாத நிலையில் தாங்கள் இருப்பதை பிரிட்டிஷ் அரசாங்கத்தினர் உணர்ந்தார்கள். 1904ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் சர். பிரான்சிஸ் யங்ஹஸ்பண்டு என்ற பிரிட்டிஷ் தூதுக்குழுத் தலைவர் லாசாவைச் சென்றடைந்தார். மார்ச்சு மாதத்தில் நிராயுதபாணிகள் என்று சொல்லக்கூடிய நிலையில் இருந்த 700 திபெத்தியர்கள் 'குரு' என்னுமிடத்தில் மிகப்

பரிதாபமாகக் கொல்லப்பட்டனர். பிரிட்டிஷ்காரர்கள் எதிர்பார்த்திருந்த ருஷ்யாவின் தலையீடும் ஏற்படவில்லை. இந்த இரண்டு நிகழ்ச்சிகளும் பிரிட்டிஷ்காரர்களின் கருத்துப்போக்கினை திபெத்துக்குச் சாதகமாக மாற்றியமைத்தன. மேலிடத்தின் கட்டளைகளுக்கு எதிராக திபெத்தின் மீது யங்ஹஸ்பண்டு சுமத்திய கடுமையான நிபந்தனைகள் திருத்தியமைக்கப்பெற்றன. லாசாவிற்குத் தங்களுடைய ஏஜண்டு ஒருவரை அனுப்புவதற்கு பிரிட்டிஷ்காரர்களுக்கு உரிமை வழங்கப்பட்டிருந்தது. அந்த உரிமை அவர்கள் வற்புறுத்தப்படவில்லை.[1] கியான்ட்சி என்னுமிடத்தில் வியாபாரத் தூதுவராலயம் ஒன்று ஏற்படுத்தப்பெற்றது. அதுவே திபெத்திற்கு எதிராக மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கையின் ஆக்கமுறையான விளைவு ஆகும். அத்தூதுவராலயம் 1947ஆம் ஆண்டு வரை செயற்பட்டு வந்த பொழுதிலும், அதனால் பயன்தரத்தக்க விளைவுகள் அதிகளவில் ஏற்படவில்லை. ருஷ்யா திபெத்தை விட்டு விலகியிருக்கத் தொடங்கியது. அதனுடைய கவனமெல்லாம் இப்பொழுது தூரக்கிழக்கு நாடுகளின்பால் செலுத்தப்பட்டிருந்தமையால், அது திபெத்து விவகாரங்களில் தலையிட விருப்பங்கொள்ளவில்லை. திபெத்தியர்கள் வல்லரசுகளிடமிருந்து ஒதுங்கி வாழ்வதால் ஏற்படக்கூடிய நற்பயன்களைப் பற்றி முன்னைவிட அதிகமாக அறிந்திருந்தார்கள். நிலவியல் சார்ந்த அறிவும் பெருக்கமடைந்தது. மேலும் கர்சன் பிரபு குறைவற்ற நுண்ணறிவாற்றலைப் பெற்றிருந்ததாக பிரிட்டிஷ் அரசாங்கத்தினர் கருதி வந்தார்கள். ஆனால் திபெத் படையெடுப்பின் விளைவாக அவருடைய நுண்ணறிவாற்றலில் அவநம்பிக்கைக் கொள்ளலாயினர். சில மாதங்களுக்குப் பிறகு ஏற்பட்ட கிட்சனர் விவகாரத்தினை பிரிட்டிஷ் அரசு கர்சனுக்கு சாதகமாக தீர்ப்பளிக்கவில்லை. அதற்கொரு காரணம் மேலே குறிப்பிடப்பட்ட அவநம்பிக்கையாகும். திபெத் படையெடுப்பு பிரிட்டிஷ் இந்திய அரசு கொண்டிருந்த அகந்தையின் விளைவாகும். மேலும் திபெத்தின் விவகாரங்களைப் பற்றி முழுமையாக அறிந்து கொள்ளத் தவறியதால் அது ஏற்பட்டது என்றும் கூறலாம். அப்படையெடுப்பு பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மேலான கருத்துக்கு எதிராக நடத்தப்பெற்றது என்பதும் உண்மையேயாகும். அதனுடைய கட்டளைகளுக்கும் யோசனைகளுக்கும் மாறான வகையில் அது முடிக்கப் பெற்றது. கர்சனுடைய சார்பில் கூறவேண்டியதெல்லாம் என்னவெனில் பெரிய பிரச்சனைகளுக்குத் தீர்வு காண முற்பட்டபோது தகுந்த கட்டுப்பாட்டுடன் நடந்துகொள்ளவில்லை என்ற குற்றச்சாட்

[1] திபெத்தியர்கள் பிரிட்டிஷ்காரர்களுக்கு 75 லட்ச ரூபாய் 'போர் நஷ்டஈடு வழங்க வேண்டும் என்று முதலில் ஏற்பாடு செய்யப்பட்டது. இப்பொழுது அத்தொகை 25 லட்சமாகக் குறைக்கப்பட்டது. சும்பி சமவெளிப் பிரதேசம் 75 ஆண்டுகள் வரை பிரிட்டிஷ்காரர்கள் வசமிருக்க வேண்டும் என்ற ஏற்பாடு இப்பொழுது மாற்றப்பட்டது அதனால் அப்பகுதியை 3 ஆண்டுகள் மட்டுமே வைத்திருக்க அனுமதி வழங்கப்பட்டது.

டிற்கு பிரிட்டிஷ் அரசாங்கமும் இலக்காகி இருந்தது என்பதேயாகும். திபெத்து நோக்கிய படையெடுப்பை மத்திய ஆசியாவில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை ஏற்படுத்த மேற்கொண்ட நடவடிக்கைகளுள் இறுதியான நடவடிக்கை என்று கூறலாம்.

இனி கர்சனுடைய உள்நாட்டு நிருவாகத்தைப் பற்றி கவனிப்போம். இதைப் பொருத்தளவில் அவருடைய நடவடிக்கைகளுக்கும், டல்ஹௌசி பிரபுவினுடைய நடவடிக்கைகளுக்கும் நெருங்கியத் தொடர்பு இருப்பதை நாம் காணலாம். கவர்ச்சியற்ற நிலவரியைச் சார்ந்த பிரச்சனை முதற்கொண்டு வைசிராயிக்கு பணிவிடை செய்வதற்காக அமர்த்தப் பட்டவர்களின் சார்பில் மேற்கொள்ளப்படும் செலவுகளைப்பற்றிய பிரச்சனைவரை எல்லா வகையான நிருவாகத்தைச் சார்ந்த பிரச்சனைகளை நுணுக்கமாக ஆராய்ந்து முடிவு செய்தார். அவரது ஆய்வுக்குட்பட்ட எல்லா விவகாரங்களிலும் முன்னேற்றம் காண முற்பட்டார். அவர் ஏற்படுத்திய மாறுதல்கள் கணக்கற்றவையாகும். அவற்றுள் பல கடுமை வாய்ந்தனவாக இருந்தன. யாதொரு கஷ்டமுமின்றி நடத்தப் பெற்று வந்த அன்றாட நிருவாகம் சார்ந்த வேலைகள் பல மாறுதல்கள் அடைந்தன. தனி மனிதர்களுடைய மென்னய உணர்ச்சிகளும் அனேக அதிர்ச்சிகளுக்குட்பட்டன. அரசப் பிரதிநிதிகளுள் மிகக் குறைவாக நேசிக்கப் பட்டவரும் மிக அதிகமாக மதிக்கப் பெற்றவரும் அவரேயாவார். குதிரைகளை விரைவாக ஓடச் செய்வதற்கு சாட்டையைக் கொண்டு அவைகளை அடிக்க வேண்டியது அவசியமேயாகும் என்றாலும் சாட்டையைப் பயன்படுத்துபவர்களை எவரும் விரும்புவதில்லை. அந்த நிலையில்தான் கர்சன் பிரபு இருந்தார். ஆயினும் அவர் ஏற்படுத்திய மாறுதல்களில் ஒரு சிலவற்றைத்தான் பிற்காலத்தில் மேம்பாடு தரும் மாறுதல்களாக மக்கள் கருதவில்லை. எரிச்சலையும் அமைதியின்மையையும் ஏற்படுத்திய அவருடைய மட்டுமீறிய நடவடிக்கைகளில்தான் குறைகாண இயலும். அந்த எரிச்சல், அமைதியின்மை ஆகியவற்றின் அறிகுறிகளும் அவர் இந்தியாவை விட்டுச் சென்ற பின்னரே வெளிப்பட்டன. சோம்பலின் வலிமையை நன்கு உணர்ந்தவர்களுக்கும் இந்தியாவில் மரபு வழக்கம் பெற்றிருந்த செல்வாக்கினை அறிந்தவர்களுக்கும் மேற்குறிப்பிட்ட குறைகூட சரியான போக்கிலே போகும்போது ஏற்பட்ட குறையாகவேத்தோன்றும் சுருக்கமாகக் கூற வேண்டுமானால், கர்சன் பிரபு நிருவாகம் நல்ல முறையில் நடைபெறுவதற்கு வேண்டிய தூண்டுதலை ஏற்படுத்தித்தந்தார். அத்தூண்டுதலின் விசை இரண்டாவது உலகப் போர் தொடங்கும் வரை தொடர்ந்திருந்தது. அவருடைய உள் நாட்டு நிருவாகம் சார்ந்த நடவடிக்கைகளைப் பற்றி முந்திய அத்தியாயங்களில் விளக்கப் பெற்று இருக்கின்றன. ஆகவே வங்காளப் பிரிவினை, கிட்சனர் பற்றிய வாத

எதிர்வாதம் ஆகிய இரு பெரும் பிரச்சனைகளைத் தவிர ஏனையவற்றை சுருக்கமாக கூறலாம்.

சிற்றரசர்களுடன் அவர் கொண்டிருந்த உறவு முறைகள் கலகத்திற்குப்பிறகு பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் கையாண்டு வந்த முறையைப் பின்பற்றியனவாக இருந்தன. ஆனால் தன்னுடைய தனிச்சிறப்பானக் கருத்துக்களுக்கேற்றவாறு அமைத்திருந்தார். பிரிட்டிஷ் இந்திய அரசாங்கத்தின் உயர் அதிகாரிகள் சிற்றரசர்களிடத்தில் மரியாதையாக நடக்க வேண்டும் என்று வற்புறுத்துவதன் வாயிலாகவும் அரச குடும்பங்களைச் சேர்ந்தவர்களுக்கு அடிப்படையான போர் பயிற்சியை அளிப்பதற்காக பேரரசு போர் பயிற்சி பெறும் மாணவர் படையை (Imperial Cadet Corps) ஏற்படுத்தியதன் வாயிலாகவும் அவர் கூட்டுப் பங்காண்மைக் கொள்கையை தெளிவாக எடுத்துக் காட்டினார். அத்திட்டம் பெரிய அளவில் அமைந்திருக்கவில்லை என்பது உண்மையே. ஆனால் அதற்கு கர்சன் பிரபு பொறுப்பாளியல்ல. ஆறு ஆண்டுகளில் அவர் நாற்பது சுதேச இராச்சியங்களைப் பார்வையிட்டிருந்தார். அவர் சிற்றரசர்களுக்கு வெளிப்படையாக புத்திமதி கூறிய பொழுதெல்லாம் அவர்களுடைய கடமையையும் அவர்கள் திறம்பட செயற்பட வேண்டிய அவசியத்தையும் வலியுறுத்தி வந்தார். ''சிற்றரசரை தன்னுடைய உடனுழைப்பாளராகவும், கூட்டாளியாகவும் நான் கருதுகிறேன். சிற்றரசர் பேரரசுக்கு எதிராக இருந்து மேன்மைதங்கிய பேரரசியின் விசுவாசமுள்ள, நம்பிக்கை பெற்ற குடிமகனாக விளங்க முடியாது. அவர், தன்னுடைய ஆட்சிக்குட்பட்ட மக்களுக்கு எதிராக அற்பத்தனம் படைத்த பொறுப்பற்ற வல்லாட்சியை நடத்துபவராகவும் விளங்க முடியாது. அவர் தன்னிடம் ஒப்படைக்கப் பெற்ற அதிகாரத்தை கெட்ட வழியில் செலவிடாமல், அதனைப்பெற பலவகையிலும் தகுதியானவர் என்று மெய்ப்பிக்க வேண்டும். அவர் தன்னுடைய மக்களுடைய தலைவராக மட்டுமின்றி அவர்களுடைய பணியாளராகவும் இருக்க வேண்டும்'' என்று கர்சன் பிரபு கூறியிருந்தார்.[1] இளமையும் ஆற்றலும் பொருந்திய மகாராஜா சிந்தியாவிடம் அவர் மட்டற்ற ஆர்வம் காட்டி வந்தார். சிற்றரசர்கள் அடிக்கடி தங்களுடைய நாட்டை விட்டுச் சென்றுவிடுகிறார்கள் என்பதைக் கண்ணுற்ற கர்சன் பிரபு அந்த வழக்கத்தை தன்னுடைய சுற்றறிக்கையில் அச்சுறுத்துகிற வகையில் சிறிது சிறிதாக குறிப்பிடத் தொடங்கினார். அதனால் சிற்றரசர்கள் மனக் கசப்பு அடைந்தார்கள். அதன் பயனாக அவருடைய கொள்கையின் உண்மையான நோக்கம் நிறைவேறாமல் தடைப்பட்டு நின்றது. கர்சனிடத்தில் தந்தைக்குரிய அக்கறை, விதி முறைகளை சிறிதும் மீறாமல்

[1] Earl of Ronaldshay, Lord Curzon, Vol. II, p. 89.

நடப்பவர்களுக்குரிய மன உறுதி, ஆகியவற்றிற்கு இடையே ஏற்பட்டிருந்த வரம்புக்கோடு மங்கலாகவும் தெளிவற்றதாகவும் இருந்தது. இதே வீருப்பு பொருளியலான பிரச்சனைகளிலும் வெளிப்பட்டிருந்தது. 1903-இல் பீரார் பிரச்சனைக்கு முடிவு காணப்பெற்றது. அதற்காக கர்சன் பிரபுவும் நைஜாமும் நேரடியாக சந்தித்து அப்பிரச்சனையைப் பற்றியக் கருத்துக்களை மனம் விட்டு தெரிவித்தார்கள். அப்பொழுது ஏற்பட்ட விவாதத்தின் போது வேறெவரும் உடனிருக்கவில்லை. அப்பிரச்சனைக்கு காணப்பெற்ற முடிவு நட்புப் பாங்குடன் செய்யப்பட்ட முடிவாகவே கர்சன் பிரபு எண்ணியிருந்தார். அதன் விளைவாக இந்திய அரசாங்கம் பீரார் மாவட்டத்தை நிலையான குத்தகைக்குப் பெற்றுக் கொண்டது. அதன் பிறகு அப்பகுதியை மத்திய மாகாணங்களின் ஆட்சிப் பிரிவுகளுள் ஒன்றாக நிருவாகம் செய்யப் பெற்று வந்தது. ஆனால், தக்க விவாதத்திற்குப் பிறகே முடிவு மேற் கொள்ளப்பட்டது என்று அரசப் பிரதிநிதி சொல்லி வந்த கருத்தை நைஜாம் ஒத்துக் கொள்ளவில்லை. பிற்காலத்தில் அம்முடிவை ஏற்றுக்கொள்ளுமாறு தான் பயமுறுத்தப் பெற்றார் என்று குற்றம் சாட்டினார். ஆகவே அவருடைய உரிமைகளை மீண்டும் கோரிப் பெற முற்பட்டார். அதன் விளைவாக 1926-இல் ரீடிங்கு பிரபு ஒரு அறிக்கையை வெளியிட்டார். அதில் இந்தியா முழுவதிலும் தனக்கு முழு ஆட்சியுரிமை உண்டு என்று இந்திய அரசாங்கம் சமரசத்திற்கு இடந்தராத வகையில் உரிமை கொண்டாடியது. அதுவே பிற்காலத்தில் சுதந்திர இந்திய அரசாங்கத்தினர் மேற் கொண்ட நடவடிக்கைகளுக்கு பொருத்தமான அடிநிலையாக அமைந்தது.

கர்சன் பிரபு நிருவாகத்துறை முழுவதையும் முழுமையாகச் சீர் திருத்தும் பணியினையும் மேற்கொண்டார். அவர் முதலில் அரசுப்பணிகளை நிறைவேற்றுவதில் ஏற்படும் அவசியமற்ற காலதாமதத்தை ஒழிக்க முற்பட்டார். அரசாங்கக் குறிப்பேடுகளை வரையும் போது தேவைக்கு மேற்பட்ட சொற்களைப் பயன்படுத்தும் வழக்கத்தையும் ஒழிக்க முற்பட்டார். அதற்கென பல விசாரணைக் குழுக்களை (Committees) அமைத்தார். அக்குழுக்கள் இனி ஏற்படவிருக்கும் சீர்திருத்தங்களை முன் குறித்துக் காட்டுவனவாக விருந்தனவேயன்றி இதுகாறும் அரசாங்கம் செயலற்று இருந்தமைக்கு விளக்கம் கூறுபவையாக அமையவில்லை. 1903ஆம் ஆண்டில் சமர்ப்பிக்கப் பெற்ற அறிக்கையின் விளைவாக காவற்பணி (Police Service) திருத்தி அமைக்கப்பெற்றது. அதுவே கர்சன் பிரபு மேற்கொண்ட உள் நாட்டுச் சீர்திருத்தங்களில் மிகவும் முக்கியமானதாகும். அவர் நிலத்தைப் பற்றிய பிரச்சனைகளில் தன்னுடைய நேரத்தின் பெரும் பகுதியையும் சிந்தனையையும் செலவிட்டிருந்தார். 1902ஆம் ஆண்டு ஜனவரி மாதத்

தில் நிறைவேற்றப் பெற்ற நிலத் தீர்மானம் அவருடைய சாதனையே யாகும். அரசாங்கப் பணியிலிருந்து ஓய்வு பெற்றிருந்த நிருவாகிகள் தயாரித்திருந்த செய்தித் தொகுதியே (Memorial) அந்தத் தீர்மானம் நிறைவேற்றப் படுவதற்குத் தூண்டுகோலாக அமைந்தது. அரசுப்பணி யிலிருந்து ஓய்வு பெற்றிருந்த அந்நிருவாகிகள் நிலவரியைக் குறைக்க வேண்டும் என்றும், நிலவரி ஏற்பாட்டின் காலத்தை அதிகப் படுத்த வேண்டும் என்றும் வேண்டினார்கள். நிலவரி மிகவும் அதிகமாயிருந்த தால் குடியானவர்கள் பஞ்ச காலங்களில் நிலைமையைச் சமாளிப்பதற்குத் தேவையானப் பொருளை மிச்சப்படுத்த முடியவில்லை. அதன் காரண மாகத்தான் பஞ்சம் ஏற்படுகிறதே ஒழிய, மழையின்மையால் அன்று என்ற வாதத்தைத் தவறென்று கர்சன் பிரபு உணர்த்திக் காட்டினார். மற்றவகையில் அரசாங்கம் பயிரிடுவோர்களிடமிருந்து வசூலிக்கப்பட வேண்டிய வரி நிகர இலாபத்தில் பாதிக்கு மேல் இருக்கலாகாது, நிலக்கிழார்களிடமிருந்து வசூலிக்கப்பட வேண்டிய வரி குத்தகை வருமானத்தில் பாதிக்கு அதிகமாக இருக்கலாகாது; நில ஏற்பாடு முப்பது ஆண்டுகளுக்குக் குறைபலாகாது; உள்ளூர் நிலவரி பொது வரியில் பத்து சதவீதத்திற்கு மேலாக இருக்கக் கூடாது என்ற விதி முறையினை அரசாங்கம் கடைப்பிடித்து வருவதாக கர்சன் பிரபு அனைவருக்கும் வெளிப்படுத்தினார். நெகிழ் தன்மையுடையதும், ஒழுங்கு முறையுடன் கூடியதும், கனிவு நலம் பொருந்தியதுமான வரிகளை விதிக்கும் வகையில் மேற்கொள்ளப்பட்ட ஒரு நடவடிக்கை யாக இதனைக் கருதலாம். வெகு நிதானமாக வளர்ச்சியுறும் பயிர்த் தொழில் சார்ந்த பொருளாதாரத் திட்டத்தில் நிலவரியினை நிலைமைக்கு ஏற்றவாறு அமைத்துக்கொள்ள இயலாது என்ற உண்மையினை இது விளக்கியது. புதிதாகத் தோன்றியிருந்த செலவினங்களைச் சமாளிப் பதற்குத் தேவையானப் பொருளைப் பெறுவதற்கு புதிய வழிகளை ஆராய்ந்து அறிய வேண்டியதன் அவசியத்தை உணர்த்திக் காட்டியது. கர்சன் பிரபுவினுடைய நிலத்தைப் பற்றிய நடவடிக்கைகளுள் மிகச் சிறந்தது பஞ்சாப் நில பராதீனச் சட்டமாகும் (Panjab Land Alienation Act) பயிரிடுவோர்கள் தாங்கள் பட்ட கடனுக்காக நிலத்தினின்றும் வெளியேற்றப்படுவதைத் தடுப்பதே அச்சட்டத்தின் முக்கிய நோக்கமாகும். மிகுதியான வரி உயர்வுகளை நிலையான வரி வீதப்படி வகுத்தமைப்பதற்கும் பருவ காலத்தின் தன்மைக்கு ஏற்ற வாறு கோரிக்கையை மாற்றிக்கொள்ளுவதற்கும் விதி முறைகள் வகுக்கப்பெற்றன. இதைக் காட்டிலும் மேலானதும் ஆக்க முறை யானதுமான மற்றொரு நடவடிக்கை கூட்டுறவு கடன் சங்கங்களை ஏற்படுத்தியதேயாகும். விவசாயிகளை வட்டிக் கடைக்காரர்களின் பிடியினின்றும் விலக்குவதையே அச்சங்கங்கள் தங்களுடைய நோக்க மாகக் கொண்டிருந்தன. கடைசியாக, ஆய்வுக்கூடங்கள் சோதனை

களை நடத்துவதற்காக அமைக்கப்பெற்ற பண்ணைகள் ஆகியவற்றுடன் கூடிய விவசாயத் துறையினை புதிதாகத் தோற்றுவித்தும், பீகாரில் பூசா என்னுமிடத்தில் ஆராய்ச்சி நிறுவனம் ஒன்றினை ஏற்படுத்தியும், விஞ்ஞான முறைப்படி விவசாயத்தைப் பெருக்க முற்பட்டார். நிலத்தை வரிப்பணம் அளிக்கும் ஒரு மூல காரணமாக மட்டுமல்லாமல் உற்பத்தி சாதனங்களுள் ஒன்றாகக் கருதிய முதல் கவர்னர் ஜெனரல் கர்சன் என்பதை இங்குக் குறிப்பிடுதல் அவசியமாகும். ஆகவே அவர் நிலவரியை வசூலிக்கும் முறைகளில் மட்டுமல்லாமல் விவசாய உற்பத்தி முறைகளிலும் தன்னுடைய கவனத்தைச் செலுத்தினார்.

கர்சன் பிரபு பழைய விவசாய அமைப்பு முறைகளில் தற்கால உத்திகளைப் புகுத்துவதுடன் மனநிறைவு கொள்ளவில்லை. அவர் இந்தியாவின் தொழில் வளர்ச்சிக்கு ஏற்பட்டிருந்த வாய்ப்பு வளங்களை நன்கு உணர்ந்திருந்தார். 1914ஆம் ஆண்டிற்கு முன் இந்தியாவில் தொழிற்துறையில் ஏற்பட்டிருந்த வேகமான முன்னேற்றத்திற்கு மிக முக்கியமான காரணம் அவர் அளித்த தூண்டுதலும், அவர் வகுத்த திட்டமுமேயாகும். அவர் பதவியேற்ற போது இந்தியாவில் அமைக்கப் பெற்றிருந்த இரயில் பாதையின் நீளம் 27000 மைல்களாகும். கர்சன் பிரபு மேலும் 6000 மைல் நீளமுள்ள இரயில் பாதைகளை அமைத்தார். இரயில் நிறுவனங்களை இயக்கும் பொறுப்பு இதுகாறும் பொதுப்பணி துறையின் கைகளில் இருந்தது. இவர் காலத்தில் அப்பொறுப்பு இரயில்வே போர்டுக்கு அளிக்கப்பட்டது. இரயில்வே போர்டு அரசாங்க இரயில் நிறுவனங்களை இயக்கி வந்தது. மேலும் அவற்றின் முன்னேற்றத்திற்குரிய திட்டங்களை வகுத்தமைத்தது. வர்த்தகம், தொழில் ஆகியவற்றைப் பற்றிய பிரச்சனைகளைக் கவனிப்பதற்கு வைசிராயினுடைய கவுன்சிலில் பணியாற்றி வந்த ஆறுவது உறுப்பினரின் தலைமையின் கீழ் புதிய வர்த்தகத் தொழில் துறை ஒன்று ஏற்படுத்தப்பெற்றது.

இரயில் பற்றிய விவகாரங்களில் அவர் காட்டி வந்த அதே விறு விறுப்புடன் நீர்ப்பாசனக் கட்டுமான வேலைகளைத் துரிதப்படுத்தினார். அவர் பதவியேற்ற முதல் சில மாதங்களில் 1899ஆம் ஆண்டு ஏற்பட்ட பஞ்சத்தில் தன்னுடைய கவனத்தைச் செலுத்தினார். பஞ்சாப், இராசபுதனம், மேற்கு இந்தியா ஆகிய இடங்களில் சுற்றுப் பயணம் மேற்கொண்டு அப்பஞ்சம் ஏற்படுத்திய நாசங்களை நேரடியாகக் கண்டறிந்தார். அவர் ஸ்காட் மான்கிரீப் கமிஷனை ஏற்படுத்தினார். அது அகில இந்திய அளவில் நீர்ப்பாசனக் கட்டுமான வேலைகளை விரிவு படுத்துவதற்கானத் திட்டங்களை வகுத்தது. மூன்று கோடி பவுன்கள் செலவில் மேலும் அறுபத்தைந்து இலட்ச ஏக்கராக்களுக்கு

நீர்ப்பாசன வசதிகளை ஏற்படுத்தித்தர வேண்டுமென்று அந்தக் கமிஷன் கூறிய திட்டத்திற்குத் தன்னுடைய அங்கீகாரத்தை அளித்தார்.

கர்சன் பிரபு ஆக்க நல வேலைகளில் கொண்டிருந்த கவனம் அவர் மேற்கொண்ட கலாசாரம் சார்ந்த நடவடிக்கைகளின் வாயிலாக மிக நேர்த்தியாக முற்றுப்பெற்றது என்று கூறலாம். கலை, கட்டிடக்கலை ஆகியவற்றில் அவர் காட்டிய கவனம் வாரன் ஹேஸ்டிங்ஸ் பிரபு நீங்கலாக ஏனைய கவர்னர் ஜெனரல்கள் காட்டியதில்லை என்றும் கூறலாம். வாரன் ஹேஸ்டிங்ஸ் பிரபுவின் குழந்தை என்று கூறப்படும் வங்காள ஆசிய சங்கத்தை கர்சன் ஆதரித்து வந்தார். பிரிட்டிஷ் ஆட்சியின் நினைவுச் சின்னமாக விளங்க வேண்டும் என்பதற்காக அவர் கொண்டுவந்த திட்டம் கல்கத்தாவில் கம்பீரமான விக்டோரியா மெமோரியல் கட்டிடமாக உருப்பெற்றது. அவர் பேரரசு புத்தக சாலையை ஏற்படுத்தினர். அப்புத்தகசாலை கிழக்கு நாடுகளின் போட்லியன் அல்லது 'பிரிட்டிஷ் மியூசியம் லைப்ரரி' யாக விளங்க வேண்டும் என்று அவர் கருதினர். அவருடைய கலாசாரம் சார்ந்த நடவடிக்கைகளுள் மிகச் சிறந்தது புதைப் பொருள் துறையொன்றை ஏற்படுத்தியதேயாகும். இந்திய நாட்டின் பண்டைய கலைச் செல்வங்களை அழியாமல் பாதுகாப்பதும், புதிய அகழ் வாராய்ச்சிகளைச் செய்வதும் அதனுடைய வேலைகளாகும். ஏற்கனவே ஜெனரல் கன்னிங்ஹாம் இன்னும் சிலர் முடித்திருந்த முன்னோடி வேலையைத் தொடர்ந்து நடத்தவும், அவ்வேலையை ஒழுங்கு படுத்துவதற்கும் அரசாங்கம் யாதொரு நடவடிக்கையையும் இதுவரை மேற்கொள்ள வில்லை. அதன் விளைவாக கர்சன் பிரபு பதவி யேற்றபோது இந்த வேலையில் ஈடுபட்டிருப்பவர்களைத் தக்க வழியில் இயக்குவதற்கு வேண்டிய நபர், இராத காரணத்தாலும் ஒரு சில ஆயிரம் ரூபாய்கள் இராத காரணத்தாலும் மிக அழகான பழங்காலச் சின்னங்கள் மீட்க முடியாத அளவிற்கு பாழடைந்து இருந்தன. கர்சன் பிரபு எங்கெங்கு சென்றாரோ அங்கெல்லாம் பழைமைச் சின்னங்களை மதுரைக் கோயில்களாயினும் சரி, அஜந்தா குகைகளாயினும் சரி அல்லது ஆக்ராவிலுள்ள தாஜ்மஹாலாயினும் சரி, தான் பார்வையிட வேண்டும் என்று வற்புறுத்தினர். புராதனக் கட்டிடங்களினின்றும் அதிகாரிகளையும் காரியாலயங்களையும் அப்புறப்படுத்துவதில் அவர் அதி தீவிரமாக முனைந்திருந்தார். அக்காலத்தில் அவரைத் தவிர வேறொரு வராலும் அத்தகைய காரியத்தைச் செய்திருக்க முடியாது. அப்பொழுது தலைமை இயக்குநராகப் (Director General) பணியாற்ற சர் ஜான் மார்ஷல் என்பவரைப் பெற்றிருந்ததில் அவரை அதிர்ஷ்டசாலி என்றே கூறவேண்டும். சர் ஜான் மார்ஷல் பல ஆண்டுகளாக தக்க ஊக்குவிப்பு

இன்மை, புறக்கணிப்பு ஆகிய இன்னல்களுக்கிடையே அயராது உழைத்தார். பிற்காலத்தில்தான் அவருடைய வேலையின் மதிப்பை மக்கள் பொதுவாக உணரலாயினர்.[1] இப்பணி இந்தியாவில் நடைபெற்றுவந்த அரசாங்கம் இந்தியர்களுடைய அரசாங்கமாக மாற்றும் வகையில் மேற்கொள்ளப்பட்ட மற்றொரு நடவடிக்கை என்று கூறலாம். ஆனால் இவ்வகையில் திட்டமிட்டு மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கையாக இதனைக் கருத இயலாது.

கர்சன் பிரபு மேற்கொண்ட ஆட்சி முறையைச் சார்ந்த நடவடிக்கைகளின் குறிப்பேட்டினில் அவருடைய கல்வியைச் சார்ந்த நடவடிக்கைகளை இறுதியில் குறிப்பிடப்பட்டுள்ளன. ஏனெனில் அவை அவருடைய ஆட்சிமுறையைச் சார்ந்த பணிக்கும் அரசியல் சார்ந்த பணிக்கும் இடையே அமைக்கப்பெற்ற ஒரு பாலமாக விளங்குகின்றன. நிருவாக முறையைச் சார்ந்த பணியினை அவருடைய நிலையான பணியாகவும், அரசியல் சார்ந்த பணியினை அவருடைய திட்பமற்ற பணியாகவும் கருதப்படுகின்றன என்பதை நாம் இங்கு கவனிக்க வேண்டும். விவசாயத்தை விட கல்வி மக்களுடைய வாழ்க்கையுடன் மிக நெருக்கமாக பிணைக்கப் பட்டிருந்தது என்று நாம் கூற இயலாது. ஆனால் அது வெகு வேகமாக வளர்ந்து வரும் மேல்நாட்டுப் பண்புகளுடன் கூடிய நடுத்தர மக்களை வெகுவாகப் பாதித்திருந்தது. மேலும் அது அவர்களுடைய மேலான நாட்டங்களுடன் தொடர்பு கொண்டிருந்தது. மேல் நாட்டு கல்வி அவர்கள் அன்றிருந்த நிலையில் இருப்பதற்குக் காரணமாக அமைந்திருந்தது. அவர்களுக்கு புதிய குறிக்கோள் புதிய நம்பிக்கை, புதிய ஆசை ஆகியவைகளை அது தோற்றுவித்தது. நிலப் பிரச்சனைகளைப் பற்றிய விவாதங்கள் தோன்றிய போது அவர்கள் விவசாயிகளைப் பற்றி பேசும்போது அவர்களைத் தங்களினின்றும் பிரித்துப் பேசினார்கள். ஆனால் கல்வியைப் பற்றிய விவாதங்கள் எழுந்தபோது தங்களுடையது என்ற வகையில் எண்ணமிட்டு பேசிவந்தனர். 1830ஆம் ஆண்டு தொடங்கி வளர்க்கப்பெற்று வந்திருந்த கல்வி முறை எதிர்பார்த்த அளவிற்கு பயனளிக்கவில்லை என்ற கருத்து பொதுவாக எல்லோரிடமும் தோன்றியிருந்தது. மேல்நாட்டு கல்வி படிப்படியாக சமுதாயத்தின் கீழ்ப்படி நிலையில் இருக்கும் மக்கள் வரை பரவும் என்ற நம்பிக்கை நிறைவேறவில்லை என்று கருதப்பட்டது. உயர் கல்வி கூட பயனுடைய அறிவைப் பெறுவதற்காக மேற்கொள்ளப்படும் சலிப்பூட்டத்தக்க பயிற்சியாக மாறியதே யொழிய உண்மையான சிந்தனை வளர்ச்சியை உண்டு பண்ணுவதாகக் காணப்படவில்லை.

[1] 1911-இல் அத்துறையின் வேலை முடிவடைந்தது என்ற காரணம் காட்டி அதனை மூடிவிட யோசனை கூறப்பெற்றது.

பல்கலைக்கழகங்களும் தேர்வு நடத்தும் நிறுவனங்களாகவே விளங்கின. அவைகளோடு இணைக்கப்பெற்றிருந்த கல்லூரிகளைக் கட்டுப்படுத்தும் அதிகாரத்தினை மிகச் சொற்ப அளவிலே தான் அவை பெற்றிருந்தன. கல்வி வளர்ச்சியினை ஊக்குவிக்கும் அதிகாரம் அவை பெற்றிருக்க வில்லை. ஏனெனில் அவை ஆசிரியர்களையோ அல்லது பேராசிரியர் களையோ பெற்றிருக்கவில்லை. பல்கலைக்கழகச் செயலர்கள் (Registrars) தேர்வு முடிவுகளடங்கிய தாள்கள் ஆகியவற்றைக் கொண்டு எவரும் பண்பாட்டை வளர்க்க முடியாது. ஆகவே கர்சன் பிரபு ஆய்வுக்குழு ஒன்றை ஏற்படுத்தினர். அதில் இந்தியர் எவரும் அமர்த்தப்படவில்லை. 1904-இல் நிறைவேற்றப்பட்ட அவருடைய பல்கலைக்கழகங்கள் சட்டத்தின் வாயிலாக குறிப்பாக மட்டுமீறிய வளர்ச்சியுற்றிருந்த கல்கத்தா பல்கலைக்கழகம் திருத்தி அமைக்கப்பட்டது. கல்கத்தாவில் முதுகலைப் படிப்பிற்கென பல துறைகள் ஏற்படுத்தப்பெற்றன. இவை வாயிலாக புலமையை வளர்க்க முற்பட்டார். அதே நேரத்தில் மாணவர்கள் பல்கலைக் கழகத்திலேயே தங்கி படிக்கும் முறையும் புகுத்தப்பெற்றது. பல்கலைக் கழகங்களைக் கட்டுப்படுத்திவரும் குழுக் கள் அல்லது செனெட்டுகள், செயலாட்சி குழுக்கள் அல்லது சிண்டி கேட்டுகள் ஆகியவற்றிலிருந்த நியமனம் செய்யப்பெற்ற உறுப்பினர் களின் எண்ணிக்கையை உயர்த்துவதன் வாயிலாக பல்கலைக்கழக கல்வி முறையினை மேலும் வலுப்படுத்தக்கூடும் என்று நம்பினுர். பல்கலைக் கழகங்களுடன் இணைக்கப்படவிருந்த கல்லூரிகளுக்கு அங்கீகாரம் வழங்கும் முறையைக் கட்டுப்படுத்துவதற்கும் அவை நல்ல முறையில் பணியாற்றுவதற்கும் பல நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. அதன் பயனுக சிலரிடையே மனக்கசப்பு ஏற்பட்டன. கல்வித் துறையில் அனுபவமிக்கவர் என்றக் காரணத்தால் பல்கலைக்கழக செனெட்டு சிண்டிகேட் ஆகிய குழுக்களில் நியமனம் செய்யப்பெற்ற உறுப்பினர்கள் அனைவருமே அனுபவமிக்கவர் என்று கூற இயலாது. மேலும் அவர்களுக்கு அங்கு இடமளிப்பதற்காக ஒரு சிலரை நீக்க வேண்டியிருந்தது. அவ்வாறு நீக்கப்பெற்றவர் அனைவரும் புதிய தேசியவாதிகளாவார்கள். இதுகாறும் தங்களுடையது என்று அவர்கள் கருதிவந்த பல்கலைக் கழகங்களில் தாங்கள் பெற்றிருந்த செல்வாக்கினை அழிக்க மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கையே யன்றி கல்வித் தரத்தை உயர்த்த மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கை அன்று என்று அதனைக் கருதினுர்கள். ஆகவே அவர்கள் அச்சட்டத்தை தீவிரமாக எதிர்த்தனர். அதனைப் பிற்போக்கானது என்றும் தேசிய கருத்திற்குப் புறம்பானதென்றும் பழித்துக் கூறினர். இதுகாறும் அவர்கள் பொதுவாக வைசிராயினுடைய கொள்கையினை ஆதரித்தும் பின்பற்றி யும் வந்தனர். சில நேரங்களில் வைசிராய் அனுமதித்த அளவு உற்சாகத்துடன் அவரைப் பின்பற்றி வந்தனர். ஆனுல் இப்பொழுது

அவர்களுக்கும் வைசிராய்க்கும் இடையே ஐயத்துக்கிடமற்ற வகையில் பிளவு ஏற்பட்டது. பல்கலைக்கழகச் சட்ட எதிர்ப்பு வங்காளப்பிரிவினை யின் போது ஏற்பட்ட பெருங்கிளர்ச்சிக்கு முன்னேற்பாடாக அமைந்தது என்று கூறலாம்.

1904ஆம் ஆண்டிற்குள்ளாகவே கர்சன் பிரபு தன்னுடைய முதல் பதவிக் காலத்தை முடித்து விட்டார். பொதுவாக எல்லோருடைய சம்மதத்தின் பேரில் அவர் மீண்டும் பதவியில் அமர்த்தப் பெற்ருர். ஆகவே 1904-இல் இந்தியா திரும்பினர். அதற்குப் பிறகு ஏற்பட்ட நிகழ்ச்சி ஏமாற்றத்தை உண்டு பண்ணியது. அவரது முதற் பதவிக் காலத்தின் போது திபெத் விவகாரத்தில் விவேகத்துடன் நடக்கவில்லை யென்ருலும், அதிகாரிகளின் உள்ளக்குமுறலுக்குக் காரணமாயிருந்தார் என்ருலும் அவர் பெரும் வெற்றி அடைந்தார் என்றே கூறவேண்டும். 1903-4-இல் ஏற்பட்ட கல்வி பற்றிய பூசலின் விளைவாக அரசாங்கத் திற்கும் காங்கிரசிற்கும் இடையே ஏற்பட்டிருந்த நட்புத்தொடர்பு அழிவுற்றது என்பது உண்மையேயாகும். தேசியத்தலைவர்கள் இன்னும் அவரிடத்தில் நம்பிக்கை கொண்டிருக்கவில்லை எனினும் அவர்பால் அவர்கள் மிக்க மரியாதை கொண்டிருந்தனர். அவருடைய ஆற்றலும், சாதனைகளும் அவர் மேற்கொண்டிருந்த பகட்டாரவாரத்தைச் சரியெனக் காட்டுவனவாக இருந்தன. 1903-இல் நடத்தப்பெற்ற டில்லி தர்பார் பகட்டாரவாரக் காட்சி அவருடைய பணியின் சடங்கியல்பான அடை யாளச் சின்னமாக விளங்கியது. அப்பொழுதுதான் ஏழாவது எட்வர்டு மன்னர் இந்தியப் பேரரசராக அறிவிக்கப்பெற்ருர். ஆனால் மீண் டும் அவர் இந்தியா திரும்பிய காலமுதல் அப்பொழுதைய நிலைமையில் தோன்றிய புதிர்கள் அவருக்கு எதிராகத் திரும்பியதாகக் காணப்பெற் றன. அவர் மேற்கொண்ட ஒவ்வொரு நடவடிக்கையும் தவருன நட வடிக்கையாக மாறியது. ஆகவே ஓராண்டிற்குள்ளாகவே அவர் ஏமாற்றம் அடைந்தவராகவும், மயக்கம் தெளிந்தவராகவும், மனக்கசப் புள்ளவராகவும் தன் தாயகம் திரும்ப வேண்டியதாயிற்று.

கர்சன் பிரபு இரண்டாவது முறையாக இந்தியாவிற்கு வந்த பொழுது அவர் இரு பிரச்சனைகளை சமாளிக்க வேண்டியதாயிற்று. அவற்றுள் ஒன்று வங்காள நிருவாகம் பற்றியதாகும். மற்றையது படை சீர்திருத்தமாகும். வங்காள மாகாணம் பலகாலமாக நிருவாகி களுக்கு ஒரு சிக்கலான பிரச்சனையாக இருந்து வந்தது. அதனுடைய நிருவாக வரலாறு 1765-இல் தொடங்கியது எனலாம். அவ்வாண்டிலே தான் ஷா ஆலம் என்பவர் ஆங்கிலேயர்களுக்கு வங்காளம், பீகார், ஓரிசா ஆகிய மாகாணங்களில் வரி வசூலுக்கும் உரிமைமை (திவானியை) அளித்தார். வடக்குப் பகுதியில் ஆங்கிலேயக் கம்பெனியார் பெற்ற

டைந்த ஒவ்வொரு பகுதியும் வங்காள மாகாணத்துடன் சேர்க்கப் பட்டது. அதன் விளைவாக 1810ஆம் ஆண்டிற்குள்ளாக அதனுடைய எல்லை டில்லி வரையிலும் டில்லியைக் கடந்து சீக்கிய நாட்டின் எல்லை வரையிலும் பரவியிருந்தது. அதனால் அதனை ஆளுவது மிகக் கடின மாக இருந்தது. ஆகவே 1833-இல் ஏற்படுத்தப் பெற்ற சாசனச் சட்டத்தின் வாயிலாக அதனுடைய பரப்பெல்லையைக் குறைப்பதற்கு முதல் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. அச்சட்டத்தின்படி ஆக்ராவைத் தலைநகராகக் கொண்ட நான்காவது மாகாணம் ஏற்படுத்த வழி வகை செய்யப்பட்டது. இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு அது லெப்டினன்ட் கவர்னர் ஆட்சிக்குட்பட்ட வடமேற்கு மாகாணங்கள் என்ற பெயர் பெற்றது. வடமேற்கு மாகாணங்கள் பீகார் எல்லை தொடங்கி சட்லெஜ் நதி வரை பரவியிருந்தன. 1857ஆம் ஆண்டில் ஏற்பட்ட கலகத்திற்குப் பிறகு அது யமுனை நதி வரை பரவி இருந் தன. வங்காளம் மீண்டும் மொகலாய காலத்திய வங்காளம், பீகார், ஒரிசா ஆகிய சுபாக்களை உள்ளடக்கியிருந்தது. 1854-இல் இப்பகுதி கவர்னர் ஜெனரலின் நேரடி அதிகாரத்திற்குட்பட்ட ஒரு லெப்டினன்ட் கவர்னர் ஆட்சிப் பொறுப்பில் விடப்பட்டது. 1874-இல் அஸ்ஸாமை ஆளும் பொறுப்பை அவர் கைகளினின்றும் தலைமைக் கமிஷனர் கைகளுக்கு மாறியது. அதன் விளைவாக லெப்டினன்ட் கவர்னருடைய ஆட்சி சுமை சிறிது குறைந்தது. ஆயினும் மக்கள் தொகை பெருக்க மடைந்ததாலும், பொதுவாக எல்லா துறைகளிலும் வளர்ச்சி ஏற்பட்ட தாலும் அவர் ஆற்றவேண்டிய அரசுப்பணி அதிகமாகவே இருந்தது. 1900ஆம் ஆண்டிற்குள் அது அவருடைய ஆற்றலுக்கு மீறியதாகத் தோன்றியது. மக்கள் தொகை ஒரு கோடியே எண்பது இலட்சமாக உயர்ந்தது. கிழக்கு வங்காளம் ஒதுங்கிய நிலையில் இருந்ததாலும், அங்கு போக்குவரத்து கடினமாக இருந்தமையாலும் அது புறக்கணிக் கப்பெற்றிருந்தது. அதே நேரத்தில் மேற்கு வங்காளம் செல்வக் கொழிப்புடனும், முற்போக்குக் கருத்து கொண்டதாகவும் விளங்கியது. மேற்கு வங்காளத்தில் இந்துக்களும், கிழக்கு வங்காளத்தில் முஸ்லீம் களும் பெருவாரியாக இருந்தமையால் அவ்விரு பகுதிகளுக்கும் இடையே காணப்பட்ட வேறுபாடு கருத்தைக் கவர்கிறதாக இருந்தது. வெகு காலமாக அவ்விரு பகுதிகளிலும் ஏற்பட்டிருந்த மாறுபட்ட நிலையைப் பற்றிய விவாதம் பலகாலமாகத் தொடர்ந்து நடைபெற்று வந்தது. அநேக திட்டங்கள் வெளியிடப்பெற்றன. அவற்றுள் ஒன்றை ஏற்றுக்கொண்டு அதைச் செயற்படுத்துவதே கர்சன் பிரபு செய்ய வேண்டிய பணியாக இருந்தது. அஸ்ஸாமையும் சிட்டகாங்கை யும் வங்காள மாகாணத்தின் 15 மாவட்டங்களுடன் இணைத்து கிழக்கு வங்காளமும், அஸ்ஸாமும் என்ற பெயருடன் கூடிய ஒரு புதிய மாகாணத்தை ஏற்படுத்துவதே அவர் ஏற்றுக்கொண்ட திட்டமாகும்.

டாக்கா அப்புதிய மாகாணத்தின் தலைநகரமாக ஏற்படுத்தப்பெற்றது. அதனுடைய மக்கள் தொகை மூன்று கோடியே பத்து இலட்சமாகும். அவர்களுள் பெரும்பாலோர் முஸ்லீம்களாவார்கள்.

இப்புதிய ஏற்பாட்டினை ஆதரிக்கும் வகையில் பேசுவதற்கு பல வாதங்கள் இருந்தன. பிற்போக்கான பகுதிகளை வங்காளத்தினின்றும் பிரித்து அவைகளுடைய நிருவாகத்திற்குத் தனிப்பட்ட அக்கறை காட்ட வழி ஏற்பட்டது. இந்துக்கள் நிறைந்த மேற்குப் பகுதியும், முஸ்லிம்கள் நிறைந்த கிழக்குப் பகுதியும் ஏறக்குறைய சமநிலையில் வைக்கப்பெற்றன. மேலும் இவ்விரு சமுதாயத்தினருடைய தனிப்பட்ட தேவைகளை தனித்தனியே கவனிக்க இப்பொழுது வழி ஏற்பட்டது. ஆனால் கர்சன் மக்கள் கருத்துப்போக்கினை எண்ணிப் பார்க்கத் தவறினார். ஆனால் அதற்கு மாறாக அவர்கள் கருத்துப் போக்கினை வெறுத்தார். மேலும் தேசிய உணர்ச்சியைப் பற்றியும் அவர் அக்கறை கொள்ளவில்லை. அதற்கு மாறாக தேசிய உணர்ச்சி மக்களிடையே தோன்றியிருப்பதாகக் கூறுவதை அவர் நம்ப மறுத்தார். 1900-இல் அவர் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார். "என்னுடைய கருத்து யாதெனில் காங்கிரஸ் நிறுவனம் தன்னுடைய அழிவை நோக்கி சரிந்து விழுந்து கொண்டிருக்கிறது. இந்தியாவில் தான் பணியாற்றிவரும் காலத்தில் காங்கிரஸ் அமைதியாக சாவதற்கு துணைபுரிவதே தன்னுடைய பெரு விருப்பம் ஆகும்." ஆகவே வங்காள மக்கள் வெகுண்டெழுந்தபோதும், வங்காளத்தை இரு ஆட்சிப் பகுதிகளாகப் பிரித்த போது அதனை நாட்டுப் பிரிவினை என்று மக்கள் கூறிய போதும், புத்துயிர் பெற்றுவரும் வங்காள மக்களின் அழிவிற்காக வேண்டுமென்றே மேற்கொள்ளப்பட்ட முயற்சி என்று அறிவிக்கப் பட்ட போதும், கர்சன் பிரபு தேவர்களைப் போல மக்களிடமிருந்து ஒதுங்கிய நிலையில் இருந்தார். பொது மக்களுடைய கூக்குரலைப் புறக்கணிப்பதில் மிகவும் பிடிவாதத்துடன் நடந்து கொண்டார். முதலில் மக்கள் ஒழுங்கு முறையான வகையில் தங்கள் எதிர்ப்புகளைத் தெரிவித்தனர். நாளடைவில் அவை தீவிரமான மக்கள் ஆர்ப்பாட்டமாக மாறின. சுரேந்திரநாத் பானர்ஜி அவ்வார்பாட்டத்திற்குத் தலைமை தாங்கினார். பெருமளவில் பொதுக்கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்யப்பெற்றன. அதன் பயனாக சுதேசி இயக்கம் தோன்றியது. அந்நிய ஆடைகளுக்கெதிராகக் கட்டுமறுப்புச் செய்தனர். இவ்வித எதிர்ப்புகளுக்குப் பின்னால் வன்முறை செயல்கள் ஏற்படுமோ என்ற அச்சம் ஏற்பட்டிருந்தது. கர்சன் பிரபு மேற்குறித்த அறிகுறிகளையும் கெடுகுறிகளையும் உணர்ந்து தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ளுபவராகக் காட்டிக் கொள்ளவில்லை. அதற்கு மாறாக பிரிவினையை அவசியமான ஒரு நிருவாகம் சார்ந்த நடவடிக்கை என்று கருதி அதனை

ஏற்படுத்தியே தீரவேண்டும் என்று பிடிவாதமாக நடந்து கொண்டார். சில காலத்திற்குப் பின் பிரிவினையைப் பற்றிய முடிவு மாற்றி அமைக்கப்பட்டது. ஆனால் வங்காளியர்கள் உள்ளத்திலும், பொதுவாக மேல்நாட்டு வழிகளைப் பின்பற்றி வந்த மக்கள் உள்ளத்திலும், அந் நடவடிக்கை ஏற்படுத்திய வடு முழுமையாக மறையவில்லை. அதன் பயனாக சுய ஆட்சி முறையை வளர்ப்பதனைப் பற்றி பிரிட்டிஷ்காரர்கள் அவ்வப்பொழுது கூறி வந்த உறுதி மொழிகளில் ஐயம் மிகப் பரவலாக ஏற்பட்டிருந்தது. அதுவே திடீர் உணர்ச்சிகளுக்கு வசப்படுகிற மக்களிடையே அரசியலில் அச்சுறுத்தும் முறையைக் கையாளும் மனப்பான்மையை வளர்த்தது.

கர்சன் பிரபுவினுடைய இரண்டாவது பிரச்சனை படைதிருத்தம் பற்றியதாகும். அவர் சிவில் பணித்துறையினை சீர்திருத்துவதில் எத்துனை ஆர்வம் கொண்டிருந்தாரோ அத்துனை ஆர்வத்துடன் படை வகையில் நிலைமையை முழுவதும்ஆராய்ந்து ஆவனசெய்ய முற்பட்டார். ஆனால் இப்பணியினை சேனைத் தலைவருடன் சேர்ந்து நிறைவேற்ற வேண்டியதாகயிருந்தது அதற்காக 1902–இல் கிட்ச்னர் பிரபுவை படைத் தலைவராக அமர்த்தப்படுவதற்கு வழிவகை செய்தார். அப்பொழுது கிட்சனர் பிரபு தென் ஆப்பிரிக்காவில் ஏற்பட்ட போரின் காரணமாக சிறப்படைந்திருந்தார் என்று இங்குக் குறிப்பிடுதல் அவசியமாகும். முதலில் கர்சனும் கிட்சனரும் யாதொரு கருத்துவேறுபாடின்றி ஒத்திசைவுடன் பணியாற்றி வந்தனர். அதன் விளைவாக அநேக நடவடிக்கைகள் நிறைவேற்றப்பட்டன. ஆனால் கர்சன் இந்தியாவிற்கு மீண்டும் வந்தபொழுது, படை நிருவாகத்தினை படைத் தலைவரின் ஒன்றுபட்ட ஆணைக்குட்படுத்த வேண்டும் என்ற கோரிக்கை எழுப்பப்பட்டிருந்தது. இதுவரை படைத் தலைவர் இந்திய படையின் தலைவராக இருந்து வந்தார். அவர் வைசிராயினுடைய செயற்குழுவில் தனிப்பட்ட உறுப்பினராக நியமிக்கப் பெற்றிருந்தார். ஆனால் படைத் துறையின் நிருவாகம் வைசிராய் கவுன்சிலில் பணியாற்றிவந்த சாதாரண உறுப்பினர் ஒருவரின் பொறுப்பில் விடப்பட்டிருந்தது. அவ்வுறுப்பினர் ஒரு புகழ்பெற்ற படை வீரராக இருப்பினும் அவருடைய பதவிக் காலத்தில் அவர் படைக்குத் தலைமை தாங்க அனுமதிக்கப்படவில்லை. இந்த ஏற்பாடு மிக்க வசதி அளிக்கும் வகையில் அமைந்திருந்தது. ஏனெனில் படைத் தலைவர் அடிக்கடி அரசாங்கத் தலைமை அலுவலகத்திற்கு வர இயலா நிலையில் இருந்தார். மேலும் படை பற்றிய விவகாரங்களில் படைத் தலைவருடைய கருத்துடன் மற்றொருவருடைய கருத்தினை அறிவதற்கு ஒரு வாய்ப்பு ஏற்பட்டிருந்தது. கிட்சனர் இந்த முறையை விரும்பவில்லை. படை நிருவாகம் முழுவதும் தன்னுடைய ஒன்றுபட்ட ஆணைக்குட்படுத்த வேண்டும்

என்று விரும்பினர். அவருடைய யோசனை ஏற்றுக்கொள்ளப்பட்டால் வைசிராய் கவுன்சிலில் படை நிருவாகத்தை கவனித்து வந்த சாதாரண உறுப்பினர் பதவி மறைந்துவிடும். அந்நிலை ஏற்பட்டால் படைத்துறை சாராத நிருவாகிகளின் தலைமையாட்சியுரிமைக்கு கேடு விளையும் என்று கர்சனும் அவருடைய கவுன்சில் உறுப்பினர்களும் கருதினர்கள். கர்சன், கிட்சனர் ஆகிய இருபெரும் தலைவர்களுக்கிடையே ஏற்பட்ட சச்சரவு இந்தியாவில் 1905ஆம் ஆண்டின் தொடக்க மாதங்களில் ஒரு பெரும் அதிர்ச்சியை ஏற்படுத்தியது. இந்த நிகழ்ச்சி சரிந்துகொண்டிருக்கிற பால்பர் அமைச்சரவையின் முன் வைக்கப்பட்டது. பால்பர் அமைச்சரவை அவ்விரு பெரும் பணியாளர்களில் ஒருவரையும் கைவிட்டுவிட விரும்பவில்லை. ஆகவே ஒரு சமரச ஏற்பாட்டினை அறிவித்தது. ஆனல் அவ்வேற்பாடு எவருக்கும் மனநிறைவினை அளிக்கவில்லை. கர்சன் பிரபு அவ்வேற்பாடு கிட்சனருக்கு சாதகமாக அமைந்திருப்பதாக உணர்ந்தார். ஆகவே 1905ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் தமது பதவியைத் துறந்தார். இந்நிகழ்ச்சியின் பின் விளைவுகள் இரு தரத்தினருடைய செய்கைகளை சரியெனக் காட்டுவனவாக இல்லை. ஒரு அதிகாரி தன்னுடைய மேலதிகாரியின் கொள்கைகளில் குற்றங் கண்டுபிடிக்கும் உரிமையை அளிக்கக்கூடிய நிலையினை ஆதரிக்கும் வகையில் வாதாடுவது சரியல்ல என்பது உண்மையேயாகும். ஆகவே அந்த நிலையினை மீண்டும் ஏற்படுத்த யாதொரு முயற்சியும் மேற்கொள்ளப்படவில்லை. அதே நேரத்தில் கிட்சனருடைய அதிகாரங்களை ஒருமுகப்படுத்தும் திட்டம் தீவிரமானது என்பதை மறுக்க இயலாது. மேலும் அத்தகைய திட்டத்தினை அவரைப் போன்ற ஆற்றல்பெற்றவர்களால் தான் சரிவர நடைமுறைப் படுத்தமுடியும். முதலாவது உலகப் போரின் போது நடத்தப்பெற்ற மெசொபொடோமியா அல்லது ஈராக்கு போராட்ட ஏற்பாட்டினை நடைமுறைப்படுத்தப்பெற்ற போது அத்திட்டத்தின் குறை பாடுகள் வெளிப்பட்டன. இவ்வாருக டல்ஹௌசி காலம் முதல் இதுவரை ஏற்பட்டிருந்த மன உறுதியுடைய கவர்னர் ஜெனரலுடைய பதவிக்காலம் மனக்கசப்புடனும் மருட்சி நீக்கத்துடனும் முடிவடைந்தது. டல்ஹௌசியினுடைய உடலழிவிற்குக் காரணம் அவர் மேற்கொண்ட கடுமுயற்சிகளேயாகும். கர்சன் பிரபுவினுடைய உள்ளத்தில் ஏற்பட்ட வடு முழுமையாக குணமடையவில்லை. ஆயினும் அவருடைய பதவிக் காலத்தின் முடிவில் அவருடைய உள்ளத்திலே தோன்றிய கசப்புணர்ச்சியைக் கொண்டு அவருடைய சாதனையின் மேன்மையை மறைத்துவிட முடியாது. நிருவாகி என்ற முறையில் மற்றவர்கள் எதிர் பார்த்திருந்த அளவிற்கு மேலாகவே அவர் செய்து முடித்தார். இருபதாம் நூற்றுண்டில் ஏற்பட்டிருந்த வளர்ச்சியின் புது போக்கு வேகத்திற்கேற்ப தன்னுடைய அரிய முயற்சியினல் இந்திய அரசாங்கத்தினை அமைத்

தார். அத்தகைய முயற்சியினை அவர் மேற்கொண்டிராவிடில் இந்தியா பின்தங்கிய நிலையில் இருந்திருக்கும். ருஷ்யப் பேரரசின் நிருவாகத்தினைப் போன்று இந்திய நிருவாகமும் புதிய காலத்தின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் நிலையில் இருந்திருக்க முடியாது. பிறருக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் வகையில் நடந்து கொண்டதன் வாயிலாகவும், தன்னுடைய பேச்சுத்திறத்தின் வாயிலாகவும், அவர் செயலூக்கம் அளித்தும் உணர்ச்சியூட்டியும் வந்தார். கடமை உணர்ச்சியிலும், மக்களுடைய நன்மையில் கவனம் செலுத்துவதிலும், தன்னைத்தானே தியாகம் செய்வதிலும், அவர் நல்லெண்ணத்துடன் மக்கள் மீது கட்டுப்பாடுகளைச் சுமத்தும் ஆட்சி முறையின் புறவடிவமாகத் தோன்றினர். அவரிடம் காணப்பெற்ற குறைபாடுகள் பார்ப்பதற்கு தற்பெருமை தன்னம்பிக்கை ஆகியவற்றினுல் ஏற்பட்டனவாகக் காட்சியளித்தன. ஆனுல் கற்பனைத் திறமின்மையே அவை ஏற்பட மூல காரணமாயிருந்தது. அவரைச் சுற்றி ஒரு புதிய தேசிய இனம் வளர்ந்து வருவதை அவரால் கவனிக்க இயலவில்லை. அப் புதிய தேசிய இனம் பிரிட்டிஷ் ஆட்சியின் விளைவு என்பதனையும், அது அரசியல் சுதந்திரத்தைக் குறிக்கோளாகக் கொண்டிருக்க விரும்பியது என்பதனையும், தன்னுட்சியினை தனது பிறப்புரிமையாகக் கருதி வந்தது என்பதையும் இங்கு குறிப்பிடுதல் அவசியமாகும். கர்சன் இப்பொழுது தோன்றியிருந்த புதிய வகுப்பினரை அரசாங்கத்தின் காரகர்கள் (ஏஜென்டுகள்) என்று கருதினர். நீண்ட அன்னிய ஆட்சியின் பயனைப்பெற பாத்தியத்தையுடையவர்களாகவும், கூட்டாளிகளாகவும் அவர்களைக் கருதினர். ஆகவே அவர் எந்த இடத்தில்தான் வேரூன்றி நிற்பதாகக் கருதினரோ அதே இடத்தில் இடறி விழுந்தார். பிற்காலத்தில் அவர் தனது கருத்தினை மாற்றிக் கொண்டார். அதன் விளைவாக அவர் 1917ஆம் ஆண்டின் அறிக்கையைத் தயாரித்தார். ஆயினும் அவருடைய அறிவற்ற சில அரசியல் நடவடிக்கைகள் அரசினருக்கும் மக்களுக்கும் இடையே பெருத்த பிளவு ஒன்றினை ஏற்படுத்தியது. அப்பிளவு எஞ்சியிருந்த 42 ஆண்டு பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் முழுமையாக அகற்றப்படவில்லை.

# தேசிய இந்தியா 1905 - 47

## 1. அரசியல் நிகழ்ச்சிகளும், அரசப்பிரதிநிதிகளும் 1805 - 1947

கர்சன் பிரபுவினுடைய ஆட்சி, வெல்லெஸ்லி பிரபுவினால் தோற்றுவிக்கப்பெற்றதும், பஞ்சாப் குழுவினைச் சார்ந்தோர்களினால் வளர்க்கப்பெற்றதும், டல்ஹௌசி பிரபுவினால் ஒழுங்கு முறைபடுத்தப் பெற்றதுமான தன்னம்பிக்கையுடன் கூடிய நலம் பயக்கும் ஏகாதிபத்தியத்தின் கடைசி ஒளி வீச்சாகக் கருதப்படுகிறது. அநேக வழிகளில் அவரது ஆட்சிக் காலம் வரவிருக்கும் காலத்தினை முன்னறிவித்துக் காட்டுவதாக இருந்த பொழுதிலும் அதனுடைய உள்ளியல்பில் மாறுதல் அடையவில்லை. ஆனால் 1905ஆம் ஆண்டினை இந்தியா வரலாற்றில் ஒரு புதிய காலத்தின் தொடக்கமாகக் கொள்ளலாம். இக் காலத்தில் அரசியல் துறையில் அவ்வாண்டு நல்லெண்ணத்துடன் மக்கள் மீது கட்டுப்பாடுகளைச் சுமத்தும் ஆட்சிமுறை மாறி சுதந்திரத்தை அடிப் படையாகக் கொண்ட ஆட்சி அமைக்க நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பட்டன. மைய அதிகார ஒருமிப்புக் கொள்கையின் அடிப்படையில் நிறுவப்பெற்ற ஆட்சி மாறி சமுதாய அடிப்படையில் அமைக்கப் பெற்ற இரு நாடுகள் தோன்றக் காரணமாக அமைந்த நிகழ்ச்சிகள் இக்காலத்தில் உருவாகின. பொருளாதாரத் துறையில் அகில உலக சந்தைகளில் முழு மூச்சுடன் பங்கு கொண்ட ஒரு தொழில் வளம் பொருந்திய நாடாக இந்தியா இக்காலத்தில் வெளிப்பட்டது. ஆன்மீகத் துறையில் இக்காலத்தில் இரு பழமையான சமுதாயத்தினர் இருபதாம் நூற்றாண்டின் மேல் நாட்டவரிடையே தோன்றியிருந்த திண்மை தருகிற பண்பியல்புகளை அறிந்து அவைகளுக்கேற்ப தங்களை பழக்கிக் கொண்டனர். இதற்கு அடுத்த காலப் பகுதியில் ஏற்பட விருக்கும் நிகழ்ச்சிகளில் முதன்மையாக விளங்கிய இரட்டை தேசியக்

கோட்பாடு இக்காலத்தில் தான் முதிர்ச்சியடைந்தது. தற்கால உலகத்துடன் இந்தியா தன் விருப்பம் போலவும் தன்னுரிமையாகவும் உடன்பாடு செய்துகொள்ள வேண்டும் என்ற விருப்பமும், அவ்விருப்பத்தினை நிறைவேற்றுவதற்கான ஆற்றல் நாள் தோறும் வளர்ந்து கொண்டே வந்த நிலையும் மேற்குறித்த மாறுதல்கள் ஏற்பட முக்கிய மூல காரணங்களாக அமைந்தன. பல காரணங்களினுல் நிகழ்ச்சிகளின் போக்கு மாற்றமடைந்தது. இக்காரணக் கூறுகள் இப்பொழுது அறவே பிரிட்டிஷ்காரர்களால் ஏற்படுத்தப்பெற்றனவாக இருக்கவில்லை. இப்பொழுது இந்தியர்களும் இவை ஏற்பட காரணமாக விளங்கினர். மேலும் அவை தனிப்பட்டவையாகவும் பொது முறையானவையாகவும் அயல் நாட்டுக்குரியனவாகவும் உள் நாட்டுக்குரியனவாகவும் இருந்தன. தனிச் சார்பற்றதாகவும் தோன்றின. இதுவே இக்காலத்தின் சிறப்புக்கூறுகும். இவ்வத்தியாயத்தில் மேற்குறித்த ஆக்கக் கூறுகளைப் பற்றி சுருக்கமாகக் கவனிக்கலாம். கடைசி அத்தியாயங்களில் நுணுக்கமான பொருள்களைப் பற்றி விவரிக்கலாம்.

1900ஆம் ஆண்டிற்கு முன் இந்தியா முழுவதனையும் உண்மையில் பாதித்த வெளிநாடு பிரிட்டன் ஒன்றேயாகும். கொள்கை தூண்டு விசை, புது மாறுதல்கள் கருத்துகள், ஆட்கள், ஒழுங்கமைப்பு முறைகள் ஆகிய அனைத்தும் பிரிட்டனிலிருந்துதான் வந்தன. அங்கிருந்துதான் இந்தியர்களுடைய சில விருப்பங்களுக்கு எதிர்ப்புகளும் வந்தன. உலக அரங்கில் பிரிட்டன் போட்டிற்கு இடமற்ற நிலையில் தொடர்ந்து இருக்கக்கூடும் என்று கருதினர். ஏனைய ஐரோப்பிய நாடுகளின் முக்கியத்துவம் குறை மதிப்பிடப் பெற்றதாகத் தோன்றியது. ஆனுல் பொதுவாக மேல் நாடுகள் எதிர்க்க முடியாத வலிமை பொருந்தியனவாகவும் வரையறுக்க முடியாத செயல் திட்டங்களை மனத்தில் கொண்டிருப்பனவாகவும் கிழக்கு நாடுகளுக்குத் தோன்றின. மேல் நாடுகளுடன் ஏதாவது ஒரு வகையான இணக்கத்தை ஏற்படுத்திக் கொண்டால்தான் முன்னுக்கு வர முடியும் என்ற கருத்து உலவி வந்தது. ஆனுல் 1904-5-இல் ஏற்பட்ட ருஷ்யா-ஜப்பான் போரில் ஜப்பான் கண்ட வெற்றி இதுவரை மேல் நாட்டவர்களை வெல்ல முடியாது என்ற கருத்தினை மாற்றியமைக்க உதவியது. மேல் நாட்டவர்களை இந்தியா தன்னுடைய நாட்டிற்குள் நுழைய அனுமதி வழங்கிய சில காலத்திற்குப் பிறகுதான் ஜப்பான் அவர்களைத் தன் நாட்டிற்குள் நுழைய அனுமதி வழங்கியது என்பதனைப் பார்க்கும் போதும், பிரிட்டனுக்கு அடுத்தபடியாக ருஷ்யாவை ஐரோப்பிய நாடுகளுள் வலிமை பொருந்திய நாடாகக் கருதப்பெற்று வந்தது என்பதனை உணரும் போதும், ருஷ்யா-ஜப்பான் போரில் ஜப்பான் கண்ட வெற்றி உண்மையிலேயே மிகப் பெரிதாக வைத்து எண்ண

வேண்டிய வெற்றியாகத் தோன்றுகிறது. ஜப்பான் இப்பொழுது பிரிட்டனுடைய நேச நாடாக மாறியது. ஜப்பான் ஒரு வல்லரசு நிலையை அடையக்கூடும் என்றால் இந்தியா ஏன் ஆகக்கூடாது என்ற பிரச்சனை எழுந்தது. அடுத்த கட்டம் சீனப் புரட்சியாகும். மேல் நாட்டவர் தலையீட்டினின்றும் சீனர்களை விடுவிக்கும் இயக்கத்தின் தோற்றத்தை முன்னறிவிப்பதாக அப்புரட்சி கருதப்பெற்றது. சீனப் புரட்சி, துருக்கியில் 1908-இல் 'துருக்கிய இளைஞர் கழகத்தினர் தொடங்கிய புரட்சிகள் பாரசீகத்தில் தோன்றிய மக்களாட்சி இயக்கம் ஆகியவை ஒரு முக்கியமான கருத்தினை சுட்டிக்காட்டின. அதாவது மேல் நாட்டு முறைகளையும் கருத்துக்களையும் கையாண்டு பழைய சமுதாயத்தினரிடையே மறுமலர்ச்சி உண்டு பண்ணிய பிறகு மேல் நாட்டு ஆதிக்கத்திற்கு எதிராக மேல் நாட்டுக் கருவிகளைப் பயன்படுத்துவதே முன்னேற்றத்தை அடைவதற்குரிய வழி என்பதாகும். எதிர்க்க முடியாத மேலை நாடுகளினின்றும் பெறப்படும் வெறும் போலிப் பொருள்கூட சிறிதளவு மதிப்பினையாவது அடையும் என்றக் கருத்து தகர்க்கப்பெற்றது. இந்தியாவும் ஏனைய கிழக்கு நாடுகளும் மீண்டும் சுதந்திர வாழ்க்கையை அவாவுடன் எதிர் நோக்கலாம். என்ற நிலை ஏற்பட்டது. அதற்காக உள்நாட்டில் அடிப்படையான மாறுதல்களைச் செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

மேற்குறிப்பிட்ட நிகழ்ச்சிகள் முதலாவது உலகப்போர் ஏற்படுத்தவிருக்கும் பெரும் அதிர்ச்சியினுக்கு பீடிகையாக அமைந்தன. மேலை நாடுகள் பயங்கரமாகப் பிளவுபட்டிருப்பதாகத் தோன்றியதோடல்லாமல் அவை தங்கள் ஆதிக்கத்தை பரப்பி இருந்த இடங்களிலும் அவைகளின் செல்வாக்கு ஊறுபடத்தக்க நிலையில் இருப்பதாகத் தோன்றின. அமெரிக்க மக்களாட்சி முறை பழைய ஐரோப்பிய ஏகாதிபத்தியக் கொள்கையினை எதிர்க்கவல்ல ஒரு சக்தியாக வெளிப்பட்டது. ஜனாதிபதி வில்சனுடைய பதினான்கு உறுதிப்பாடுகளும், அவருடைய மக்களினத்தின் தனியாட்சிப் பண்புரிமைக் கொள்கையும் ஆசிய மக்களிடையே ஒரு நம்பிக்கை யுணர்ச்சியை ஏற்படுத்தியது. ஏனெனில் உள்நாட்டில் தனியாட்சிப பண்புரிமையினை நடைமுறைப் படுத்துவதில் எத்தனையோ இடையூறுகள் ஏற்படுவதற்கு வாய்ப்பு இருந்த பொழுதிலும், ஆசிய நாடுகள் தங்களைத் தாங்களே ஆள வேண்டும் என்று திடமாக தீர்மானித்திருந்தனர். இதுவரை அரசியல் சார்ந்த விவாதங்களில் அரசியல் அமைப்பில் பற்றுடைய கோட்பாட்டிலும் சட்டவரம்புக்குட்பட்ட உரிமைகளிலும் முதன்மையிடம் அளிக்க பெற்று வந்தது. ஆனால் அமெரிக்க செல்வாக்கு வளர்ச்சியுற்றதனால் அந்த முதன்மையிடம் மனித உரிமைகளுக்கு அளிக்கப்பட்டது. அரசியல் விவாதங்கள் இப்பொழுது வெகு தீவிரமான முறையில்

மேற்கொள்ளப்பட்டன. சில நேரங்களில் அம்முறை பயனளிக்காது போகுமோ என்ற பயம் இருந்த போதிலும் பொதுவாக அது புதிதாகத் தோன்றிய மக்கட் தலைவர்களிடையே தன்னம்பிக்கையையும் மன உறுதியையும் அதிகப்படுத்தின. ஐரோப்பாவை வெல்ல முடியாது என்றக் கருத்து இப்பொழுது அழிவுற்ற காரணத்தினால், பிரிட்டன் ஐரோப்பிய அமைப்பு முறையில் முன்பு இருந்ததைவிட இப்பொழுது குறைந்த செல்வாக்குப் பெற்றிருப்பதாக மக்கள் உணரலாயினர். பிரிட்டனையும், மேல்நாடுகளையும் இவ்விதமாக மதிப்பிட்டிருந்தமையால் அரசாங்கத்திற்கெதிராக இயக்கங்களை உருவாக்க முனைந்திருந்தவர்கள் இப்பொழுது புதிய உற்சாகத்தைப் பெறலாயினர். 1914ஆம் ஆண்டிற்கு முன்னர் எதனை நம்பிக்கையற்ற நடைமுறைக்கு ஒவ்வாத காரியம் என்று கருதினார்களோ அதுவே இப்பொழுது முன்னேற்பாட்டுடன் செய்யப்பட்ட கொள்கையாகக் கருதப்பெற்றது. பிரிட்டிஷ் ஆதிக்கத்திற்கும் ஒரு எல்லை உண்டு என்றும் இப்பொழுது கருதத் தொடங்கினார்கள். அது தொடர்ந்து இருந்துவரும் என்பதை நிச்சயமாகக் கூற எவரும் முன்வரவில்லை. போருக்குப் பிறகு பிரிட்டன் வலிமையிழந்திருப்பதை மக்கள் தெளிவாகக் கண்டனர். போருக்குப் பிறகு ஏற்படுத்தப்பெற்ற சர்வதேச சங்கத்தில் பிரிட்டன் ஒரு முக்கியமான உறுப்பு நாடாக இருந்ததே ஒழிய மற்ற உறுப்பு நாடுகளைக் கட்டுப்படுத்தும் அளவிற்கு செல்வாக்குப் பெற்றதாக இருக்கவில்லை. மேலும் இந்தியா கூட அதில் அங்கம் வகித்திருந்தது. இத்தகைய நிகழ்ச்சிகள் பிரிட்டன் தொடர்ந்து தன் செல்வாக்கைப் பயன்படுத்த முடியாது என்றக் கருத்தினை வலியுறுத்தின. 1930க்குப் பிறகு ஏற்பட்ட நிகழ்ச்சிகள் பிரிட்டனைப் பற்றி மக்கள் கொண்டிருந்த மாறுபட்ட மதிப்பீட்டினை மேலும் உறுதிப்படுத்தின. ஏனெனில் மீண்டும் ஜெர்மனியும் ருஷ்யாவும் பலம் பொருந்திய நாடாக வளர்ச்சியடைந்ததால் பிரிட்டனுடைய வலிமை குன்றியது. அதே நேரத்தில் வலுத் தாக்குதலில் நம்பிக்கை கொண்ட ஐரோப்பிய சர்வாதிகார அரசுகளின் பால் கொண்டிருந்த வெறுப்பினால் மக்கள் பிரிட்டிஷ் குறிக்கோள்களிடத்து காட்டிவந்த பரிவு இப்பொழுது அதிகரித்தது. இவ்வாறாக பிரிட்டிஷ் ஆதிக்கத்திற்குப் பதிலாக பிரிட்டிஷ் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்ட ஆங்கிலேயர்-இந்தியர் உறவு முறை அமைப்பதற்குரிய வழி வகுக்கப்பெற்றது.

இரண்டாவது உலகப்போர் இந்தக் கருத்து மாற்றம் முழுமையை அடைய பெரிதும் உதவியது. பிரிட்டன் தன்னுடைய வாழ்க்கை முறையையும், ஐரோப்பிய சுதந்திரத்தையும் காப்பாற்றுவதற்காக போரிட்டு வருவதைக் கண்ணுற்ற இந்தியர்களிடையே ஒரு புதிய ஆர்வம் தோன்றியது. இந்தியர்களும் ஏன் சுதந்திரமாக வாழக்

கூடாது என்ற பிரச்சனையை எழுப்பினார்கள். போர் முடிந்த பிறகு பிரிட்டனுடைய ஆதிக்கம் அமெரிக்கா, ருஷ்யா ஆகியவை மேலும் வலுப்பெற்றதன் விளைவாகக் குன்றியது. ஆகவே அந்த இரண்டு நாடுகளின் வருங்கால உறவுமுறை எத்துணையளவு பிரிட்டனைப் பொருந்திருந்ததோ அந்த அளவிற்கு இந்தியாவையும் சார்ந்திருப்பதாக மிகத் தெளிவாகத் தோன்றியது.

இவ்வாண்டுகளில் இங்கிலாந்து—இந்தியா உறவு முறைகளை வரையறுப்பதற்கு உதவி செய்த இரண்டாவது காரணக்கூறு பிரிட்டிஷ் பொது மக்களாவார்கள். 1906-இல் நடைபெற்ற பொதுத் தேர்தல் முற்போக்கு சக்திகள் மீண்டும் புத்துயிர் பெற்ற நிலையினைக் குறித்துக் காட்டியது. அவ்வாறு புத்துயிர் பெற்ற முற்போக்கு சக்திகள் எப்பொழுதும் அரசியல் துறையில் முதிர்ச்சியற்ற நிலையை இந்தியா அடைய இயலாது ஆகவே இந்தியா எக்காலத்திலும் தங்களுடைய பாதுகாப்பின் கீழே இருந்து வர வேண்டும் என்ற பழைமையான கருத்துக்களைச் சிதறடித்தன. இங்கிலாந்திலிருந்த இரு கட்சிகளைச் சார்ந்தவர்களில் பெரும்பாலோர் கிளாட்சன், ரிப்பன் ஆகியோருடைய முற்போக்குக் கருத்துக்களை ஏற்றுக் கொண்டனர். மார்லி போன்றவர்கள் இந்தியா தன்னாட்சி முறையைப்பெற நீண்ட நாட்கள் பிடிக்கும் என்றும் இந்தியாவைப் பொறுத்தளவில் தன்னாட்சி முறை என்பது அரசினருடைய விருப்பமாக இருக்க வேண்டுமே யொழிய அவர்களுடைய கொள்கையாக இருக்க இயலாது என்றும் கருதி வந்தனர். அதே நேரத்தில் கர்சன் லாண்ட்ஸ்டவுன் போன்றவர்கள் அரசினர் தன்னாதட்சி முறையை இந்தியாவில் ஏற்படுத்தும் வகையில் முன்னேற்ற நடவடிக்கை மேற்கொள்ள வேண்டியதன் அவசியத்தை உணர்ந்தனர். இந்த வகையில் தேர்வு முறையாக மேற் கொள்ளப்பட்ட நடவடிக்கைகளுள் முதலாவது மார்லி-மிண்டோ சீர்த்திருத்தங்கள் என்று சொல்லலாம். அச் சீர்த்திருத்த நடவடிக்கைகளை எதிர்த்தவர்கள் இந்திய அரசுப் பணியைச் (சர்விசுகளைச்) சார்ந்தவர்களேயன்றி பிரிட்டிஷ் பொது மக்கள் அல்லர். சட்ட சபைகளின் உறுப்பினர்களுடைய எண்ணிக்கையை அதிகப்படுத்துதல், இந்தியர்களுக்கு உயர் பதவி அளித்தல் போன்ற நிகழ்ச்சிகளைவிட தலைநகரத்தை கல்கத்தாவினின்றும் மாற்றிய நிகழ்ச்சியே மிகுந்த பரபரப்பினை ஏற்படுத்தியது. முதலாவது உலகப் போர் பிரிட்டிஷ் மக்கள் இந்தியாவைப் பற்றி கொண்டிருந்த கருத்து இத்தகைய மாற்றம் அடைவதற்கு பெரிதும் துணை செய்தது. 1917ஆம் ஆண்டில் விடுக்கப்பெற்ற அறிக்கை கூட்டு அரசாங்கத் தின் நடவடிக்கைகளுள் ஒன்றாகும். அதற்கான பூர்வாங்க திட்டத்தை வரைந்தவர் கர்சன் பிரபு ஆவார். அதனைத் தயாரித்தவர் கன்சர்வேடிவ்

கட்சியைச் சார்ந்த ஒரு அமைச்சராவார். இந்தியாவில் தன்னாட்சி முறையினை ஏற்படுத்த வேண்டும் என்ற கருத்து முன்பு இருந்ததை விட இப்பொழுது பிரிட்டிஷ் அரசியல் வட்டாரங்களில் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்த நிலையினை அது குறித்துக் காட்டியது. இந்தியா தன்னாட்சியைப்பெற வெகுகாலம் காத்திருக்க வேண்டிய நிலை ஏற்பட்டிருப்பினும், அந்த நாள் கண்ணுக்கு எட்டாத தூரத்தில் இல்லை என்பதும் தெளிவாக விளங்கியது. மேலும் தன்னாட்சியினைப் பெறுவதற்குரிய முயற்சி இப்பொழுது மேற்கொள்ள இயன்றது. முன்பெல்லாம் தன்னாட்சி என்பது சாதாரணமாக விழாக் காலங்களில் நிகழ்த்தப்பெறும் சொற்பொழிவுகளில் இடம் பெற்றிருந்ததே யொழிய நடைமுறையில் கொண்டுவரப்பெறும் பொருளாக மதிக்கப் படவில்லை என்பதனை ஈண்டு குறிப்பிடுதல் அவசியமாகும். தன்னாட்சியினை அடைவதற்கான வழியினை திட்டமிடவும், முறைப்படுத்தவும், முழு நிறைவாக்கவும் அரசியல்வாதிகள் முனைப்புடன் ஈடுபடலாயினர். இதனுடைய முதல் விளைவு மாண்டேகு சேம்ஸ்போர்டு சீர்த்திருத்தங் களும், அவைகளைத் தொடர்ந்து பத்து ஆண்டுகளுக்கு ஒரு முறை மேற்கொள்ளப்பட்ட மறு பரிசீலனைகளுமாகும்.

இனி பிரிட்டிஷ் அரசினருக்கும் இந்திய தேசியவாதிகளுக்கும் இடையே ஏற்பட்ட பூசல்கள் அனைத்தும் சீர்த்திருத்தம் எப்பொழுது மேற்கொள்ள வேண்டும் என்பதைப் பற்றியதாக இருந்ததேயொழிய சீர்திருத்தத்தின் இலக்கு எவ்வாறு இருத்தல் வேண்டும் என்பதைப் பற்றியதாக இல்லை. இந்திய ஆட்சிப் பொறுப்பினை இந்தியர்களிடம் ஒப்படைக்கும் முன்னர் அப்பொறுப்பினை ஏற்க வல்லவர் இந்தியாவில் உளர் என்றக் கருத்து தங்களிடம் ஐயமற்ற வகையில் ஏற்பட வேண்டும் என்று பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் கருதினர். காங்கிரசுதான் ஆட்சிப் பொறுப்பினை ஏற்கவல்ல நிலையில் இருப்பதாகக் காங்கிரசார் உரிமை கொண்டாடினர். ஆனால் பிரிட்டிஷ்காரர்கள் அவர்களது உரிமையை ஏற்றுக்கொள்ள அப்பொழுது தயாராக இல்லை. இந்திய அரசியலில் துரிதமான முன்னேற்றம் ஏற்பட வேண்டும் என்றும், காங்கிரசு நிறுவனம் ஆற்றல் வாய்ந்தது என்றும், ஆகவே சமரச நோக்குடன் நெருங்க வேண்டிய கட்சியாக அதனைக் கருத வேண்டும் என்றும் வற்புறுத்தி வந்தவர் இர்வின் பிரபுவே ஆவார். இவரே பின்னர் ஹாலிபாக்ஸ் பிரபு என அழைக்கப்பெற்றார். 1930-1-இல் நடைபெற்ற போராட்டம் அவரது முடிவு சரியானதென்பதை வலியுறுத்தியது. அதன் விளைவாக 1929-இல் தன்னாட்சியுரிமைப் பெற்ற குடியேற்ற நிலையே (டொமினியன் அந்தஸ்து) இந்திய அரசிய லமைப்பு வளர்ச்சியின் குறிக்கோள் என்று அறிவிக்கப்பட்டது. அவ்வறிக்கை அப்பொழுது ஏற்பட்டு வரும் மனமாற்றத்தின் ஒன்று

புலப்படும் அறிகுறியாக அமைந்தது. இவ்வறிக்கையின் விளைவாக இந்திய தன்னாட்சிக் கோட்பாடு இந்திய அரசியல் விவகாரங்களில் முதன்மையான இடத்தைப் பெற்றது. 1935ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட சட்டம் இந்தப் புதிய மனப்போக்கினை அரசிய லமைப்போடு இசைவான விதி முறைகள் வாயிலாகத் தெளிவுபடுத்தி யது. இரண்டாவது உலகப்போர் ஏற்படாது இருந்திருந்தால் அடுத்த இருபது ஆண்டுகளுக்குள்ளாகவே இந்தியா தன்னாட்சியுரிமையுடைய குடியேற்ற நாடாக (டொமினியன்) மாறியிருக்கலாம்.

நாம் கவனிக்க வேண்டிய மூன்றாவது பெருங்காரணம், இந்தியப் பொது மக்கள் கருத்து வளர்ச்சியேயாகும். விக்டோரியா பேரரசியார் ஆண்ட காலத்தின் இடையில் தோன்றிய அரசப் பிரதிநிதிகள் அனைவரும் பிரிட்டிஷ் மக்கள், அரசுப் பணியாளர்கள் ஆகியவர் களுடைய கருத்தினை மட்டுமே தங்கள் கவனத்திற்குரியதாகக் கருதி வந்தனர். ரிப்பன் பிரபு மேற்கொண்ட நடவடிக்கைகளையும், 1892-இல் நிறைவேற்றப்பெற்ற இந்திய கவுன்சில்கள் சட்டத்தினையும், 1900ஆம் ஆண்டிற்கு முன்னர் பொது மக்கள் கருத்தினை தெளிவாக எடுத்துக்காட்டும் வகையில் அளிக்கப்பெற்ற சலுகைகள் என்று கூறலாம். கர்சன் பிரபு காலத்தில் காங்கிரஸ் பலமான எதிர்ப்பினை உண்டாக்கியது. ஆயினும் அவ்வெதிர்ப்பு புறக்கணிக்கப் பெற்றது. ஆனால் கோகலேயும், மார்லி பிரபுவும் நட்புறவுடன் பழகி வந்தனர். மேலும் கோகலே ஹார்டிஞ்சு பிரபுவின் நம்பிக்கைக்குரியவராகவும் விளங்கினார். முதல் உலகப் போருக்குப் பிறகு அரசு காரியங்களில் ஈடுபட்டிருந்த அரசியல் மேதைகளின் கவனத்தைப் பெருமளவில் ஈர்த்திருந்தது பிரிட்டிஷ் அரசின் நடவடிக்கைகளுக்கு எதிராக இந்தியர்கள் நடத்திய எதிர்ப்புகளேயாகும். இந்தியத் தலைவர்கள் அடிக்கடி அரசப் பிரதிநிதியின் மாளிகையை நோக்கி ஊர்வலம்போல் சென்று அவருடன் கலந்து பேசுவது வழக்கமான நிகழ்ச்சியாக மாறியது. வின்லித்கோ பிரபு காலத்தில் அவ்வாறு சென்று ஆலோசனை கூறும் வழக்கம் உச்ச கட்டத்தை அடைந்தது என்று கூறலாம். முஸ்லீம் லீக் தோன்றுவதற்கு முன்னர் செயல் விரைவுடைய இந்திய சிறுபான்மையினரின் கருத்தினை காங்கிரசு தான் பெருமளவில் வெளிப்படுத்தி வந்தது. (ஜின்னா காங்கிரசிலிருந்து விலகி முஸ்லீம் லீக் கட்சியினைத் தோற்றுவித்த பிறகு, முஸ்லீம் லீக் இந்திய மக்களின் கருத்தினையும், பலத்தினையும் வெளிப்படுத்தும் மற்றொரு நிறுவனமாக விளங்கியது. இக்கட்சியினை சூரியனிடமிருந்து தோன்றிய சந்திரனுக்கு ஒப்பிடலாம். காங்கிரசு நிறுவனத்திற் குள்ளேயே பெரும் கருத்து மாற்றங்கள் ஏற்பட்டிருந்தன.) அக்கருத்து மாற்றங்களை இதற்கு முன்னர் நாம் குறிப்பிட்ட அநேக முன்னேற்றங்

களுடன் இணைத்து நாம் கூற இயலும். கர்சனுடைய புறக்கணிப்பு ஜப்பானியர் வெற்றி, பிரிட்டனில் முற்போக்குக் கருத்துடையவர்கள் பதவிக்கு வருதல் போன்ற நிகழ்ச்சிகள் காங்கிரசு நிறுவனத்தின் அரசியல் குறிக்கோள் திட்டவட்டமாக முதன் முதலில் வரையறுக்கப் படுவதற்கு தூண்டுதல்களாக விளங்கின. கனடாவும், ஏனைய தன்னாட்சியுரிமையுடைய குடியேற்ற நாடுகளும் அனுபவித்து வந்த அரசியல் உரிமைகளை இந்தியாவும் பெற வேண்டும் என்று காங்கிரஸ் 1908-இல் திட்டவட்டமாக எடுத்துக் கூறியது. அப்பொழுது காங்கிரஸ் கோரியது எல்லாம் உள்நாட்டு விவகாரங்களில் முழு சுதந்திரமேயன்றி வேறல்ல. முதலாவது உலகப்போர் ஏற்படும் வரை அரசியலில் ஈடுபட்டிருந்தவர்களில் பெரும்பான்மையினர் உள்நாட்டு சுதந்திரக் கோரிக்கையுடன் திருப்தி அடைந்திருந்தனர். ஆனால் முதலாவது உலகப்போர் காங்கிரசின் கோரிக்கையை மாற்றி அமைத்தது. உள்நாட்டு விவகாரங்களில் முழு அதிகாரம் பெறுவது டன் திருப்தியடையாமல் உலகப்போருக்குப் பிறகு ஏற்பட்டிருந்த டொமினியன் அந்தஸ்த்தைப் பற்றிய புது கருத்துக்கேற்ப இந்திய அரசியலமைப்பு மாற்றியமைக்கப்பட வேண்டும் என்று காங்கிரஸ் வாதிட்டது. 1926ஆம் ஆண்டில் நடைபெற்ற பேரரசு மாநாடு 'டொமினியன் அந்தஸ்து' என்றால் என்னவென்பதினை வரையறுத்தது. அதன்படி 'டொமினியன்'களுக்கு பெருமளவில் சுதந்திரம் வழங்க ஏற்பாடு செய்யப்பெற்றது. 1931-இல் நிறைவேற்றப்பெற்ற வெஸ்ட்மின்ஸ்டர் சட்டம் அப்புதிய நிலையினை சட்டத்தின் வாயிலாக வெளிப்படுத்தியது. ஆனால் அதற்குள்ளாகவே 1929ஆம் ஆண்டு முழுமையான சுதந்திரமே பொருத்தமான குறிக்கோள் என்று காங்கிரஸ் அறிவித்தது. ஆனால் புதிதாக ஏற்றுக்கொள்ளப்பட்ட டொமினியன் நிலை தேசியவாதிகளின் பெரும் பகுதியினருக்குத் திருப்தியளித்தது. இரண்டு உலகப் போர்களுக்கு இடைப்பட்ட காலத்தில் தேசியவாதி களிடையே ஏற்பட்டிருந்த பூசல்கள் அனைத்தும் ஆட்சி உரிமையைப் பெற கையாள வேண்டிய முறைகளை மட்டுமே சார்ந்திருந்தன. பூசல் அனைத்தும் நேரடி முறையைக் கையாளுவதா அல்லது அரசிய லமைப்போடு ஒட்டிய முறையினைக் கையாளுவதா வன்முறையினைக் கைப்பற்றுவதா அல்லது சமாதான முறையினைக் கைப்பற்றுவதா என்பதைப் பற்றி இருந்தது. இந்தக் கருத்துக்கள் அனைத்தும் ஒன்றோடு ஒன்று நெருக்கமாகப் பிணைக்கப்பட்டிருந்த போதிலும், அவையனைத்தும் ஒன்றே என்று கூற இயலாது. ஏனெனில் அரசிய லமைப்போடு ஒட்டியிராத நடவடிக்கைகளில் ஈடுபடும் ஒருவர் வன்முறைச் செயல்களில் ஈடுபடாமலும் இருக்கக் கூடும். மகாத்மா காந்தி வற்புறுத்தி வந்த முறை இதுவேயாகும். பஞ்சாபிலும், ஏனைய இடங்களிலும் வன்முறையும், பீதியினை உண்டாக்கும் செயல்களும்

குறைவாக இருந்தமைக்கு அவரே காரணம் என்று கூறுவது மிகையாகாது. அதே நேரத்தில் அரசியல் போராட்டங்களில் அரசியலமைப்போடு கூடிய முறைகளை மக்கள் அதிகமாக புறக்கணித்ததற்கும் அவரே காரணமாவர். அவ்வப்பொழுது காங்கிரஸ் நிறுவனத்தைச் சார்ந்தவர்களை இப்புதிய வழியினை கையாளும் வகையில் திருத்தினர். அதன் பயனாக கட்டுமீறிய செயலுக்கு வரக்கூடிய ஒரு இயக்கம் அமைதியான ஆனால் அரசியலமைப்போடு ஒட்டியிராத இயக்கமாக மாற்றியமைக்கப் பெற்றது. ஆனால் அவ்வியக்கம் வன்முறையினைக் கைக்கொள்ளக்கூடும் என்று பயந்த காலத்தில், அதனைக் கைவிட்டார். அதன் பிறகு அவர், நேரடி நடவடிக்கை, அரசியலமைப்போடு ஒட்டிய செயல், ஆகியவற்றின் வெற்றி வாய்ப்புக்களை கருத்தில் கொண்டு அவற்றை மாற்றி மாற்றி கையாண்டு வந்தார். ஆனால் எக்காலத்திலும் அவ்வியக்கம் அவருடைய கட்டுமீறிச் சென்றதில்லை. பெரும் சேதத்தினை விளைவிக்கவுமில்லை. அவ்வாறு அதிக வெற்றிகரமாக அவர் நடத்தி வந்த காரணத்தால் அவருடைய சாதனை மிகச் சாதாரணமானதென்று என்று நாம் குறைவாக மதிப்பிடக் கூடாது. உண்மையில் அவர் இந்திய மக்களின் கருத்துப் போக்கினை நடைமுறைச் சட்ட வரம்பிற்குட்படுத்தியே வந்தார் என்று கூறலாம். ஏனெனில் அவர் அரசினருக்கு எதிராக நடத்தியப் போராட்டங்கள் யாவும் அறமுறையான தத்துவங்களுடன் மிக நெருக்கமாகப் பிணைக்கப்பட்டிருந்த காரணத்தால் அவற்றை நடைமுறைச் சட்டத்திற்கு எதிரான இயக்கங்கள் என்று கூறுவதைவிட நடைமுறைச் சட்டத்தைச் சாராத இயக்கங்கள் என்று கூற இயலும். அவர் அரசுப் பணியினை நடத்துவதற்காக ஏற்படுத்தப் பெற்ற சட்டத்தின் குறைகளை நிரப்ப அறமுறையான சட்டத்தினைக் கொண்டு வந்தாரேயன்றி அதனை அகற்றுவதற்காக அல்ல என்பதை நாம் அறிய வேண்டும். இவ்வாறாக அவர் பிரிட்டிஷ் ஆட்சியின் போது கொடுங்கோன்மை, கொலை, இன வெறுப்பு ஆகியவற்றினின்றும் இந்தியாவைக் காப்பாற்றினர் எனலாம்.

இந்த நேரத்தில் நாம் கூற வேண்டியவற்றுள் எஞ்சியிருப்பது ஒன்று உண்டு. அதாவது முஸ்லீம்களுக்கென்று ஒரு தனி தேசிய நாட்டினை அமைக்க வேண்டுமென்ற மனப்பாங்கு அவர்களிடையே வளர்ந்த விதமேயாகும். இத்தகைய மனப்பாங்கு அவர்களிடம் வளர்ந்ததற்குக் காரணம் காங்கிரசின் செல்வாக்கு பெரும்பாலும் இந்துக்களிடமிருந்ததேயாகும். ஐந்தாம் அத்தியாத்தில் இது மிக விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

இப்பொழுது பிரிட்டிஷ் அரசினர் 1905ஆம் ஆண்டிலிருந்து கடைப்பிடித்து வந்த கொள்கையினை கவனிப்போம். லிபரல் கட்சி

யினர் புதிதாக நிறுவிய அமைச்சரவையில் கிளாட்சன் வாழ்க்கை வரலாற்று ஆசிரியரான ஜான் மார்லி என்ற தீவிர முன்னேற்றவாதி இந்திய அமைச்சராகப் பணிபுரியத் தொடங்கினார். அவர் உயர்குடி மனநிலையுடன் தீவிர முன்னேற்றக் கொள்கைகளையும் கொண்டிருந்தார். அது அவருடைய அரசியல் நோக்கினை மிகவும் குறுக்கிவிட்டது என்று கூறலாம். அதன் பயனாக அவரால் இந்திய அரசியல் வாய்ப்பு வளங்களில் தன்னாட்சிக்குரிய அறிகுறியினை காண இயலவில்லை. புதிதாக நியமிக்கப்பெற்ற அரசப் பிரதிநிதி முதலாவது மிண்டோ பிரபுவின் பேரனாவார். கட்சியைச் சார்ந்தவர் என்பதைவிட அரசாங்க அலுவலர் என்று அவரைக் குறிப்பிடலாம். அப்போதைக்குச் சற்று முன்புதான் கனடாவின் கவர்னர் ஜெனரலாக இருந்து அரசியலமைப்புக் கேற்ற வகையில் தனது ஆட்சியினை வெற்றிகரமாக முடித்துவிட்டு தாய்நாடு திரும்பியிருந்தார். அவர் அரசியலமைப்பில் சீர்திருத்தங்களைப் புகுத்த வேண்டிய அவசியத்தினை நன்குணர்ந்திருந்தார். இங்கிலாந்தில் செயற்பட்டு வந்திருந்த இருபெரும் கட்சிகளின் இசைவுடனும், இந்தியப் பணித்துறையினர் ஒப்புதலுடனும், மார்லி மிண்டோ சீர்திருத்தங்களை மிகத் தெம்புடன் இல்லையென்றாலும் மிகத் திறமையுடன் தொடக்கி வைத்தவர் அவரேயாவார். அவரைப் பின் தொடர்ந்தவர் ஹார்டிஞ்சு பிரபு ஆவார்.[1] அவர் வெளிநாட்டு செயலகத்தின் நிரந்தரத் தலைவர் என்ற முறையில் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தார். அவர் எட்வர்டு மன்னரின் நம்பிக்கைக்கு உகந்தவர் என்று கருதப்பெற்றார். உணர்ச்சிகளை வெளிக்காட்டாத குணமுடையவர். தூய்மையான பழக்க வழக்கங்களைக் கொண்டவர். ஆகவே அவரது வரலாற்றுக் குறிப்புகளைப் படிக்கும் போது அவர் கொள்கைப் பிடிவாதமுடையவராகவும், ஊக்கமற்றவராகவும் தோன்றுகிறார். நம்பிக்கையூட்டும் வகையில் அமையப்பெறாத அவரது புறத்தோற்றமும், வெறுப்பூட்டுகிற பண்புகளும், அவர் பெற்றிருந்த மனத்திடத்தினையும், கூரறிவினையும், காலத்தின் தேவைகளை அறியும் திறனையும் மறைத்து விட்டன. கவர்னர் ஜெனரல் பதவியினை வெகுவாக விரும்பிய கிட்சனர் பிரபுவிற்குப் பதிலாக அவர் நியமிக்கப்பெற்றார். ஆகவே அவரது நியமனம் ஆங்கிலோ-இந்திய உறவு முறைகளில் ஏற்படவிருந்த பெருங்கேட்டினைத் தடுத்தது என்று கூறலாம். அவர் டில்லி தர்பாரினை நடத்திக் காட்டினார். 1911-இல் ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் இந்தியாவிற்கு வருகை தந்த பொழுதும் திறம்பட செயலாற்றினார். பலத்த எதிர்ப்புக்கிடையில் இந்தியப் பேரரசின் தலைநகரை கல்கத்தாவினின்றும் டில்லிக்கு மாற்றினார். வங்காளம், பீகார், ஒரிசா

1 அவர் 1844 முதல் 1848 வரை கவர்னர் ஜெனரலாகப் பணியாற்றிய ஹார்டிஞ்சு பிரபுவின் பேரனாவார்.

ஆகியவற்றினை கவர்னர் ஆளுகைக்குட்படுத்தியும், அஸ்ஸாமில் தலைமை ஆணையாளர் ஆட்சியினை புதுப்பித்தும் கிழக்கு இந்திய ஆட்சி முறையினைத் திருத்தி அமைத்தார். இவ்விரு செயல்களின் வாயிலாக அவர் எடுத்த காரியத்தில் பின்வாங்காத உறுதியினைப் படைத்தவர் என்று காட்டிக் கொண்டார். மேலும் இவற்றின் வாயிலாக வங்காளப் பிரிவினையினை ஒழித்தார். மேலும் வரலாற்றுப் புகழ்ப்பெற்ற டில்லியினை தலைநகராக்கி தேசியவாதிகளிடையே மனநிறைவை ஏற்படுத்தினார். கல்கத்தா தன்னுடைய சிறப்பு நிலை அழிபடக் காரணமாயிருந்த ஹார்டிஞ்சு பிரபுவினை என்றும் மன்னிக்கத் தயாராகவில்லை. ஆனால் அடுத்த ஐம்பது ஆண்டுகளில் ஏற்பட்ட முன்னேற்றங்கள் அவரது நடவடிக்கை சரியானதென்று மெய்பித்துக் காட்டின. இந்திய தேசிய நாடு உருவாக்கப் பெறுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யும் வகையில் மேற்கொள்ளப்பெற்ற ஒரு முக்கியமான நிருவாக நடவடிக்கையாக அது காணப்பட்டது. 1912-இல்[1] அவரைக் கொல்ல முயற்சிக்கப்பட்டது. ஆயினும் அவர் கொண்டிருந்த கருத்தில் மாறுதல் ஏற்படவில்லை. அதற்கு மாறாக அவர் கோகலே போன்ற காங்கிரஸ் தலைவர்களுடன் நெருங்கிய தொடர்பினை வைத்துக் கொண்டார். 1913-இல் சென்னையில் சொற்பொழிவு ஒன்றினை நிகழ்த்தும் போது தென் ஆப்பிரிக்காவிலிருந்த இந்தியர்களுக்காகப் பரிந்துப் பேசி தன்னை ஒரு தேசத் தலைவராக மக்கள் என்னும்படி செய்தார். தென் ஆப்பிரிக்காவில் அமைக்கப்பெற்ற புதிய 'யூனியன்' அமைச்சரவை இந்தியர்கள் தென் ஆப்பிரிக்காவில் குடியேறுவதை வெகு தீவிரமாகக் கட்டுப்படுத்தியது. ஆரஞ்சு குடியேற்ற நாட்டில் இந்தியர்கள் வியாபாரம், பயிர்த்தொழில் ஆகியவற்றில் ஈடுபடலாகாது என்றும், நிலவரமான சொத்துக்களை வைத்திருக்கலாகாது என்றும் ஆணை பிறப்பிக்கப்பெற்றது. ஹார்டிஞ்சு பிரபுவினுடைய செயல் தென்னாப்பிரிக்காவில் ஒரு விசாரணைக்குழு அமைக்கப்பெறுவதற்கு காரணமாயிற்று. அதன் பயனாக ஸ்மட்ஸ்-காந்தி உடன்பாடு ஏற்பட்டது. அதைத் தொடர்ந்து அவ்வுடன்பாட்டினை உட்கொண்ட சட்டம் ஒன்று இயற்றப்பெற்றது. அப்பொழுது தென்னாப்பிரிக்காவில் இந்தியர்களின் தலைவராகச் செயற்பட்டு வந்த மகாத்மா காந்தி அச்சட்டத்தினை தென்னாப்பிரிக்காவில் வாழ்ந்துவந்த இந்தியர்களுடைய 'உரிமைச் சாசனம்' என்று குறிப்பிட்டார். இந்த உடன்பாடு அடுத்த பத்து ஆண்டுகளில் ஒரு திருப்திகரமான நிலை ஏற்பட்டிருக்க வழி வகுத்தது என்று கூற இயலும். ஹார்டிஞ்சு பிரபுவின் ஆட்சிக் காலத்தில் பிரிட்டிஷ் லிபரல்களும் இந்திய முன்னேற்றவாதிகளும் மிக நெருக்கமாகப் பழகி வந்தனர்.

[1] புதிய தலைநகருக்குள் அரசு முறையாக சென்றபொழுது.

அவர்களிடையே ஏற்பட்டிருந்த உறவினை தேன் நிலவிற்கு ஒப்பிடலாம். அத்தகைய உறவு முறை முதலாவது உலகப்போர் நிகழாதிருந்தால் சில ஆண்டுகள் நீடித்திருக்கக் கூடும்.

1916-இல் சேம்ஸ்போர்டு பிரபு நியமிக்கப்பெற்றார். அவரது நியமனம் இன்னும் விளங்காத ஒரு புதிராகவே இருக்கிறது. ஏனெனில் அப்பொழுது ஏறக்குறைய ஐம்பது வயதினராக இருப்பினும் அதுவரை அவர் ஆஸ்திரேலியாவில் இருமுறைதான் கவர்னர் பதவியினை வகித்திருந்தார். அவர் ஆல்சோல்ஸில் பயின்ற மாணவர் என்பதே அவருடைய பெருமைக்கு முக்கிய காரணமாகக் கருதப்பட்டது. பண்டைய கிரேக்க லத்தீன் இலக்கியங்களில் ஈடுபாடு கொண்டு இருந்த ஆஸ்குவித்தின் கவனத்தை வெகுவாக கவர்ந்ததற்கு அதுவே காரணம் என்று கூறலாம். கிரேக்க மொழிப் புலமை வாயிலாக மட்டும் ஒருவர் அரசியல் மேதையாக விளங்க முடியாது அன்றோ! நல்ல எண்ணம் படைத்தவர்கள் என்றாலும் தலைமையேற்று நடத்தும் ஆற்றல் பெற்றவர்களின் எண்ணிக்கை போதிய அளவில் இன்னும் இந்தியாவில் ஏற்படவில்லை. இங்கிலாந்தில் போர் காரணமாக ஏற்பட்டிருந்த நெருக்கடியைச் சமாளிப்பதற்காக இந்திய நலன்கள் விட்டுக் கொடுக்கப்பட்டது என்று எண்ணப்போக்கு வளர்ந்து வருவதைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. திறம் படைத்தவர்கள் யாவரும் போர் நடைபெறும் இடத்திற்கருகே இருக்கவே விரும்பினார்கள். மேலும் பிரதமரும் தகுதியுடையவரே அரசப் பிரதிநிதியாக அமர்த்தப்பட வேண்டும் என்று வற்புறுத்தும் ஆற்றல் அற்றவராக இருந்தார். அமைதியான காலத்தில் சேம்ஸ்போர்டு வெற்றிகரமாக தனது பொறுப்புகளை நிறைவேற்றி இருக்கக்கூடும். ஆனால் அமைதிக் காலங்கள் அடக்கமுடையவர்கள் வரும் வரை காத்திருப்பதில்லை என்பதினை ஆக்லண்டு பிரபுவின் பதவிக் காலத்தின் வரலாற்றினை படிக்கும் பொழுதே அறிந்தோம். அவர் பதவி ஏற்கும்பொழுது மக்களிடையே முதலில் ஏற்பட்டிருந்த போர் ஆர்வம் குறைந்திருந்தது. அதற்குப் பதிலாக அவர்களிடையே மனக் கசப்பு வளரத் தொடங்கி இருந்தது. அவர் பதவியேற்ற உடனேதான் மெசொபொடேமியா போர் ஏற்பாடு காரணமாக இந்திய அரசு தன்னுடைய மதிப்பை இழந்தது. நாள் தோறும் வளர்ச்சியுற்று வரும் நிலைமையில் தோன்றிய இடர்ப்பாடுகள் டல்ஹௌசி போன்றவர்களின் ஆற்றலையும் சோதித்திருக்கும். சேம்ஸ்போர்டு எந்த முயற்சியினையும் துணிந்து தொடங்கினார் அன்று. அதற்கு மாறாக அவரைச் சூழ்ந்திருந்த நிகழ்ச்சிகள் தங்கள் இச்சைப்படி இயங்கலாயின. அவரால் கட்டுப் படுத்த இயலாத சக்திகளினால் அவர் உந்தப்பட்டு வந்தார். அவரை அரசப் பிரதிநிதி என்பதைவிட ஒரு காரகர் (Agent) என்று கூறலாம்.

பிரிட்டிஷ் ஆட்சியின் இறுதிக் காலத்தில் இந்தியாவை ஆண்டு வந்த அரசப் பிரதிநிதிகளுள் கொள்கை வரையறுப்பதில் மிகக் குறைந்த அளவில் பங்கு கொண்டவர் அவரே என்று கூறுதல் மிகை யாகாது. இராணுவம் பற்றிய தகராற்றிற்குப் பிறகு 1917ஆம் ஆண்டில் இலண்டனில் அக்கறையோடு உருவாக்கப் பெற்ற அறிக்கை வெளியிடப் பெற்றது. அதை அடுத்த செயற்படுத்தப் பெற்று வந்த சீர்த்திருத்தக் கொள்கை திறமை பெற்ற எட்வின் மாண்டேகுவுடன் பிரிக்க முடியாதபடி பிணைக்கப் பெற்றது. சேம்ஸ்போர்டுவினுடைய பங்கு புறக்கணிக்கத் தக்கதாக இல்லை. எனினும், அவர் அக் கொள்கையினை உருவாக்கி வளர்க்கத் துணையாக நின்றவர் என்று கருதப் பட வேண்டுமேயொழிய அதனை வரையறுத்தவர் என்று கருத இயலாது. நாள்தோறும் பலமடைந்து வரும் கட்டுப்பாட்டை மீறத் துடிக்கிற பொதுமக்கள் கருத்தினை கட்டுப்படுத்த அவரால் முடிய வில்லை. ரௌலத் சட்டங்களை நிறைவேற்ற அவர் முற்பட்ட போது பொதுமக்களுடன் அவர் நெருங்கிய தொடர்பு கொண்டாரில்லை என் பதனை வெளிக்காட்டிக் கொண்டார். 1919-இல் பஞ்சாபில் ஏற்பட்ட தொல்லைகளைச் சமாளிக்க அவர் மேற்கொண்ட நடவடிக்கைகளிலும் அவர் மன நிறைவு பெற வில்லை. அவர் பதவியினின்றும் விலகிய பிறகு கன்னாட் பிரபு புதிய சீர்த்திருத்தங்களைத் தொடங்கி வைத்தார். ஆனால் மகாத்மா காந்தியின் தலைமையின் கீழ் நடத்தப் பெற்ற வல்லமை மிக்க ஒத்துழையாமை இயக்கத்தையும், காங்கிரசைச் சார்ந்த இந்துக் கள், கிலாபாத் இயக்கத்தைச் சார்ந்த முஸ்லிம்கள் ஆகியோரிடையே இதுவரை ஏற்பட்டிராத உடன்பாட்டினையும், அரசினர் நின்று சமாளிக்க வேண்டிய நிலையில் இருந்தனர்.

அதன் பின்னர் லாயிட் ஜார்ஜ்[1] ரீடிங்கு பிரபுவினை அரசப்பிரதி நிதியாக நியமித்தார். இவ்வாறாக அமைச்சரவையில் பணியாற்றும் அமைச்சர்களை அரசப் பிரதிநிதியாக நியமனம் செய்யும் வழக்கம் மீண்டும் கையாளப் பெற்று வந்தது. அட்டார்னி ஜெனரல், தலைமை நீதிபதி, அமெரிக்க ஐக்கிய நாடுகளில் தூதுவர் போன்ற பதவிகளை ஏற்று வந்த காரணத்தால், அப்போதிருந்த வெறி உணர்ச்சிகளை அடக் குவதற்குத் தேவைப் பட்ட நீதிபதிக்குரிய மனப் பக்குவத்தை அவர் பெற்றிருந்தார். மேலும் அரசியல் தலைவர்களுடன் மேற்கொள்ள வேண்டிய அரசியல் பணித் துறையைச்சார்ந்த நடவடிக்கைகளுக்கு ஒரு புது மெருகினை அளிப்பதற்கு வேண்டிய கலந்து பேசிச் செயலாற்றுகிற திறமையையும் அவர் பெற்றிருந்தார். புதிதாக ஏற்படுத்தப் பெற்ற

1 வில்லிங்டன் பிரபுவினை நியமிக்க இருந்தார் கடைசி நேரத்தில் ரீடிங்கு பிரபு நியமிக்கப் பெற்றார்.

அரசியலமைப்பினை இயங்கச் செய்வதே அவருக்களிக்கப் பெற்ற முதல் பணியாகும். அதற்காக அவர் மக்களைச் சமாதானப் படுத்தி, அரசுக் கொள்கையினைத் தெளிவாக விளக்கி அவர்களுக்கு ஏற்பட்டிருந்த ஐயத்தைப் போக்கி, அவர்களிடையே நம்பிக்கையை வளர்க்க வேண்டியது அவசியமாயிற்று. முதலில் அவர் அரசினருடைய பலத்தை மக்கள் உணரும்படிச் செய்ய முற்பட்டார். இந்து முஸ்லிம் உடன்பாட்டில் காணக்கிடந்த முக்கியமான குறையினை அவர் கண்டறிந்தார். வன்முறைச் செயலில் மக்கள் ஈடுபட்ட பொழுது மகாத்மா காந்தி தற்காலிகமாக தனது செல்வாக்கினை இழந்திருந்த தருணம் பார்த்து அவரைக் கைது செய்தார். அதன் பிறகு சீர்திருத்தங்களை நடைமுறைப் படுத்துவதற்குரிய முயற்சி அனைத்தையும் மேற்கொண்டார். எதிர்க் கட்சியினரைப் பிரித்து வைத்திருந்த அடிப்படை வேற்றுமை, புதிய தன்னாட்சிக் கொள்கையினை நிறைவேற்ற முற்பட்ட அரசினருக்கும் அதனின்றும் மாறுபட்ட கருத்தினைக் கொண்ட பல் வேறு பகுதியினருக்கும் இடையே இருந்த வேற்றுமையை விட மிக வன்மையானது என்பதை அவர் கண்டுணர்ந்தார். ஆகவே அந்த உடன்பாடுதானே அழிந்து விடும் என்று அறிந்து, அது அழியும் வரை மிகப் பொறுமையோடும், தளராத் தன்னம்பிக்கையுடனும் காத்திருந்து தன்னுடைய அரசியல் கூர் மதியை வெளிக் காட்டினார். 1926ஆம் ஆண்டிற்கு முன்னதாகவே ஒத்துழையாமை இயக்கம் பிசுபிசுத்து விட்டது. முஸ்லிம்கள் காங்கிரசுடன் ஏற்படுத்திக் கொண்ட உடன்பாடு அழிந்தது. காங்கிரசிற்குள்ளே பலத்த பிளவுகள் ஏற்பட்டன. ரீடிங்கு பிரபு ஆக்க முறையான செயல் எதையும் மேற் கொண்டாரில்லை என்று அடிக்கடி சிலர் அவரைத் தூற்றினார்கள். ஆனால் அத்தகையோர் ஒரு உண்மையைக் காணத் தவறினார்கள் என்று கூற வேண்டும். அதாவது அப்போது ஏற்பட்டிருந்த நிலைமையைச் சமாளிப்பதற்கு செயலின்மை தேவைப் பட்டதேயன்றி வியப்பூட்டுகின்ற அளவில் செயலாற்றுகின்ற திறம் அன்று. அந்த நேரத்தில் சுறு சுறுப்பான ஒருவர் அரசப் பிரதிநிதியாக பதவியிலிருந்தால் அதனால் ஒரு பேராபத்து ஏற்பட்டிருக்கக் கூடும். அமைதியாக இருத்தல், நம்பிக்கையுடன் இருத்தல் ஆகியவற்றின் வாயிலாக ரீடிங்கு சிறப்படைந்தார். அவரது பதவிக் காலத்தின் பிற்பகுதியில் மக்கள் நம்பிக்கை யிழந்தும், பிரிட்டிஷ்காரர்கள் இன்னும் சில காலம் தொடர்ந்து தங்களுடன் இருப்பார்கள் என்பதை உணர்ந்தும், இருந்த காலத்தில், அவர்களை ஆக்க முறையான வழிகளில் முன்னின்று நடத்தும் திறம் அவரிடம் இல்லை. ஆகவே மக்களுடைய துணை கொண்டு ஆட்சி நடத்தப் பெற வேண்டும் என்ற கொள்கைக்குத் தேவையான மக்களாதரவு அவர் பெற இயல வில்லை. அதுவே அவரிடம் காணப் பெற்ற பெருங்குறையாகும்.

அவருக்குப் பின்னர் பதவியேற்ற மிகுந்த செல்வாக்கும், மெய்யார்வமும் கொண்ட இர்வின் பிரபு, ரீடிங்கு பிரபு மேற் கொள்ளத் தவறிய முயற்சியினை மேற் கொண்டார். அரசப் பிரதிநிதி பதவிப் பொறுப்பினை ஏற்க தான் வகித்திருந்த அமைச்சரவை பதவியினை விட்டுக் கொடுத்தார். அவர் பிரதமர் பால்டுவினுடைய நண்பர். டல்ஹெளசியினுடைய துணைவரான சர். சார்லஸ் உட் என்பவரின்பேரர். அறமுறையான மெய்யார்வத்துடன், பெருந்தன்மையும், திறமையும் அவரிடம் கலந்திருந்ததைப் போல வேறொருவரிடமும் இதுகாறும் கலந்திருக்க வில்லை. அவருடைய செய்கைகளின் விளைவுகளுள் சிலவற்றை யாரும் எதிர்பார்க்க வில்லை யென்றாலும், அவை சிறப்பு மிக்கனவாக இருந்தன என்பதில் ஐயமில்லை. ஏனெனில் அவர் தான் ஒருபுறம் பிரிட்டிஷ் மக்களைத் தங்களுடைய கூட்டுப் பாங்காண்மைக் கொள்கையினை (Partnership Policy) நம்பத்தக்க அளவு கடைபிடித்து வர வேண்டும் என்று வற்புறுத்தினார். அதே நேரத்தில் பிரிட்டிஷ் அரசினர் பொருளுணர்ந்துதான் தங்களது கொள்கையினை எடுத்துறைக்கிறார்கள் என்று இந்தியர்கள் நம்பும் வகையில் எடுத்துக் கூறினார். பொது மக்களைக் கவரும் வழிகளைப் பின் பற்றுவதில் அவருக்குப் போதிய திறமை இல்லை யெனினும் அவர் மக்களால் பெரிதும் மதிக்கப் பெற்று வந்தார். ரிப்பனுக்குப் பிறகு இர்வினை மக்கள் நேசித்தது போல வேறெவரையும் நேசிக்க வில்லை என்று கூற முடியும். சட்ட மறுப்பு இயக்கத்தால் ஏற்பட்டிருந்த நெருக்கடிகளுக்கு இடையே இத்தகைய மதிப்பினைப் பெற்றார் என்பதை ஈண்டு குறிப்பிடுதல் அவசியமாகும். வேறெந்த ஆங்கிலேயரும் இத்தகைய நெருக்கடி சூழலினின்றும் அதிகமான மதிப்போடு வெளிவந்திருக்க முடியாது. வேறெவராலும் அந்த நிலையைப் பயன் படுத்தி இந்திய தேசத் தலைவரான காந்தியினுடன் ஒரு உடன்பாட்டினை ஏற்படுத்தி இருக்கவும் முடியாது. நேர்மை, பொறுமை, பெருந்தன்மை, திறமை ஆகிய அவரது முக்கிய கருவிகளாக விளங்கின. நெருக்கடி நிறைந்த 1930–1ஆம் ஆண்டில் இங்கிலாந்திலும், இந்தியாவிலும், தன்னுடைய அரசாங்கத்திற்குள்ளேயும், தனக்கு ஏற்பட்டிருந்த தொல்லை யாவற்றையும் சமாளித்து ஒரு நிலையான நடவடிக்கையை மேற் கொள்ள பெரும் உதவியாக நின்றவை மேற் கூறப்பட்ட அவரது சிறப்புப் பண்புகளேயாகும். அதன் பயனாக பிரிட்டிஷ் அரசினருடைய நல்லெண்ணங்களில் இப்பொழுது ஒரு புதிய மதிப்புணர்ச்சி ஏற்பட்டது. ஆனால் சில சமயங்களில் முழு அளவு நம்பிக்கை ஏற்பட்டிருக்கவில்லை என்பதும் உண்மையே ஆகும். மேலும் ஆங்கிலேயர், இந்தியர் ஆகிய இருவருக்கும் இடையேயுள்ள பொதுவான குறிக்கோளை அடைய மேற் கொள்ளப் பெறும் முயற்சியில் ஒரு புதிய ஆர்வத்துடன் ஈடுபடலாயினர். காலப் போக்கில் இந்திய அரசியல் அமைப்பு வளர்ச்சியின் இறுதிக் கட்டம் டொமினியன் அந்தஸ்தாக



மகாத்மா காந்தி.

இருக்க வேண்டும் என்ற அறிவிப்பு சட்ட மறுப்பு இயக்கத்தினை விட அதிக மதிப்பினை பெறலாயிற்று. அதேபோல் 1932-இல் மீண்டும் துவக்கப் பெற்ற சட்ட மறுப்பு இயக்கத்தை விட வட்ட மேசை மாநாடுகள் முக்கியத்துவம் பெறலாயின. இர்வின், காந்தி ஆகிய இவ்விருவர்களிடையே ஏற்பட்டிருந்த உறவு முறை கோகலே, ஹார்டிஞ்சு ஆகியவர்களிடையே ஏற்பட்டிருந்த உறவு முறையை ஒத்திருந்தது. ஆனால் அப்பொழுதிருந்த சூழ்நிலை இர்வின் பிரபு காலத்தில் ஏற்பட்டிருந்த சூழ்நிலையினின்றும் மாறுபட்டிருந்தது என்பதை நாம் கருத்தில் கொள்ளவேண்டும்.

வில்லிங்டன் பிரபு அரசப் பிரதிநிதியாக நியமிக்கப்படு முன்னர் பம்பாயிலும் சென்னையிலும் வெற்றிகரமாகப் பணியாற்றியிருந்தார். ஆகவே அவரிடமிருந்த சிறந்த பணிகள் எதிர் பார்க்கப் பட்டன. அவர் முற்போக்கு எண்ணங் கொண்டவர் என்ற பெருமைக்குரியவர். கவர்ச்சியான தோற்றமுடையவர், திறம் படைத்தவர், அனுபவமிக்கவர். அவரது மனைவியார் அரசப் பிரதிநிதிகளுடைய மனைவியர்களுள் தலை சிறந்தவர். அப்பொழுது அவருக்கு வயது அறுபத்தைந்து. ஆகவே நாட்டு மக்களைத் தலைமைப் பொறுப்பேற்று திறம்பட நடத்துவதற்குத் தேவையான சக்தி அவரிடம் இல்லை. இங்கிலாந்தில் அரசியல் அமைப்பைச் சார்ந்த விவாதங்கள் நடைபெற்று வந்த பொழுது அவற்றின் முடிவுகளுக்காக காத்திருந்த இந்திய அரசாங்கத்தின் பண்பு நயமிக்கத் தலைவராகப் பணியாற்றி வந்தார். அவரது பதவிக் காலத்தின் முதற்பகுதியில் மேற்கொள்ளப்பட்ட அடக்குமுறை அரசியல் உணர்ச்சி கொண்ட இந்தியர்களின் சீற்றத்தைக் கிளறிவிட்ட போதிலும், அப்பொழுது ஏற்பட்டிருந்த சூழ்நிலையில் நேரடி நடவடிக்கையில் ஈடுபட்டு சோர்வடைந்திருந்த காரணத்தால், தக்க சமயம் வரும் வரை பொறுமையோடு ஆனால் மிக எச்சரிக்கையுடன் காத்திருக்கும் மனப்பான்மையை அவர்கள் வளர்க்கத் துவங்கினர். 1932ஆம் ஆண்டின் துவக்கத்தில் காந்தி இரண்டாவது வட்ட மேசை மாநாட்டினின்றும் திரும்பி வந்த பிறகு வில்லிங்டன் காந்தி ஆகியவரிடையே ஏற்பட்டிருந்த தொடர்பு துரதிர்ஷ்டமாக முறிவுற்றது. எனினும் அம்முறிவு தடுக்க இயலாத ஒன்றாகக் காணப்பெற்றது. ஆனால் அந்த முறிவை சரிசெய்ய அவர் தவறினார். அதனை ஒரு அரசியல் தவறாகவே நாம் கருத வேண்டும். சேம்ஸ்போர்டு போல அவர் யாதொரு பெரிய மடத்தனமான தவறைச் செய்யவில்லை. ஆனால் ரீடிங்கு பிரபுவைப் போல புதிதாக பலப்படுத்தப்பெற்ற அரசாங்கத்தினுடைய கைகளை மக்களைக் கவரும் வகையில் மேற்கொள்ளப்பெறும் செய் குறிப்புகள் என்ற உறையிட்டு மறைக்கவும் முயலவில்லை. இந்தியர்களுக்கு ஆட்சியில் பங்களித்தல் அரசாங்கத்தினுடைய கொள்கையாகத்

தொடர்ந்து இருந்தது. ஆனால் அது பின்பற்றத்தக்க குறிக்கோளாகக் கருதப்பெறவில்லை. இவ்வாறாக இந்தியர்களுடைய ஆற்றலையும், அன்பையும் ஒன்றாக இணைக்கும் இறுதி வாய்ப்பு இழக்கப்பெற்றது.

1935ஆம் ஆண்டில் இந்திய அரசியல் சட்டம் நிறைவேற்றப் பெறுவதற்கு முன்பாகவே அவரது பதவிக் காலம் முடிவுக்கு வந்து கொண்டிருந்தது. ஆகவே அவரைப் பின்தொடர்ந்த லின்லித்கோ பிரபு புதுத் தேர்தல்களை நடத்தி புதிய அரசியல் சட்டத்தை துவக்கி வைக்கும் பொறுப்பினை ஏற்க வேண்டியதாயிற்று. அதற்காகவே கூட்டு அமைச்சரவை அவரைத் தேர்ந்தெடுத்தது. அதற்கு முன்னரே இந்திய விவகாரங்களைப் பற்றி நன்கு ஆராய்ந்து அறிந்திருந்தார். விவசாயக் கமிஷனின் தலைவராகப் பணியாற்றி இருந்தார். இவ்வாறாக இந்திய அரசப் பிரதிநிதி பதவிக்குத் தன்னைத் தகுதியுடையவராக்கிக் கொண்டார். அமைச்சரவையில் இடம்பெற்றிலர் என்றாலும் அமைச்சரவை உறுப்பினருக்குரிய மதிப்பைப் பெற்றிருந்தார். கடுமையாக உழைக்கும் திறனுடையவர். பொறுமையுடையவர். திறம் படைத்தவர். உணர்வுத் தெளிவுடையவர். இவரைவிடக் கடுமையாக உழைத்தவரோ அல்லது மனச்சான்றுக்குக் கட்டுப்பட்டு நடந்தவரோ வேறெவருமிலர். அரசியல் நுணுக்கங்களில் தேவைக்கு மீறிய கவனத்தைச் செலுத்தி வந்தார். அதுவே அவரிடம் காணப்பெற்ற குறைபாடு ஆகும். அதன் விளைவாக அவர் சில நேரங்களில் முக்கியமான கருத்தினை அறியத் தவறி விடுவார். சில நேரங்களில் அளவுக்கு மீறிய பொறுமையைக் கடைப்பிடித்து தக்க சமயத்தில் ஒரு காரியத்தை நிறைவேற்றத் தவறி விடுவார். 1943-இல் வங்காளத்தில் ஏற்பட்ட நெருக்கடியின் போது அவர் நடந்து கொண்ட விதமே இதற்குத் தக்க சான்றாகும். மனிதனைப் பற்றி காரியங்களைச் செய்வதற்கும் பருவம் உண்டு என்பதை அறியக் கூடிய உள்ளுணர்வாற்றல் அவரிடம் காணப் பெறவில்லை. இக் குறைபாடுகள் அவரிடம் இரா திருந்தால் 1939ஆம் ஆண்டில் இரண்டாவது உலகப்போர் ஏற்படுவதற்கு முன்னரே இந்தியாவில் கூட்டாட்சி நடைமுறை படுத்தப்பெற்றிருக்கும். அப்பொழுதிலிருந்து அவர் போர்ப் பிரச்சனைகளில் தன்னுடைய முழு கவனத்தைச் செலுத்தி வந்தார். உணர்ச்சி புகட்டும் ஆற்றல் அற்றவராயிருப்பினும், விவகாரங்களைக் கட்டுப்படுத்தி நடத்தும் ஆற்றல் படைத்தவர் என்பதை வெளிக்காட்டினார். 1942-இல் ஜப்பானியர் தாக்குதலினால் மக்களிடையே பெருத்த பயம் ஏற்பட்டது. அக்காலத்திலும் அதனைத் தொடர்ந்து காங்கிரசார் ஏற்படுத்திய கிளர்ச்சியின் போதும், அவர் காட்டிய மன உறுதி அளவிடுதற்கரிய நன்மையை விளைவித்தது. அவர் நேரடியாக ஏற்படுத்திக் கொண்ட தொடர்புகளுக்கும் மாநாடுகளுக்கும் குறைவே இல்லை என்றாலும், அவரிடம் தனி

மனிதருக்குரிய ஆர்வமும், கற்பனைத் திறமும் காணப்பெறவில்லை. அப்பண்புகளைப் பெற்றிருப்பின் தேசியவாதிகளின் பொறுமையற்ற நிலை பெரும் எதிர்ப்பாக மாறியிருக்காது. அரசப் பிரதிநிதிப் பட்டியலில் அவருக்களிக்க வேண்டிய இடத்தினை நாம் இப்பொழுது மதிப்பிட முடியாது. ஏனெனில் அவருக்கு ஏற்பட்டிருந்த இடர்ப்பாடுகள் என்ன என்பதையும், அவர் காலத்தில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளில் அவரது பங்கு என்ன என்பதையும் நாம் இப்பொழுது சரிவர அறிந்துகொள்ளும் நிலையில் இல்லை.

அதே போலத்தான் அவரைத் தொடர்ந்து அரசப் பிரதிநிதிகளாகப் பணியாற்றிய இருவரைப் பற்றியும் சரியான முடிவுக்கு வரும் நிலையில் நாம் இல்லை. இந்தியாவினை ஆங்கிலேயப் பிடியிலிருந்து நழுவி விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும் போரில் வெற்றி பெறுவதற்குரிய முயற்சி மேற் கொள்ளவேண்டும் என்கிற கட்டளைகளுடன் 1943-இல் இந்தியாவிற்கு வேவல் பிரபு அனுப்பி வைக்கப்பெற்ருர். இதில் அவர் மாபெரும் வெற்றியைக் கண்டார். அவர் சிறந்த படை வீரர். அவர் இந்தியாவிற்கு வந்தபோது வங்காளத்தில் பெரும் பஞ்சம் ஒன்று ஏற்பட்டிருந்தது. அதைத் தக்கவாறு சமாளித்து இர்வின் பிரபுவிற்குப் பின்னர் இந்திய மக்களுடைய அன்பைப் பெற்ற ஒரே அரசப் பிரதிநிதி என்ற பெருமையை அடைந்தார். 1945ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் ஜப்பானியர் சரண் அடைந்த காலம் தொடங்கி அவருக்கு அளிக்கப்பெற்ற பணி இந்தியாவிலிருந்த இரு பெருங் கட்சிகளின் ஒப்புதலைப்பெற்று அவர்களிடம் இந்திய ஆட்சிப் பொறுப்பினை ஒப்படைத்தலேயாகும். அவரது முயற்சிகளைப் பற்றிய முடிவானக் கருத்தினை நாம் தெரிவிக்கக்கூடிய காலம் இன்னும் வரவில்லை என்றே கூற வேண்டும் மேலும் அவரைப் பதவியினின்றும் மீட்டு அழைத்துக் கொண்ட பிரிட்டிஷ் அரசின் புத்திசாலித்தனத்தைப் பற்றிய முடிவான கருத்தினை நாம் தெரிவிக்கும் நிலையில் இல்லை. ஆனால் இந்நேரத்தில் நாம் ஒன்றுமட்டும் கூறினால் போதுமானது அதாவது மிகக் குறைந்தளவில் போரில் ஈடுபட்ட போர்வீரரும், அரசியல் விவகாரங்களில் மிகக் குறைந்த அளவில் தலையிட்டு வந்த அரசப் பிரதிநிதியும் அவரே யாவார். வெளிப்பார்வைக்கு வளைந்து நெளிகிற தன்மையும், மிகுதியாக பேசாதத் தன்மையும் பெற்றிருந்தவராகக் காணப்பட்டார். அதே நேரத்தில் நுட்பமும் திட்பமும் செறிந்த மனத்தினைக் கொண்டவராயிருந்தார். செயல் முறையளவில் அவரே கடைசி பிரிட்டிஷ் இந்திய கவர்னர் ஜெனரலாக கொள்ளலாம். அதே நேரத்தில் சிறப்புப் படியின் அவரைக் கடைசி கவர்னர் ஜெனரலாக மதிப்பிட முடியாது. மௌன்ட்பேட்டன் பிரபு ஆங்கில ஆட்சியை இந்தியாவினின்றும் விலக்கிக் கொள்வதற்குரிய ஏற்பாட்டினை செய்ய வேண்டும்

என்ற கட்டளையுடன் இந்தியாவிற்கு அனுப்பப்பெற்றார். பிரிவினையால் பஞ்சாபில் ஏற்பட்ட உடனடி விளைவுகளைப் பற்றிய கருத்து எவ்வாறாக இருப்பினும் அவர் தனக்கு அளிக்கப்பட்ட பணியினைச் செவ்வனே செய்து முடித்தார் என்று தான் கூற வேண்டும். இது பற்றி வரலாற்று அறிஞர்கள் சரியான முடிவிற்கு வர இன்னும் சில காலமாகும். ஏனெனில் அப்பொழுது ஏற்பட்ட நிகழ்ச்சிகளைப் பற்றிய முழு தோற்றத்தினை நாம் இன்னும் பெறவில்லை. மேலும் அக்காலத்தைப் பற்றிய பொதுப் பத்திரங்களை அறிந்து கொள்ள உதவும் விளக்கக் குறிப்புகள் இன்னும் முழுமையாக ஆராய்ச்சியாளர்களிடம் ஒப்படைக்கப் பெறவில்லை.

# 2. எட்வர்டு காலத்திய இந்தியா

1905 முதல் 1914 வரையுள்ள காலப்பகுதி தற்கால இந்திய வரலாற்றில் நன்கு வரையறுக்கப்பெற்ற காலமாக விளங்குகிறது. இதனை இந்திய வரலாற்றில் எட்வர்டு காலம் என்று குறிப்பிடலாம். இதற்கு முன்னர் திறமை, பிதாத்தன்மை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு ஆற்றல் மிக்கத் தலைவராலும், நல்லெண்ணம்கொண்ட அதிகார வர்க்கத்தாலும் இயக்கப்பெற்று வரும் ஆட்சியை ஏற்படுத்துவதில் பிரிட்டிஷ்காரர்கள் தங்களது கவனத்தைச் செலுத்தியிருந்தனர். அதற்கு மாறாக இப்பொழுது தன்னாட்சி போன்ற கருத்துக்களுக்கு முக்கியத்துவத்தை வழங்கினார்கள். ஒழுங்காட்சி, திறமை ஆகியவற்றிற்குப் பதிலாக சுதந்திரம் தன்னாட்சி ஆகியவை கோட்பாட்டுச் சொற்களாக அமைந்தன. வளர்ச்சியுற்றுவரும் இந்திய தேசியக் கட்சியினை புதுக் கண்ணோட்டத்துடன் பார்க்கத் தொடங்கினர். அதன் விளைவாக இந்தியாவின் வருங்காலம் உயர்குடி மக்களிடமோ அல்லது அரசர்களிடமோ இல்லை என்றும் காங்கிரசாரிடம்தான் அது உண்டு என்பதும் தெளிவாயிற்று. காங்கிரசார்தான் செல்வாக்குப் பெற்றவர்கள் என்பது ஏற்றுக்கொள்ளப் பெற்றது. அதே நேரத்தில் மக்கள் தலைவர்களும் அரசினருடன் கலந்து பேச முன்வந்தனர். அதன் பயனாக அவ்விருவருக்கிடையே நல்லிணக்கம் மீண்டும் ஏற்பட்டது. அத்தகைய உறவு இரண்டாவது உலகப் போருக்கு முன்னர் இரண்டு ஆண்டுகள் தவிர வேறெப்பொழுதும் காண இயலாது. அப்பொழுது கூட அத்தகைய நல்லிணக்கத்தினை முழுமையாக இக்காலத்தில் காண்பது போல் காண இயலாது. அதே நேரத்தில் தேசிய வாழ்வின் பல முறைகளில் கர்சன் பிரபு ஏற்படுத்திய தூண்டுதல் தொடர்ந்து இருந்து வந்தது. பொருளாதாரத் துறையிலும் துரிதமான முன்னேற்றம் ஏற்பட்டது. இந்தியா வெகு விரைவில் தொழில் வளம் பொருந்திய நாடாக விளங்கும் வகையில் முன்னேறி வந்தது. அரசியல் துறையிலும், பொருளாதாரத் துறையிலும் தன்னாட்சி முறை உருப் பெற்று வளர்ந்து வந்தது.

நிருவாகத் துறையில் ஏற்பட்ட முதல் பிரச்சனை தனிப்பட்டவரைச் சார்ந்ததாகும். கர்சன், கிட்சனர் ஆகியவர்களுடைய கொள்கைகளை அவர்களின்றியே நிறைவேற்றுவதற்காக இந்தியாவிற்கு மிண்டோ பிரபுவினை கன்சர்வேடிவ் கட்சியினர் இந்தியாவிற்கு அனுப்பிவைத்தனர். ஆனால் பிரிட்டனில் லிபரல் கட்சியினர் பெருவாரியான வாக்குகளைப் பெற்றமையால் ஜான் மார்லி என்ற முற்போக்குவாதி இந்திய அமைச்சராகப் பொறுப்பேற்ருர். மார்லி, கிட்சனர் பிரச்சனையைப் பொறுத்தளவில் கர்சன் பிரபுவினை ஆதரித்தவர். ஆனால் வங்காளப் பிரிவினையை எதிர்த்தவர். அவ்வாறு முன்னுக்குப் பின் முரணனக் கருத்துக்களைக் கொண்டதற்காக அரசியல்வாதிகள் வெகு காலம் தொல்லைக்குட்படுத்தப் பெறுவதில்லை. மார்லி மேற்கூறிய இரு விவகாரங்களிலும் ஏற்கனவே மேற்கொள்ளப்பெற்ற முடிவுகளை ஏற்றுக்கொண்டு தீவிர முற்போக்கு வாதிகளின் நம்பிக்கையைத் தகர்த்தெறிந்தார். அதன் பயனாக படைத் தலைவர் படைத் துறையின் தலைவராகவும், அரசப் பிரதிநிதியின் செயற் குழுவில் சாதாரண உறுப்பினராகவும் விளங்கினுர். படைத்தரவுத்துறை (Supply Department) ஒன்றும் அமைக்கப்பெற்றது. 1907–இல் கர்சன் காலத்தில் இக்கடைசி சின்னமும் நீக்கப்பெற்றது. வங்காளப் பிரிவினையை ஏற்றுக்கொண்டார். அதே நேரத்தில் கையாளும் முறைகளில் மாற்றம் ஏற்படும் என்றும் வலியுறுத்தினுர். அரசியல் கூட்டங்களில் மாணவர்கள் பங்குகொள்ள அனுமதி வழங்கிய காரணத்தால் இரு பள்ளிகளுக்கு வழங்கப்பெற்றிருந்த அங்கீகாரத்தினை வங்காள லெப்டினன்ட் கவர்னர் சர். பாம்பில்டி புல்லர் நீக்க முற்பட்டபோது அவரது நடவடிக்கையைத் தடுத்து நிறுத்தி தன்னுடைய கருத்தை அறிவித்தார். அதற்காக புல்லர் தன்னுடைய பதவியை ராசினுமாச் செய்தபோது அதனை ஏற்றுக்கொண்டார். இது புல்லருக்கு வருத்தத்தினையும், வியப்பினையும் உண்டாக்கியது.

புதிய அரசு கவனிக்க வேண்டிய இரண்டாவது பிரச்சனை அரசியலில் புதிதாக ஏற்பட்டிருந்த அச்சூட்டுகிற முறைப் பின்பற்றிய இயக்கத்தினைச் சார்ந்ததாகும். பிளேக்கு நோய் தீவிரமடைந்திருந்த காலத்தில் மேற்கு இந்தியாவில் இத்தகைய இயக்கம் தொடங்கப்பெற்றதன் அறிகுறிகள் காணப்பட்டிருந்தன. இவ்வியக்கம் வளர்வதற்குத் துணைபுரிந்த மனக்குறைகளும், குறிக்கோள்களும் ஒரு குறிப்பிட்ட பகுதியினைச் சார்ந்திருந்தனவேயன்றி நாடு முழுவதிலும் ஏற்பட்டதாகத் தோன்றவில்லை. இப்பொழுது இவ்வியக்கம் மேற்கிந்தியா, வங்காளம் பஞ்சாப், ஆகிய இடங்களில் தோன்றியது. மேற்கிந்தியாவில் அது B. G. திலகருடைய நாட்டுப்பற்றுடன் கூடிய சமய வழக்குடன் இணைக்கப் பெற்றிருந்தது. வங்காளத்தில் அது காளிதேவியுடன்

இணைக்கப்பட்ட உணர்ச்சி வயப்பட்ட வழிபாட்டு மரபாக விளங்கியது. வங்காளத்தில் பிரிவினையினால் ஏற்பட்ட நெருக்கடியின் பயனாக அது விளங்கியது. பஞ்சாபில் விவசாயிகளின் குறைகளுடன் அது இணைக்கப்பெற்றிருந்தது. வங்காளத்தில் அரசியல் காரணங்களின் விளைவாக எழுந்திருந்த உணர்ச்சியைத் தூண்டிவிடும் நெருக்கடி நிலையுடன் அவ்வியக்கம் வெகு நெருக்கமாக இணைக்கப் பெற்றிருப்ப தாகக் காண்கிறோம். பம்பாயில் இவ்வியக்கத்தின் பயனாக இதுவரை தலைமறைவாக இருந்து வந்த தீவிரவாதிகள் மீண்டும் உற்சாகமாக அவர்களது வேலையில் ஈடுபடலாயினர். பஞ்சாபில் சட்ட ஆதிக்கமும், ஒழுங்கான ஆட்சி முறையும் ஏற்பட்டு அறுபது ஆண்டுகளுக்கு மேலாகவில்லை என்றாலும், பலாத்காரச் செயலில் ஈடுபட வேண்டும் என்ற அழைப்பு வெகு ஆழமாகப் பரவி யிருக்கவில்லை. கடந்த ஐம்பது ஆண்டுகளில் ஏற்பட்டிராத விலைவாசி ஏற்றம் இந்த நிகழ்ச்சி யின் பின்னணியாகத் திகழ்ந்திருந்தது. அரசியல் பற்றிய மனக்கசப்பு கள் அரசியல் நடவடிக்கைகள் வாயிலாக சமாளிக்கப்பெற்றன. பொருளாதாரம் சார்ந்த மனக்கசப்பு தொடர்ந்து நீடித்து இருந்து வந்தமையால் இந்தக் காலப்பகுதி முழுவதிலும் இந்த இயக்கம் விட்டு விட்டு நடைபெற்று வந்தது. அநேக கொலைகள் ஏற்பட்டன. 1909-இல் சர். கர்சன் வைலியை ஒரு பஞ்சாபி கொலை செய்தார். அதன் காரணமாக இந்திய அமைச்சர் தன் விருப்பத்திற்கு மாறாக இரண்டு சட்டங்களுக்கு தன் ஒப்புதலைத் தெரிவித்தார். அதன் பயனாக கொலை செய்யத் தூண்டுவது பயங்கரக் குற்றம் என்றும், வெடி மருந்துகள் செய்வது சட்ட விரோதமானது என்றும் அறிவிக்கப் பட்டது. திலகர், முசாபர்பூரில் நிகழ்ந்த சம்பவத்தினை யொட்டி தன்னுடைய கருத்தினை வெளியிடும் போது மக்களை கொலை செய்யத் தூண்டினார் என்ற குற்றத்திற்காக ஆறு வருடக்காவல் அவருக்கு வழங்கப்பெற்றது. சீர்த்திருத்தச் சட்டங்கள் ஏற்பட்ட பிறகு அவ்வியக்கம் படிப்படியாக வலுவிழந்தது. அவ்வியக்கத்துடன் சம்பந்தப்பட்ட இறுதிச் செயல் 1912-இல் ஹார்டிஞ்சு பிரபு அரச மரியாதைகளுடன் டில்லியில் பிரவேசிக்கும் போது ஏற்பட்டது. அப்பொழுது அவரைக் கொலை செய்ய முயற்சிக்கப்பட்டது. ஆகவே இவ்வியக்கம் பீதியை ஏற்படுத்தியதில் யாதொரு வியப்பும் இல்லை எனலாம். ஆனால் அதில் ஒரு சிறுபான்மையினரே கலந்திருந்தனர் அரசியலில் பங்குகொண்ட மக்களுள் பெரும்பான்மையினர் அதற்கு யாதொரு உதவியும் செய்யவில்லை. அது மக்களிடையே வளர்ந்து வரும் அரசியல் உணர்ச்சியை எடுத்துக்காட்டுகிறது. அதே நேரத்தில் பொது மக்கள் தங்கள் கருத்துக்களைச் சுதந்திரமாக வெளிப்படுத்த வேண்டும் என்று விரும்பினார்கள். அந்த விருப்பத்தினை நிறைவேற்

றத்தக்க வகையில் பொது நிறுவனங்களை ஏற்படுத்தத் தவறினால் உண்டாகும் அபாயத்தினையும் அது எடுத்துக் காட்டியது.

புதிய அரசு சமாளிக்க வேண்டிய மூன்றாவது பிரச்சனை திபெத்து பிரச்சனையாகும். பிரிட்டிஷ் அரசு திபெத்தினர் வழங்க வேண்டிய நஷ்டஈட்டினை 75 லிருந்து இருபத்தைந்து இலட்சமாக ஏற்கனவே குறைத்து விட்டிருந்தது. அந்தப் பணத்தை ஆண்டுக்கு ஒரு இலட்சமாக வழங்க வேண்டும் என்றும் முடிவு செய்யப்பட்டது. அவ்வாறு மூன்று தவணைப் பணம் செலுத்திய பிறகு சும்பி பள்ளத் தாக்கினின்றும் வெளியேறவும் அனுமதி வழங்கியது. ருஷ்யர்கள் தொடர்ந்து இருந்து வருவதை இந்திய அரசினர் கவனித்து வந்தனர். ஆனால் மார்லி பிரபு இந்த சிக்கலை அவிழ்த்துவிட முடிவு செய்தார். 1906-இல் சீனாவுடன் 'பீகிங் ஒப்பந்தம்' நிறைவேற்றப்பட்டது. அதன்படி சீனா லாசா உடன்படிக்கைக்கு தன்னுடைய ஒப்புதலை அளித்தது. திபெத்து விவகாரங்களில் பிரிட்டன் தலையிடக்கூடாது என்றும், சீனா வேற்று நாடுகளை திபெத்தினின்றும் விலகி இருக்கச் செய்ய வேண்டும் என்றும் முடிவு கட்டப்பட்டது. இறுதியாக சீனர் கள் திபெத்தியர்கள் சார்பில் நஷ்டஈட்டினைச் செலுத்த வேண்டும் என்று முடிவு செய்தனர். நிபந்தனைகள் நிறைவேற்றப்பட்ட பிறகு, 1908-இல் இங்கிலாந்து அரசு சும்பி பள்ளத்தாக்கினின்றும் பிரிட்டிஷ் படைகளை வெளியேறுமாறு கட்டளை இட்டது. இந்திய அரசு அதற்கு மனமொப்பவில்லை. 1907-இல் ருஷ்யர்களும் ஆங்கிலேயர் களும் உடன்படிக்கை செய்து கொண்டதனால் ஆசியாவில் ஏற்பட்டி ருந்த நிலை முற்றிலும் மாறுபாடுற்றது. ஆகவே ஆங்கிலேயப் படை களை சும்பி பள்ளத்தாக்கினின்றும் வெளியேற்றியதால் யாதொரு கேடும் நேர வழியில்லை. ஒன்பதாம் புத்தகத்தில் எட்டாவது அத்தி யாயத்தில் குறிப்பிடப் பெற்றுள்ள நாடுகளிடையே ஏற்பட்டிருந்து ஒரே சீரற்ற உறவு முறை மறையத் தொடங்கியது. ஆங்கிலேயர்-ருஷ்யர் ஆகியோர்களுக்கிடையே ஏற்பட்ட ஒப்பந்தமும், அதற்கு முன்னர் 1904-இல் ஆங்கிலேயர் பிரஞ்சுக்காரர் ஆகியோர்கள் ஏற் படுத்திக் கொண்ட ஒப்பந்தமும், ஐரோப்பாவில் இரண்டு பெரு படை யுடன் கூடிய கட்சிகள் முழு வளர்ச்சி அடைவதற்கு துணை புரிந்தன. பிரான்சுடன் சேர்ந்து ஜெர்மனி, ஆஸ்திரியா, இத்தாலி ஆகிய நாடு களுக்கு எதிராக ஒரு கூட்டணியை ஏற்படுத்த வேண்டுமெனில் தங்களுடைய ஆசிய நாடுகளைப் பற்றியத் தகராறுகளைத் தீர்த்துக் கொள்ள வேண்டியது அவசியம் என்பதனை பிரிட்டனும் ருஷ்யாவும் உணர்ந்திருந்தனர். ஆகவே திபெத்து நாட்டின் மீது தங்களது ஆதிக்கத் தினை ஏற்படுத்த முனைவதில்லை என்றும், திபெத்து சீன நாட்டினைச் சார்ந்து இருக்க வேண்டும் என்றும், லாசாவில் தங்களுடைய பிரதிநிதி

கள் ஒருவரையும் அனுப்பக்கூடாது என்றும் முடிவெடுத்தனர். ஆப்கானித்தானத்தில் அப்பொழுது ஏற்பட்டிருந்த நிலை நீடித்திருக்க வேண்டும் என்றும் முடிவு செய்யப்பட்டது. பாரசீக நாட்டின் சுதந்திரத்தை இருவருமே மதிக்க வேண்டும் என்றும், வடக்கில் ருஷ்யர் களும், தெற்கில் ஆங்கிலேயர்களும் செல்வாக்குப் பெற்றிருக்க வேண்டும் என்றும் முடிவு செய்யப்பட்டது. இந்த ஏற்பாடு நாட்டுப் பற்று கொண்ட பாரசீக மக்களுக்கு யாதொரு மனநிறைவினையும் அளிக்கவில்லை. ஏனெனில் அப்பொழுதிருந்த நிலையைவிட எந்தவகை யிலும் முன்னேற்றமடைந்த நிலையினை அவ்வொப்பந்தம் உருவாக்க வில்லை. ஆனால் அது இவ்விரு வல்லரசுகளுக்கிடையே நடைபெற விருந்த பூசலை தவிர்த்தது. மேலும், அப்பொழுது தோன்றிய பாரசீக தேசிய உணர்ச்சி வளருவதற்கு அவ்வொப்பந்தம் மிகவும் துணைபுரிந்தது. ஆனால் லிபரல் கட்சியைச் சார்ந்த வெளிநாட்டு அமைச்சர் சர் எட்வர்டு கிரே அவர்களுக்கு இது முழு மன நிறைவினை ஏற்படுத்தவில்லை. அவ்வொப்பந்தத்தின் விளைவாக ஏற்பட்டிருந்த நிலைமையினை ஒரு கேலிச் சித்திரக்காரர் வெகு அழகாக பின்வருமாறு தீட்டியிருந்தார். பாரசீகத்திற்கு பூனை உருவம் அளிக்கப்பெற்றது. அதன் ஒரு புறத்தில் பிரிட்டிஷ் சிங்கமும், மறுபுறத்தில் ருஷ்யக் கரடியும் வரையப்பெற்றது. கரடி சிங்கத்திடம் பின்வருமாறு கூறியதாம். 'நீ பூனையின் வாலினைத் தடவி விடு, நான் அதன் தலையை வருடி விடுகிறேன். இருவருமே அதனுடைய முதுகினைத் தட்டிக் கொண்டிருக்கலாம்'.

திபெத்து ஏற்பாடு எதிர்பாராத விளைவுகளை ஏற்படுத்தியது. தலாய் லாமா இந்தியாவினை தன் நண்பனாகவும், சீனர்கள் தன்னுடைய நாட்டில் அதிகமாகத் தலையிட்டு வந்ததால் அவர்கள் தன் எதிரியாகவும் எண்ணமிட்டார். அவருக்கும் சீனர்களுக்கும் இடையே ஏற்பட்ட மனத் தாங்கல் காரணமாக அவர் 1910-இல் டார்ஜிலிங்குக்கு ஓடினார். 1911-இல் ஏற்பட்ட சீனப் புரட்சிக்குப் பிறகு மீண்டும் லாசா திரும்பினார். 1911க்குப் பிறகு சீனாவில் ஏற்பட்ட இன்னல்களின் விளைவாக சீன ஆதிக்கம் அங்கு அழிவுறத் தொடங்கியது.

எட்வர்டு காலத்திய இந்தியாவிற்கு ஒரு தனிப்பட்ட முத்திரையை வழங்கிய அரசியல் நடவடிக்கைகளைப் பற்றி இப்பொழுது கவனிப் போம். மிண்டோ, மார்லி ஆகிய இருவருமே இந்திய அரசியலில் இந்திய மக்களின் கருத்துக்களுக்குத்தக்க இடமளிக்க ஏதேனும் ஒன்றினை செய்ய வேண்டிய அவசியத்தை நன்குணர்ந்தனர். ஆனால் இருவருமே தேர்ந்தெடுக்கப்பெற்ற உறுப்பினர்களைக் கொண்ட சட்ட சபைகளை உண்டாக்கும் வகையில் முயற்சி மேற்கொள்ள வேண்டும் என்ற கருத்தினை ஏற்கத் தயாராக இல்லை. மிண்டோவைப் பொறுத்

தளவில் இத்தகைய மனப்பான்மை ஏற்படுவது இயற்கையேயாகும். அவரை அரசியல்வாதி என்று கூறுவதைவிட சிறந்த நிருவாகி என்று கூறலாம். ஆட்சிப் பொறுப்பேற்றுள்ளவர்களுக்கு இந்திய மக்கள் தகுந்த ஆலோசனை வழங்கும் வகையில் ஆட்சி முறையினை விரிவுபடுத்தினால் மட்டும் போதும் என்று அவர் கருதினார். இந்திய சமுதாயத்தின் கீழ்நிலைக்குரிய அடிப்படைக் கருத்தினை அவர் யாதொரு மறுப்புமின்றி ஏற்றுக்கொண்டார் பிரிட்டிஷ் இந்திய அரசியல் நிறுவனங்களை மட்டும் விரிவுபடுத்திவிட்டால் போதுமானது என்று எண்ணினார். மார்லியினுடைய நிலையோ திகைப்பூட்டுவதாக அமைந்திருந்தது. ரிப்பன் கிளாட்சன் ஆகியோருடைய கால முதற்கொண்டு மேல்நாட்டுப் பாணியில் அமைக்கப்பெறும் தன்னாட்சி நிறுவனங்களை ஏற்படுத்துவதனையே முற்போக்குக் கொள்கையாகக் கருதப்பெற்று வந்தது. தீவிர முற்போக்குக் கருத்தினை தான் கொண்டிருந்ததற்காக மார்லி பிரபு பெருமிதம் அடைந்திருந்தார். அதே நேரத்தில் அவர் அதிகாரப்பற்று கொண்டிருந்தார். ஆகவே இந்திய அமைச்சர் பொறுப்பினை மிக்க மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டார். அதுமட்டுமின்றி அப்பதவிக்குரிய இந்திய அதிகாரங்களை விட்டுக்கொடுக்க ஒரு சிறிதும் விரும்பவில்லை. அதே நேரத்தில் அவர் மக்களாட்சி, பிரதிநிதித்துவம் போன்ற கருத்துக்களுக்கு தன் மனத்தில் மிகுந்த இடமளித்திருந்தார். அதன் விளைவாக மேல்நாடு முறைகளுக்கேற்ற வகையிலே தான் விரும்பிய மாறுதல்களைப் புகுத்தினார். 1835-இல் மேல்நாட்டு கல்வி முறையினை இந்தியாவில் புகுத்தியதன் விளைவாக மேல்நாட்டு அரசியல் முறைகளும் புகுத்தப்பெற வேண்டும் என்ற கருத்தினை ஆதரித்து வந்தார் என்றாலும், அவர் ஏற்படுத்திய மாறுதல்களின் வாயிலாக தன்னாட்சி முறையினை ஏற்படுத்த இயலாது என்பதனை அவர் நன்குணர்திருந்தார். இதைப் பொருத்தளவில் அவர் நினைத்தது சரியே. ஆனால் வாய்ப்பிருந்தும் ஏன் அவர் நிலைமையில் மேலும் முன்னேற்றம் காண முற்படவில்லை என்பது விளங்காத புதிராக இருந்து வருகிறது. மார்லி தைரியமாகப் பேசுபவர். ஆனால் காரியத்தில் இறங்கும் போது அவர் சிறிது கோழையாக மாறிவிடுவார். ஆனால் அவ்வாறு தான் கூறிய கருத்துக்களை நிறைவேற்ற முற்படும்போது மிகுந்த தயக்கத்துடன் செயற்படும் நபர்களுள் முதலாவதாக வைத்து எண்ணப்பட வேண்டியவர் அவர் என்று நாம் கூற இயலாது. அவரது தயக்கத்திற்காக நாம் அவரைக் கண்டனம் செய்வதற்கு முன்னர் 1914ஆம் ஆண்டிற்கு முன் ஏற்பட்டிருந்த மனநிலையினை நாம் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். அந்த காலத்தில் ஏகாதிபத்திய ஆட்சிக்கு எதிராக பெருங் கிளர்ச்சி ஏதும் ஏற்பட்டிருக்கவில்லை. மேலும் அது முற்றிலும் அழிந்துவிடும் என்பதற்கான அறிகுறியும் அப்பொழுது ஏற்பட்டிருக்கவில்லை.

மார்லியும், மிண்டோவும் தங்களது வாழ்க்கையினை மாறுபட்ட துறைகளிலே துவக்கியிருந்தாலும், மாறுபட்ட பண்புகளைக் கொண்டிருந்தாலும், ஒருவர் புகழுக்கு மற்றொருவர் காரணமாக விளங்குகின்றனர். மிண்டோ, மார்லியினுடைய சொல் அம்புகளை பண்பு நயத்துடன் தாங்கிக் கொள்ள அவரது பொறுமை துணையாக நின்றது. மார்லியினுடைய கூரறிவும், செல்வாக்கும் அப்பொழுது ஏற்பட்டிருந்த பிரச்சனைகளை மிகத் தெளிவாக எடுத்துக்காட்ட பயன்பட்டன. அவையே எதிர்பார்த்த விளைவுகளை அடைய உதவின. அத்தகைய விளைவுகளை மிண்டோ, மார்லியின் துணையின்றி அடைந்திருக்க முடியாது. பிற்போக்கு சக்திகள், இந்தியா கவுன்சிலும், இந்தியப் பணி துறைகளிலும் மலிந்திருந்த அதிகார நலக் கும்பல்கள் ஆகியவற்றினைத் துளைத்து முன்னேற அவ்விருவருடைய முயற்சிகளுமே தேவைப்பட்டன. அவ்விருவர் அடைந்த வெற்றிகளுக்கு அவ்விருவருமே காரணமாவர்.

அவர்கள் தீர்வு காணுதற்குரிய பிரச்சனைகளை கீழ்க்கண்டவாறு பிரிக்கலாம்: முதலாவது பல்வேறு முக்கியமான இந்திய நலன்களைப் பாதுகாக்கும் வகையில் இந்தியர்களுக்கு முன்பு இருந்ததை விட அதிகளவில் பிரதிநிதித்துவம் வழங்குதலாகும். இரண்டாவது அப்பொழுது செயற்பட்டு வந்த சட்டசபைகளின் அதிகாரங்களை விரிவு படுத்துவதாகும் மூன்றாவது, இந்திய செயற்குழுவினில் இந்தியர்களை உறுப்பினர்களாக நியமித்தலாகும். முதலாவது பிரச்சனையைப் பொறுத்தளவில் மிண்டோ திட்டிய முதல் திட்டம் ஏற்கனவே செயற்பட்டு வரும் சட்டசபைகளுடன் ஆலோசனை சபைகளை ஏற்படுத்துவதாகும். அச்சபைகளில் இந்திய அரசர்கள் உட்பட எல்லா வகுப்புக்களின் சார்பாளர்களுக்கு இடமளிக்க திட்டமிட்டார். ஆனால் அவைகளுக்கு சட்டமியற்றுதல் போன்ற அதிகாரங்களை வழங்க முற்படவில்லை. தர்பார் கோட்பாட்டினை செயலுருப்படுத்தும் வகையிலும், பேரரசின் நிருவாகத்தில் இந்திய அரசர்களை சேர்த்துக்கொள்ள வேண்டும் என்ற பழக்கப்பட்ட கொள்கையினை மேலும் விரிவடையச் செய்யும் வகையிலும் மிண்டோ மேற்கொண்ட முயற்சியின் பயனே இத் திட்டம் என்று கருதப்பெறுகிறது. பிரிட்டனில் இருந்து வந்த உயர்படிப் பெருமகனார் நிலை (Peerage) போன்ற ஒன்றினை இந்தியாவில் ஏற்படுத்த வேண்டும் என்று லிட்டன் கருதினார். அத்தகைய கருத்து வளர்ச்சிக்குக் காரணமாயிருந்தது. மேற்குறிப்பிட்ட கொள்கையேயாகும் என்பதையும், அக்கருத்து நடைமுறைப் படுத்தப்பெறவில்லை என்பதையும் நாம் இங்கு நினைவில் கொள்ள வேண்டும். இரு பறவைகளை ஒரே நேரத்தில் வீழ்த்துவதற்காக எறியப்பட்ட கல் ஒரு பறவையைகூட தாக்கவில்லை. ஏனெனில் இந்திய அரசர்கள் அத்தகைய சபைகளில் கலந்து கொள்ள மறுத்து விட்டனர். அவர்களது ஆற்றல் அற்றத்

தன்மை அதிக கண்டனத்திற்குள்ளாயிற்று. ஆகவே ஏற்கனவே ஏற்படுத்தப்பெற்றிருக்கும் சபைகளை விரிவுபடுத்த முற்படலாயினர். அவ்வாறாக 1854ஆம் ஆண்டிற்கு முன்பே தொடங்கப்பெற்ற மேல் நாட்டு வழிமுறைகளோடு ஒட்டிய முன்னேற்றப் பாதையில் மீண்டும் தொடர்ந்து செல்லலாயினர். நிருவாகத் தொடர்பற்ற உறுப்பினர்களுள் பெரும்பாலோர் தேர்ந்தெடுக்கப்பெற்றனர். அவர்களுள் பெரும்பாலோர் மறைமுகமாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். மத்திய சட்டசபை உறுப்பினர்கள் மாநில சட்டசபை உறுப்பினர்களாலும், மாநில சட்ட சபை உறுப்பினர்கள் நாட்டு மக்களின் பலதிறப்பட்ட கருத்துக்களை பிரதிபலிக்கும் பல்வகையான பொதுநிறுவனங்களாலும் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். நகரசபைகளும், மாவட்ட ஆட்சி மன்றங்களும், வர்த்தகச் சங்கங்களும், பல்கலைக்கழகங்களும், நிலம் படைத்தவர்களும், தேயிலை, சணல் போன்ற தனி நலன்களை கவனிப்பதற்கென ஏற்படுத்தப்பெற்ற குழுக்களும் தேர்தலில் தங்களுக்கு அளிக்கப்பெற்ற பங்கினை நிறை வேற்றின. உறுப்பினர்களின் எண்ணிக்கையினை அதிகப்படுத்தியது டன் நில்லாமல் அரசுப் பணியாளர், அரசுப் பணித்துறை சாராதவர் ஆகியோருக்கிடையே ஏற்பட்டிருந்த விகிதம் அரசுப்பணியில் ஈடுபட்டி ராதவர்களுக்குச் சாதகமாக உயர்த்தப்பெற்றது. மத்திய சட்டசபை யின் உறுப்பினர்கள் எண்ணிக்கை இருபத்தைந்திலிருந்து அறுபதாக உயர்த்தப்பெற்றது. அவர்களுள் 28 உறுப்பினர்கள் அரசுப் பணியா ளர்கள். அவர்கள் அனைவரும் நியமனம் செய்யப்பட்ட உறுப்பினர்களா வார்கள். அவர்களுள் ஒன்பது பேர் ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஒருவர் என்ற முறையில் நியமிக்கப்பட்டனர். எஞ்சியிருந்த 32 பேர் அரசுப் பணியில் ஈடுபட்டிராதவர்கள் அவர்களுள் 27 பேர் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். இவ்வாறாக நாட்டு நிருவாகத் தொடர்புடையவர்கள் இன் னும் தொடர்ந்து பெரும்பான்மை கட்சியினராக இருந்து வந்தனர். ஆனால் அவர்களுடைய பெரும்பான்மை பலம் மிகவும் குறைந்துவிட் டது. இதுவே சில ஆண்டுகளுக்குப் பின்னர் முக்கியத்துவம் அடைந் தது. அரசப் பிரதிநிதியே இச்சபையின் தலைவராகத் தொடர்ந்து இருந்து வந்தார். மாநில சட்டசபைகளில் நாட்டு நிருவாகத்தில் தொடர்பற்றவர்களே பெரும்பான்மையினராக இருந்தனர்.

எண்ணிக்கை மட்டுமின்றி சட்டசபைகளின் அதிகாரங்களும் விரிவாக்கப்பெற்றன. 1862ஆம் ஆண்டு இந்திய சட்டசபை சட்டப் படி சட்டசபை தனக்கு முன்னர் வைக்கப்படும் மசோதாக்களைமட்டுமே பரிசிலனை செய்ய அதிகாரம் பெற்றிருந்தது. 1892ஆம் ஆண்டு சட்டப் படி சட்டசபையில் கேள்விகளை எழுப்பவும், ஆண்டு வரவு செலவு திட்டத்தினை விவாதிக்கவும் அதிகாரம் வழங்கப்பெற்றது. அதன் விளைவாக அரசு கொள்கையின் மீதும் பொதுவான விவாதம் நடத்த

அனுமதி வழங்கப்பெற்றது. அதுவே புகழ்பெற்ற ஆண்டு வரவுசெலவு பற்றிய பரிசீலனைகளை மேற்கொள்ள கோகலேவிற்கு பெரும்வாய்ப்பினை அளித்தது. 1909ஆம் ஆண்டுச் சட்டம் துணை கேள்விகளை கேட்பதற்கும், தீர்மானங்களை கொண்டு வருவதற்கும் சட்டசபை உறுப்பினர்களுக்கு அதிகாரத்தினை வழங்கியது. ஆனால் சட்டசபை இன்னும் நாடாளுமன்றத்திற்குரிய முழு அதிகாரத்தினை பெறவில்லை. ஏனெனில் சட்டசபையில் மசோதாக்களை கொண்டுவரும் அதிகாரம் அரசினரிடமே இருந்து வந்தது. மேலும் அரசினர் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானத்தினை கொண்டுவரவும் இயலாது. ஆனால் அத்தகைய அதிகாரங்களைப் பெற்றிருக்கும் நாடாளுமன்றத்தின் நிலையை அடையும் வழியில் அது முன்னேறி வந்தது. இப்பொழுது சட்டசபைக்கு வழங்கப்பெற்ற புதிய அதிகாரங்கள் அதனுடைய தன்மையை மாற்றின. இதுவரை சட்டசபை உண்மையில் ஆலோசனை சபையாகவே இருந்து வந்தது. அது மட்டுமன்றி அதற்கும் பொது மக்களுக்கும் இடையே நெருங்கிய தொடர்பு ஏற்பட்டிருக்கவில்லை. ஆனால் இப்பொழுது சட்டமியற்றுமதிகாரம் பெற்ற ஒரு பொது நிறுவனமாக மாறக்கூடிய நிலையை அது அடைந்தது. ஓரளவு தனிப்பட்ட சபை என்று சொல்லக்கூடிய நிலையில் இருந்த ஒரு பெருமைக்குகந்த சபை இப்பொழுது ஆராய்ந்து முடிவெடுக்கும் அதிகாரம் கொண்ட பொது மக்கள் சபை என்று சொல்லக்கூடிய நிலையை எய்தியது. அரசினை கவிழ்க்கவோ, அல்லது கண்டிக்கவோ அதற்கு உரிமை இல்லை என்பது உண்மையே. ஆனால் கேள்விகளை எழுப்பி அவற்றின் வாயிலாக மிகச் சீர்கேடான பொருட்களைப் பற்றிய தகவல்களைக்கூட அறிய இப்பொழுது வாய்ப்பு ஏற்பட்டது. மேலும் அரசுப் பணியில் தொடர்பு அற்ற மக்களின் முக்கியமான பிரச்சனைகளில் தங்களுடைய கருத்துக்களை தீர்மானங்கள் வாயிலாக வெளியிடவும் இப்பொழுது வாய்ப்பு ஏற்பட்டிருந்தது. இத்தகைய வாய்ப்புக்களை மிக்க நன்மை பயக்கும் அளவிற்கு பயன் படுத்திக்கொண்டவர் கோகலே ஆவார். அவ்வாறு அவர் மேற்கொண்ட நடவடிக்கைகளுள் ஒன்று அவர் கொண்டு வந்த கல்வியைப் பற்றிய தீர்மானமாகும்.

செயற்குழுவைப் பொறுத்தளவில் எந்த விதமான மாறுதலும் மேற்கொள்ளப்பெறவில்லை. மத்திய அரசைப் பொறுத்தளவில் அரசாங்கம் தன்னுடைய விருப்பத்தினை சபையில் பெரும்பான்மையினராக இருந்த அரசாங்க அதிகாரிகளின் வாயிலாக நிறைவேற்றிக் கொள்ள இயன்றது. அதே போல் கவர்னருக்கு வழங்கப் பெற்றிருந்த அதிகாரங்கள் வாயிலாக தனது விருப்பத்தினை மாநில சட்டசபைகளில் நிறைவேற்றிக்கொள்ள முடிந்தது. ஆனால் பம்பாயிலும், சென்னையிலும் செயற்குழு உறுப்பினர்களின் எண்ணிக்கை மூன்றிலிருந்து நான்காக உயர்த்தப்பெற்றது.

அதன் பயனாக அதிகார வர்க்கத்தைச் சாராத நபர் ஒருவரை அதன் உறுப்பினராக நியமனம் செய்வதற்கு வழி ஏற்பட்டது. வங்காளத்தில் ஒரு செயற்குழு ஏற்படுத்தப்பெற்றது. ஏனைய இடங்களிலும் செயற்குழுக்களை ஏற்படுத்த வழிவகை செய்யப்பட்டது. அதற்கு சில நிபந்தனைகளும் விதிக்கப்பட்டன.

மிண்டோ, மார்லி ஆகிய இருவருமே இந்தியர்களை உயர்பதவியில் அமர்த்துவதை தங்களது சீரிய குறிக்கோளாகக் கொண்டிருந்தனர். 1836-இல் நிறைவேற்றப்பட்ட பட்டயச் சட்டத்தின் விளைவாக அக்குறிக்கோளை அடைய ஒரு தனிப்பட்ட சட்டம் இயற்ற வேண்டிய அவசியம், உண்டாகவில்லை. ஆனால் வேறு பல முட்டுக்கட்டைகள் இருந்தன. பல ஆண்டுகளாக அரசாங்க அலுவலில் ஈடுபட்டிருந்தவர்கள் மட்டுமே மாநில செயற்குழுவின் உறுப்பினர்களாக நியமிக்கப்பெற்றனர். அரசாங்கப் பதவிகளை வகித்திருந்த இந்திய மக்களின் எண்ணிக்கை மிகக் குறைவாக இருந்தமையால் இந்தியர்கள் செயற்குழு உறுப்பினர்களாக நியமிக்கப்பெறுவது மிகக் கடினமாகத் தோன்றியது. ஆகவே நடைமுறையில் இந்தியர்கள் செயற்குழுவினின்றும் ஒதுக்கி வைக்கப்பட்டனர் என்று கூறலாம். ஆனால் மேலே குறிப்பிட்ட நிபந்தனைகள் வாயிலாக இந்த முட்டுக்கட்டை நீக்கப்பெற்றது. ஏனெனில் அரசப் பிரதிநிதியினுடைய செயற்குழுவிலும் இலண்டனிலுள்ள இந்தியா ஆலாசனைக்குழு உறுப்பினர்களாக நியமிக்கப்பெறுவதற்கு சட்ட முறையான தடை ஏதுமில்லை. ஆனால் இந்தியர்கள் நியமிக்கப்பட வேண்டும் என்ற கருத்தை அவ்வுறுப்பினர்கள் எதிர்த்தனர். அரசப் பிரதிநிதியின் செயற்குழுவில் இந்தியர்களுக்கு இடமளிக்க வேண்டும் என்ற கருத்தை அமைச்சரவைக்கு முன் வைத்த போது, அது அக்கருத்தினை நிராகரித்தது. மிண்டோ தனது செயற்குழுவில் இந்தியர்களுக்கு இடமளிக்க வேண்டும் என்று கூறிய பொழுது உறுப்பினர்களிடையே ஏற்பட்ட பரபரப்பை பின்வருமாறு பேராசிரியர் டாட்வெல் குறிப்பிடுகிறார். ‘தங்களது தலைக்கு நேராக திடுதிடுப்பென்று துப்பாக்கி முனையை நீட்டினார் போன்று சில உறுப்பினர்கள் திகைப்படைந்தனர்.’ ஆகவே மார்லி 1907-இல் இரு இந்தியர்களை இந்திய கவுன்சில் உறுப்பினர்களாக நியமித்ததுடன் மனநிறைவு கொண்டார்.[1] சட்டசபை சட்டம் நிறைவேற்றப்பட்ட பிறகு சர். சத்தியேந்திர சின்ஹா என்பவர் அரசப் பிரதிநிதியின் செயற்குழு உறுப்பினராக நியமிக்கப் பெற்றார்.

முன்னோடி நிகழ்ச்சிகளை கருத்தில் கொண்டு மிக எச்சரிக்கையுடன் இச்சட்டம் நிறைவேற்றப்பட்டிருந்தாலும், இதில் சில சிறப்புக்

[1] திருவாளர்கள் கிருஷ்ண கோவிந்த குப்தாவும், சையத் உசேன் பில்கிராமியும்.

கூறுகளை நாம் காண்கிறோம். அவற்றுள் முதலாவது நேரடி தேர்தல் முறை வகுப்புவாரி பிரதிநிதித்துவக் கோட்பாடு ஆகியவற்றை உட்புகுத்துவதாகும். 1906-இல் அரசியல் அமைப்பு முறையில் மாறுதல்களை ஏற்படுத்த முயற்சி மேற்கொள்ளப்படுகிறது என்று தெரிந்த உடனே முஸ்லிம்கள் சார்பில் ஒரு தூதுக்குழு மிண்டோ பிரபுவைச் சந்தித்து முஸ்லிம்கள் நலன்களைப் பேணும் வகையில் தனிப்பட்ட தொகுதிகளை அமைத்து முஸ்லிம்களுக்கு பிரதிநிதித்துவம் வழங்கவேண்டும் என்று அவரிடம் கோரினார்கள். வாக்காளர் தொகுதிகள் என்று, எந்த பொது நிறுவனங்கள் கருதப்படுமோ அவற்றில் எல்லாம் முஸ்லிம்களுடைய பிரதிநிதிகள் தகுந்தளவில் இல்லை என்பதனையும், முஸ்லிம்கள் பொதுவாக ஏழ்மை நிலையில் இருப்பதால் சொத்தின் அடிப்படையில் தயாரிக்கப்பெறும் வாக்காளர் பட்டியல்களில் முஸ்லிம்கள் போதிய அளவில் இடம்பெற முடியாது என்பதனையும் தங்களுடைய கோரிக்கைக்கு காரணங்களாகக் காட்டினார்கள். 1857ஆம் ஆண்டில் நடைபெற்ற கலகத்திற்குப் பிறகு முஸ்லிம்களிடம் அரசாங்கம் காட்டி வந்த மனப்பான்மை இப்பொழுது காட்டி வந்த மனப்பான்மையினின்றும் முற்றிலும் மாறுபட்டதாக இருந்தது. அதன் விளைவாக நிலம் படைத்த முஸ்லிம் வாக்காளர்களைக் கொண்ட ஆறு தனிப்பட்ட தொகுதிகள் ஏற்படுத்தப்பெற்றன. இவை மத்திய சட்டசபைக்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்தன. இதே போல் சில மாநிலங்களில் தனிப்பட்ட தொகுதிகள் அமைக்கப்பெற்றன. இந்திய சமுதாயத்தைச் சார்ந்த ஒரு முக்கியமான பிரிவினரின் கருத்துக்கு பிரதிநிதித்துவம் அளிப்பதற்காக கையாளப்பெற்ற ஒரு கருவியாக இதனைக் கருதலாம். அதே நேரத்தில் இது ஒரு பெரிய கருத்தினை உட்கொண்டிருந்தது. இதனின்றும் தான் பாகிஸ்தான் வளர்ச்சியுற்றது என்று நாம் கூறமுடியும்.

இரண்டாவது முக்கிய கூறு யாதெனில் இச் சட்டம் ஏற்படுத்திய மாறுதல்கள் அனைத்தும் பரிசோதனைக்குரியனவாகக் கருதப்பட்டனவேயன்றி முடிவானவை என்று கருதப்படவில்லை. எல்லா நிபந்தனைகளும் மீண்டும் ஆராயப்பெற்று மாற்றப்படுவதற்குரியனவாகக் கருதப்பெற்றன. அதன் விளைவாக பழைய தர்பார் முறை அதாவது அரசினரால் நியமிக்கப்பெற்ற உறுப்பினர்கள் தங்களுடைய யோசனையை மிக்க மரியாதையுடன் எடுத்துக் கூறும் முறை மீண்டும் ஏற்படுத்த வழி ஏற்பட்டது. அதே நேரத்தில் பொறுப்பாட்சி, தன்னாட்சி ஆகியவைகளும் ஏற்படுத்துவதற்கு அது வழி வகுத்தது என்பதையும் நாம் அறிய வேண்டும். அனுபவத்திலேயே நம்பிக்கை வைக்கும் முறையினை வற்புறுத்துவதன் வாயிலாக இச் சட்டம் மேல் நாட்டிற்குரிய பாதையில் இந்தியா முன்னேறுவது இயலாது என்று

கூறுபவரின் வாதங்களுக்கு ஏற்ற பதிலாக அமைந்து விட்டது. அதே நேரத்தில் மேல் நாட்டிற்குரிய பாதையில் இந்தியா வளர்ச்சி யுற்று வருவதனை இதுவரை வெறுத்து வந்த மக்கள் பிற்காலத்தில் முரண்பாடான கொள்கையுடையவர்கள் என்ற இழிச் சொல்லுக்கு இலக்கின்றி அத்தகைய முன்னேற்றத்தினை ஆதரிக்க, அதுவே பெரும் உதவியாக அமைந்தது. இச்சட்டம் மாகாணங்களில் பெருவாரியான உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமையினை வணிக சங்கங்கள், பல்கலைக்கழகங்கள், வட்ட ஆட்சிக்குழு, போன்ற நிறுவனங்களுக்கு அளித்தது. இவ்வாறாக இது தொழிலாளர் குழுவாட்சி முறையினை (சிண்டிகலிசம்) ஏறத்தாழ ஒத்திருக்கக்கூடிய ஒரு ஆட்சியினை ஏற்படுத்த அடிகோலியது. இதுவே இச் சட்டத்தின் மூன்றாவது சிறப்புக் கூறாகும். இந்த முறை நடைமுறைபடுத்தப் பெற்றிருப்பின் இந்தியாவில் தொழிற்சங்கத் தொடர்பு கொண்ட ஒரு அலாதியான அரசியலமைப்பு உருவாகி இருக்கும். ஆனால் சாதாரணமான பிரதி நிதித்துவக் கோட்பாட்டினிலே மக்கள் தளரா உறுதி கொண்டிருந்த மையால் அத்தகைய நிலை வளர இடமில்லாமல் போயிற்று.

மிண்டோ-மார்லி சீர்திருத்தங்களின் சாரம் என்று கூறப்படும் இந்திய கவுன்சில்கள் சட்டம் 1909-இல் நிறைவேற்றப்பட்டது. அநேக வழிகளில் அச்சட்டம் அக்காலத்திய எண்ணப் போக்குகளை விரிவு படுத்துவதாகவே அமைந்திருந்தது. பிற்காலத்தில் முதலாவது உலகப்போரின் விளைவாக இந்தியாவிலும், இங்கிலாந்திலும் பெரு மன மாற்றம் ஏற்பட்ட பொழுது, அச்சட்டத்தினை மிகச் சாதாரணமாகக் கருதுவது வழக்கமாயிற்று. மேலும் அது அளவு மீறிய பரபரப்பை உண்டு பண்ணியதாகவும் கருதப்பெற்றது. நிகழ்ச்சிகளின் சிறப்பினை அவை ஏற்பட்ட காலத்தின் சூழ்நிலைகளைக் கொண்டுதான் நாம் எடை போட வேண்டும். 1914ஆம் ஆண்டிற்கு முன்னர் ஒரு பர்லாங்கு தூரம் முன்னேறிச் செல்ல மேற்கொண்ட அதே முயற்சி பிற்காலத் தில் ஒரு மைல் தூரம் முன்னேறிச் செல்ல உதவி செய்திருக்கக்கூடும். இவ்வாறாக நாம் கவனிக்கும் போது இந்தியாவில் தன்னாட்சி முறை யினை ஏற்படுத்தும் வகையில் இச்சட்டம் பெரியதொரு திருப்பு முனையாக அமைந்துள்ளது என்பது தெளிவாகும். இந்திய சட்ட சபைகள் ஆலோசனை சபைகளாகவே இருக்க வேண்டும் என்ற அடிப்படைக் கொள்கையினை இச் சட்டம் முழுமையாக விட்டுவிட வில்லை என்பதும், தன் மனம் போல் செயற்பட்டு வந்த ஆட்சிக்குழு வின் அதிகாரங்கள் இச்சட்டத்தினால் பாதிக்கப்படவில்லை என்பதை மறுக்க இயலாது. இனி அத்தகைய கொள்கையினை கையாண்டு முன்னேற்றமடைய முடியாது என்பதையும் இனி வேறு புதிய அரசிய லமைப்புச் சார்ந்த கோட்பாடுகளை கையாளாமல் மேலும் முன்னேறு

வதென்பது இயலாது என்பதனையும் தெளிவு படுத்தியது. அத்தகைய முன்னேற்றத்தினை தவிர்க்கவும் இயலாது என்பதனையும் தெளிவாக்கியது, ஏனெனில் அத்தகைய முன்னேற்றத்தின் எடுத்துக்காட்டாக அச்சட்டம் அமைந்திருந்தது. கடந்த கால நிகழ்ச்சிகளினின்றும் வளர்ச்சியுற்ற பெருமை அதற்கு ஏற்பட்டிருந்தது. அதே நேரத்தில் வருங்காலத்தில் ஏற்பட இருக்கும் வளர்ச்சியினையும் அது குறித்துக் காட்டுவதாகவும் இருந்தது. உலகப் போர் நிகழாது இருப்பின் முன்னேற்றம் வெகு தாமதமாகவே ஏற்பட்டிருக்கும். மேலும் அடுத்த நடவடிக்கை வெகு தீவிரமாகவும் அமைந்திராது. ஆனால் முன்னேற்றம் நிச்சயம் ஏற்பட்டிருக்கும் என்பதில் ஐயமில்லை. இந்த வகையில் இச்சட்டத்தினை ஆங்கிலேயருக்கும் பிரஞ்சுக்காரர்களுக்கும் இடையே 1904ஆம் ஆண்டில் ஏற்பட்ட நட்புறவு ஒப்பந்தத்திற்கு ஒப்பிடலாம். ஒருவர் ஒரு குறிப்பிட்ட விவகாரத்தில் ஈடுபட வேண்டிய கட்டாயமின்றி மற்றொருவருடன் நட்புறவு ஒப்பந்தம் செய்துகொள்ள முடியும் என்ற கருத்தினை அடிப்படையாகக் கொண்டது 1904ஆம் ஆண்டின் நட்புறவு ஒப்பந்தமாகும். அதே போல இந்தியாவில் பொறுப்பாட்சி ஏற்படுவதற்கான வழி முறைகளை வெளிப்படையாக அறிவிக்கவில்லை என்றாலும், அத்தகைய வளர்ச்சி ஏற்படக்கூடிய நிலையினை அது மறைமுகமாக எடுத்துக்காட்டியது. இவ்விரு நிகழ்ச்சிகளின் உட்பொருளை ஆட்சியாளர்கள் வெகு நன்றாக அறிந்திருந்தும், அதனை பலமாக மறுத்து வந்தனர். மேலும் இவ்விரு விஷயங்களிலும், வாதமே வெறும் சொற்போரை விட பலமானது என்பது தெளிவாயிற்று.

மிண்டோ-மார்லி சீர்திருத்தங்களை நடைமுறைப்படுத்தும் பொறுப்பினை மிண்டோ பிரபுவிற்குப் பிறகு 1910ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் பதவியேற்ற ஹார்டிஞ்சு பிரபு மேற்கொண்டார். இந்திய அரசியல் தலைவர்கள் அச் சீர்திருத்தங்களை பொதுவாக வரவேற்றனர். 1907-இல் காங்கிரஸ் தீவிரவாதிகளை வெளியேற்றியது. எஞ்சிய காங்கிரஸ் தலைவர்கள் வகுப்பு பிரதிநிதித்துவ முறையினை சந்தேகக் கண்களுடன் காணத் தொடங்கினர். தேர்தலுக்கென பெரிய மக்கள் தொகுதிகள் அமைக்கப் பெறுததைக் கண்டு ஏமாற்றம் அடைந்தனர். பொறுப்புள்ள ஆட்சி ஏற்படுவதற்கு துணை செய்யும் என்ற கருத்தினை மார்லி பிரபு மறுத்து வந்த போதிலும், அம்மறுப்பினை காங்கிரஸ் தலைவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆனால் அவர்கள் எதிர்பார்த்ததைவிட அதிகமாகவே பலன் அடைந்தனர். தனிப்பட்ட முறையில் அதற்காக தங்களது நன்றியைத் தெரிவித்தனர். இந்தியாவின் எதிர்காலத்தில் முன்னைவிட இப்பொழுது அதிக நம்பிக்கை கொள்ளலாயினர். தன்னுடைய பொது நடவடிக்கைகள் மூலமாகவும்,

இந்திய பிரமுகர்களுடன், குறிப்பாக கோகலேயுடன், தனிப்பட்ட முறையிலே கொண்டிருந்த தொடர்புகள் மூலமாகவும், ஹார்டிஞ்சு அத்தகைய உணர்ச்சிகளை வெகு பாடுபட்டு உருவாக்கினர். உண்மையென்று ஒப்புக் கொள்ள இயலாத ஒரு வகையான நட்புறவு வளரலாயிற்று. அரசாங்கத்திற்கும் தேசியம் சார்ந்த எதிர் கட்சியினருக்கும் அப்பொழுது ஏற்பட்டிருந்த நல்லுறவு 1888ஆம் ஆண்டு முதல் 1937ஆம் ஆண்டு வரையுள்ள காலத்தில் வேறெப்பொழுதும் ஏற்பட்டிராத அளவில் முழுமையை அடைந்திருந்தது.

புதிதாக அரசுப் பொறுப்பேற்றிருந்த ஐந்தாம் ஜார்ஜ் மன்னருக்காக 1911ஆம் ஆண்டில் டில்லியில் ஒரு கொலுவிருக்கைக்கு ஹார்டிஞ்சு ஏற்பாடு செய்தார். அதுவே அவரது முதல் வேலையாகும். அதில் பேரரசரும் அவரது மனைவியாரும் கலந்து கொண்டு விழாவினைச் சிறப்பித்தனர். கொலுவிருக்கை காணத்தக்க சிறப்பான காட்சியாக அமைந்தது. அது மட்டுமன்றி நட்புறவை எடுத்துக் காட்டும் வகையிலும் அது பெரும் வெற்றி பெற்றது. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆதிக்கத்தின் உச்ச கட்டத்தை அது குறித்துக் காட்டியது. பகட்டு, கீர்த்தி ஆகியவை ஒரு புறமிருக்க, விழாவின் போது மூன்று முக்கிய சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. அவற்றுள் முதலாவது வங்காளம் கவர்னர் ஆளுகைக்குட்பட்ட மாநிலமாக அமைக்கப்பட்ட இரண்டாவது வங்காளப் பிரிவினையை ஒழித்தது. மூன்றாவது இந்தியாவின் தலைநகரத்தை டில்லிக்கு மாற்றியது. வங்காளத்தின் பரப்பு, சிறப்பு ஆகியவற்றைக் கொண்டு பார்க்குமிடத்து அது வெகு நாட்களுக்கு முன்னரே அந்நிலையை அடைந்திருக்க வேண்டும் என்று தோன்றும். தலைமை ஆட்சி கல்கத்தாவில் நடைபெற்று வந்தமையே அத்தகைய அறிவுக்குப் பொருத்தமான நடவடிக்கையினை இதுவரை மேற்கொள்ளுவதற்குத் தடையாக இருந்து வந்தது. தலைநகரம் டில்லிக்கு மாற்றியதால் அத்தகைய நடவடிக்கை மேற்கொள்ளுவதற்கு வழி ஏற்பட்டது. மேலும் நிருவாகத்தைப் பொறுத்தளவில் அது மிகவும் விரும்பத்தக்க செயலாகவும் கருதப் பெற்றது. நாட்டுப் பற்று கொண்ட வங்காளியர்களைத் திருப்திபடுத்துவதாகவும் அது அமைந்தது. அதுவன்றி வங்காளத்தின் பெருமை குறைந்து விட்டதே என்று வருந்தும் மக்களுக்கு ஆறுதல் அளிப்பதாகவும் அது அமைந்தது. அதை அடுத்து இரண்டு வங்காளங்களும் ஒன்றாக இணைக்கப் பட்டு ஒரு கவர்னர் ஆளுகைக்குட்பட்ட மாநிலமாக அமைக்கப் பெற்றன. அஸ்ஸாம் மீண்டும் தலைமை ஆணையாளர் ஆளுகைக்குட்படுத்தப் பெற்றது. பீகார், ஒரிசா, (சோட்டா நாகபுரி உட்பட) என்ற புதிய மாகாணம் ஒன்றும் ஏற்படுத்தப் பெற்றது. வங்காளியர்களின் அவா நிறைவேறியது. நிருவாகம் பொருத்தளவில் வங்காளம் தனித்தியங்கக் கூடியதாக

அமைந்தது. இதுவரை பின்தங்கிய நிலையில் இருந்து வந்த பீகார் மாகாணத்தின் முக்கிய பிரச்சனைகளை தெளிவாக எடுத்துக் காட்ட இந்நடவடிக்கை மிகவும் உதவியாயிருந்தது. இந்நடவடிக்கையைப் பற்றி கூறப்பெறும் ஒரே குறை யாதெனில் கிளர்ச்சிக்கு அளிக்கப் பெற்ற ஒரு சலுகையாக இது அமைந்திருந்தது என்பதே யாகும். அத்தகைய கொள்கையினை இடைவிடாது கையாண்டு வந்திருப்பின் ஆட்சி ஆதிக்க கொள்கையையுடைய ஒரு அரசாங்கம் என்றுமே எந்தவிதமான சலுகைகளையும் காட்ட முன் வந்திருக்க முடியாது. வெடிகள் நற்பயன்களைத் தோற்றுவிக்கின்றது என்று நம்ப வைக்கும் முறையிலே நாம் கூற முடியும். வெடிகள் நற்பயன்கள் உண்டாவதைத் தடுக்குமேயாயின் அதிக வெடிகளைத் தவிர வேறு என்ன அங்கே இருக்க முடியும்? நாம் கருத்தில் கொள்ள வேண்டியது என்னவெனில் இந்திய அரசாங்கம் பலம் பொருந்திய நிலையிலிருந்து நடவடிக்கைகளை மேற்கொண்டு வந்தது என்பதேயாகும். ஆகவே அதனுடைய நடவடிக்கைகளெல்லாம் அத்தகைய உணர்ச்சியுடன் தான் வரவேற்கப்பட்டன. மூன்றாவதாக நாம் குறிப்பிட்ட நடவடிக்கை வெகு இரகசியமாக நிறைவேற்றப்பட்டது. அந்த அளவு இரகசியமாக வேறெந்த நடவடிக்கையும் தற்காலத்தில் இந்தியாவில் மேற்கொள்ளப்படவில்லை என்று நாம் அறுதியிட்டு கூறமுடியும். கல்கத்தாவும், இங்கிலாந்தில் கர்சனும் மலைத்துப் போனார்கள் என்றே கூற வேண்டும். அவர்கள் அதனை மறக்கவும், அதற்காக மன்னிக்கவும் தயாராக இல்லை. ஆனால் இந்திய மக்களில் பெரும்பாலோர் பெரு மகிழ்ச்சி அடைந்தனர். இந்திய மக்களின் உணர்ச்சிகளை மதிக்கும் வகையிலே மேற்கொண்ட நடவடிக்கையாக இது அமைந்துவிட்டது. இந்த நடவடிக்கையினை ஆதரிக்கும் வகையில் வேறு பல முக்கிய வாதங்களும் உண்டு. பெண்டிங்கு பிரபு காலந்தொட்டு அவ்வப்போது தலைநகரத்தை உள்நாட்டுப் பகுதியில் உள்ள இடத்திற்கு மாற்ற வேண்டும் என்று யோசனைகள் கூறப்பட்டு வந்தன. பெண்டிங்கு மீரத்துக்கு மாற்றலாம் என்று கருதி வந்தார். கர்சன் பிரபு ராஞ்சிக்கு மாற்றலாம் என்று எண்ணமிட்டிருந்தார். இந்தியர்களின் நடவடிக்கைகள் நிகழும் இடங்கள் கல்கத்தாவினின்றும் வெகு தூரத்தில் இருந்தமையால் ஆண்டுதோறும் சில காலம் அவைகளை சரிவர கவனிக்க இயலவில்லை. ஆகவே சிம்லாவில் இந்திய அரசாங்கம் நடைபெற்று வந்தது. உண்மையைக் கூறப்போனால் அரசாங்கம் கல்கத்தாவைவிட சிம்லாவிலேதான் அதிக நாட்களை செலவிட்டு வந்தது. தலைநகரம் நாட்டின் நடுபாகத்தில் அமைக்க வேண்டும் என்ற வாதம் நாள் தோறும் வலுவடைந்து வந்தது. புதிதாக தலைநகரம் ஏற்படுத்த அதிகப் பணம் தேவைப்பட்டது. பெரும் தொகையினை செலவழிக்க முற்படும்போது காரியத்திற்கு பயன்படுகிற வசதிகள் நிறைந்த இடத்தைத் தேர்

தெடுத்தல் அவசியமாகத் தோன்றியது. அதோடு வரலாற்றுச் சிறப்பு மிக்க இடமாகவும் அது விளங்க வேண்டும் என்றும் கருதினர். இவை யனைத்தும் டில்லியில் ஒருங்கே இருக்கக் கண்டனர். டில்லியைச் சுற்றி பஞ்சாபும் எல்லைப்புற மாகாணமும் அமைந்திருந்தன. டில்லிக்கும் மொகலாயர்களுக்கும் இடையே பல தொடர்புகள் இருந்ததைக் கண் டனர். இணைப்பு வழிகளின் மையமாகவும் டில்லி விளங்கியது. சிம்லா குன்றுகளுக்கு வெகு அருகில் அது அமைந்திருந்தது. ஆகவே தலைநகரை டில்லிக்கு மாற்றும் முடிவு அக்கால சூழ்நிலைக்கு உகந்ததாக தோன்றியது. அத்தகைய முடிவிற்குக் காரணமாயிருந்தவர்கள் எதிர் பார்த்த அளவிற்கு மேலான சிறப்பு அம்முடிவின் வாயிலாக ஏற்பட் டது. அம்முடிவு புதிய இந்தியாவிற்கு சரி திட்டமான தலைநகரம் கிடைத்தது. பிரிட்டிஷ்காரர்கள் இதுவரை ஏற்படுத்தி இராத கல் கொண்டு அமைக்கப்பெற்ற நினைவுச் சின்னமாகவும் அது அமைந்தது.

முதலாவது உலகப் போர் நிகழுவதற்கு முன்னர் ஹார்டிஞ்சு பிரபு தனது காலத்தை மேற் குறிப்பிட்ட முடிவுகளை செயற்படுத்துவதில் செலவழித்து வந்தார். 1912–இல் தலைநகரம் மாற்றப்பட்டது. தலைநகரத்தின் வளர்ச்சியில் சர். மால்கம் ஹெய்லி முனைந்து ஈடுபட்டி ருந்தார். 1912–இல் கோகலே ஐலிங்டன் கமிஷனின் உறுப்பினராக நியமிக்கப்பட்டார். இதன் பயனாக காங்கிரசோடு கொண்டிருந்த நட்புறவு நீடித்தது. போர் காரணமாக கமிஷன் தனது அறிக்கை யினை 1917ஆம் ஆண்டு வரை வெளியிடவில்லை. ஆனால் உயர்ந்த பதவிகளில் உள்ள இந்தியர்களின் எண்ணிக்கை மிகக் குறைவாக உள்ளது என்பதனை அது தெளிவுபடுத்தியது மேலும் உரிமை நலக்கும் பலர் இனி எளிதாக தங்கள் எதிர்ப்பை தெரிவிக்க இயலவில்லை. அது மட்டுமன்றி மாறுதல்கள் செய்ய வேண்டிய அவசியத்தையும் எடுத்துக் காட்டியது. தென் ஆப்பிரிக்காவில் புதிதாக ஏற்படுத்தப்பெற்ற கூட்டு அரசாங்கத்திற்கும் காந்தியைத் தலைவராகக் கொண்ட தென்னாப்பிரிக்கா இந்தியர்களுக்கும் இடையே தகராறுகள் ஏற்பட்ட போது இந்தியர் களின் கட்சியை எடுத்தியம்ப கோகலே தென்னாபிரிக்காவிற்கு அனுப் பப்பெற்றார். 1913ஆம் ஆண்டு நவம்பர் மாதம் ஹார்டிஞ்சு தென்னாப் பிரிக்காவில் நிறைவேற்றப்பெற்ற கொடுமையும், அநீதியும் நிறைந்த சட்டங்களை எதிர்த்துப் போராடி வரும் இந்திய மக்களுக்கு இந்தியர் கள் அனுதாபம் மட்டுமன்றி அவரைப் போல் இந்தியாவை நேசிக்கும் அனைவருடைய ஆழ்ந்த அனுதாபமும் உண்டு என்று கூறி இந்தியா வில் ஒரு பெரும் பரபரப்பை உண்டாக்கினார். அது இங்கிலாந்தில் சிறிது சஞ்சலத்தை ஏற்படுத்தியது. ஆனால் அது மக்கள் செல்வாக்கைப் பெருமளவில் பெற்றிருந்ததால் அதனை மறுக்க யாரும் முன்வரவில்லை

தென்னுப்பிரிக்கா அரசாங்கம் இந்தியர்களின் குறையை ஓரளவு போக்க நடவடிக்கை மேற்கொள்ளுதற்கு அது உதவியது. தென்னுப்பிரிக்க இந்தியர்களின் நிலையைப் பற்றிய பிரச்சனைக்கு ஒரு முடிவு காண இயலவில்லை என்ருலும் அப் பிரச்சனையை சுமார் பத்து ஆண்டுகளாவது தள்ளிப்போட அது உதவியது.

இவ்வாருக முதலாவது உலகப் போருக்கு முன்னர் இந்தியா தன்னம்பிக்கையுடன் அரசியல், பொருளாதாரம் ஆகிய துறைகளில் முன்னேறிச் சென்றுக் கொண்டிருந்தது. மக்கள் வாழ்க்கை வளம் பெருகியது. அரசினருக்கும் மக்கள் தலைவர்களுக்கும் இடையே ஏற்பட்டிருந்த நம்பிக்கை வளர்ந்து கொண்டே வந்தது.

# 3. முதலாவது உலகப் போரும் மாண்ட்போர்டு சீர்திருத்தங்களும் 1914 - 1921

## முதலாவது உலகப் போரும் அதற்குப் பின்னரும் 1914-1921

முதலாவது உலகப் போர் என்ற நுழைவாயில் வழியாக இந்தியா தற்கால உலகம் என்கிற அரங்கில் நுழைந்தது. உலகப் போரை நுழைவாயிலுக்கும், தற்கால உலகத்தினை அரங்கத்திற்கும் ஒப்பிடும் போது விக்டோரியா காலத்து இந்தியாவை நீண்ட பொது அறைக்கும், எட்வர்டு காலத்து இந்தியாவை அரங்கத்தையும், பொது அறையையும் இணைக்கும் தாழ்வாரத்திற்கும் ஒப்பிடலாம். இந்தியாவில் ஏறக்குறைய ஐம்பத்தாறு ஆண்டுகள் அமைதி நிலவி வந்திருந்தது. இந்தியர்கள் ஐரோப்பாவை பிரிட்டனுக்கு பக்கத்திலுள்ள நிலப் பகுதியாகக் கருதி வந்தனர். பிரிட்டன் தான் எல்லா முக்கியமான நிகழ்ச்சிகளின் பிறப்பிடம் என்றும் கருதினர். கடந்த சில ஆண்டுகளாக பல கிளர்ச்சிகள் ஏற்பட்டிருப்பினும், இந்தியா இன்னும் குடியேற்ற நாட்டின் நிலையில் தான் இருந்தது. குடியேற்ற மனோநிலையும் தொடர்ந்து இருந்து வந்தது. உலகப் போர் தொடங்கிய பொழுது ஒருவித பரபரப்பு ஏற்பட்டது. ஆனால் அப்பரபரப்பு அவ்வளவு பரவலாக இருக்கவில்லை. ஐரோப்பாவில் ஏற்பட்ட கொந்தளிப்பில் இந்தியாவும் சிக்கியுள்ளது என்ற உணர்வு பரவுவதற்கு சில காலம் பிடித்தது.

1914ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் ஐரோப்பாவில் போர் தொடங்கிய போது அரசியல்வாதிகளும், இந்திய அரசர்களும் தங்களுடைய அரசப்பற்றை வெளிப்படுத்த வேண்டிய அவசியத்தை உணர்ந்தனர். அனைவரும் போர் வெகு சீக்கிரமே முடிந்துவிடும் என்று எண்ணினார்கள். மேலும் பிரிட்டன் போரில் வெற்றியுறுவது திண்ணம் என்றும்

கருதினர். இந்திய அரசர்களுக்கு தங்களுடைய போர்த்திறனை காட்டு தற்கு ஏற்பட்ட ஒரு வாய்ப்பமாக அதனைக் கருதினர். மக்கள் தலைவர் களோ இந்தியர்களின் போர்ச்சேவை வீண் போகாது என்றும், போருக்குப் பிறகு தகுந்த வெகுமதி கிடைக்கும் என்றும் கருதினார்கள். அக்காலத்தில் அரசாங்கத்தின்பால் மக்கள் கொண்டிருந்த நல்லெண் ணத்தையும் இதுவரை பிரிட்டிஷ் அரசினர் சேர்த்துவந்த செல்வாக்கை யும் ஹார்டிஞ்சு பிரபு மிக்க பலன் தரத்தக்க வழியிலே பயன்படுத்திக் கொண்டார். பொதுவாக மக்கள் அரசாங்கத்திற்கு சங்கடம் விளைவிக் கும் நடவடிக்கைகளை நிறுத்திக் கொண்டனர். போர் நடவடிக்கை களுக்கு தங்களது ஆதரவை பெருவாரியாக அளித்தனர். இத்தகைய நல்லெண்ணச் சூழ்நிலையில் அரசினர் போர் சேவைக்காக 1,200,000 ஆட்களைத் திரட்டினர். அவர்களுள் 800,000 பேர் போர் வீரர்களாவர். போர்ச் செலவிற்காக பத்து கோடி பவுன்கள் வழங்கப்பெற்றன. ஆண்டு தோறும் சுமார் இரண்டு முதல் மூன்று கோடி பவுன்கள் வரை இந்தியா பிரிட்டனுக்கு அளித்து வந்தது. பிரிட்டிஷ் அதிகாரிகள், இராணுவத்தினர் அநேகர் இந்தியாவை விட்டு அகன்றனர். ஒரு நேரத்தில் இந்தியாவில் 1500 பிரிட்டிஷ் போர் வீரர்கள் மட்டுமே இருந்தனர். 1914ஆம் ஆண்டில் இந்திய இராணுவப் படை ஒன்றினை பிரான்சுக்கு அனுப்பினர். பின்னர் கிழக்கு ஆப்பிரிக்கா, எகிப்து, பாரசீகக்குடா ஆகிய இடங்களுக்கும் அனுப்பினர் அச்செயல் இந்திய தேசிய பெருமை உணர்ச்சியினை பெரிதும் தூண்டிவிட்டது.

போர் எதிர்பார்த்ததைப் போல ஆறே மாதங்களில் முடிவுற்று இருந்தால் அரசாங்கம் மிக்க பலத்துடன் வெளி வந்திருக்கும். ஆண்டு தோறும் அது நீடித்துக் கொண்டே போனதாலும், மேலும் மேலும் போர் கடுமையாக நடைபெற்று வந்ததாலும், வெற்றி அடைதல் சந்தேகமாகத் தோன்றியதாலும், போரைப் பற்றிய கருத்து மாறத் தொடங்கியது. 1915-இல் ருஷ்யாவின் வீழ்ச்சி போர் விரைவில் முடிவுறும் என்ற நம்பிக்கையைத் தகர்த்து விட்டது. ஆர்வமும் குறைந்தது. பொறுமையின்மை வளர்ந்தது. பொருளாதார நெருக் கடிகள் வெறுப்பையும் மனக் கசப்பையும் வளர்த்தன. துருக்கியின் மீது மேற்கொண்ட போர் நடவடிக்கை முஸ்லிம்களின் ஆர்வத்தைக் குறைத்து விட்டது ஏனெனில் அவர்கள் இன்னும் துருக்கி சுல்தானை தங்களது கலிபாவாக எண்ணிவந்தனர். 1916ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் ஈராக்கிலுள்ள குட். எல். அமாரா என்னுமிடம் வீழ்ந்தது. அதைத் தொடர்ந்து ஏற்பட்ட நிருவாக ஊழல்கள் விரைவில் வெளிப் படுத்தப்பெற்றன. இதுவரை பலமிக்கதென்றும் திறமையானதென் றும் கருதப்பெற்று வந்த அரசாங்கத்தின் மதிப்பு இவ்விரு நிகழ்ச்சிகளி னால் வெகுவாக பாதிக்கப்பெற்றது. போர் தொடங்கி இரண்டு

ஆண்டுகள் முடிவதற்கு முன்னரே இந்திய மக்களின் மனப்பாங்கு மாறுபடலாயிற்று. ஆர்வம் மறைந்தது. பொறுமையின்மை அதிகரித்தது. அமைதியின்மை ஏற்பட்டது. மாறுதலை எதிர்நோக்கி காத்திருந்தனர். பழைய உலகம் சிதறிக் கிடப்பதைக் கண்டனர். பிரிட்டன்மிகப்பலம்பொருந்திய நாடென்னும் கருத்து மறையலாயிற்று. அதுவே மதி பொருந்திய நாடு என்னும் கருத்தும் அழிவுற்றது. அவநம்பிக்கை தட்டியெழுப்பப் பெற்றது. தற்காலிகமாக ஏற்பட்டிருந்த ஆர்வ மனப்பான்மை துண்டிக்கப்பெற்றது. உணவுப் பொருட்களின் விலை ஏற்றத்திற்குக் காரணமான பொருளாதார நெருக்கடிகளும், பஞ்சாப், மேற்கு இந்தியா ஆகிய இடங்களில் படைக்கு ஆட்களைச் சேகரிப்பதில் அரசினரின் கையாட்கள் காட்டி வந்த மிகைப்படியான ஆர்வமும், 1918ஆம் ஆண்டில் ஐம்பது இலட்சம் மக்களின் உயிரைக் குடித்த விஷக் காய்ச்சலும் மேற்குறிப்பிட்ட மனப்போக்குகளை வளர்ச்சியுறச் செய்தன. போர் முடிவதற்கு முன்பே பிரிட்டனில் ஏற்பட்டது போல இந்தியாவிலும் சோர்வும், அமைதியின்மையும், எரிச்சலும் நிறைந்திருந்தன.

1915-இல் பஞ்சாபில் உருவாக்கப்பெற்ற 'கதர்' (Ghadar) சதித் திட்டமும், வங்காளத்தில் புதுப்பிக்கப்பெற்ற புரட்சி நடவடிக்கையும் அப்பொழுது ஏற்பட்டிருந்த வெறுப்பின் அடையாளமாகக் கருதப்பெற்றன. அதனுடைய தலைவரான ஹார் தயால் பெர்லினுக்குச் சென்றார். காபூலிலிருந்து முஸ்லிம் கிளர்ச்சி ஒன்றை ஏற்படுத்த முயன்றார். ஆனால் அவருடைய முயற்சிகளுக்கு பெரும் ஆதரவு கிடைக்கவில்லை. அவை தொந்திரவு தரத்தக்கனவாக இருந்தனவேயன்றி அபாயகரமானவைகளாகத் தோன்றவில்லை. அரசியலமைப்புப் பற்றிய வகையில் துரிதமான முன்னேற்றங்கள் ஏற்பட்டன. அம் முன்னேற்றங்கள் சிறப்புடையனவாகவும் இருந்தன. போர் நடைபெற்று வரும்பொழுதே பிரிட்டன், இந்தியா ஆகிய இரு நாடுகளிலும் எல்லா கட்சியினர்களும் முன்போலவே எதுவும் இருக்க முடியாது என்பதனை உணர்ந்திருந்தனர். 1914-இல் பிரிட்டிஷ் பிரதமர் ஆஸ்க்வித் பின்வருமாறு குறிப்பிட்டார்: 'இனி இந்தியப் பிரச்சனைகளை அணுகும் விதம் முன்பு கையாளப்பட்டு வந்ததைவிட மாறுபட்டு இருக்க வேண்டும்' சம்பந்தப்பட்ட எல்லா கட்சியினர்களும் இப்பொழுது நிகழ்ச்சிப் போக்கின் வேகம் அதிகரித்து விட்டது என்பதை உணர்ந்திருந்தனர். ஆனால் அப்புது வேகத்தைப் பற்றியக் கருத்து எல்லோரிடமும் ஒரே மாதிரியாக இருக்கவில்லை. அதுவே அப்பொழுது ஏற்பட்டிருந்த பெரிய தீங்காகும். அனைவருமே ஒரே இடத்திலிருந்து ஆட்டத்தைத் தொடங்குவதாகத் தோன்றியது. ஆனால் அவர்களுக்குள் கால எல்லையைப் பற்றிய விஷயத்தில்

ஒற்றுமை கிடையாது. அந்த வகையில் அவர்களுக்குள்ளே இசைவு ஏற்படாத காரணத்தால் மோதல் ஏற்பட்டது. அம் மோதல் ஒருவருக்கொருவர் குற்றம் சாட்டும் நிலையினில் அவர்களைக் கொண்டு நிறுத்தியது. இத்தகைய சூழ்நிலையில் ஒவ்வொருவரும் மற்றவர்களிடமிருந்து தம்மையுமறியாமல் சில பாடங்களைக் கற்றுக் கொண்டனர். பிரிட்டிஷ்காரர்கள் இந்தியரிடமிருந்தும், இந்தியர்கள் பிரிட்டிஷ்காரர்களிடமிருந்தும், முஸ்லிம்கள் இந்துக்களிடமிருந்தும் இந்துக்கள் முஸ்லிம்களிடமிருந்தும் பாடங்களைக் கற்றுக் கொண்டனர். ஆனால் அதற்காக நன்றி கூறுதல் என்பது மிக அரிதாக இருந்தது. நிகழ்ச்சிகளை நாம் பின்னோக்கி கவனிக்குமிடத்து எல்லாக் கட்சியினரும் பழைய நிலையினை எத்துணை பிடிவாதத்துடன் பற்றியிருந்தனர் என்பதைவிட புதிதாக ஏற்பட்டிருந்த சூழ்நிலைக் கேற்றவாறு எத்துணை வேகத்துடன் தங்களை மாற்றியமைத்துக் கொண்டனர் என்பதைத்தான் நாம் மிகச் சிறப்பாகக் குறிப்பிட்டுக் கூற வேண்டும்.

பிரிட்டிஷ் அரசினர் போர் முடியும் வரை எல்லாவித ஆக்க விளைவுள்ள நடவடிக்கைகளை ஒத்திப்போட வேண்டும் என்று எண்ணமிட்டு வந்தனர். ஆனால் போர் நீடித்து வருவதாலும், வெற்றி பெறுவது உறுதி எனக் கூற இயலாததாலும், இந்தியர்கள் ஐரோப்பாவிலும், மத்திய கிழக்கிலும் பெரு முயற்சியுடன் போரிட்டு வந்தமையாலும், இந்தியப் பிரச்சனைகளுக்குத் தீர்வு காணும் முயற்சியினை ஒத்திப்போடுதல் கடினமாகத் தோன்றியது. இதன் விளைவாக இந்தியத் தொழிலாளிகள் கட்டுப்பாட்டு ஒப்பந்தம் செய்த பிறகு பிற இடங்களில் சென்று குடியேற அனுமதிக்கும் முறை ஒழிக்கப்பட்டது. பருத்தியின் மேல் சுமத்தப்பெற்ற இறக்குமதி வரிகள் அதிகரிக்கப் பெற்றன. அதே நேரத்தில் அந்த அதிகரிப்பை எதிரீடு செய்யும் வகையில் பருத்தியின் மேல் சுமத்தப்பெற்ற உள்நாட்டு தீர்வை அதிகரிக்கப்படவில்லை. இவ்விரு நடவடிக்கைகளும் யாருமே கவனிக்க முடியாத வகையில் மேற்கொள்ளப்பட்டன. 1917ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் பிரிட்டிஷ் கூட்டு அரசாங்கம் ஒரு பெரும் நடவடிக்கை மேற்கொண்டது. அதுவே அடுத்து முப்பது ஆண்டுகளில் ஏற்பட்ட வளர்ச்சிகளின் துவக்கமாக அமைந்தது. புதிதாக இந்திய அமைச்சராகப் பொறுப்பேற்ற எட்வின் மாண்டேகு இங்கிலாந்து மக்கள் சபையில் வெளியிட்ட அறிக்கையின் உருவத்தில் அது வெளிப்பட்டது. பிரிட்டிஷ் அரசினருடைய கொள்கையின் குறிக்கோள் பின்வருமாறு வரையறுத்துக் கூறப்பெற்றது. நிருவாகத்தின் ஒவ்வொரு பிரிவிலும் இந்தியர்களை அதிகளவில் பங்குபெறச் செய்தும் தன்னாட்சியைச் சார்ந்த நிறுவனங்களை சிறிது சிறிதாக வளர்த்தும் இந்தியாவில் பொறுப்பாட்சியை படிப்படியாக ஏற்படுத்த வேண்டும் என்பதே

பிரிட்டிஷ் அரசினருடைய கொள்கையாகும். அதே நேரத்தில் இந்தியா பிரிட்டிஷ் பேரரசின் ஒரு பகுதியாக இருந்துவர வேண்டும் என்றும் அறிவிக்கப்பட்டது. இக் கொள்கைக்கு இந்திய அரசின் உடன்பாடு இருப்பதாகவும் கூறப்பட்டது. இவ்வறிக்கையின் முதல் பூர்வாங்க வரிவினை தயாரித்தவர் கன்சர்வேடிவ் கட்சியைச் சார்ந்த ஆஸ்டென் சேம்பர்லேன் ஆவார். கர்சன் பிரபு அதற்கு இறுதி வடிவத்தை அளித்தார்.

இந்தியர்களை அதிகப்படியாக நிருவாகத்தில் சேர்த்துக் கொள்வதற்கும், பொறுப்பாட்சி அமைப்பதற்கும் ஏற்ற நிபந்தனைகள் சில சேர்த்துக் கொள்ளப்பட்டன. அவற்றுள் ஒன்று முன்னேற்றம் படிப் படியாக அமைய வேண்டும் என்பது. மற்றொன்று இந்தியர்களுடைய ஒத்துழைப்பு பொறுப்புணர்ச்சி, ஆகியவற்றின் அளவிற்கு ஏற்ப ஒவ்வொரு முன்னேற்ற நடவடிக்கையின் தன்மை, அதை மேற்கொள்ள வேண்டிய காலம் ஆகியவற்றைப் பற்றிய முடிவுகளை மேற்கொள்ளும் பொறுப்பு இந்திய அரசு, பிரிட்டிஷ் அரசு ஆகியவற்றைச் சார்ந்ததாக இருக்க வேண்டும் என்பது. இந்த நிபந்தனைகள் காலத்திற்கொவ்வாத நிபந்தனைகளாகத் தோன்றினாலும், இந்த அறிக்கையினை திருப்புக் கட்டத்தை உண்டுபண்ணும் சாசனமாகக் கருத வேண்டும். ஏனெனில் இந்தியாவில் பொறுப்புள்ள தன்னாட்சியினை ஏற்படுத்துவது தனது நோக்கம் என்பதனை பிரிட்டிஷ் அரசு அதிகார பூர்வமாக இப்பொழுது தான் அறிவித்தது. மேலும் அந்த குறிக்கோள் வேறு, டொமினியன் அந்தஸ்து வேறு என்ற கருத்திற்கு அது இடமளிக்கவில்லை. அடுத்த நடவடிக்கை தன்னாட்சியினை நோக்கிச் செல்லும் பிரயாணத்தின் முதல் பகுதியைப் பற்றியதாகும். 1917–18ஆம் ஆண்டுகளில் இந்திய அமைச்சர் இந்தியாவில் சுற்றுப் பிரயாணம் மேற்கொண்டார். 1918ஆம் ஆண்டு ஜூலை மாதம் வைசிராயுடன் சேர்ந்து மாண்டேகு சேம்ஸ் போர்டு அறிக்கையினை வெளியிட்டார். அப்போது போர் நெருக்கடி உச்சகட்டத்தை அடைந்திருந்தது என்பதை ஈண்டு குறிப்பிடுதல் வேண்டும். அவ்வறிக்கையின் பாணி தத்துவ ரீதியாக வும், அதனுடைய தொனி செயற்கையாகவும் அமைந்திருந்தது. அதனுடைய நுணுக்கமான திட்டங்களை அதனுடைய பொது வாசகங் களுடன் ஒப்பிடும்போது முன்னையவை பிடிபடாதனவாகத் தோன்றும். ஆகவே தான் பொது வாசகங்களை மிக முக்கியமானவையாகக் கருதி னோம். அறிக்கையின் திட்டங்களுள் அதிகமான விவாதத்திற்குட் படுத்தப்பெற்ற திட்டத்துடன் ஒரு முன்னறிவிப்பு இணைக்கப்பட்டி ருந்தது. 'இதுவரை இந்தியா அடைந்துள்ள நிலையினை விட பேரரசுக் குட்பட்ட தேசியத் தன்மை பொருந்திய நிலை மேலானது என்றும்; இந்திய மக்கள் கொண்டுள்ள இரக்கம் தூண்டுகிற அமைதி வாய்ந்த

மனநிறைவு என்கிற மண் இந்திய தேசிய உணர்ச்சி வளர்வதற்கேற்றது அல்ல என்றும்; அதனை திட்டமிட்டு குலைப்பதினால் நாம் இந்தியாவிற்கு பெரு நன்மையைத் தர முடியும் என்றும் நாம் நம்புகிறோம்.[1] அதன் பிறகு 'ஓட்டு வேலைகள் ஆகியவற்றைப் பற்றிய குழு' (Franchise and Functions Committee) ஒன்று இந்தியாவில் 1918–இல் சுற்றுப் பிரயாணம் மேற்கொண்டது. 1919ஆம் ஆண்டின் பெரும் பகுதியை பிரிட்டிஷ் பார்லிமெண்டு அம்மசோதாவை பரிசீலனை செய்வதில் கழித்தது. அவ்வாண்டு டிசம்பர் மாதம் சீர்திருத்தங்கள் சட்டமாக நிறைவேற்றப்பட்டன. 1920ஆம் ஆண்டு நிருவாகத் துறையில் செய்ய வேண்டிய நடவடிக்கைகள் மேற்கொள்ளுவதிலும் தேர்தல்கள் நடத்துவதிலும் செலவழிக்கப்பட்டது. ஆகவே புதிய அரசியல் திட்டத்தை 1921ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்திற்கு முன்னர் செயற்முறைபடுத்த இயலவில்லை. திட்டத்தை தொடங்கி வைக்கும் பணி கன்னாட் பிரபுவிற்கு அளிக்கப்பட்டது. புதிய திட்டத்தின் முக்கிய கூறுகள் இந்த அத்தியாயத்தின் இறுதியில் விளக்கப்பெற்றுள்ளன. இவ்விடத்தில் சிலவற்றை மட்டும் கூறினால் போதுமானது. இச்சட்டம் சட்டசபைகளைப் பெரிதாக்கியது, பொது தொகுதிகளை ஏற்படுத்தியது. தனி மனிதனுக்கு வாக்குரிமை அளித்தது. மாநிலங்களுக்கு தனித்தியங்கும் அதிகாரங்களை வழங்கியது. இவ்வதிகாரங்கள் மத்திய அரசினிடமிருந்து மாநில அரசினுக்கு மாற்றப்பட்டன. இரட்டையாட்சி என்ற திட்டத்தின் வாயிலாக மாநிலத்தில் செயற் குழுவைப் பொறுத்தளவில் பொறுப்பாட்சிக் கொள்கையைப் புகுத்தியது.

இச் சட்டம் நிறை வேற்றும் பொழுது காட்டப் பெற்ற நிதானம் இந்திய அரசாங்க நடைமுறையில் காணப் பெறும் மெல்லமைவான முன்னேற்றத்தின் சிறந்த எடுத்துக் காட்டாகும். இந்த சட்டம் இயற்றும் போது காட்டப் பெற்ற நிதானத்திற்கு சில காரணங்கள் உண்டு. மேற் கொள்ள வேண்டிய நடவடிக்கை மிகவும் முக்கியமானது. சட்டத்தினை நிறை வேற்றுதற்கு முன்னர் கலந்து பேச வேண்டிய அவசியம் தோன்றியிருந்தது. நிருவாகத்துறையில் சில முன்னேற்பாடுகள் செய்ய வேண்டியதாக இருந்தன. பார்லிமெண்டு முறையின் விதி முறைகளை அனுசரிக்க வேண்டிய நிலையும் தாமதத்திற்கு காரணமாக அமைந்திருந்தது. எனினும் போரின் இறுதி நாட்களிலும், போருக்கும் பின்னரும் ஏற்பட்டிருந்த மாறுபடுகிற சூழ்நிலையில் அத்தகைய நிதானம் ஆபத்தை விளைவிக்கக் கூடியதாயும், நலங் கெட்டதாகவும் காணப்பட்டது. எல்லோருடைய ஒப்புதலைப் பெறுவதற்கு நடந்தப் பெற்ற அவசியமான பேச்சு வார்த்தைகள் வேண்டுமென்றே [illegible]

[1] இந்தியா அரசியலமைப்பு சீர்திருத்த அறிக்கை (பக். 180.)

தாழ்த்த மேற்கொள்ளப் பட்டவை என இந்தியருள் பலர் கருதினர். அத்தகைய தாமதத்தினுல் ஏற்பட்ட மன அலைவு வேருெரு காரணத்தினுல் அதிகரித்தது. இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் நிருவாகிகளின் எண்ணப் போக்கின் வேகம் இலண்டனிலுள்ள அதிகாரிகளின் எண்ணப்போக்கை விட குறைந்த அளவில் இருந்தது. மேலும் அது இந்திய பொது மக்களின் எண்ணப்போக்கின் வேகத்தை விட மிகக் குறைந்த அளவில் இருந்தது. பழைய பெருமைகளை விட்டு விட அவர்கள் காட்டிய விருப்பமின்மையை பலமான எதிர்ப்பு என்று தவறுதலாகக் கருதினர். புது மாறுதல்களிலும் பயிற்சி பெருத அலுவலர்களிடத்திலும் அவர் காட்டிய அவநம்பிக்கையினை அவமதிப்பாக எடுத்துக் கொண்டனர். அவர்கள் அறிவுரை வழங்கியபோதும், வரவிருக்கும் தீமையினை எடுத்துரைத்த போதும், அவர்கள் நாச வேலையில் ஈடுபட்டிருப்பதாகக் கருதப்பெற்றனர். மேலும் இந்திய ஆட்சியாளர்களும் இங்கிலாந்து அரசினரும் மாறுபட்ட குறிப்புகளைக் கொண்டு பேசுவதாக அடிக்கடி தோன்றியது. இத்துடன் விஷக் காய்ச்சல், பொருளாதார நெருக்கடி, திடீரென ஆயிரக் கணக்கான மக்கள் வெளி நாடுகளிலிருந்து திரும்பியதால் நாட்டுப்புறங்களில் ஏற்பட்ட குழப்பம் ஆகியவைகளினுல் சமுதாயத்தில் ஏற்பட்டிருந்த இன்னல்களைச் சேர்த்து காணும் போது, 1916 முதல் 1919 வரை இந்திய பொது மக்கள் கருத்தில் ஏற்பட்ட பெரு மாற்றத்தினை நாம் எளிதில் புரிந்து கொள்ள முடியும்.

இனி இந்திய அரசியல் நிலையைப் பற்றி நாம் கவனிப்போம். 1900-இல் இந்திய தேசியக் கோட்பாடு நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்த அறிவாற்றல் உள்ளவர்களிடமே தழைத்திருந்தது. இன்னும் அது ஒரு முகப்படுத்தப் பெற்ற அரசியல் இயக்கமாக மாற்றப்படவில்லை. இந்திய தேசிய காங்கிரஸ் கருத்து பரப்பும் சங்கமாக இருந்ததேயொழிய ஒழுங்கு முறையுடன் கூடிய அரசியல் கட்சியாக செயற்படவில்லை. அதனுடைய தலைவர்களான, கோகலே, திலகர், சுரேந்திரநாத் பானர்ஜி, சத்தியேந்திர சின்ஹா, பிரோஷா மேதா போன்ருேர் சிறந்த போர்த் தலைவர்கள் நிலையை அடைந்தனர். ஆயினும் அவர்கள் அனைவரும் படையற்ற போர்த் தலைவர்களாகவே இருந்தனர். காங்கிரஸ் வளர்ச்சியில் காணப்பெறும் அடுத்த முன்னேற்றப் படிக்கு பெருங் காரணமாக விளங்கியவர் கர்சன் பிரபு ஆவார். அதற்காக காங்கிரஸ் அவருக்கு மிகவும் கடமைப் பட்டுள்ளது. 1903-இல் அவர் கல்வித் துறை பற்றிய நடவடிக்கை நடுத்தர மக்கள் பெரிதாக மதித்து வந்த தனி நலனைப் பாதிக்கக் கூடியதாக அமைந்திருந்தது. அவரது வங்காளப் பிரிவினை நடவடிக்கை வங்காளியர்களின் உணர்ச்சிகளைத் தூண்டியதோடல்லாமல், படித்த இந்திய மக்களின் பரிவிரக்கத்தையும்

தூண்டியது. அப்பொழுது ஏற்பட்டிருந்த ருஷிய-ஜப்பான் போர்ப் பின்னணியில் வைக்கப்பெற்ற இவ்விரண்டு பிரச்சனைகள் புதிய வகுப்பினரை ஒன்று சேர்த்து அவ்வகுப்பினரிடையே ஒரு புதிய ஒற்றுமையுணர்ச்சியினையும், அவர்களுக்கு ஒரு பொதுவான குறிக்கோளையும் ஏற்படுத்தி தர பெரிதும் உதவின. வங்காளத்தில் பெரும் ஆர்ப்பாட்டங்கள் நடத்தப்பெற்றன. அந்நிய துணிமணிகள் கொளுத்தப்பெற்றன. சுதேசி இயக்கம் தொடங்கியது. இவை அனைத்தும் பாமர மக்களிடம் மன எழுச்சி ஏற்பட உதவின. வேறு இடங்களில் நடுத்தர மக்களின் தன்னுற்றல் உணர்வினையும், ஆர்வத்தினையும் பெருக்க உதவின. அழிந்து வரும் நிறுவனமொன்றின் சவ அடக்கத்திற்கு ஏற்பாடு செய்வதற்குப் பதிலாகக் கர்சன் பிரபு தன்னுடைய நடவடிக்கைகளின் வாயிலாக தேசியவாதிகளின் சங்கம் ஒன்றினை இயல் ஆற்றல் நிறைந்த அரசியல் கட்சியாக மாற்றிவிட்டார். 1905ஆம் ஆண்டிற்குள் காங்கிரஸ் இந்திய நடுத்தர மக்கள் அனைவரையுமே கவர்ந்து விட்டது. இந்திய அரசியலின் முக்கிய உறுப்பாகவும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. ஆனால் வங்காளத்தைத் தவிர ஏனைய இடங்களில் அது தன்னுடைய செல்வாக்கினை பாமர மக்களிடம் இன்னும் ஏற்படுத்தவில்லை. வெகு சிலரின் விளையாட்டுக் கருவி என்றும் குருட்டுக் கோட்பாடுடைய நிறுவனம் என்றும் இன்னும் அதனை சிறுமை படுத்திக் கூற முடியும்.

எட்வர்டு காலத்தில் காங்கிரசு தன்னைத் தோற்றுவித்த வகுப்பினரோடு மட்டுமே இணைக்கப்பட்டிருந்த போதிலும், அது வேகமாக வளர்ச்சி அடைந்து வந்தது என்பதை மறுக்க இயலாது. அதனுடைய தலைவர்களின் தனி மேம்பாடும், அதனுடைய முடிவுகளில் காணப்பெறும் நிதானமும், பிரிட்டனிலும், இந்தியாவிலும் ஏற்பட்டிருந்த புதிய அரசுகள் அதனுடைய முக்கியத்துவத்தை உணர்ந்திருந்த நிலையும் அதனுடைய வேகமான வளர்ச்சிக்குக் காரணங்களாகக் காட்டலாம். எல்லா தேசிய இயக்கங்களில் சாதாரணமாக ஏற்படும் மாறுதல் இந்திய காங்கிரசிலும் இப்பொழுது ஏற்பட்டது தீவிர வாதிகளுக்கும் மிதவாதிகளுக்கும் இடையே மனத்தாங்கல் ஏற்பட்டது. புரட்சிக் கருத்துடைய ஒரு சிலர் முன்னரே காங்கிரசினின்றும் விலகி விட்டனர். எஞ்சி யிருப்பவர்கள் இடது சாரியினர் அல்லது தீவிர வாதிகளும் வலது சாரியினர் அல்லது மிதவாதிகளும் ஆவார்கள். பி. ஜி. திலகர் இடது சாரியினருடைய தலைவர். இடது சாரிகள் அரசாங்கத்திற்கு இணங்கிப் போகாமல் அதனை எதிர்க்கும் கொள்கையினை தொடர்ந்து கைப்பற்ற விரும்பினார்கள். பலாத்கார நடவடிக்கையைக் கையாளுவதில் வெறுப்பு கொள்ளவில்லை. மிதவாதிகள் ஒப்புக் கொள்ளப்பட்ட முற்போக்குக் கொள்கையினை கடைபிடித்தனர். பிரிட்டிஷ் அதிகாரிகளை வெறுத்த போதிலும் இந்தியாவின் எதிர்கால வாய்ப்பு வளம் பிரிட்டிஷ் நிறுவனங்

களைச் சார்ந்து இருப்பதாக நம்பினர். மிதமான போராட்டத்தையும், பிரிட்டிஷ் அரசினுடன் ஒத்துழைப்பையும் வற்புறுத்தி வந்தனர். 1908-இல் கனடா பெற்றிருந்த தன்னாட்சியுடன் கூடிய குடியேற்ற நிலையினை காங்கிரசு தனது குறிக்கோளாக ஏற்றுக் கொண்டது. அந்த முடிவு காங்கிரசு அடைந்திருந்த புதிய நிலையினை எடுத்துக் காட்டும் முதல் அறிகுறியாக விளங்கியது. 1907-இல் சூரத் காங்கிரசு கூட்டத்தில் மிதவாதிகளுக்கும் தீவிரவாதிகளுக்கும் இடையே மோதல் ஏற்பட்டது. தீவிரவாதிகள் பலாத்காரத்தில் ஈடுபட்டனர். ஆகவே கூட்டம் குழப்பத்தில் முடிவுற்றது. ஆயினும் கோகலே, பானர்ஜி, சின்ஹா, மேதா ஆகியோர் தலைமையின்கீழ் மிதவாதிகள் தங்கள் செல்வாக்கை நிலை நாட்டினர். இந்நிகழ்ச்சி காங்கிரசு அடைந்திருந்த புதிய நிலையினை திட்டவட்டமாக எடுத்துக்காட்டும் இரண்டாவது அறிகுறியாக அமைந்தது. ஓராண்டிற்குப் பிறகு திலகர் பலாத்காரச் செயலைத் தூண்டி விட்ட காரணத்திற்காக ஆறு ஆண்டுகள் சிறையில் அடைக்கப்பட்டார். திலகருடைய தேசிய உணர்ச்சி அனைத்து இந்திய தேசிய உணர்ச்சியாக மிளிரவில்லை. அவருடைய நாட்டுப்பற்று மிகக்குறுகலான தன்மையுடைத்தாயிருந்தது. மேலும் அவர் எப்போதும் அரசியலமைப்புடன் கூடிய அரசினை ஏற்படுத்த விழைந்தாரில்லை. அப்படி எப்போதாவது விரும்பி இருப்பின் அது சூழ்நிலையினை ஒட்டி காட்டப்பெற்ற விருப்பமாக அமைந்ததேயொழிய மனமுவந்து காட்டப்பெற்ற ஆர்வமாக அமையவில்லை. அவர் சிறை சென்ற பிறகு 1914-ஆம் ஆண்டு வரை தேசிய இயக்கத்தில் மிதவாதிகளின் செல்வாக்கே நிறைந்திருந்தது. மிண்டோ மார்லி சீர்திருத்தங்களை விளக்குவதிலும், நடைமுறைப் படுத்துவதிலும் காங்கிரஸ் தலைவர்கள் மேற் கொண்ட பெரும்பங்கு காங்கிரசு வளர்ச்சியின் மூன்றாவது அறிகுறியாகும். எட்வர்டு காலத்தில் ஏற்பட்டிருந்த பண்பட்ட சூழ்நிலையில் காங்கிரசு தலைவர்கள் சுதந்திரமாக வாழ முடியும் என்பதையும், முடிவுகளை பாதிக்கும் வகையில் செயலாற்ற முடியும் என்பதையும், கொள்கையினை வரையறுப்பதில் தங்கள் செல்வாக்கைப் பயன் படுத்த முடியும் என்பதையும் அவர்கள் காட்டினார்கள். அரசினர் அவர்களிடம் காட்டிய ஆதரவு அவர்களுடைய பெருமையை அதிகரிக்கச் செய்தது. ஏனெனில் அரசு காங்கிரஸ் தலைவர்கள் காட்டிய வழியில் செல்வதாகத் தோன்றியது. அரசினர் நடவடிக்கைகள் மேற்கொள்ளும் போது காட்டிய தேவைக்கு மீறிய கவனத்தை ஒரு இடர்பாடாகக் கருதவில்லை. ஏனெனில் இது வரை அரசு அசைந்து கொடுக்கவே இல்லை. இப்பொழுதோ அது அசையத் தொடங்கியது.

போர் தொடங்கிய பொழுது இந்திய நடுத்தர மக்கள் நேச நாடுகளுக்கு தங்களுடைய ஆதரவை பேரார்வத்துடன் வெளியிட்டனர்.

இதுவே கடந்த சில ஆண்டுகளாக ஏற்பட்டு வரும் முன்னேற்றங்களின் பால் தாம் கொண்டு இருந்த உள்ளார்ந்த திருப்தியை வெளிப்படுத்துவதாக அமைந்திருந்தது. ஆனால் வெகு விரைவில் மனநிலை மாறத் தொடங்கியது. எதிர்நோக்கி காத்திருக்க வேண்டிய நிலை நீடித்தது. பிரிட்டிஷ்காரர்களினால் ஏற்பட்ட தாமதத்திற்காக மக்கள் வெறுப்புற்றனர். போர் நீடித்ததனால் அசௌகரியங்களும் ஏமாற்றங்களும் அதிகரித்தன. இத்தகைய சூழ்நிலையில் உண்மையான தேசிய எதிர்க் கட்சியினராகத் தோன்றிய தீவிரவாதிகளின் பேச்சுகளுக்கு மக்கள் செவி சாய்த்தனர். 1915-இல் மிதவாதிகள் அனைவரிலும் புத்தி கூர்மையிலும், திறமையிலும் மேம்பட்டு விளங்கிய கோகலே தமது நாற்பத்தி ஒன்பதாவது வயதிலே காலமானார். 1914-இல் விடுதலை அடைந்த திலகர் 1916-இல் மீண்டும் அரசியலில் புகுந்தார். இப்பொழுது அவரது கருத்துகள் விரிவடைந்தபோதிலும் அவரது செயற்திறம் மாற்றம் அடையவில்லை. இந்தியா முழுவதைப்பற்றியும், அரசியலைப்பற்றியும் இப்பொழுது தன்னால் சிந்திக்க முடியும் என்பதைக் காட்டினார். பெஸன்ட் அம்மையாருடனும், அவரது தன்னாட்சி இயக்கத்துடனும் சேர்ந்து கொண்டார். லக்னௌ ஒப்பந்தம் என்னும் உடன்பாட்டின் வாயிலாக தன்னுடைய திட்டத்திற்கு முஸ்லிம் லீக்கின் ஆதரவைத் தேடிக்கொண்டார்.[1] 1908ஆம் ஆண்டின் இறுதியில் லக்னௌ காங்கிரசைக் கைப்பற்றினார். அதற்குப்பிறகு ஒரு காலத்தில் வலிமைபெற்று விளங்கிய மிதவாதிகள் இப்பொழுது பின்னடைந்தனர். சில ஆண்டுகளுக்குள்ளாகவே அவர்கள் நாவன்மை மிக்க சீனிவாச சாஸ்திரி அவர்களின் தலைமையின் கீழ் லிபரல் கட்சியினராக தங்களை மாற்றிக்கொண்டனர். அதன் பிறகு சிறிது சிறிதாக அக்கட்சி கலைந்தது. அதன் உறுப்பினர்கள் நாளடைவில் படையற்ற போர்த்தலைவர்கள் நிலையை எய்தினர். இறுதியில் மேம்பாடுற்ற தேசிய சிற்பிகளாகக் கருதப்பெற்றனர். கருத்துக்களின் பிறப்பிடமாக இருந்தனர். சர். டெஜ் பகதூர் சாப்ரூ இதற்கு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கினார். தனிப்பட்ட முறையில் செல்வாக்குடன் இருந்தனர். பொது வாழ்வில் அரசினருக்கும் காங்கிரசுக்கும் மோதல் ஏற்படும் போது இடையீட்டாளர்களாக இருந்து பயனுள்ள சேவையை புரிந்து வந்தனர். ஆனால் தலைமை தாங்கி நடத்தும் நிலையிலேயோ, அதிகாரம் செலுத்தும் நிலையிலேயோ அவர்கள் இல்லை. அவர்களை தற்கால இந்தியாவின் அரசியல் "ஹர்கராக்கள்" (Harcarahs) என்று கூறலாம்.

காங்கிரஸ் இப்பொழுது உடனடியான தன்னாட்சியினைக் கோரியது. ஆனால் அரசினர் தன்னாட்சியினை இறுதி குறிக்கோளாகக் கருதி

[1] லக்னௌ ஒப்பந்தம் தனித்தொகுதிகளை ஏற்றுக்கொண்டது.

வந்தனர். இருவருடைய குறிக்கோள் இது ஒன்றே தான். ஆனால் முன்னேற்றத்தின் நடைமுறை வேகம் மாறுபட்டிருந்தது. இந்த நேரத்தில் இசைவு பொருத்தமற்ற அரசியல் தலைவர்களைக் கொண்ட குழுவின் மூன்றாவது நபரைப்பற்றிக் குறிப்பிடுதல் அவசியமாகும். 1906ஆம் ஆண்டுவரை முஸ்லிம்கள் சர். சையத் அகமது கானின் யோசனைப்படி காங்கிரசினிடமிருந்து பெரும்பாலும் ஒதுங்கி வந்திருந் தனர். 1906-இல் சீர்திருத்தம் ஏற்படுத்துவதற்காக முயற்சி மேற் கொண்டபொழுது முஸ்லிம் லீக் கட்சியினை ஏற்படுத்தி முஸ்லிம் களுக்குத் தனித் தொகுதிகளை அல்லது வகுப்புவாரி தொகுதிகளை கோரினார்கள். மிண்டோ மார்லி சீர்த்திருத்தங்கள் அக்கோரிக் கையை அங்கமாகக் கொண்டன. இப்பொழுது முஸ்லிம் களிடம் திடீரென மனவெழுச்சி ஏற்பட்டது. 1914ஆம் ஆண்டிற்கு முன்னர் துருக்கிக்கு நேர்ந்த இன்னல்களைக் கேள்வியுற்று மன அமைதி இன்றி இருந்தனர். அதற்குப் பிறகு அதற்கு நேரிட்ட பேராபத்துக் களை அறிந்து பீதியுற்றனர். மேலும் காலிபாவின் அரசினை பிரிட்டன் குலைத்து வருவதை அறிந்து அதனை எதிர்க்க முடிவு செய்தனர். அதன் பயனாக கிலாபத்து இயக்கம் தோன்றியது. துருக்கி இளைஞர் இயக்கத் தினர் (Young Turks) பிரசாரம் செய்து வந்த அனைத்து இஸ்லாமியர் ஒற்றுமைக் கொள்கை கிலாபத் இயக்கத்தின் வளர்ச்சிக்குத் துணை செய்தது. முதலாவது உலகப்போர் முடிவுற்றபோது துருக்கி துண்டாக் கப்பெற்றது. அந்நிகழ்ச்சி கிலாபத் இயக்கம் வலுவடைவதற்கு துணை செய்தது. ஆகவே முஸ்லிம்கள் இந்துக்களுடன் சேர்ந்து கூட்டுத்தேசிய இயக்கம் ஒன்றினை துவக்கினார்கள். இத்தகைய இயக்கம் தோன்றிய பொழுது பிரிட்டிஷ்காரர்கள் அதனை நம்ப மறுத்து விட்டனர் என்று கூறுவது மிகையாகாது. ஏனெனில் அவர்கள் இருவரும் ஒன்று சேரமாட்டார்கள் என்று பிரிட்டிஷ் அதிகாரிகள் இதுவரை எண்ணி இருந்தனர்.

அத்தகைய உறவு எளிதில் பிரிக்கக் கூடியதாயும் நிலையற்றதாகவும் இருந்தது. ஆனால் அந்த நேரத்தில் நிகழ்ச்சிகளின் வேகம் அவ்வுறவை நீடித்து இருக்க உதவியது. இத்தகைய சூழ்நிலையோடு இப்பொழுது இறுதியான ஆக்கக்கூறு ஒன்று சேர்க்கப்பட்டது. அந்த ஆக்கக்கூறு மோகன்தாஸ் கரம் சந்த் காந்தி என்ற தனி மனிதனுருவில் தோன்றியது. காந்தி குஜராத் மாநிலத்தைச்சார்ந்த வழக்கறிஞர், கத்தியவாரிலுள்ள மரபுக்கோட்பாட்டில் உறுதிகொண்ட பனியா வகுப்பைச் சார்ந்தவர். இலண்டனில் சட்டம் பயிலுவதற்காக அம்மரபின் கோட்பாட்டை எதிர்த்தவர். தென்னாப்பிரிக்காவில் பல ஆண்டுகள் தன் வாழ்நாளைக் கழித்தவர். அங்கிருந்தபோது மனிதனுக்குத் தேவையான உணவைப் பற்றிய சோதனைகள் பல நிகழ்த்தினார். அங்கு தான் சமாதான முறை

யில் நம்பிக்கை வைக்கும் மனநிலையை வளர்த்துக்கொண்டார். எளிய வாழ்க்கையினை நடத்தினார். மனித வர்க்கத்திற்கு சேவை புரியும் மனப் பாங்கினை வளர்த்துக்கொண்டார். தென்னாப்பிரிக்கா போரின் போது காயம் பட்டவர்களை தூக்கு படுக்கையினை சுமக்கும் ஆளாகப் பணி புரிந்தார். தென்னாப்பிரிக்கா யூனியனில் வாழ்ந்து வந்த இந்தியர்களின் உரிமைக்காகப் போராடினார். யூனியன் அரசாங்கத்திற்கு எதிராக சத்தியாக்கிரக இயக்கத்தை மனஉறுதியுடனும், மிக்க திறமையுடனும் நடத்தி ஜெனரல் ஸ்மட்ஸின் நன் மதிப்பையும் ஹார்டிஞ்சு பிரபு, இந்திய மக்கள் ஆகியோரின் போற்றலையும், பரிவினையும் பெற்றார். 1915-இல் அவர் இந்தியா திரும்பினார். அப்பொழுது அவர் தன்னை கோகலேயின் சீடனாகக் கருதினார். சில காலம் இந்திய நிலைமையினை பரிசீலனை செய்வதில் ஈடுபட்டிருந்தார். ஆயினும் 1918ஆம் ஆண்டு வரை அவர் முக்கியத்துவம் பெற்றாரில்லை. 1918-இல் திலகர் இறக்கும் தருவாயில் இருந்தார் என்று இங்கு குறிப்பிடுதல் அவசியமாகும். காந்தி மேல் நாட்டில் பெற்றிருந்த பயிற்சி பிற்காலத்தில் பிரிட்டிஷ் காரர்களை சரிநிலையில் வைத்து போராடப் பெரிதும் உதவியது. அவரது எளிய வாழ்க்கை பாமர மக்களின் மனதைக் கொள்ளை கொண்டது அவர் கொண்டிருந்த அசாதாரணமான நுண்ணறிவுத்திறம் மக்கள் உணர்ச்சிகளை தன் விருப்பம் போல் தட்டியெழுப்ப உதவியது. அவர் வன்முறைக்கு எதிராகக் கொண்டிருந்த கருத்துக்கள் அரசினரிடையே மனநிறைவையும், மனக்குழப்பத்தையும் எரிச்சலையும் மாற்றி மாற்றி ஏற்படுத்தி வந்தன. புதிய இந்தியாவின் முன்கூட்டியே அறுதிசெய்யப் பெற்ற தலைவராக அவர் விளங்கினார். கிராம மக்களையும், நகர மக்களை யும், கிழக்குப் பகுதியில் வாழ்பவர்களையும், மேற்குப் பகுதியில் வாழ் பவர்களையும், மரபு கோட்பாட்டுறுதி கொண்டவர்களையும் முற்போக்கு வாதிகளையும் ஒன்று சேர்க்கும் திறம் படைத்தவராகவும் விளங்கினார். தேசிய உணர்ச்சி போக்கின் அடுத்த வளர்ச்சி நிலையின் இரண்டு சிறப் புக்கூறுகளுக்கு காந்தியே காரணமாவார். முதலாவது அந்த இயக்கத்தை எல்லா மக்களையும் உட்கொண்ட இயக்கமாக மாற்றி அமைக்க அவரே காரணமாவார். இரண்டாவது அவர் தான் இயக்கத்தைச் சார்ந்தவர்களை வன்முறைச் செயலில் ஈடுபடாமல் தடுத்து வந்தார்.

தேசிய இயக்கத்தில் கலந்து கொண்ட பலதிறப்பட்ட முக்கியத் தலைவர்களுக்குள் ஏற்பட்ட தகராறு பொது பாதுகாப்புச் சட்டங்களைச் சார்ந்திருந்தது. போர் துவங்கியபொழுது அரசு இந்திய பாதுகாப்புச் சட்டத்தைக் கொண்டு தன்னை பலப்படுத்திக் கொண்டது. அத்துடன் 1818ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட மூன்றாவது சட்டமும் (Regulation III) அதற்கு உதவி செய்தது. 1916ஆம் ஆண்டிற்குள் ளாகவே இருதரப்பினரும் இந்தக் கட்டுப்பாடுகளைக் குறித்து வெறுப்

படைந்திருந்தனர். காங்கிரசார் இந்த கட்டுப்பாடுகள் தங்களது புதிய தன்னாட்சி பிரசாரத்திற்கு கேடு விளைவிப்பனவாகக் கருதினார்கள். அரசினர் அப்பொழுது ஏற்பட்டிருந்த புரட்சி நடவடிக்கைகளையும், பயங்கரச் செயல்களையும் ஒடுக்குவதற்கு அச்சட்டங்கள் அளித்திருக்கும் அதிகாரங்களுக்கு மேலான அதிகாரங்கள் வேண்டும் என்று கருதினார்கள். இந்த விஷயத்திலும் கூட காங்கிரசுக்கும், அரசினருக்கும் இடையே கொள்கையளவில் உண்மையான கருத்து வேறுபாடு இருந்ததாகக் கூற முடியாது. வேறுபாடு அனைத்தும் அவைகளுக்கு அளித்திருந்த முக்கியத்துவத்தைப் பொறுத்தே இருந்தது. இந்த வேறுபாடே முக்கியமானதாகத் தோன்றியது. புதிய அதிகாரங்கள் தங்களுக்கு எதிராக பயன்படுத்துவதற்கெனவே ஏற்படுத்தப்பெற்றன என்று தேசியவாதிகள் எண்ணினர். மேலும் அரசினர் புரட்சி நடவடிக்கைகளினால் ஏற்படவிருக்கும் ஆபத்திற்கு அளவுக்குமீறிய மதிப்பை அளித்து வந்தனர் என்ற கருத்தும் வளர்ந்திருந்தது. ஆகவே அவர்களுடைய சந்தேகம் மேலும் வலுவடைந்தது. 1917-இல் ரௌலத் என்கிற ஒரு ஆங்கிலேய நீதிபதியின் கீழ் விசாரணைக்குழு ஒன்று அமைக்கப் பெற்றது. அதன் பயனாக நுணுக்கமான புரட்சி நடவடிக்கைகளைப் பற்றிய சான்றுகள் வெளிவந்தன. ஆகவே அக்குழு சட்டத்தினை மேலும் வலுவுறச் செய்வதற்கு வேண்டிய திட்டங்களை எடுத்துரைத்தது. அவ்வறிக்கையும் மாண்டேகு செம்ஸ்போர்டு அறிக்கையும் ஏறக்குறைய ஒரே நேரத்தில் வெளிவந்தன. ஆகவே இரண்டினையும் ஒன்று சேர்த்து மக்கள் படிக்கலாயினர். முதலாவதாகக் கூறப்பட்ட அறிக்கையில் காணப்பெற்ற திட்டங்கள் சில வாரங்களில் மசோதாக்களாக கொண்டு வரப்பெற்றன. ஆனால் இரண்டாவதாகக் கூறப்பெற்ற அறிக்கையின் திட்டங்களின் மீதான நடவடிக்கை ஓராண்டாக தாமதிக்கப்பெற்றது. இதனால் பரபரப்பும் எரிச்சலும் கொண்ட பொது மக்கள் இந்த துரதிர்ஷ்டமான ஆனால் ஓரளவு தடுத்து நிறுத்தக்கூடிய நிகழ்ச்சிகளின் சந்திப்பில் தவறான பொருளைக் காண முற்பட்டனர். 1918ஆம் ஆண்டு நவம்பர் மாதம் போர் முடிவுற்றது. அத்துடன் இந்திய பாதுகாப்புச் சட்டம் செல்லுபடியற்ற நிலையை அடைந்து விட்டது. ஆனால் அரசினர் தங்களுடைய நெருக்கடி அதிகாரங்களை விட்டுவிட மனமில்லாதிருந்தனர். ஆகவே மேற்குறிப்பிட்ட மசோதாக்களை கைவிட விரும்பவில்லை. இதனால் இந்தியர்களுடைய அச்சம் தொடர்ந்து இருந்தது. அந்த இரண்டு மசோதாக்களுமே குறிப்பிட்ட சில அரசியல் வழக்குகளை ஜூரிகளின் உதவியின்றி முடிவு செய்ய நீதிபதிகளுக்கு அதிகாரமளித்திருந்தன. மாநில அரசுகளுக்கு அரசியல் வழக்கில் சம்பந்தப்பட்டவர்களை சிறையிலடைக்க அதிகாரமளித்திருந்தன.[1] அந்த மசோ

[1] 1818ஆம் ஆண்டின் மூன்றாவது சட்டம் தலைமை அரசுக்கு மட்டுமே அவ்வதிகாரத்தை வழங்கியிருந்தது.

தாக்கள் 1919ஆம் ஆண்டின் தொடக்கத்தில் சட்டமாக நிறைவேற்றப் பட்டன. அந்நேரத்தில் பேரரசு சட்டசபையில் (Imperial Legislative Council) இருந்த பணித்துறை சாராத (Non-official). இந்திய உறுப்பினர்கள் அனைவரும் அதற்கு எதிராக வாக்களித்திருந்தனர் என்பதை இங்குக் குறிப்பிடுதல் அவசியமாகும். இந்த சட்டங்கள் அளித்த அதிகாரங்களை அரசினர் பயன்படுத்தவில்லை. இது இந்தியாவில் ஏற்பட்டிருந்த நெருக்கடி நிலையினை அரசினர் தவறாகக் கணக்கிட்டிருந்தனர் என்பதை தெளிவாக்கியது.

இப்பொழுது ஏற்பட்டிருந்த அவநம்பிக்கையும், மனக்கசப்பும் இந்தியர்களிடையே புகைந்து கொண்டிருந்த அதிருப்திகளை அனல் கொண்டெழச் செய்தன. ஏற்கனவே ஏற்பட்டிருந்த சீர்குலைந்த பொருளாதார நிலையுடன் போர் முடிந்த சில மாதங்களில் சினமூட்டுகிற நிகழ்ச்சிகள் சேர்ந்து கொண்டன. போரினின்றும் திரும்பி வரும் போர் வீரர்கள் அப்பொழுது மாறி இருக்கும் சூழ்நிலைக்கு ஏற்ப தங்களை எளிதாக மாற்றிக் கொள்வதற்கு வேண்டிய முன்னேற்பாடுகள் செய்யப்படவில்லை. ஊக வாணிபத்தில் காட்டப்பெற்ற ஆர்வம் வேதனையை மேலும் வளர்த்தது. இந்தியாவிலும் உலகத்திலும் ஏற்பட்டிருந்த தீவிர மாற்றங்களைப் பற்றி சாதாரண ஐரோப்பியர் சரிவர புரிந்து கொள்ளவில்லை. அந்த காலத்தில் ஐரோப்பாவின் தலைவர் என்றும் புது யுகத்தின் தீர்க்கதரிசி என்றும் கருதப்பெற்ற ஜனாதிபதி வில்சன் அவர்கள் ஆதரவளித்து வந்த கிளர்ச்சியூட்டும் தன் முடிவுரிமையைப் பற்றியும் சரியாகப் புரிந்து கொண்டனரில்லை. அந்த நேரத்தில் தான் மகாத்மா காந்தி தலைமைப் பொறுப்பை முன்வந்து ஏற்றுக் கொண்டார். ரௌலத் சட்டங்களுக்கு எதிர்ப்பு தெரிவிக்கும் வகையில் கடையடைப்புகள் (ஹர்தால்கள்) நடத்தினார். டில்லியிலும் ஆமதாபாத்திலும், லாகூரிலும், அமிர்தசரசிலும் அவை கலவரங்களாக மாறின. அமிர்தசரசில் ஏப்ரல் மாதம் 13ஆம் நாள் ஜாலியன்வாலா பாக் என்ற மதில்களால் சூழப்பெற்ற பெரிய மைதானத்தில் தடை மீறிய கூட்டமொன்று நடத்தப்பெற்றது. ஆனால் யாதொரு எச்சரிக்கையின்றி ஜெனரல் டயர் என்பவர் இராணுவத்தினரைக் கொண்டு கூட்டத்தைக் கலைத்தார். அதன் பயனாக 379 பேர் இறந்ததாகவும், 1200 பேர் காயமுற்றதாகவும் அதிகாரபூர்வமாக அறிவிக்கப் பட்டது.[1] அதனை அடுத்து இராணுவச் சட்டம் பிறப்பிக்கப்பட்டது. பிறகு கடுமையான தண்டனை நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. இந்தியரின் தன் மதிப்புக்கு ஊறு விளைவிக்கும் கட்டளைகள் பிறப்

[1] அந்த இடத்தில் வெளியே போக ஒரே வழிதான் உண்டு. அதன் வழியினையும் இராணுவத்தினர் பற்றிக் கொண்டனர்.

பிக்கப்பட்டன.[1] பஞ்சாபில் அமைதி மீண்டும் நிலைநாட்டப் பெற்றது. ஆனால் இந்திய பிரிட்டிஷ் உறவு முறையில் ஒரு பெரும் வடு ஏற்பட்டுவிட்டது. இவ்வடு 1857ஆம் ஆண்டில் நடைபெற்ற கலகத்திற்குப் பிறகு ஏற்பட்ட வடுக்கள் எல்லாவற்றையும் விட ஆழமானதாக இருந்தது. இனவெறி கடுமையாக இருந்தது. ஆனாலும் இந்த மனக்கசப்பு ஒரு புரட்சியாக மாறவில்லை. அதற்கு இரண்டு காரணங்களைக் காட்ட முடியும். அரசினர் ஒரு விசாரணைக்குழு ஒன்றினை அக்டோபர் மாதத்தில் அமைத்தனர்.[2] அக்குழு டயரைக் குறை கூறியதுடன் இராணுவச் சட்டம் நடைமுறைப்படுத்தும் விதத்தினையும் குறை கூறியது. இரண்டாவது காந்தியின் செயல்களுள் பல வன்முறைச் செயலைத் தூண்டுவனவாக இருப்பினும் அவர் வன்முறைச் செயலில் ஈடுபடுவதை கடுமையாக எதிர்த்தார். ஒரு வழியில் அவரை அரசினரின் அக்காலத்திய மிகச் சிறந்த நண்பர் என்று கூற முடியும். 1920ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் காங்கிரசு புதிய சீர்த்திருத்தங்களை நிராகரித்தது. காந்தியின் தலைமையின் கீழ் அரசுடன் ஒத்துழையாமை இயக்கத்தை காங்கிரஸ் தொடங்கியது. பதவியை விட்டு விலகல், பள்ளிகளுக்கும், கல்லூரிகளுக்கும் செல்லாதிருத்தல், வரவிருக்கும் தேர்தலில் கலந்து கொள்ளாமை போன்றவை அதனுள் அடங்கியிருந்தன. இவ்வியக்கம் இதுவரை ஏற்படாத அளவில் அனைத்து இந்தியத் தன்மையினைப் பெற்றது. மகமது அலி, சவுகத் அலி என்ற துணிச்சல் மிக்க இரு சகோதரர்கள் நடத்தி வரும் கிலாபத் இயக்கத்தைச் சார்ந்த முஸ்லிம்கள் ஆதரவு அதற்கு கிட்டியதே அந்த வகையான நிலைக்கு காரணமாகும். அந்த நேரத்தில்தான் அலகாபாத்தைச் சேர்ந்த பண்டித மோதிலால் நேரு காங்கிரசின் சிறப்பு உடையான கதரை அணியத் தொடங்கினார். வெகு விரைவில் காந்திக்கு அடுத்த பெரும் தலைவராக மாறினார். ஒத்துழையாமை இயக்கம் முழு வெற்றியாக அமையவில்லை. பதவியினின்றும் விலகியவர் எண்ணிக்கை மிகக் குறைவாக இருந்தது. மாணவர்கள் பள்ளிக்கும் கல்லூரிக்கும் செல்லாமையினால் ஏற்பட்ட குழப்பம் சில நாட்கள்தான் இருந்தது. மூன்றில் ஒரு பங்கு வாக்காளர்கள் வாக்குச் சாவடிகளுக்குச் சென்றனர்.[3] புதிதாக ஏற்படுத்தப்பெற்ற சட்டசபைகளில் காங்கிரஸ் உறுப்பினர்கள் எவரும் காணப்படவில்லை. ஆயினும் அமைச்சரவைகள் அமைக்கப்பெற்றன. புதிய திட்டம் நடைமுறைபடுத்தப்பெற்றது. ஆனால் பரபரப்பு நிலை பல மாதங்கள் நீடித்தது. அவ்வப்பொழுது வன்முறைச் செயல்களில் மக்கள் ஈடுபட்டனர்.

[1] உதாரணமாக பொதுவிடத்தில் சவுக்கினால் அடித்தல், ஊர்ந்து செல்லும்படி கட்டளையிடுதல்.

[2] ஹண்டர் கமிட்டி அறிக்கை (1920 Cmd. 681)

[3] 1952-இல் சத வீதம் 50 ஆக இருந்தது.

அதற்காக மகாத்மா தனது வருத்தத்தைத் தெரிவித்து வந்தார். 1921ஆம் ஆண்டு முடிவதற்கு முன்னரே இயக்கம் தோல்வி அடைந்து வருவதை உணர்ந்தனர். அரசாங்கத்தை கவிழ்க்க முடியாது என்றும் அறிந்தனர். 1921ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் மலபாரில் ஏற்பட்ட மாப்பிள்ளை (Moplah) கலகம் மிதவாதிகளின் அச்சத்தை அதிகரிக்கச் செய்தது. 1921-இல் வேல்ஸ் இளவரசர் இந்தியாவிற்கு வந்தார். அவருக்கு அளிக்கவிருக்கும் வரவேற்பில் கலந்து கொள்ளுவதை தடுக்க முயற்சித்த போது மீண்டும் வன்முறைச் செயல்கள் ஏற்பட்டன. 1922ஆம் ஆண்டின் தொடக்கத்தில் ஏற்பட்ட செளரி செளரா அழிச் செயலைப் பயன்படுத்திக் கொண்டு ரீடிங்கு பிரபு காந்தியை கைது செய்தார். ஆறுண்டு காவல் தண்டனை அவருக்கு அளிக்கப்பெற்றது. ஆனால் 1924ஆம் ஆண்டின் தொடக்கத்திலேயே அவர் விடுதலை செய்யப் பட்டார். இவ்வாறாக அந்த இயக்கம் தோல்வியில் முடிவுற்றது. ஆனால் சூழ்நிலை முன்பு போல அமைந்திருக்கவில்லை. தற்கால இந்தியாவின் வளர்ச்சியில் இந்நிகழ்ச்சிகள் ஒரு பிரிவுக்கோடாக அமைந்தன குடியேற்ற நாட்டுக்குரிய மனநிலை தூக்கி எறியப்பெற்றது. தேசிய வாதிகள் தங்களை தேசியத் தன்மை பொருந்திய முழு வளர்ச்சியடைந்த நாட்டின் குடிமக்களாகக் கருத ஆரம்பித்தனர். ஒத்தநிலையில் இருந்து இனி அரசினரிடம் தொடர்பு கொள்ள இயன்றது. அரசினரும் கூட முன்போல் மனநிறைவு கொண்டிருக்க முடியவில்லை. காங்கிரசு ஒரு ஊக்கம் நிறைந்த நிறுவனம் என்பதை உணர்ந்தனர். அதே நேரத்தில் அதனை அனைத்திலும் மேம்பட்ட சக்தியாக ஏற்றுக்கொள்ள விரும்ப வில்லை. தங்களது புதிய கொள்கையினை விட்டொழிப்பதால் ஏற்படும் விளைவுகளை அரசினர் நன்கு உணர்ந்திருந்தனர். அதுவே அக் கொள்கை யினை நிலை நாட்டிவிட்டது. நான்கு ஆண்டு நெருக்கடி நிலைக்குப்பிறகு அரசினரும் மக்களும் மெதுவாகவும் மனவேதனை யுடன் ஒருவரை ஒருவர் அணுகத் தொடங்கினார்கள்.

(ii) மாண்டேகு சேம்ஸ்போர்டு சீர்திருத்தங்கள் : மாண்டேகு சேம்ஸ்போர்டு சீர்திருத்தங்கள் என அழைக்கப் பெறும் மாண்டேகு சேம்ஸ்போர்டு திட்டங்களின் முக்கிய மூலக் கோட்பாடுகள் பின்வருமாறு : இந்தியாவில் தன்னாட்சியினை ஏற்படுத்துவதே பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கொள்கை என்பதனை அங்கீகரித்தல்; அந்த கொள்கையை படிப்படியாக நிறைவேற்றுதல்; இந்தியர்களிட மிருந்து பெறும் ஒத்துழைப்பு, அவர்கள் காட்டும் பொறுப்புணர்ச்சி ஆகியவற்றிற்கு ஏற்ப அடுத்த நடவடிக்கை மேற்கொள்ளுதல் அடுத்த நடவடிக்கை மேற்கொள்ள வேண்டிய காலம், முறை ஆகியவற்றைப் பற்றிய முடிவுகளை பிரிட்டிஷ் அரசினரே மேற்கொள்ளுதல் என்பவை

யாகும். இந்திய அரசியலமைப்பில் உண்டாக்கப்பெறும் ஒவ்வொரு மாற்றமும் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் நிறைவேற்றப்பெறும் சட்டத்தின் வாயிலாகவே ஏற்படுத்தப்பட வேண்டிய அவசியத்தினை வலியுறுத்துவதின் மூலமாக இறுதியில் கூறப்பெற்ற நிபந்தனை நிலைநாட்டப் பெற்றது. மேலும் ஒவ்வொரு பத்து ஆண்டு காலத்திற்குப் பிறகு மேற்கொண்டு எடுக்கப்பட வேண்டிய நடவடிக்கையின் அடிப்படைத் திட்டத்தை அமைப்பதற்கு ஒரு விசாரணை நடத்தப்பெற வேண்டும் என்று இச்சட்டத்தில் குறிப்பிடப்பட்டது. அந்த நிபந்தனையும் மேற் குறிப்பிட்ட இறுதி நிபந்தனையை நிலைநாட்ட உதவியது. தன்னாட்சி என்பதற்குப் பொருள் பொறுப்பாட்சியாகும். ஏனெனில் அதற்குப் பிறகு 'தர்பார் கொள்கை' அழிந்து விட்டது. பொறுப்பாட்சி கொள்கை இரைட்டையாட்சி திட்டத்தின் வாயிலாக அரசியலமைப்பு கட்டத்தில் புகுத்தப்பெற்றது. இரைட்டை ஆட்சித் திட்டத்தை தோற்றுவித்தவர் லயோனல் கர்டிஸ்[1] என்ற பேரரசு ஒற்றுமைக் கொள்கையின் தூதராவார். மாவட்ட அளவில் நடைபெற்று வந்த தன்னாட்சி முறை மாநில அளவில் நடைபெற ஏற்பாடு செய்யப்பட்டது. அத்துடன் மத்திய அரசு தனது அதிகாரங்கள் சிலவற்றை மாநிலங்களுக்கு மாற்றிவிட வேண்டும் என்ற கொள்கையும் புகுத்தப் பெற்றது. அதன் பயனாக மாநிலங்கள் இப்பொழுது அதிகமான செயலுரிமை பெற்றன. இரட்டையாட்சிக் கொள்கையினை, பழைய மைய அதிகார ஒருமிப்புக் கொள்கைக்கும் கூட்டாட்சிக் கொள்கைக்கும் இடையே அமைந்த ஒரு இடை நிலைப்பாடான கொள்கை என்று கூற முடியும். கூட்டாட்சிக் கொள்கையினை ஏற்றுக்கொள்ள மக்கள் இன்னும் தங்களை ஆயத்த நிலையில் வைத்துக்கொள்ளவில்லை என்பதை இங்குக் குறிப்பிடுதல் அவசியமாகும்.

நாம் இப்பொழுது மைய அரசு தனது அதிகாரங்களை மாநில அரசுகளுக்கு மாற்றிவிடும் கொள்கையைப் (Revolution) பற்றி கவனிப்போம். இக்கொள்கை நிருவாக அமைப்பு முறை முழுவதனையும் பாதித்தது. இதுவரை நிதி, சட்டம் ஆகிய துறைகளில் மாநிலங்கள் மைய அரசினுக்கு உட்பட்டு இயங்கி வந்தன. முன்னைய பகிர்ந்து கொள்ளப்பெற்ற வருவாய் தலையங்கங்கள் இப்பொழுது ஒழிக்கப் பெற்றன.[2] இதற்குப் பதிலாக நீர்ப்பாசன வரி, உள்நாட்டு வர்த்தக வரி, நிலவரி, பத்திரங்கள் முதலியன மாநிலங்களுக்கு அளிக்கப்பட்டது. வருமான வரி, தபால், உப்பு, இருப்புப்பாதை நிறுவனங்கள் ஆகியவற்றினின்றும் கிடைக்கும் வருமானம், ஏற்றுமதி-இறக்குமதி வரி ஆகியவை

[1] திரவுண்டு டேபிள் என்கிற பத்திரிகையைத் தொடங்கியவர். பல ஆண்டுகள் அதன் ஆசிரியராகப் பணியாற்றியவர்.

[2] நிலவரி, வருமான வரி, பத்திர வரி, உள்நாட்டு வர்த்தக வரி.

மத்திய அரசுக்கு வழங்கப்பெற்றன. இவ்வாறாக நிதித்துறையில் அதிகார மாற்றம் ஏற்படுத்தப்பெற்றது. அதன் பயனாக மாநிலங்கள் தங்களுடைய குறிக்கோள்களை நிறைவேற்றுவதற்கு தேவையான பணத்தை எளிதில் பெற இப்பொழுது வழி ஏற்பட்டது. சட்டமியற்றும் துறையிலும் சில அதிகாரங்கள் மாநிலங்களுக்கு வழங்கப்பெற்றன. ஏனையவற்றை மத்திய அரசு தொடர்ந்து வைத்திருந்தது. அதே நேரத்தில் சில விஷயங்களில் சட்டமியற்றும் அதிகாரம் மாநில அரசினுக்கு வழங்கப்பெற்றிருந்தாலும் கூட, மத்திய அரசு அந்த அதிகாரத்தைத் தொடர்ந்து வகித்திருந்தது.[1] கவர்னர் ஜெனரல் அனுமதியின் பேரில் சில விலக்கீடுகள் செய்ய வழிவகை ஏற்படுத்தப் பெற்றுள்ளது. இந்தியா முழுவதனையும் பாதிக்கக்கூடிய விஷயங்களைப் பற்றிய அதிகாரங்களை மைய அரசு தொடர்ந்து வகித்திருந்தது. பாதுகாப்பு, வெளிநாட்டு விவகாரங்கள், போக்குவரத்து, வாணிபம், ஏற்றுமதி இறக்குமதி வரி, அகில இந்திய சர்விசுகள் அவற்றில் சேர்ந்திருந்தன. அது மட்டுமன்றி மாநிலங்களுக்கு வழங்கிய அதிகாரங்கள் போக எஞ்சியுள்ள அதிகாரங்களையும் மைய அரசு தொடர்ந்து வகித்திருந்தது.

சட்ட நிறைவேற்றுத் துறையில் மைய அரசைப் பொருத்தளவில் அடிப்படை மாற்றம் ஏதும் செய்யப்படவில்லை. ஆனால் செயற்குழுவின் எண்ணிக்கையை அதிகரிக்க அதிகாரம் வழங்கப்பெற்றது. வைசிராய், படைத் தலைவர் ஆகியோர் நீங்கலாக ஏனைய உறுப்பினர்களுள் பாதி பேர் இந்தியர்களாக இருக்க வேண்டும் என்பது ஏற்றுக் கொள்ளப்பட்டது. நடைமுறையில் வைசிராய் நீங்கலாக ஏழு பேர் அடங்கிய அக் குழுவின் உறுப்பினர்களுள் மூவர் இந்தியர்களாக இருந்தனர். மாநிலங்களில் இரட்டையாட்சிக் கொள்கை புகுத்தப் பெற்றது. நிருவாகக் குழு இரு பாகங்களாகப் பிரிக்கப்பட்டது. அவற்றுள் ஒன்று கவர்னருக்குப் பொறுப்பாயிருந்த செயற்குழுவின் உறுப்பினர்களை உட்கொண்டிருந்தது. அவ்வுறுப்பினர்கள் இந்திய அமைச்சருக்கும் பொறுப்புள்ளவர்களாக இருந்தனர். மற்றொன்று மாநில சட்டசபைகளுக்குப் பொறுப்புள்ள அமைச்சர்களை உட்கொண்டிருந்தது .இந்த பிரிவினைக்கு ஏற்றாற்போல் ஆட்சித்துறையும் மாற்றப்பட்ட துறைகள் (Transfered Departments) மாற்றப்படாத துறைகள் (Reserved Departments) என இரு பாகங்களாகப் பிரிக்கப்பட்டது. மாற்றப்படாத துறைகளை கவர்னரும் நிருவாகக் குழு உறுப்பினர்களும் நேரடியாக நிருவகித்து வந்தனர். நிலவரி, நிலச் சட்டங்கள், நீதி வழங்குதல், காவற் படை, நீர்ப்பாசனம்

[1] உதாரணமாக, உயர்நீதி மன்றங்கள், சிறைச்சாலைகள், தொழிற்சாலைகள், புதிய பல்கலைக்கழகங்கள்.

தொழில் பற்றிய விவகாரங்கள் ஆகியவை மாற்றப்படாத துறைகளாகும். இவற்றை பொறுப்புள்ள அமைச்சர்கள் நிருவகித்து வந்தனர். மாவட்ட, வட்ட, நகர ஆட்சி, கல்வி, பொது சுகாதாரம், பொதுப்பணி, விவசாயம், கூட்டுறவு சங்கங்கள் ஆகியவை மாற்றப்பட்ட துறைகளாகும். சட்டம், ஒழுங்கு துறை என்றும் நாட்டு வளர்ச்சி துறை என்றும் நாம் இவற்றை பிரித்துக் கூறலாம்.

சட்டசபைகளைப்பொருத்தளவில் பெருத்த மாற்றங்கள் ஏற்படுத்தப் பெற்றன. மையத்தில் இரு சபைகளடங்கிய சட்டசபை ஏற்படுத்தப் பெற்றது. பேரரசு சட்டசபைக்குப் (Imperial Legislative Council) பதிலாக சட்டசபை (Legislative Assembly) ஒன்று ஏற்படுத்தப் பெற்றது. அதில் 146 உறுப்பினர்கள் இருந்தனர். அவர்களுள் 106 பேர் தேர்ந்தெடுக்கப்பெற்றனர். 40 பேர் நியமிக்கப்பெற்றனர். நியமிக்கப்பெற்றவர்களுள் 25 பேர் பணித் துறையினைச் சார்ந்தவர்கள். சட்டசபை மூன்று ஆண்டுகளுக்கொரு முறை தேர்ந்தெடுக்கப்பெற்றது. அதனுடைய காலம் முடிவதற்கு முன்பே அதனைக் கலைப்பதற்கு அதிகாரம் வழங்கப்பெற்றது. அத்துடன் இராச்சிய சபை (Council of State) யொன்றும் ஏற்படுத்தப்பெற்றது. அதில் 61 பேர் அடங்கியிருந்தனர். அதன் உறுப்பினர்கள் ஐந்தாண்டுகள் பதவி வகித்தனர். அவர்களுள் பெரும்பாலோர் பணித்துறை சாராதவர்கள் அவர்களுள் பெரும்பாலோரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். மாநிலசபைகளின் உறுப்பினர் எண்ணிக்கை உயர்த்தப்பட்டது.[1] அவர்களுள் நூற்றுக்கு எழுபது பேருக்கு மேல் பணித்துறையினைச் சாராதவர். மாநிலங்களுக்கு அளிக்கபெற்ற புதிய நிலைக்கு பொருத்தமாக இருப்பதற்காகவும், புதிய திட்டத்தினை நடைமுறைப்படுத்த இயலும் என்பதைக் காட்டவும், ஐக்கிய மாநிலங்கள், பஞ்சாப், பீஹார், ஒரிசா பிறகு பர்மாவாக (1923) எல்லைப் புற மாநிலம் (1932) ஆகியவற்றில் கவர்னர்களையும், கவுன்சில்களையும் ஏற்படுத்தினார்கள்.

மைய அரசினைப் பொருத்தளவில், பொறுப்பற்ற நிருவாகக்குழுவிற்கும் சட்டசபைக்கும் இடையே முட்டுநிலை ஏற்படக்கூடும் என்பது தெளிவாகத் தோன்றியது. மாநிலங்களில் ஓரளவு பொறுப்பற்ற நிருவாகக் குழுவினுக்கு எதிராக சட்டசபையின் உறுப்பினர்கள் வாக்குகளை அளிக்கக்கூடிய நிலை ஏற்படக்கூடும் என்பதும் தெளிவாகத் தோன்றியது. அமைச்சர்களை ஆதரிக்க சட்டசபை மறுத்துவிடும் நிலையும் ஏற்படக்கூடும் என்பதும் விளங்கி இருந்தது. வைசிராயிக்கும் கவர்னர்களுக்கும் ஒதுக்கீடு (Reserved) செய்யப்பட்ட அதிகாரங்களை

[1] வங்காள சபையில் 139 உறுப்பினர்களும், சென்னை சபையில் 127 உறுப்பினர்களும். பம்பாயில் 111 உறுப்பினர்களும் இருந்தனர்.

வழங்கி அத்தகைய நெருக்கடிகளைச் சமாளிப்பதற்கு வழிவகை செய்துள்ளது. அமைச்சர்கள் இல்லாத காலத்தில் மாற்றப்பட்ட துறைகளை தாமே நிருவகிக்க கவர்னர்களுக்கு அதிகாரம் வழங்கப்பெற்றது. நெருக்கடி வேளைகளில் ஆறு மாத காலம் செல்லுபடியாக்கும் நிலையையுடைய அவசரச் சட்டங்களை இயற்றும் அதிகாரம் வைசிராயிக்கும், கவர்னர்களுக்கும் அளித்தது. இந்தியாவின் அமைதிக்கும், பாதுகாப்பிற்கும் அவசியமான சட்டங்களை சட்டசபையின் உதவியின்றியே நிறைவேற்ற அவர்களுக்கு அதிகாரம் வழங்கப்பெற்றது. அதே போல அக் காரியங்களுக்கு பணத்தை ஒதுக்கவும் அவர்களுக்கு அதிகாரமுண்டு. அந்த அதிகாரத்தைப் பயன்படுத்தும் போது இந்திய பாதுகாப்பிற்கும், அமைதிக்கும் குறிப்பிட்ட மசோதா அவசியம் என்று தாங்கள் கருதுவதாக எழுத்து மூலம் அவர்கள் அறிவிக்க வேண்டுவது அவசியம். இந்த முறைக்கு தகுதிச் சான்றளித்தல் என்று பெயர்.[1] செலவினங்களுள் சில மக்கள் பிரதிநிதிகளின் கட்டுப்பாட்டிற்கப்பால் வைக்கப்பட்டன.

புதிய சட்டசபைகள் ஏற்படுத்தப்பெற்றதைத் தொடர்ந்து ஒரு புதிய தேர்தல் முறை வகுக்கப்பெற்றது. அது இரு சிறப்புக் கூறுகளை பெற்றிருந்தது. வாக்குரிமை, தேர்தல் தொகுதிகள் அமைப்பு சில தகுதிகள் பெற்றிருந்தவர்களுக்கே வாக்குரிமை வழங்கப்பெற்றது. சொத்துடைமையே பொதுவான தகுதியாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. நகர்ப்புறங்களில் வருமான வரியோ அல்லது வீட்டு வரியோ செலுத்துபவர்களுக்கும், நாட்டுப்புறங்களில் நிலவரி செலுத்துபவர்களுக்கும் வாக்குரிமை வழங்கப்பெற்றது. இந்த தகுதி மாநில சட்டசபையிலிருந்து மத்திய சட்டசபை, இராச்சிய சபை ஆகியவை வரை படிப்படியாக உயர்த்தப்பட்டது. மேலும் அந்தந்த இடங்களின் சூழ்நிலைக்கு ஏற்றவாறு அதனை மாற்றி எல்லா இடங்களிலும் ஒரே விதமான வகுப்பினர் வாக்குரிமையைப் பெறும்படி ஏற்பாடு செய்யப்பட்டது. இது தவிர பல்கலைக்கழகமளித்த பட்டம், வணிகக் குழு உறுப்பினர் நிலை போன்ற சில தனி முறையான தகுதிகளும் ஏற்படுத்தப் பெற்றன. இந்த முறை மாநில சட்டசபை தேர்தலில் 5 மிலியனுக்கு மேற்பட்ட மக்களுக்கும் மத்திய சட்டசபை தேர்தலில் ஏறக்குறைய 1 மிலியன் மக்களுக்கும், மத்திய மேல் சபை தேர்தலில் சுமார் 17,000 பேர்களுக்கும் வாக்கு வழங்கும் உரிமையினை அளித்தது.

தொகுதிகள் பொதுத் தொகுதிகள் தனித் தொகுதிகள் என இரு வகையாகப் பிரிக்கப்பட்டன. தனித் தொகுதிகள் முன்பிருந்தது

1 மாநிலங்களில் இந்த அதிகாரம் மாற்றப்படாத துறைகளில் மட்டுமே பயன்படுத்த ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

போல பல்கலைக்கழகங்கள், பெரிய நிலக்கிழார்கள், தொழில், வணிகம், ஆகிய தனிப்பட்ட நலன்களின் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் உரிமை பெற்றிருந்தன. பொதுத் தொகுதிகள் முன்னர் குறிப்பிட்ட தகுதிகளைக் கொண்ட வாக்காளர்களை உட்கொண்டிருந்தன. ஆனால் வாக்காளர்களின் இனம் பற்றி அவை மேலும் பிரிக்கப்பட்டன. இதை நாம் வகுப்புவாரி பிரதிநிதித்துவக் கோட்பாடு என்று கூறுகிறோம். 1909-இல் இம்முறைபாடும் முஸ்லிம் இடங்களை நிரப்புவதற்கு மட்டுமே பயன்படுத்தப்பெற்றது. ஆனால் இப்பொழுது அம்முறை பெருவாரியான இடங்களை நிரப்ப பயன்படுத்தப்பெற்றது எல்லா தேர்தலுக்கும் முஸ்லிம்கள், முஸ்லிம் அல்லாதார் என இருவகையாக வாக்காளர்கள் பிரிக்கப்பட்டனர். ஒவ்வொரு தொகுதியிலும் முஸ்லிம் வாக்காளர்களின் எண்ணிக்கை மொத்த மக்கள் தொகையின் முஸ்லிம் மக்கள் எண்ணிக்கைக்கு ஏற்றவாறு குறைந்து இருப்பதனால், ஏனைய வாக்காளர்கள் முஸ்லிம் வேட்பாளர்களை எளிதில் தோற்கடிக்கக்கூடிய ஆபத்தான நிலை இருந்து வந்தது. ஆகவேதான் தனித் தொகுதிகள் ஏற்படுத்த வேண்டும் என்ற வாதம் எழுப்பப்பட்டது. ஆனால் இத்தகைய தனித் தொகுதிகள் பஞ்சாபில் சீக்கியர்களுக்கும், சென்னையில் இந்திய கிறித்தவர்களுக்கும், சில மாநிலங்களில் ஆங்கிலோ-இந்தியர்களுக்கும், ஐரோப்பியர்களுக்கும் ஏற்படுத்தித் தரப்பெற்றன. இவவாறாக வகுப்புவாரி பிரதிநிதித்துவம் நிலைநாட்டப்பெற்று விட்டது.

# 4. மாண்ட்போர்டு காலம்

1921ஆம் ஆண்டு இந்திய அரசியலமைப்புச் சட்டம் பல திறப் பட்ட குற்றச் சாட்டுகளுக்கு இலக்காயிற்று. அத்தகைய நிலை ஒரு சில சட்டங்களுக்குத்தான் ஏற்பட்டது என்பதை நாம் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். தேவைக்கு மீறிய சலுகைகளைக் கொடுத்து விட்டது என்றனர் சிலர். தேவையான சலுகைகள் வழங்கப் பெறவில்லை என்றனர் மற்றவர். நடை முறை படுத்த இயலாது என்றனர் ஒரு சிலர். மிக்க பயன் தரத்தக்க முறையில் நிறைவேறி வருகிறது என்றனர் வேறு சிலர். அரசியலமைப்புத் திட்டத்தினை அதனுடைய எல்லா விளைவு களையும் ஒன்று சேர்த்து தான் நாம் மதிப்பிட வேண்டும். மேலும் அத னுடைய குறைகளையும், அது உட்கொள்ளத் தவறிய திட்டங்களையும் அது வருங்காலத்தில எத்தகைய நிலையினை உருவாக்க இருந்தது என்ப தனையும் நாம் கருத்தில் கொண்டுதான் அதனுடைய மதிப்பை அளவிட வேண்டும். பிற்காலத்தில் குறைகளை வற்புறுத்தி கூறி வரும்பொழுது அவற்றிற்கு அளிக்கப்பெற்ற முக்கியத்துவத்தில் மாற்றத்தை நாம் காண்கிறோம். அச் சட்டம் ஆக்க முறையான விளைவுகளை உண்டாக்கி யதா இல்லையா என்பதைப் பற்றிய பிரச்சனையே முதன் முதலில் எழுப் பப்பெற்றது. இங்கிலாந்திலும், இந்தியாவிலும் இடது சாரியினர் அது ஆக்க முறையான விளைவுகளை உண்டு பண்ணவில்லை என்று கருதினார் கள். அதன் பிறகு வாதங்கள் அனைத்தும் சீர்திருத்தத் திட்டங்களை நடை முறைப்படுத்த முடியுமா என்பதைப் பற்றியதாக இருந்தன. அதன் பிறகு அடுத்த நடவடிக்கை என்ன என்ற கேள்வியின் பால் கவ னம் திருப்பி விடப்பட்டது. குறை கூறுவதில் ஏற்பட்ட முதல் மாற்றம் திட்டங்கள் ஆக்க முறையான உட்பொருளை கொண்டிருந்தன என்ற வாதத்தை ஏற்றுக் கொண்டதாக உணர்த்தியது. இரண்டாவது மாற்றம் திட்டங்களை நடைமுறைப் படுத்த முடியும் என்பதனைச் சுட்டிக்காட்டி யது. குறை கண்டவர்கள் அனைவரும் திட்டங்கள் நிலையானவை என்று கருதி வந்தனர். ஆனால் அவை தாற்காலிகமானவையென்றும், முன் னேற்றத் தன்மை வாய்ந்தவை என்றும் அனைவருமே ஒப்புக்கொள்ளக்

கூடிய நிலையில் இருந்தன. சீர்திருத்தங்கள் முழு அளவில் ஏற்படுத்தப் பெறவில்லை என்ற குறையினை சரியானதென்றும் நாம் ஏற்றுக்கொள்ள இயலாது. அவற்றினை நடை முறைப்படுத்த இயலாது என்ற வாதமும், அவை பெருங்கேடு விளைவிக்கத்தக்கவை என்ற வாதமும் தவறுனவையே. அரசியலமைப்பு வளர்ச்சியில் ஏற்பட்டிருந்த நிலைமாறு காலத்தினை கடப்பதற்கு எத்துணை உதவி இச்சீர்திருத்த திட்டங்கள் புரிந்தன என்பது தான் ஆராய்வுக்குரிய உண்மையான பிரச்சனையாகும். பெருங்குறைகள் இந்த திட்டங்களில் காணப்பெற்று இருந்த போதிலும், இவற்றின் செயல் நோக்கம் நிறைவேற்றப்பட்டது என்று நாம் இவ்விடத்தில் கூறலாம். இத்திட்டங்கள் போதுமான அளவு அதிகாரத்தை மாற்றி போதுமான அளவு மக்களை அவற்றில் பங்கு பெறச் செய்தன. அதன் விளைவாக திட்டங்கள் வெற்றிகரமாக நடைமுறைப் படுத்தப்பெற்றன. இப்பொழுது வரையறுக்கப்பெற்ற வழிகளில் பெரு முன்னேற்றங்களை உண்டு பண்ண இயலும் என்பதையும் எடுத்துக் காட்டின. அவை முழுமையான பொறுப்பாட்சியினை ஏற்படுத்தவும், கூட்டாட்சியை ஏற்படுத்தவும் வழிவகை செய்தன. புதிதாக வளர்ந்து வரும் ஆட்சியுரிமை பெற்ற வகுப்பினர்களுக்கு பொது வாழ்க்கைக்கு வேண்டிய மதிப்பிட முடியாத பயிற்சியினை அளித்தன. அதே நேரத்தில் திட்டத்தில் கலந்து கொள்ளாதவர்களின் எதிர்ப்பினை ஒழிக்க அது போதுமான திருத்தங்களை உட்கொண்டிருக்கவில்லை. திட்டத்தில் கலந்து கொண்டவர்களின் எரிச்சலை குறைக்கவல்ல திருத்தங்களையும் உட்கொண்டிருக்கவில்லை. எல்லாவற்றினையும் கருத்தில் கொண்டு பார்க்குமிடத்து இந்த சாதனையை மிகப் பெரியதாகவே எண்ண வேண்டும். ஒரே ஒரு அறிவுக்குப் பொருத்தன குறை ஒன்று இருக்குமே ஆயின் அது இந்த சாதனை இதை விடப்பெரியதாக இருந்திருக்கலாம் என்பதே ஆகும்.

பிரிட்டிஷ் அரசினரின் புதிய அல்லது புதிதாக புதுப்பிக்கப்பெற்ற மனம் போக்கில் நம்பிக்கையை ஏற்படுத்துவதே அப்பொழுது மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கையாகக் காணப்பெற்றது. அப்பொழுது பிரிட்டனில் ஏற்பட்டிருந்த சூழ் நிலையில் எவ்வளவு தூரம் முன்னேற முடியுமோ அதை விட அதிகமான தூரம் முன்னேறினுலன்றி அத்தகைய நம்பிக்கையை ஏற்படுத்துவது இயலாத காரியமாகத் தோன்றியது. இரட்டையாட்சி திட்டமே குணங்குறை வாதங்களின் நடுமையமாக இருந்தது. இந்த திட்டத்தில் நேரடியாகப் பங்கு பெறுதவர்கள் இத் திட்டத்தை சந்தேகத்துடன் நோக்கினுர்கள். இத் திட்டத்தில் பங்கு கொண்டவர்களிடையே பூசல் ஏற்பட்டது. அமைச்சர்கள் பொறுப்பற்ற நிருவாகக் குழுவுடன் இணைக்கப்பட்டிருப்பதை மிக்க தேசப்பற்றுடையவர்கள் வெறுத்தனர். அவர்களுடையது என்று சொல்ல முடியாத நடிவடிக்கைகளுக்காகவும் அவர்கள் மீது பழி சுமத்

றப்பட்டது. கூட்டு ஆலோசனை முறை வெற்றி அடைய அடைய, இன்னயமிக்க கவர்னர்கள், அமைச்சர்களின் பயத்தையும், சந்தேகங் களையும் குறைத்துக்கொண்டு வர வர, அமைச்சர்கள் தேசிய பாதை யினின்றும் மேலும் மேலும், விலகிச் செல்வதாகக் கருதப் பெற்றனர். அதன் பயனாக அவர்களுக்கு மக்களிடமிருந்த செல்வாக்கு அழியத் தொடங்கியது. நிதி மீதான ஆட்சி அதிகாரம் மக்கள் பிரதிநிதிகளுக்கு அளிக்கப்படவில்லையாதலால் சில அமைச்சர்கள் தங்களுடைய துறை களுக்குத் தேவையான பணம் வேண்டுமென்றே ஒதுக்கப்படவில்லை என்று கருதத் தொடங்கினார்கள். மாநில வருவாய் இனங்களை எளிதாக மாற்ற முடியாத நிலை ஏற்படுத்தப்பெற்றிருந்த காரணத்தால் சில நல் லெண்ணங்கொண்ட கவர்னர்கள் வளர்ச்சி திட்டங்களை நிறை வேற்ற முடியாது துன்பமுற்றனர். எளிதாக பெருக்கத்தக்க நிலையில் இருந்த ஏற்றுமதி இறக்குமதி வரி, வருமான வரி போன்ற வரி இனங்கள் மத்திய அரசுக்கு வழங்கப்பெற்றன. மேலும் வரி விதித்தல், கலவரங் களை அடக்குதல் போன்ற இன்றியமையாத ஆனால் மக்கள் வெறுப் பினை சுலபமாக பெற்றுவிடத்தக்க அரசாங்க நடவடிக்கைகளை மேற் கொள்ளும் பொறுப்புகள் மாற்றப்படாத துறைகளின் கீழ் கொண்டு வரப்பெற்றன. இத்தகைய நடவடிக்கைகள் மேற்கொள்ளும் போது பிரிட்டிஷ்காரர்கள் பழிச்சொல்லுக்கு இரையானார்கள். அமைச்சர்களும் மேற்கூறிய காரணங்களினால், தங்களுடைய சில ஆக்க முறையான வேலைகளுக்காக தக்க பாராட்டு பெறவும் முடியாது போயிற்று. சீர் திருத்தத்திட்டம் தக்கபடி நடைமுறைப் படுத்துவதைத் தடைசெய்யும் வகையில் மற்றொரு தடை இருந்து வந்தது. ஆனால் அத் தடையினை சீர்திருத்தங்கள் உள்ளடக்கி இருப்பதாகச் சொல்ல இயலாது. காங் கிரஸ் கட்சி பொதுவாக தேச உணர்ச்சிகளை பிரதிபலிப்பதாகக் கருதப் பெற்ற போதிலும், வேறு சில அரசியல் கட்சிகளும் ஏற்படுத்தப் பெற்றிருந்தன. காங்கிரஸ் இத்திட்டத்தில் கலந்து கொள்ளவில்லை யாதலால், கவர்னர்கள் வேறுபட்ட சுய நலங்கோரும் அரசியல் கட்சிக் காரர்களை அமைச்சர்களாக நியமித்து பெரும்பான்மை ஆதரவை உண் டாக்கி வந்தனர். அத்தகைய அமைச்சர்களுக்குள் ஏற்பட்ட பூசலும், அதனால் ஏற்பட்ட நடவடிக்கையை மேற்கொள்ள இயலாத நிலையும், அந்த திட்டத்தையே சீர்குலைக்க ஆரம்பித்தன. அத்தகைய கூட்டு அமைச்சரவைகள் அரசியல் வாதிகளுக்கு சிறு வாழ்க்கை நலங்களை ஏற்படுத்தித் தந்தனவேயன்றி பாமர மக்களுக்கு யாதொரு பயனையும் அளிக்கவில்லை.

மாண்ட்போர்டு காலத்தின் முதற் பகுதி (1921 முதல் 1924 வரை) தேர்ந்தெடுக்கப் பெற்ற சட்டசபைகளின் முதல் பதவிக் காலத்தினை உள்ளடக்கியிருந்தது. காங்கிரஸ் தேர்தலில் பங்கு கொள்ளவில்லை.

ஆயினும் வாக்காளர்களில் மூன்றில் ஒரு பங்கினரை வாக்குச் சாவடிகளுக்குச் செல்வதை அதனால் தடுக்க முடியவில்லை. மகாத்மா காந்தியின் ஒத்துழையாமை இயக்கத்தினின்றும் தம்மை விடுவித்துக் கொண்ட மிதவாதிகளை தேர்ந்தெடுப்பதையும் அதனால் தடுக்க இயலவில்லை. ஆகவே அமைச்சரவைகளை ஏற்படுத்துவது இப்பொழுது சாத்தியமான காரியமாகத் தோன்றியது. ஆனால் அவ்வமைச்சரவைகள் மதிப்பிட முடியாத பலமும், செல்வாக்கும் பொருந்திய எதிர்ப்பிக்கிடையே செயலாற்றி வரவேண்டிய நிலை ஏற்பட்டது. மையத்தில் அமைச்சர்கள் எவருமிலர். ஆனால் பணித்துறைச் சார்ந்த உறுப்பினர்கள் அணி மறைந்து விட்டதால் தேசிய கருத்துப் போக்கினை உணர்ந்து அதற்கேற்றவாறு செயற்பட வேண்டிய நிலை மைய அரசுக்கு ஏற்பட்டுள்ளது என்பது உணரப் பெற்றது. ரௌலத் சட்டங்களும், 1910ஆம் ஆண்டு பத்திரிகைச் சட்டமும் நீக்கப்பட்டன. தொழிற்சாலைகளிலும் சுரங்கங்களிலும் வேலை செய்பவர்களின் நிலைகளைப் பற்றியும், தொழிலாளிகளுக்கு நஷ்ட ஈடு வழங்குதல் போன்றவற்றைப் பற்றியும், சமூக நலம் சார்ந்த சட்டங்கள் இயற்றப் பெற்றன. ராவின்சன் தலைமைப் பொறுப்பின் கீழ் உயர் இராணுவ பதவிகளை இந்திய மயமாக்கும் முயற்சி துவக்கப் பெற்றது. சர்வதேச சங்கத்தில் இந்தியாவிற்கு இடமளிக்க ஏற்பாடு செய்யப் பெற்றது. பேரரசு மாநாட்டில் (Imperial Conference) இந்தியாவிற்கு டொமினியன்களுக்கு ஒத்த நிலையினை அளிப்பதாக வாக்குறுதி வழங்கப்பெற்றது. கடல் கடந்து வாழும் இந்தியர்களுடைய, குறிப்பாக தென்னாப்பிரிக்கா இந்தியர்களுடைய நலத்திற்காக வாதாடினர். உயர் பதவிகளில் பாதி அளவு இந்தியர்களுக்கு அளிக்கும் வகையில் லீ கமிஷன் இந்திய மயமாக்கும் திட்டமொன்றை சிபாரிசு செய்தது. அதே நேரத்தில் வரவு செலவு திட்டத்தில் துண்டு விழாமல் இருப்பதற்காக உப்பு வரி இரு மடங்காக உயர்த்தப் பெற்றது. இதற்காக புதிய பத்திரம் வழங்குமுறை புகுத்தப் பெற்றது. இதனால் ஏற்பட்ட நம்பிக்கையிழப்பு பண வகையில் ஏற்பட்ட இலாபத்தைவிட மிகவும் அதிகமாக இருந்தது. 1921ஆம் ஆண்டு அரசு ஒத்துழையாமை இயக்கத்தை சமாளிக்க வேண்டிய நிலையில் இருந்தது. அடிக்கடி ஏற்பட்ட, குறிப்பாக வேல்ஸ் இளவரசர் வருகையின் போது ஏற்பட்ட, கலவரங்களை அடக்க வேண்டிய அவசியமும் ஏற்பட்டிருந்தது. இந்த வகையான நடவடிக்கைகளுக்கு விதிக்கப் பெற்ற தடைகளே ஆக்க நலம் பயக்கும் நடவடிக்கைகளை விட பெரிதாக மக்கள் மனதில் தோன்றின. அவநம்பிக்கை ஒழிக்கப்படவில்லை. அரசியல் துறையில் இந்தியர்களுக்கு பிரிட்டிஷ்காரர்களின் நல்லெண்ணங்களில் நம்பிக்கை பிறக்கவில்லை

மாநிலங்களில் அமைச்சரவைகள் ஏற்படுத்தப் பெற்றன. சென்னை மாநிலம் ஒன்றில்தான் மாற்றுக் கட்சியின் துணையின்றி மந்திரிசபையை ஏற்படுத்தும் அளவிற்கு வேண்டிய பலத்தினை ஒரே கட்சி பெற்றிருந்தது. அது தான் ஜஸ்டிஸ் அல்லது பிராமணரல்லாதார் கட்சியாகும். அக்கட்சியின் தலைவரான பனகல் ராஜாவினை முதலமைச்சராக கவர்னர் வில்லிங்டன் பிரபு நியமித்தார். அவ்வாறாக பொறுப்புள்ள கட்சி அரசாங்கத்தினை ஒத்த சாயல் உடைய அரசாங்கம் ஒன்றினை அவர் ஏற்படுத்தினார். இந்த மந்திரிசபை கல்வித் துறையில் சில சீர்திருத்த நடவடிக்கைகளையும் கோயில் மானியங்களை பாதிக்கும் மூற்போக்கான நடவடிக்கை ஒன்றினையும் அது மேற்கொண்டது. அத்தகைய நடவடிக்கையினை பிரிட்டிஷ் அரசாங்கம் நிறைவேற்றத் தயங்கி இருக்கும் என்பதில் ஐயமில்லை. பஞ்சாபிலும் நம்பிக்கையினை உண்டு பண்ணத்தக்க ஒரு முயற்சி மேற்கொள்ளப் பட்டது. பிற்காலத்தில் வீரத்திருத்தகை (Knight) பட்டம் பெற்ற மியான் பஸ்லி ஹுசேன், சௌத்ரி சோதுராம் ஆகியோர் சேர்ந்து பல வகுப்புகளைச் சார்ந்த ஜமீன்தார் அல்லது நாட்டுப்புற கட்சியொன்றினை ஏற்படுத்தினார்கள். நகர்ப்புற தனி நலன்களைக் கருத்தில் கொண்ட கட்சியின் எதிர்க் கட்சியாக அது விளங்கியது. புதிய சட்டசபையில் அக்கட்சிக்கு பெரும்பான்மை இல்லை என்றாலும், அப்பொழுது ஏற்பட்டிருந்த நிலைமையினை அது கட்டுப் படுத்தி வர அதனுடைய தலைவர்களின் செல்வாக்கு பெரிதும் பயன்பட்டது. கல்வியை பெருக்குவதற்கான திட்டம் ஒன்றை அது புகுத்தியது. நிலச் சீர்திருத்தங்கள் மேற்கொள்ளப் பட்டன. சீக்கிய குருத்துவாராக்களை (Gurudwaras) மக்களால் தேர்ந்தெடுக்கப் பெற்ற அறநிலையத்தாரிடம் ஒப்புவித்து குருத்துவாராக்களைக் கட்டுப் படுத்தும் சிக்கலான பிரச்சனையை 1925-இல் தீர்த்து வைத்தது. ஏனைய இடங்களில் பல பிரிவினர்கள் சேர்ந்து மந்திரி சபைகளை ஏற்படுத்தினர். கடும் பண முடையும், பொது மக்கள் ஆதரவு இன்மையும் அச்சபைகள் சரிவர செயற்படுவதைத் தடுத்தன. காங்கிரஸ் தனது ஒத்துழையாமை இயக்கத்தைத் தொடர்ந்து நடத்தி வந்தது. அவ்வியக்கம் சில நேரம் தீவிரமாக நடத்தப்பெற்றது. சில சமயம் ஆரவாரமின்றி நடைபெற்று வந்தது. ஓராண்டிற்குள் சுயராஜ்யம் பெற்று விடுவதாக வாக்குறுதி கூறி காந்தி மக்களின் பேரார்வத்தைத் தூண்டி விட்டார். முன்பு என்றும் ஏற்பட்டிராத அளவில் முஸ்லீம் கிலாபத்தியர்களின் ஆதரவைப் பெற்று விட்ட காந்தியினால் நிறைவேற்ற முடியாத காரியம் எதுவும் இல்லை என்ற நிலை அப்பொழுது தோன்றியிருந்தது. ஆனால் ரீடிங்கு பிரபு காந்திக்கு உரிய கூரிய நோக்கும், நுட்பமான திட்ட ஆற்றலும் தனக்கே உரிய வகையில் பெற்றிருந்த பெரும் அரசியல் மேதகையாக மகாத்மா காந்திக்குக் காட்சியளித்தார். முதலில் ரீடிங்கு பொது மக்களுடன் தொடர்பு

கொள்ளாமல் ஒதுங்கிய நிலையில் இருப்பதாகக் காணப் பெற்றார். உண்மையில் அவர் நிலைமையினை நன்கு பரிசீலனை செய்து வந்தார். எதிர் கட்சிகளின் பலத்தை அளவிட்டு வந்தார். அவர்களின் குறிக் கோள்களில் காணப் பெற்ற வேற்றுமையை அறிந்தார். அவர்களின் இணைப்பும் ஆர்வமும் தாற்காலிகமானது என்பதை உணர்ந்தார். ஆகவே எதிர் கட்சிகளுக்குள்ளே புதைந்திருந்த வேற்றுமைகளும் அவற்றின் போலி எண்ணங்களும் வெளிப்பட்டு, அவர் செய்ய வேண் டிய வேலைகளை அவை செய்யும் வரை காத்திருக்கும் கொள்கையினை அவர் கடைப்பிடித்தார். ஆனால் மக்களின் ஆர்வம் குறையாதிருக்கும் பொருட்டு காங்கிரசு துரிதமான வெற்றிகளை நாடிற்று. அரசாங்கம் ஒரே சீரான முறையிலே செயற்பட்டு வருவதையும், குழப்ப நிலை நீடித்து வருவதையும் காங்கிரசு விரும்பவில்லை. ஆனால் 1921-இல் ஆட்சி ஒரே சீராக நடைபெற்று வந்தது. அதே நேரத்தில் அவ்வாண்டி லும், அதற்கு அடுத்த ஆண்டிலும் குழப்பங்கள் ஏற்பட்டிருந்தன ஆகவே ஆர்வம் குறையலாயிற்று. அச்சம் அதிகரித்தது. 1922-இல் மகாத்மா காந்தி சிறையில் அடைக்கப் பெற்றார். அந்நிகழ்ச்சி கவலையை ஓரளவு தணித்தது. காங்கிரசுக்குள்ளேயே அவரது தலைமையை எதிர்க்கத் தொடங்கினர். அவ்வெதிர்ப்பு சில ஆண்டுகள் தொடர்ந்திருந்தன. காங்கிரசுடன் இணைந்து இயக்கத்தை நடத்தி வந்த முஸ்லிம்களிடமும் ஆர்வக் குறைவு ஏற்பட்டது. அவர்களது தலைவர்கள் அனைவரும் துணிச்சல் வீரர்களேயாவர். துருக்கிய காலிபா விடம் ஏற்பட்ட இரக்கமே அவர்களது ஆர்வத்திற்கு காரணமாகும். ஆனால் துருக்கியரின் தந்தை என அழைக்கப் பெற்ற கமால் பாஷா துருக்கியை மீண்டும் புதுப்பித்து முஸ்லிம்களின் அச்சத்தை நீக்கினார். 1923-இல் சுல்தான் பதவியினின்றும் நீக்கப்பெற்றார். 1924-இல் கிலாபாத்து (Khilafat) ஒழிக்கப் பெற்றது. ஆப்கானித்தானம் நோக்கி ஏற்பட்ட துடுக்கான மக்கள் பெயர்ச்சி அல்லது ஹிஜிராத் (Hijrat) அவல நிலை அடைந்தது. இத்தகைய சூழ்நிலையில் இந்துக் களின் ஆதிக்கத்தினைப் பற்றி முஸ்லிம்கள் கொண்டிருந்த அச்சங்கள் மீண்டும் உயிர் பெற்றெழுந்தன. 1921-இல் ஏற்பட்டிருந்த சகோதர மனப் பான்மை அழிவுற்றது. அன்றியும் 1921-இல் வகுப்பு வெறி காரணமாக கலவரங்கள் ஏற்பட்டன.

1922-இல் ஒத்துழையாமை இயக்கம் தோல்வி கண்டது. அதன் பயனாக இந்தியா ஊக்கங் குன்றிய நிலையில் இருந்தது. அந்நிலையினை சுர நோயினின்று விடுவிக்கப்பெற்ற நோயாளியின் நிலையினுக்கு ஒப்பிடலாம். சில ஆண்டுகள் பொது மக்கள் உணர்ச்சியின்றி காணப் பெற்றனர். அவ்வாண்டுகளை சம்பந்தப்பட்ட பல்வேறு கட்சியினர் தங்களுடைய கொள்கைகளை மறு பரிசீலனை செய்ய பயன்படுத்திக்

கொண்டனர். முஸ்லிம்கள் மீண்டும் இந்திய நாட்டு பிரச்சனைகளிலும் வகுப்பு பிரச்சனைகளிலும் தங்கள் கவனத்தைத் திருப்பி விட்டனர். காங்கிரசுக்குள்ளே தன்னாய்வு பெருமளவில் மேற்கொள்ளப்பட்டது. வெளிநாட்டு ஆதிக்கம் என்கிற பிணியில் இருந்து இந்தியாவை விடுவிக்க காந்தி என்ற புதிய மருத்துவர் பயன்படுத்திய அஹிம்சை என்ற மருந்து பயனளிக்கத் தவறியது. வங்காளத்தின் கடைசி பெரும் தலைவரான C. R. தாஸம், ஐக்கிய மாகாணங்களைச் சேர்ந்த பண்டித மோதிலால் நேரும் புதிய மருந்தில் நம்பிக்கையற்றவர்களின் தலைவர்களாய் விளங்கினார்கள். 1923-இல் காங்கிரசு தேர்தலில் கலந்து கொள்ள முடிவு செய்தது. சட்ட சபைகளில் இருந்து கொண்டே மாண்டேகு சேம்ஸ்போர்டு திட்டத்தினை தகர்த்தெறிய முடிவு செய்தது. திட்டத்தின் கீழ் அமைக்கப்பெற்ற புதிய அரசுக்கு ஏற்பட்ட வெற்றியாக இதனைக் கருதலாம். ஏனெனில் சட்டசபைகளின் முக்கியத்துவத்தை ஏற்றுக் கொண்ட நிலையினை இது குறித்துக் காட்டியது. அதே நேரத்தில் புதிய அரசுக்கு ஏற்பட்டிருக்கும் ஆபத்தினையும் அது சுட்டிக் காட்டியது. ஏனெனில் அமைச்சரவைகள் செயற்பட முடியா நிலையினை அடைந்து விட்டால் தங்களுடைய வாய்ப்பு வளங்கள் குன்றிப்போகும் என்ற பயம் பொது மக்களிடையே ஏற்பட்டது. மத்திய சட்டசபையில் காங்கிரசு நாற்பத்தைந்து இடங்களைப் பெற்றது சபையில் உரத்த கண்டனம் செய்வதற்கு போதுமான இடங்களை காங்கிரசு கைப்பற்றியது. ஆனால் திட்டத்தை தகர்த்தெறியக்கூடிய எண்ணிக்கையை அது பெற்றில. வங்காளத்திலும் பம்பாயிலும் அமைச்சரவைகள் அமைப்பதற்குப் போதிய இடங்களை அது கைப்பற்றி இருந்தது. அடுத்த சில ஆண்டுகளில் மத்திய அரசைப் பொறுத்தளவில் காங்கிரசு தேசிய எதிர் கட்சியாக இயங்கி வந்தது. மாநிலங்களில் ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுத்தல் என்ற கொள்கையின் அடிப்படையில் நடத்தப் பெற்று வந்த கட்சி அரசியலில் காங்கிரசு மேன்மேலும் ஈடுபட்டு வந்தது. மகாராஷ்டிரத்தில் M. R. ஜெயகர் என்பவரின் தலைமையின் கீழ் 'ஒத்துழைப்பவர்கள்' (Responsivists) என்ற சிதற்றுக் கட்சி தோன்றியது. அரசுக்கும் மக்களுக்கும் இடையே நல்லதொரு புதிய உடன்பாட்டினை ஏற்படுத்துவதற்கு வேண்டிய முயற்சியினை C. R. தாஸ் மேற்கொள்ளுவார் என்று அனைவரும் எதிர்பார்த்திருந்த போது, C. R. தாஸ் 1929-இல் மறைந்தார். தலைமைப் பொறுப்பு மோதிலால் நேருவிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. மோதிலால் ஆற்றல் மிக்கவர். கட்சிக்குள் புதிய கட்டுப்பாட்டினைப் புகுத்தினர். 1926-இல் அரசினர் மக்கள் வெறுப்புக்கு பாத்திரமான பருத்தித் தீர்வை வரி முழுமையாக ஒழித்தனர். உயர் பதவிகளை இந்தியர்கள் ஐரோப்பியர்கள் ஆகியோர் இடையே சரி சமமாக பகிர்ந்து கொடுக்க

வேண்டும் என்ற லீ கமிஷனின் சிபாரிசை அரசாங்கம் ஏற்றுக் கொண்டது. சீனிவாச சாஸ்திரி தென்னாப்பிரிக்காவிற்கு அனுப்பப் பட்டார். பிறகு அவர் முதல் ஏஜென்டு ஜெனரலாக நியமிக்கப் பெற்றார். மக்களும், காங்கிரசும் தங்கள் கவனம் முழுவதையும் அரசியல் பிரச்சனையின்பால் தான் திருப்பியிருந்தனர். இரட்டை யாட்சி முறையினை பலவாறான கண்டனங்களுக்கு இலக்காயிருந்த போதிலும், அதனைக் கைவிடல் இயலாது என்பது தெளிவாயிற்று. ஆகவே ஒவ்வொருவரும் அதன் வழியில் முன்னேறிச் செல்ல வேண்டிய நிலை ஏற்பட்டிருந்தது. காங்கிரசின் குறிக்கோளும் இப்பொழுது அந்த வகையான முன்னேற்றத்தைத் துரிதப்படுத்த வேண்டும் என்பதேயாகும். ஆனால் அத்தகைய துரிதமான முன்னேற்றத்தை அடைவதற்கு கையாள வேண்டிய முறைகளைப் பற்றி காங்கிரசுக்குள்ளே கருத்து வேற்றுமை தோன்றியது. ஒத்துழையாமை முறையிலே ஏற்பட்ட ஏமாற்றம் தான் காங்கிரசு சட்டசபைக்குள் நுழையக் காரணமாக இருந்தது. ஆனால் சட்டசபை யில் இருந்து கொண்டு அரசாங்க வேலைகளைத் தடை செய்யும் முறை யில் இப்பொழுது உண்டான ஏமாற்றம் நேரடி நடவடிக்கை முறை யில் காங்கிரசு காட்டிய புதிய உற்சாகத்திற்குக்காரணமாக அமைந்தது. மகாத்மா அரசியலினின்றும் விலகி தனது ஹரிஜன இயக்கம் அல்லது தீண்டாமை ஒழிப்பு இயக்கத்தினைத் தொடர்ந்து நடத்தி வந்த பொழுதிலும் காங்கிரசின் மீது தன்னுடைய கருத்தினை திணிக்க தக்க சமயம் எதிர்பார்த்திருந்தார் இந்தச் சூழ்நிலையில் தான் எல்லா பிரிவினர்களும் அரசாங்கத்தின் பொது அறிவிப்பினை எதிர் நோக்கி இருந்தனர். அத்தகைய அறிவிப்பு உண்மையான ஒத்துழைப்புக்கு அல்லது புத்தூக்கங் கொண்டு தொடங்கப்பெறும் நடவடிக்கைக்கு வேண்டிய முன் அறிகுறியாக அமையும் என்று எண்ணினார்கள். 1925-இல் அரசினரும் காங்கிரசும் ஒருவரை ஒருவர் மிக எச்சரிக்கை யுடன் அணுகி வந்தனர். 1909-இல் ஏற்பட்ட உடன்பாடு நிலை இப்பொழுது ஏற்படவில்லை. 1919ஆம் ஆண்டு தொடங்கி 1921ஆம் ஆண்டு வரை ஏற்பட்ட நிகழ்ச்சிகள் எல்லா அரசியல் வகுப்பினர்களை யும் வெகுவாக கலக்கிவிட்டு இருந்தன. ஆகவே அரசினருடைய திட்டங்களை நடுநிலை உணர்வுடன் ஆராயும் நிலையில் அவர்கள் இருந்தன ரில்லை. மேலும் பிரிட்டிஷ் அரசாங்கம் கற்பனைத்திறம் வாய்ந்த தலைவர்களைப் பெற்றிருக்கவில்லை. திண்ணிய கருத்துக்களை மேற்கொள்ளும் நிலையிலும் அவர்கள் இருந்தனரில்லை. 1928ஆம் ஆண்டிற்குள்ளாகவே விட்டுக்கொடுத்து உடன்பாடு செய்து கொள்ளும் மனப்பாங்கு மறைந்து விட்டது. இனி ஒவ்வொருவரும் தங்களுடைய பலத்தை அளவிடத் தொடங்கினர்.

மாண்டேகு சேம்ஸ்போர்டு சீர்திருத்தங்கள் செயற்பட்டு வரு முறையினை கூர்ந்து ஆராயும் பொருட்டு அரசினர் மட்டிமான் குழுவினை ஏற்படுத்தியது. குழுவினருள் அநேகர் சிறு திருத்தங்களை மேற்கொள்ளுமாறு சிபாரிசு செய்தனர். ஆனால் அவர்களுள் சிறுபான் மையினர் இரட்டையாட்சித் திட்டம் நடைமுறைப்படுத்த இயலாது என்று வலியுறுத்திக் கூறினர். சர். டெஜ் பகதூர் சாப்ரு அவர்களது தலைவராக விளங்கினார். இது எல்லா கட்சியினரையும் ஒன்று சேர்த்து முழுமையான தன்னாட்சியினைக் கோருமாறு தூண்டியது. அத்தகைய தன்னாட்சித் திட்டத்தின் விவரங்களை ஒரு வட்ட மேசை மாநாட்டில் முடிவு செய்ய வேண்டும் என்ற கோரிக்கையும் விடுக்கப் பெற்றது. 1926ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் இர்வின் பிரபு பதவி யேற்றார். அவரது முதல் நடவடிக்கை வகுப்பு ஒற்றுமை ஏற்படுத்து வதேயாகும். ஆனால் அது தலைவர்களின் கவனத்தை அரசியலமைப்பு முறைச்சார்ந்த பிரச்சனைகளினின்றும் திருப்பிவிட உதவி செய்ய வில்லை குறிப்பிட்ட இடைக் காலத்திற்குப் பிறகு மாண்ட்போர்டு திட்டம் செயற்பட்டு வரும் முறையினை அறிந்துகொள்ள விசாரணை நடத்த வேண்டும் என்ற நிபந்தனைத் திட்டத்தில் புகுத்தப்பெற்றது. குறிப்பிடப்பட்ட காலத்திற்கு இரண்டு ஆண்டுகட்கு முன்னரே அரசினர் விசாரணைக்குழு ஒன்றினை அமர்த்த முடிவு செய்தனர். 1927ஆம் ஆண்டு நவம்பர் மாதம் சைமன் குழு அமர்த்தப்பெற்றது, சர். ஜான் சைமன் இக்குழுவின் தலைமைப் பொறுப்பை ஏற்றார். பின்னர் பிரதமராக நியமிக்கப்பெற்ற தொழிற் கட்சியைச் சார்ந்த அட்லி அதன் உறுப்பினருள் ஒருவராக இருந்தார். இந்த நடவடிக்கையின் மூலம் அரசினர் இந்தியர்களை திருப்தி செய்ய முடியும் என்று கருதினார்கள். ஆனால் அதற்கு முற்றிலும் மாறான விளைவே ஏற்பட்டது. இந்தியர்களை வயப்படுத்திக் கொள்வதற்கு பதிலாக அது அவர்களின் மனத்தினை புண்படுத்தி விட்டது. அவர்களது ஒத்துழைப்பை பெறுவதற்குப் பதிலாக அது வரவிருக்கும் சச்சரவின் பீடிகையாக அமைந்து விட்டது. இந்தியர் எவரும் அந்த குழுவில் இடம் பெறாததே அதற்கு முக்கிய காரணமாகும். அத்தகைய நடவடிக்கை அரசியல் விவகாரங்களில் இந்தியர்கள் பெற்றுள்ள ஆற்றலுக்கு களங்கம் விளைவிப்பதாகத் தோன்றியது. வட்ட மேசை மாநாடு கோரிக்கையையும் நிராகரிக்கப்பட்டிருப்பதாகத் தோன்றியது. பிரிட்டிஷ் பார்லிமெண்டு இந்திய விவகாரங்களைக்கட்டுப் படுத்தி வரும் நிலையினை வற்புறுத்தி வந்ததன் காரணமாக இந்தியர்கள் தங்களுடைய விதியினை தாமே நிர்ணயித்துக்கொள்ளும் உரிமையினுக்கு மறுப்புத் தெரிவிப்பது போல தோன்றியது. ஆக்க முறையற்ற தேசிய மனப்பாங்கு வளர்வதற்கு விடுத்த அறைகூவலாக அது அமைந்தது. சைமன் குழு இந்தியாவிற்கு வந்த போதும், அது இந்தியாவில் பயணங்

களை மேற்கொண்ட போதும் அதற்கு எதிராக உணர்ச்சி பொருந்திய ஆர்ப்பாட்டங்கள் நடத்தப்பெற்றன. எங்கெங்கு காங்கிரசின் செல்வாக்கு பெருமளவில் இருந்ததோ அங்கெல்லாம் அது புறக்கணிக்கப் பெற்றது. அதனுடைய அறிக்கை அரசியலமைப்பு முறையைப் பற்றிய தலைசிறந்த படைப்பாகக் கருதப்படுகிறது. ஆனால் அதனுடைய வருகை ஒரு அரசியல் கேடாக விளங்கியது. காங்கிரசு ஊர்வலங்களை நடத்துதல், கறுப்புக்கொடி காட்டுதல் போன்ற செய்கைகளுடன் மட்டும் நின்றுவிடவில்லை. 1927-28-இல் சென்னையில் கூடிய காங்கிரசு சுதந்திரமே தனது குறிக்கோள் என்று அறிவித்தது. 1928-இல் கூடிய அனைத்து கட்சி மாநாட்டில் நேரு அறிக்கை என்ற தன்னாட்சித் திட்டம் ஒன்று வெளியிடப் பட்டது.[1] அவ்வாண்டின் இறுதியில் மகாத்மா காந்தி காங்கிரசுக்குள் மீண்டும் வரவேற்கப்பட்டார். 1929-இல் டொமினியன் நிலை அளிப்பதற்கு முன்னர் வட்ட மேசை மாநாடு கூட்டப்பட வேண்டும் என்ற கருத்து காங்கிரசில் பலம் பெற்று வந்தது. பிரிட்டனில் கன்சர்வேடிவ் ஆட்சி ஒழிந்து, தொழிற் கட்சியினர் ஆட்சி ஏற்பட்டது. பிரிட்டிஷ்காரர்கள் தேசிய வாதிகள் ஆகிய இருவருக்கிடையே ஏற்பட்டிருந்த கருத்து வேற்றுமையை அகற்ற இர்வின் பிரபு மற்றொரு முயற்சி மேற்கொள்ள இவ்வாட்சி மாற்றம் பெரிதும் உதவியது. டொமினியன் நிலை பிரிட்டிஷ் அரசுக் கொள்கையின் குறிக்கோள் என்றும், அடுத்த நடவடிக்கையினைப் பற்றிய ஆலோசனை நடத்த வட்ட மேசை மாநாடு ஒன்று கூட்டப்பெறும் என்றும் புதிய பிரிட்டிஷ் அரசு 1929-இல் ஒரு அறிக்கையின் வாயிலாக வெளியிட்டது. அந்த அறிக்கை வெளியிட இர்வின் பெருந் தூண்டுதலாக இருந்தார். இந்த அறிக்கை ஒரு பெரும் சாதனையாகும். ஏனெனில் பிரிட்டிஷ் அரசியல் கட்சிகளின் பெரும் பகுதியினர் இந்த அறிக்கையினை ஏற்றுக் கொண்டனர். அவ்வாறு ஏற்றுக் கொண்டதன் வாயிலாக இந்தியாவில் தேசிய உணர்ச்சி ஒரு பெரும் சக்தியாக மட்டுமின்றி இந்திய அரசியல் வாழ்வில் ஆதிக்கம் பெற்ற சக்தியாக் விளங்கியது என்பதனை பொதுவாக ஏற்றுக் கொண்டனர். மிக்க செல்வாக்கும், அசாதாரணமான நுண்ணறிவும் உண்மை நிலையினை எளிதில் அறியக்கூடிய ஆற்றலையும் பெற்றிருந்த பெரும் அரசியல் மேதையான இர்வின் பிரபுவுடன் கூடி வாதிட வேண்டும் என்பதைப் பொறுப்புள்ள இந்தியத் தலைவர்கள் உணரவில்லை என்றால் அதற்காக வருத்தம் தெரிவிக்காமல் இருக்க முடியாது. அதே போல அக்காலத்தில் ஏற்பட்டிருந்த சூழ்நிலையில் விட்டுக் கொடா மனப்பான்மையினைக் காட்டிலும் ஒத்துழைக்கும் மனப்பான்

[1] அதனை உருவாக்கியவர்களுள் முக்கியமானவர்கள் மோதிலால் நேருவும், சர். டேஜ் பகதூர் சாப்ரூவும் ஆவார்கள்.

மையே நல்ல விளைவுகளை ஏற்படுத்தும் என்று அவர்கள் உணரவில்லை என்றால் அதற்காகவும் நாம் வருத்தம் தெரிவிக்காமல் இருக்க முடியாது. ஆனால் நடந்தது முற்றிலும் நேர்மாறானது. புதிய திட்டங்களை ஏற்றுக் கொள்வதைப் போல காணப்பெற்ற காந்தி, தன்னாட்சியுடன் கூடிய குடியேற்ற நிலை திட்டத்தை உடனடியாக நடைமுறைப்படுத்துவதற்கு ஒரு திட்டம் தயாரிக்க வேண்டும் என்றும், அதற்காக ஒரு வட்ட மேசை மாநாட்டினை கூட்ட வேண்டும் என்றும் அவர் வற்புறுத்தினார். அதற்கு அரசு இணங்க மறுக்கவே, அவர் சட்ட மறுப்பு இயக்கத்தை தொடங்கினார். சபர்மதி ஆசிரமத்தினின்றும் கடற்கரை ஊரான தண்டிக்கு நடந்து சென்று அங்கு சட்ட விரோதமான முறையிலே தாமே உப்பினை உற்பத்தி செய்தார். அதே நேரத்தில் பஞ்சாபில் பயங்கரச் செயல்கள் மீண்டும் தொடங்கப்பெற்றிருந்ததை உணர்ந்தும், இவ்வியக்கத்தைத் தொடங்கினார் என்பதை இங்கு குறிப்பிடுதல் அவசியமாகும்.

1930ஆம் ஆண்டில் தொடங்கப் பெற்ற சாத்விக சட்ட மறுப்பு இயக்கம் 1921-இல் தொடங்கப் பெற்ற ஒத்துழையாமை இயக்கத்தினின்றும் சில முக்கிய விஷயங்களில் மாறுபட்டு இருந்தது. இரண்டுமே வன்முறையினை விலக்கியிருந்தன. அவற்றுள் முதலில் தொடங்கப் பெற்ற இயக்கம் மந்தமான புரட்சியாகவும், இரண்டாவது இயக்கம் சுறுசுறுப்பு நிறைந்த புரட்சியாகவும் அமைந்திருந்தன. நிருவாகத்தினின்றும் விலகி நின்று அரசாங்கத்தினை செயற்பட வொட்டாமல் தடுக்க முடியும் என்று முதல் இயக்கம் எண்ணி இருந்தது. குறிப்பிடப் பெற்ற சட்ட விரோதமான செயல்களில் பொது மககளை ஈடுபடும்படி செய்வதன் வாயிலாக அரசாங்கத்தினை செயலாற்றல் அற்ற நிலையினுக்கு கொண்டு வந்து விட முடியும் என்று இரண்டாவது இயக்கம் கருதியது. கணக்கற்ற மக்களைக் கைது செய்யும் பொழுது பொது மக்களின் இரக்க உணர்ச்சி தானாகவே எழுந்து விடும் என்று எண்ணினார்கள். அதன் விளைவாக சிறிது சிறிதாக நிருவாகம் நடைபெறுவது தடை செய்யப்பட்டு விடும் என்று எண்ணினார்கள். நடவடிக்கைகளைத் தேர்ந்தெடுக்கும் போது மகாத்மா தான் பெற்றிருந்த பொது மக்கள் மனத்தினை புரிந்து கொள்ளும் சக்தியினை வெளிக் காட்டினார். உப்பு வரி மக்களின் பெரும் எதிர்ப்புக்கு இலக்காயிருப்பதை அறிந்து தன்னுடைய இயக்கத்தை சட்ட விரோதமான உப்புத் தயாரிப்பில் தொடங்கி வைத்தார். முஸ்லிம்கள் அவருக்கு ஆதரவு அளிக்க வில்லை.[1] ஆனால் இந்துக்களிடமிருந்து அவர் பெரும் ஆதர

[1] நேரு அறிக்கையில் தனித் தொகுதிகள் வேண்டாம் என்று கூறி இருந்த படியால் முஸ்லிம்கள் வெறுப்படைந்திருந்தனர்.

வைப் பெற்றார்.[1] மகாத்மா ஏழைகளின் நண்பனாகவும், சட்ட அறிவு கொண்ட அரசியல் வாதியாகவும், இந்து மகானாகவும் விளங்கினார். அதுவே அவர் இந்தியர்களை தன் வயப்படுத்திக் கொள்ளக் காரணமாயிருந்தது. ஏராளமான பெண்கள் இந்த இயக்கத்தில் கலந்து கொண்டதே இதனுடைய சிறப்புக் கூறாகும். இந்த வகையான பங்கு பெண்கள் விடுதலை இயக்கத்தில் ஒரு சிறப்பு மிகுந்த கட்டமாகக் கருதப் படுகிறது. இயக்கத்தின் மற்றொரு சிறப்பு பிரிட்டிஷ் சாமான் களை ஊர்க்கட்டு செய்தலேயாகும். இந்தக் கட்டுமானம் பரவலாக இருந்ததோடல்லாமல் பயனுடையதாகவும் இருந்தது. மூன்றாவது சிறப்பு யாதெனில் இடை இடையே மக்கள் வன்முறைச் செயல்களில் இறங்கியதேயாகும் எல்லைப்புற மாகாணத்திலும், சோலாபூரிலும் கலவரங்கள் ஏற்பட்டன அந்த நேரத்தில் தான் சைமன் குழு அறிக்கை வெளியிடப்பட்டது. மாநிலங்களில் மட்டுமே தன்னாட்சி முறை ஏற்படுத்தப் பெறவேண்டும் என்று சிபாரிசு செய்திருந்தது. அந்த வகையான சிபாரிசு எரிகிற நெருப்பில் ஊற்றப்படும் எண்ணெய் போல் அமைந்திருந்தது இந்திய அரசர்கள் உட்கொண்ட கூட்டாட்சி ஏற்படுத்திய பிறகுதான் மையத்தில் பொறுப்பாட்சி ஏற்படுத்துவதைப் பற்றி ஆலோசிக்க வேண்டும் என்று சைமன் குழு யோசனை கூறியது. அந்த வகையான யோசனை இந்தியாவில் தன்னாட்சி ஏற்படுத்துவதை காலவரையறையின்றி ஒத்திப் போடும் யோசனையாகக் கருதப்பெற்றது. கலவரங்கள், பிரிட்டனில் ஏற்பட்டிருந்த மாறுபட்ட கருத்துக்கள், தம்முடைய ஆலோசகர்களிடையே ஏற்பட்டிருந்த தயக்கங்கள், சந்தேகங்கள் ஆகியவற்றினுக்கும் இடையே வைசிராய் தமது முயற்சியைத் தொடர்ந்து மேற்கொண்டு வந்தார். சைமன் குழு அறிக்கையில் கூறப்பட்டுள்ள யோசனைகள்படி அரசாங்கம் நடக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை என்று கூறி மிதவாதிகளைத் திருப்திப் படுத்தினார். மேலும் அவர்களை வட்ட மேசை மாநாட்டில் கலந்து கொள்ளச் செய்தார். இந்திய-பிரிட்டிஷ் உறவு முறையில் இந்த மாநாடு ஒரு திருப்புக் கட்டமாக அமைந்தது. மையத்தில் பொறுப்பாட்சிக் கொள்கையினைப் புகுத்துவதாக இருந்தால் மையத்தில் கூட்டாட்சி முறையினை ஏற்படுத்துவதற்கும் தங்களுடைய அதிகாரங்கள் சிலவற்றை குறைத்துக் கொள்வதற்கும் தமது இணக்கத்தை அளிக்கத் தயாராக இருப்பதாகச் சுதேச மன்னர்கள் கூறினார்கள். இவ்வாறாக பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் கடைசி முறையாக சுதேச மன்னர்கள் வழி காட்டியாக விளங்கினார்கள். இத்தகைய முடிவினை மேற்கொள்ளுவதன் மூலமாக இந்திய அரசர்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்திலுக்கு கீழ்ப்

[1] இயக்கம் தொடங்கப்பெற்ற முதல் ஆறு மாதங்களில் சுமார் 60,000 பேர் கைது செய்யப்பட்டனர்.

பட்டிருந்த நிலையில் குறிப்பிடத்தக்க மாற்றம் ஏற்படும் என்று நம்பி னார்கள். அதே நேரத்தில் அவர்கள் தங்களுடைய இராச்சியங்களில் பொறுப்பாட்சியினை ஏற்படுத்த எண்ணம் கொள்ளவில்லை. ஆயினும் சுதேச இராச்சியங்கள் கூட்டாட்சியில் பங்கு கொள்ள முன் வந்தமை யால் மையத்தில் பொறுப்பாட்சி ஏற்படுத்துவதைப் பற்றி தொழிற் கட்சி அரசாங்கம் கொண்டிருந்த கருத்து மாறியது. தொழிற்கட்சி அரசாங்கத்தின் கருத்து மாற்றம், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கொள் கையைப் பற்றி காங்கிரசு கொண்டிருந்த மனநிலை மாறுவதற்கு காரண மாய் அமைந்தது. 1931ஆம் ஆண்டு ஜனவரி 19ஆம் நாள் மாநாடு முடி வுற்றது. அப்பொழுது பிரிட்டிஷ் பிரதமரான ராம்சே மாக்டோனல்டு கூட்டாட்சி அடிப்படையில் சட்டசபை ஏற்படுத்தப் பெற்ற பிறகு அரசாங்கம் பொறுப்பாட்சிக் கொள்கையினை ஏற்றுக் கொள்ளும் என்று அறிவித்தார். காந்தியும், காங்கிரசு காரியக் கமிட்டி உறுப்பினர்களும் விடுதலை செய்யப்பட்டனர். இர்வின் பிரபு மகாத்மாவுடன் நேரடி யான பேச்சு வார்த்தைகளை நடத்தினார். அந்த பேச்சு வார்த்தைகள் ஒருவருக்கு ஒருவர் என்ற அடிப்படையில் நடத்தப் பெற்றன. இவ் வாறாக இர்வின் பிரச்சனைகளை தீர்க்க ஒரு புதிய வழிமுறையைக் கையாண்டார். பேச்சு வார்த்தைகள் பிப்ரவரி மாதம் 17ஆம் தேதி தொடங்கி மார்ச்சு மாதம் 4ஆம் தேதி வரை நடத்தப்பெற்றன. பழைய காலத்தில் ஆட்சியாளர்கள் இருந்து வந்த ஒதுங்கிய நிலை இப் பொழுது மறைந்து விட்டது என்பதை இப்பேச்சு வார்த்தைகள் தெளிவு படுத்தின. ஆயினும் உறவு முறையில் சமரசத்துக்கு இடங் கொடாத்தன்மை அப்பொழுது இருந்தது போல் வேறெப்பொழுதும் ஏற்படவில்லை. அதிகாரமுடையவர்கள் அப்பொழுது ஒதுங்கி இருந்தது போல் வேறு எப்பொழுதும் ஒதுங்கி இருக்கவுமில்லை. அரசினர் காங்கிரசின் நட்பைப் பெற மிக்க ஆர்வம் காட்டினார்கள். காங்கிரசு தலைவர்களும் இயக்கம் வேகமாக தளர்ச்சியுற்று வருவதை அறிந்தனர். பொது மக்களும் உடன்பாடு செய்து கொள்ள வேண்டும் என்ற மனப்பான்மையை வளர்த்து வருவதையும் உணர்ந்தார்கள். பொது மக்கள் எதிர் பார்த்ததை விட அதிகமாகவே பெற்றுவிட்ட தாகக் கருதி வருவதையும் காங்கிரஸ் தலைவர்கள் உணர்ந்தனர். ஆகவே பேச்சு வார்த்தைகள் காந்தி இர்வின் சமரசத்துடன் முடிவுற்றன. சாத்வீக சட்ட மறுப்பு இயக்கம் கைவிடப்பட வேண்டும் என்பதும், வன்முறைச் செயலுக்காக குற்றம் சுமத்தப்பட்டவர்களைத் தவிர ஏனைய அரசியல் கைதிகளை விடுதலை செய்ய வேண்டும் என்பதும், வட்ட மேசை மாநாட்டின் இரண்டாவது கூட்டத்தொடரில் காங்கிரசு பங்கு கொள்ள வேண்டும் என்பதும் அதனுடைய முக்கிய கூறுகளாகும். ஏப்ரல் மாதம் கராச்சியில் கூடிய காங்கிரசு கூட்டத்தில் அந்த சமரசத்

திட்டம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அதே கூட்டத்தில் மகாத்மா காந்தி காங்கிரசின் ஒரே ஒரு பிரதிநிதியாக நியமிக்கப் பெற்றார்.

இருவகை மக்களுக்கு இடையே ஏற்பட்டிருந்த முறிவினை சரி செய்வதற்காக பெரிய மனதுடன் மேற்கொள்ளப்பெற்ற இந்த முயற்சிக்கு ஊழ்வினை கருணை காட்டவில்லை. அதே போல வரும் காலம் பற்றிய திட்டத்தை இருவருமே சேர்ந்து உருவாக்க மேற்கொள்ளப்பட்ட முயற்சிக்கும் ஊழ்வினை கருணை காட்டவில்லை. கராச்சிக் காங்கிரசு கூட்டம் நடைபெற்று வரும்போது பஞ்சாபில் பயங்கரச் செயல்களில் ஈடுபட்ட குற்றத்திற்காக பகத்சிங் தூக்கிலிடப் பட்டார். அந் நிகழ்ச்சி தீவிர மனப்பான்மையினை புதுப்பித்து விட்டது. கான்பூரில் ஏற்பட்ட வகுப்புக் கலவரங்கள் முஸ்லிம்களின் மனதைப் புண்படுத்தி விட்டன. முஸ்லிம் வகுப்பினர் அனைவரும் ஒன்று சேர்ந்து விடுக்கும் எந்த விதமான கோரிக்கையினையும் தாம் ஏற்றுக் கொள்வதாக மகாத்மா அறிவித்திருந்த பொழுதிலும் முஸ்லிம் கள் கோபம் தணியவில்லை. ஏனெனில் டாக்டர் அன்சாரியின் தலைமையின் கீழிருந்த காங்கிரஸ் முஸ்லிம்கள் பெரும்பான்மையான முஸ்லிம்களின் விருப்பங்களை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள் என்பது அனைவருக்குமே தெரிந்து இருந்தது. காங்கிரசுக்குள்ளேயே சர்சரவுகள் ஏற்பட்டன. சென் குப்தா கட்சியினருக்கும், சுபாஸ் சந்திர போஸ் கட்சியினருக்கும் இடையே ஏற்பட்ட தகராறு வங்காள காங்கிரசை நிரந்தரமாக வலியிழக்கச் செய்தது. பிரிட்டனின் கவனம் அனைத்தும் நிதி நிலையில் ஏற்பட்ட நெருக்கடியின் பால் திருப்பிவிடப் பட்டிருந்தது. தொழிற் கட்சி அரசு வீழ்ந்தது. ராம்சே மாக்டொனல் டின் தலைமையின் கீழ் அனைத்துக் கட்சி அரசு ஏற்படுத்தப்பெற்றது. ஆனால் இந்த அரசில் கன்சர்வேடிவ் கட்சியினர் பெருமளவில் இருந்தனர். வெட்ஜ் உட் பென்னுக்குப் பதிலாக தெளிவான அறிவாற்றல் பொருந்திய சர். சாமுவேல் ஹோர் இந்திய அரசியல் அலுவலகத்தை நடத்தும் பொறுப்பை ஏற்றார். டில்லியில் இர்வின் பிரபுவை அடுத்து வில்லிங்டன் பதவி ஏற்றார். வில்லிங்டன் வயதான வர். இர்வினைப் போன்று அவ்வளவு பொறுமைசாலி அல்ல. ஆயினும் நட்பு நாடும் மனப்பான்மை கொண்டவர்.

இத்தகைய மாறுதல்கள் நிறைந்த சூழ்நிலையில் வட்ட மேசை மாநாட்டின் இரண்டாவது கூட்டத் தொடர் கூடியது. கூட்டத் தொடக்கத்தில், மையத்தில் பொறுப்பாட்சி, மாநில சுய ஆட்சி ஆகிய பிரச்சனைகளை தனித் தனியே விவாதிக்க வேண்டும் என்ற யோசனையை அரசாங்கம் கூறியது. ஆனால் இந்திய பிரதிநிதிகள் அனைவருமே அதை எதிர்த்தனர். ஆகவே அந்த யோசனை கைவிடப்பட்டது.

ஆயினும் பிரிட்டிஷ் அரசினரின் மனநிலை சிறிது கடுமையாகி வருவது தெளிவாகத் தோன்றியது. மகாத்மா காந்தி இதனை புரிந்து கொள்ளத் தவறவில்லை. ஆயினும் அப்போதைக்கு சில சொற்பொழிவுகள் ஆற்றுவதுடன் தம் நடவடிக்கையை நிறுத்திக் கொண்டார். இலண்டனில் இருந்த போது பிரிட்டிஷ் அரசியல் மேதைகளுடன் நேரடியான தொடர்புகளை வைத்துக் கொள்ளத் தமக்கு ஏற்பட்டிருந்த வாய்ப்பினை தவற விட்டார் என்று தான் கூற வேண்டும். இந்தியா முழுவதற்கும் தான் பிரதிநிதி என்று கூறி முஸ்லிம்கள், தீண்டப்படாதவர்கள் ஆகியோருடைய நட்பைக் கெடுத்துக் கொண்டார். புதிய இந்திய அமைச்சர் பெற்றிருந்த மனம் விட்டு பேசுந் தன்மையினையும், நேர்மையினையும் வெகுவாகப் புகழ்ந்திருந்த போதிலும், பழைய சந்தேக மனப்பான்மை மீண்டும் தலையெடுக்கத் தொடங்கியது. ஆகவே ஆதிக்கநிலை பெற்றிருந்த கன்சர்வேடிவ் கட்சி சில ஆண்டுகளில் எத்துனை தூரம் முன்னேறியுள்ளது என்பதையும், இதுவரை முடிக்கப் பெற்றிருந்த வேலையினை கன்சர்வேடிவ் கட்சியினர் ஏற்றுக்கொண்ட நிலையினையும் அவர் கவனிக்கத் தவறினர். பிரிட்டிஷ் அரசினரின் இந்தியப் பிரச்சனையை அணுகு முறையில் ஏற்பட்டிருந்த மாற்றம் அவர்களுடைய எண்ணத்தில் ஏற்படவில்லை. ஆக்க முறையான சாதனைகள் குறிக்கோளை நோக்கி விழிப்புடன் முன்னேறுதல் ஆகிய வற்றைப் பற்றிய வாசகங்களுக்குப் பதிலாக காப்பு நிபந்தனைகள் ஏற்படுத்தப்பெற்றன. காப்பு விதிகளை ஏற்படுத்துவதில் மிக்க கவனம் செலுத்தப்பட்டது. பட்டியல்கள் அட்டவணைகள் ஆகியவற்றில் கருத்து செலவிடப்பட்டிருந்தது திட்ட நோக்குடன் மேற்கொள்ளப் பட்ட முன்னேற்ற உணர்ச்சி இப்பொழுது அழிந்து விட்டது. அரசாங்கம் மீண்டும் மற்றொரு வண்டியினை தடுத்து நிறுத்தும் தடையாகத் தோன்றியதேயொழிய தன்னுடைய வண்டியினை இயக்கிச் செலுத்துவதாகத் தோன்றவில்லை. இந்த சூழ்நிலையில் சட்டசபைகளில் உள்ள இடங்களை வகுப்பு வாரியாகப் பகிர்ந்து கொள்ளுவதில் இந்தியக் கட்சியினருக்குள் உடன்பாடு ஏற்படவில்லை. ஆகவே பிரிட்டிஷ் அரசினருக்குத் தாமே பகிர்ந்து அளிக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. இரண்டாவது கூட்டத் தொடர் ஏமாற்றத்தில் முடிவடைந்தது. ஆயினும் அது பின்வரும் தீமையினையும் அது குறித்துக் காட்டத் தவறவில்லை. மகாத்மா இந்தியா திரும்பிய மூன்று வாரத்திற்குள்ளாகவே மீண்டும் சிறையிலடைக்கப்பட்டார். காங்கிரசு கட்சிக்கு தடை விதிக்கப்பட்டது. காந்தி சிறையிலிருந்த போது அப்துல் கபார்கான் செஞ்சட்டை இயக்கம் என்கிற போராடுந் தன்மை பொருந்திய இயக்கத்தினைத் துவக்கினர். வங்காளத்தில் பயங்கரச் செயல்கள் மீண்டும் தலைகாட்டின. ஐக்கிய மாகாணங்களில் வரி கொடா இயக்கம் துவக்கப்பெற்றது. காங்கிரசுக்குள்ளே மீண்டும்

பலப் பரீட்சையில் இறங்க வேண்டும் என்று கூறும் கட்சியினர், ஒத்துழைப்பு முறையினுக்கு நல்லதொரு வாய்ப்பு கொடுக்க வேண்டும் என்று கூறும் கட்சியினரை விட அதிகமான செல்வாக்குப் பெற்றிருந்தனர். அரசாங்கத்திடம் இப்பொழுது ஏற்பட்டிருந்த புதிய முரட்டுப் பிடிவாதம் அவர்களுடைய செல்வாக்கை அதிகரிக்கச் செய்ய பயன்பட்டது. சமாதான முறை தக்க பயன் அளிக்கவில்லை என்று அரசினர் கருதினர். அரசினர் உறுதியாக நின்றால் காங்கிரசின் போராட்ட நடவடிக்கையினை முறியடிக்க இயலும் என்றும் அவர்கள் கருதினார்கள் இத்தகைய கருத்து சரியானதென்று பின்னர் உணரப்பட்டது. எனினும் அவர்களுடைய நடவடிக்கை 1931-இல் ஒழிக்கப்பட்டு விட்டதாகக் கருதப்பெற்று வந்த அவநம்பிக்கை மேலும் நீடிக்கப் பெறுவதற்குக் காரணமாக அமைந்துவிட்டது. ஒத்துழைப்பு முறையினுக்கு மேலும் ஒரு வாய்ப்பினை அளிக்க காந்தி முடிவு செய்திருக்கலாம். அத்தகைய முடிவினை மேற்கொண்டிருந்தால் காங்கிரசுக்குள் இருந்த கட்டுக்கடங்காத பிரிவினரை கட்டுப்படுத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கும். அப்படி இல்லையென்றால் காந்தி அவர்களுடன் சேர்ந்து கொண்டு காலத்திற்கேற்ப ஓட்டி ஒழுகி நடந்திருக்கலாம். அதே நேரத்தில் மற்றொரு போராட்டத்திற்கான சக்திகளை திரட்டிக் கொண்டு வர முடியும். ஆனால் மேற் குறிப்பிட்ட இரண்டு நடவடிக்கைகளுள் ஒன்றையேனும் அவர் மேற்கொள்ளவில்லை. அதன் பயனாக சட்ட மறுப்பு இயக்கம் சரியான முன்னேற்பாடு இன்றி துவக்கப்பெற்றது. போராட்டம், அதனால் ஏற்பட்ட கஷ்ட நஷ்டங்கள், ஆகியவற்றால் நாடு சோர்வு அடைந்து விட்டது. நாட்டு மக்கள் காங்கிரசின்பால் தங்களுடைய பரிவிரக்கத்தினைக் காட்ட மனம் ஒப்பியிருந்தனரே அன்றி அது நடந்து செல்லும் புரட்சிப் பாதையில் அதனைப் பின்தொடர்ந்து செல்லத் தயாராக இல்லை. காங்கிரஸ் தலைவர்கள் பொதுமக்கள் ஆகியோரிடையே ஏற்பட்டிருந்த தொடர்பு சில ஆண்டுகள் அறுந்து இருந்தன. 1932ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் கைதிகளின் எண்ணிக்கை 34,458 ஆக உயர்ந்தது. அது 1930ஆம் ஆண்டில் பல மாதங்களில் கைது செய்யப்பட்டவர்களின் எண்ணிக்கையில் பாதியேயாகும். ஆனால் ஜூலை மாதத்தில் அவர்களின் எண்ணிக்கை 4683 ஆகக் குறைந்து விட்டது. இவ்வாறாக இயக்கம் படிப்படியாக அழிவுற்று வந்தது. அரசினர் பெரும் வெற்றியடைந்து விட்டதாகக் கூற முடியும். நாட்டு மக்கள் அமைதியாக இருந்தாலும் அவர்களிடம் காணப்பெற்ற துயரார்ந்த நிலையினை யாவரும் எளிதில் அறிந்து கொள்ள இயன்றது. ஒத்துழையாமை இயக்கம் வீழ்ச்சியுற்ற பிறகு நம்பிக்கை அளிக்கவல்ல மற்றொரு முறையினை கையாள இன்னும் முயற்சி மேற்கொள்ளப்படவில்லை. அதற்கு மாறாக நிகழ்ச்சிகளை எதிர் நோக்கி ஐய மனப்பான்மையுடன் காத்திருக்கத்

தொடங்கினார்கள். சீர்திருத்தங்கள் பயன் தரும் கருத்துக்களை உட்கொண்டிருந்தன என்று எண்ணியவர்கள் காத்திருக்க முடிவு செய்தனர். ஆனால் அவர்களிடம் பழைய ஆர்வம் காணப்பெறவில்லை. சீர்த்திருத்தங்கள் பயன்தரும் கருத்துக்களை உட்கொண்டிருக்கவில்லை என்று எண்ணியவர்கள் நம்பிக்கையற்று ஒதுங்கி இருந்தனர். இத்தகைய ஒதுங்கிய மனப்பாங்குடன் மக்கள் புதிய திட்டம் மெதுவாக உருவாக்கப்பெற்று வருவதைக் கூர்ந்து கவனித்து வந்தனர். புதிய திட்டத்தையொட்டி மேற்கொள்ளப்பெற்ற பெரிய ஏற்பாடு களின் உண்மைச் சிறப்பு மக்களின் மனதில் சிறிது சிறிதாக பதியத் தொடங்கியது. மேலும் சட்ட மறுப்பு இயக்கம் புதுப்பிக்கப் பெற்றி ருந்தும், சர்ச்சில் தலைமையின் கீழ் செயற்பட்டு வந்த கடும் பிற்போக் காளர்களின் எதிர்ப்பு தொடர்ந்து இருந்து வந்தும், அனைத்துக் கட்சி அரசாங்கம் இந்திய அரசியலமைப்பில் முன்னேற்றங்களை ஏற்படுத்தும் முயற்சியினைத் தொடர்ந்து மேற்கொண்டு வந்தது. அதன் பயனாக இந்திய மக்களின் மனதை அது கவர்ந்து விட்டது என்றே கூற வேண்டும். இந்த முன்னேற்ற நடவடிக்கைகள் பின்வருமாறு: வட்ட மேசை மாநாட்டின் மூன்றாவது கூட்டத் தொடர் நடத்துதல். 1932ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்ற வகுப்புவாரி பிரதிநிதித்துவத் தைப் பற்றிய தீர்ப்பு, தீர்வு காணப்பெறாத பிரச்சனைகளுக்கு தீர்வு காணுவதற்காக ஏற்படுத்தப்பெற்ற ஆய்வுக் குழுக்கள், பல காலம் நீடித்து வந்த பார்லிமெண்டு விசாரணைகள், பார்லிமெண்டு விவாதங்கள் புதிய திட்டம் 1935ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. இதற்கிடையே வில்லிங்டன் பிரபுவின் பதவிக் காலம் முடிவடைந்து கொண்டு வந்தது. 1936-இல் இச்சட்டத்தை நடைமுறைப்படுத்துவதற்காக லின்லித்கோ பிரபு இந்தியாவிற்குப் புறப்பட்டார்.

# 5. பாகிஸ்தான் தோற்றம்

1930ஆம் ஆண்டிற்கு முன்னர் பாகிஸ்தான் என்ற வார்த்தையினை எவரும் கேட்டிருக்க முடியாது. 1940–இல் அதுவே தனது குறிக்கோள் என்று முஸ்லிம் லீக் கட்சி அறிவித்தது. 1947–இல் பாகிஸ்தான் 7 கோடி மக்களைக் கொண்ட ஒரு தனி நாடாக ஏற்படுத்தப்பெற்றது. வெறும் அரசியல் தூண்டுதலுணர்ச்சிகள் மட்டும் அத்தகைய துரிதமான வளர்ச்சிக்கும் பெருவாரியான வெற்றிக்கும் காரணங்களாக அமைந்திருக்க முடியாது. வேறு உள்ளார்ந்த காரணங்கள் இருக்க வேண்டும். அந்த காரணங்கள் வெகு நாட்களுக்கு முன்னரே தோன்றி இருக்க வேன்டும். 1941-இல் பிறப்பு இறப்பு கணக்கு எடுத்த பொழுது இந்திய முஸ்லிம்களின் எண்ணிக்கை சுமார் ஒன்பது கோடியே இருபது லட்சம் என்று கணக்கிடப்பட்டது. அது மொத்த மக்கள் தொகையில் அதாவது முப்பத்தெட்டு கோடியே தொண்ணூறு இலட்சத்தில் 24 சதவீதமாக இருந்தது. இந்த ஒன்பது கோடியே இருபது இலட்ச பிரசாரம் செய்யும் பொழுது பத்து கோடியாக உயர்ந்து விட்டது. மொத்த மக்கள் தொகை நாற்பது கோடி என்று பேசப்பட்டு வந்ததால் பத்து கோடி என்று சொல்லும் பொழுது ஏறக்குறைய சரியான எண்ணிக்கையைத்தான் குறிப்பிட்டனர் என்று கூறலாம். நான்கு கோடியே இருபது இலட்ச மக்கள் சீக்கியர், கிறித்தவர், சமணர், பார்சிகள், காட்டுப் பகுதிகளில் வாழ்ந்து வந்த பழங்குடி மக்கள் ஆகிய வகுப்புகளைச் சேர்ந்தவர்கள். இவ்வாறாக மொத்தத்தில் நான்கு பேர்களுக்கு ஒருவர் என்ற திட்டத்தில் முஸ்லிம்கள் இருந்தனர். நாட்டிலுள்ள சிறுபான்மையினருள் அவர்களே எண்ணிக்கையில் முதன்மையான இடம் பெற்றிருந்தனர். சிறுபான்மையினருள் பஞ்சாபிலுள்ள சீக்கியர்களைத் தவிர, முஸ்லிம் வகுப்பு ஒன்றினை மட்டுமே அரசியல் முக்கியத்துவம் பெற்றதாகக் கருத முடியும். அவர்கள் தங்களை சிறுபான்மையினராகக் கருதவில்லை. அவர்கள் தங்களைத் தனிப்பட்ட ஒரு தேச மக்களாகக் கருதி வந்தார்கள் பாகிஸ்தான்

இயக்கத்தைப் பற்றி புரிந்து கொள்ளுவதற்கு இந்த மனப்பான்மையை நாம் உணர வேண்டுவது அவசியமாகும்.

இந்திய முஸ்லிம்கள் எப்பொழுதும் தங்களை ஏனைய மக்களினின்றும் வேறுபட்டவர்கள் என்று கருதி வந்தனர். அதே நேரத்தில் இந்தியர்கள் என்ற பட்டத்தை எல்லா சமயங்களிலும் அவர்கள் நிராகரித்து வரவில்லை என்பதையும் நாம் இங்கு குறிப்பிட வேண்டும். இஸ்லாமிய கலாசாரம் என்பது ஒரு தனி முறையான கலாசாரம் என்ற கருத்து, மேல் நாட்டு தேசிய உணர்ச்சி, ஆகிய இவ்விரு கருத்துக்களின் கலப்பே பாகிஸ்தான் என்பதாகும். இவ்வாறாக சமயம், கலாசாரம் ஆகியவற்றைச் சார்ந்த ஒரு வகுப்பினை பிரிவினையைக் கோரும் அரசியல் சக்தியாக பாகிஸ்தான் இயக்கம் மாற்றி விட்டது. இந்திய முஸ்லிம்கள் பல வகையான இனங்களினின்றும் தோன்றியவர்கள். அநேக மொழிகளைப் பேசி வந்தனர். இந்தியா முழுவதிலும் சிதறி இருந்தனர். இத்தகைய ஒரு வகுப்பினர் பிரிவினையைக் கோரும் அளவிற்கு ஒரு பெரிய அரசியல் சக்தியாக வளர்ந்து விட்டதற்குத் தகுந்த காரணம் என்ன என்பதை அறிய பண்டைய வரலாற்றினை நாம் துருவிப் பார்ப்பது அவசியமாகும். இந்தியாவிற்குள் முதல் முதலாக வந்த முஸ்லிம்கள் அராபியர்கள் ஆவர். அவர்களுடைய தலைவர் முகமது பின் காசிம் என்பவர். அவர் கி. பி. 712-இல் சிந்து மாகாணத்தைக் கைப்பற்றினார். அவரையடுத்து மாமூத் கஜினி இந்தியாவின் மீது படையெடுத்து வந்த பஞ்சாபை வென்றார். அந்நிகழ்ச்சி 11ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஏற்பட்டது. பஞ்சாபும் பெரும்பாலும் முஸ்லிம் பகுதியாக மாறியது. ஆனால் சிந்து மாகாணத்தில் இருந்த வந்த இந்துக்களைவிட பஞ்சாபிலிருந்த இந்துக்கள் (பிறகு சீக்கியர்கள்) அதிகமான முக்கியத்துவம் பெற்றிருந்தனர். 1400-இல் காஷ்மீர் பிடிபட்டது. அங்கும் காஷ்மீர் பிராமணர்களைத் தவிர ஏனையோர் இஸ்லாம் மதத்தைத் தழுவினர். காஷ்மீர் பிராமணர்கள் எண்ணிக்கையில் குறைவாக இருந்த போதிலும் முக்கியத்துவம் பெற்றவர்களாக இருந்தனர்.

1192-இல் தானேச்சுவரத்தில் பிருத்விராஜ் தோற்கடிக்கப்பெற்ற பிறகு, டில்லி முகமது கோரியின் கையில் சிக்கியது. அதன் பிறகு இஸ்லாமியர் இந்தியாவின் பெரும் பகுதியைக் கைப்பற்றலானார்கள். இருபது ஆண்டுகளுக்குள்ளாகவே துருக்கிய முஸ்லிம்கள் வங்காளக் கடலை சென்றடைந்தனர். ஏறக்குறைய நூறு ஆண்டுகளில் தெற்கே மதுரை வரை ஊடுருவிச் சென்றனர். அப்பொழுதிலிருந்து 1260 வரை அவர்கள் இந்தியாவில் ஆதிக்கம் பெற்றிருந்தனர். இந்த 5½ நூற்றாண்டுகளில் 4 நூற்றாண்டு காலம் வட இந்தியா இரு முஸ்லிம்

பேரரசுகளின் ஆதிக்கத்திற்குட்பட்டு இருந்தது.[1] பதினைன்காம் ஆண்டின் தொடக்கத்திலிருந்து கிருஷ்ணா நதி வரையுள்ள தக்காணப் பகுதி முஸ்லிம் ஆளுகைக்கு உட்பட்டிருந்தது. இந்தியா முழுவதும் இருமுறை ஒரே முஸ்லிம் ஆட்சியின் கீழ் கொண்டுவரப் பெற்றிருந்தது.

இத்தகைய சூழ்நிலையில் தான் மக்கள் தொகையில் நான்கில் ஒரு பங்கு முஸ்லிம்களாக மாறினர். ஆனால் முஸ்லிம் மக்கள் ஒரு படித்தான நிலையில் இருந்தனர் என்று கூற முடியாது. அதற்கு மாறாக முஸ்லிம்கள் பல உட்பிரிவுகளாகப் பிரிந்திருந்தனர். அவற்றுள் முதலாவது வெளி நாடுகளிலிருந்து வந்த முஸ்லிம் பிரிவாகும். வெளிநாட்டு முஸ்லிம்கள் அராபியர், துருக்கியர், பத்தானியர், ஆப்கானியர், பாரசீகர் எனப் பல வகையாகப் பிரிந்திருந்தனர். அவர்கள் கூட்டம் கூட்டமாகவும், குலம் குலமாகவும், குடும்பம் குடும்பமாகவும் இந்தியாவிற்குப் பொருள் தேடிவந்து நிரந்தரமாக வாழத் தொடங்கினார்கள். பழைய பஞ்சாப், சிந்து, எல்லைப்புறங்கள் ஆகியவற்றில் வாழ்ந்திருந்த முஸ்லிம்கள் குல மரபுக் கூட்டத்தினைச் சேர்ந்தவர்கள். ரோஹில்கண்டில் வாழ்ந்திருந்த ரோஹில்லர்கள், பர்ஹாவைச் சார்ந்த சையித்துகள் ஆகியோரைப் போன்ற முஸ்லிம்கள் வடக்கினின்றும் தெற்காக வெகுதூரம் சென்று பல இடங்களில் குடியேறினார்கள். ஆயினும் சாகர்கள் குஷானர்கள், ஹூணர்கள் ஆரிய மொழியைப் பேசி வந்த பழங்குடிகள் ஆகிய மக்கள் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு பெயர்ந்து சென்ற அளவில் முஸ்லிம்கள் பெயர்ச்சி ஏற்பட்டதற்கு யாதொரு சான்றும் கிடையாது. இந்திய முஸ்லிம்கள் பெரும்பாலும் இந்திய மரபு மூலத்தினின்றும் தோன்றியவர்களாக இருந்தனர். பாரசீகத்தினின்றும், மத்திய ஆசியாவினின்றும் பல குடும்பங்கள் அவ்வப்போது வந்து கொண்டே இருந்தனர். இங்கு ஏற்பட்டிருந்த வேலை வாய்ப்பும், கௌரவத்தைப் பெறக்கூடிய வாய்ப்பும் அவர்கள் இந்தியாவிற்கு வர காரணமாயிருந்தன. நைஜாமின் மூதாதையினர் இவ்வாறு தான் 17ஆம் நூற்றுண்டில் இந்தியாவிற்கு வந்தனர். இதே போல்தான் அயோத்தி நவாப் வசீர்களுடைய மூதாதையினரும் இந்தியா வந்து சேர்ந்தனர். மொகலாயப் பேரரசர் ஷா ஆலத்தின் அமைச்சரான மீர்சா நசாப்கான் பிற்காலத்தில் அயல் நாட்டிலிருந்து வந்து இந்தியாவில் குடியேறி பெரும் சிறப்பைத் தேடிக் கொண்ட முஸ்லிம் மக்களுள் ஒருவர் ஆவார். சில குடும்பங்களின் அயல்நாட்டு மரபு மூலம் அவர்களுடைய பெயர்களினின்றும் நாம் தெரிந்துகொள்ள முடியும். உதாரணமாக பொகாரிகள் என்ற

[1] டில்லி சுல்தான்களின் பேரரசு 1192-1398. மொகலாயப் பேரரசு 1526-1760.

பெயர் அயல்நாட்டு மரபு மூலத்தை வெளிப்படுத்துகிறது. தூரானியன், இரானியன் கட்சியினர்கள் மொகலாய அரசியலில் சிறப்பான இடம் பெற்றிருந்தனர்.

அடுத்த வகையான முஸ்லிம்கள் கலப்புத் திருமணத்தின் விளைவாகத் தோன்றியவர்கள் ஆவார். சட்லெஜ் நதிக்கு கிழக்கே ஏற்படுத்தப் பெற்ற இந்திய முஸ்லிம் ஆட்சி முதலில் நாடு பிடித்துக் கொண்ட இராணுவத்தினரின் ஆட்சியாக இருந்தது. இராணுவ அதிகாரிகளும் வீரர்களும் மனைவிமார்களைத் தேடலாயினர். இந்தியப் பெண்களை மணம் புரிந்தனர். இவ்வாறாக இந்தியா முழுவதும் கலப்பு சாதியினர் தோன்றினர். பிற்காலத்தில் தோன்றிய ஆங்கிலோ-இந்தியர்களைப் போலல்லாமல், இவர்கள் தாங்கள் நிரந்தரமாகத் தங்கி விட்ட நாட்டினுடன் தமக்கு ஏற்பட்டிருந்த தொடர்பினை அறுத்துக் கொள்ளவில்லை. இன உணர்ச்சியைவிட மத உணர்ச்சிதான் அவர்கள் அனைவரையும் ஒன்றாக்கும் சக்தியாக இருந்தது. இந்த வகுப்பினின்றும் தான் பிற்காலத்தில் முஸ்லிம் தலைவர்களுள் பெரும்பாலோர் தோன்றினர்.

மூன்றாவது வகையான முஸ்லிம் வகுப்பு மத மாற்றத்தின் விளைவாக ஏற்பட்டது. இவ்வகுப்பினரே முஸ்லிம்களுள் எண்ணிக்கை பெரும் பான்மையினராவர். கட்டாயத்தின் பேரில் சிலர் மதம் மாறினர். சந்தேகத்திற்கிடமற்ற இந்த வகையான மத மாற்றத்திற்கு முதன்மையை அளிக்கும் போது நாம் விழிப்புடன் இருத்தல் நல்லது. சில முஸ்லிம் வரலாற்று ஆசிரியர்கள் அதில் பெருமை கொண்டனர். கட்டாய மத மாற்றத்தில் காட்டப் பெற்ற ஆர்வம் மிகை படுத்தி இருக்கக் கூடும். இந்துக்களைப் பற்றி சரிவர புரிந்து கொள்வதற்கு முன் மேற்கொள்ளப் பட்ட போர் ஏற்பாடுகள் நடந்து வந்த போது இத்தகைய கட்டாய மத மாற்றம் பெருமளவில் நடைபெற்று வந்தது. அதுவும் அக்காலத்தின் முதற் பகுதியில் தான் வெகு தீவிரமாக தோன்றியிருந்தது. ஆயினும் சில தனிப்பட்ட கட்டாய மத மாற்ற நிகழ்ச்சிகள் எல்லா காலத்திலும் நடை பெற்று வந்தது. கட்டாய மத மாற்றத்திற்குப் பிறகு வேறு காரணங்களுக்காக மத மாற்றம் ஏற்பட்டு வந்ததை நாம் காண்கிறோம் பயன் கருதி மதம் மாறுவதும், இஸ்லாம் மதக்கொள்கையின் பால் ஏற்பட்ட பற்றினால் மதம் மாறுவதும் நடைபெற்று வந்தது. முஸ்லிம் அரசில் உயர்ந்த பதவிகளைப் பெறுவதற்கு உயர்குடி இந்துக்களில் ஒரு சிலர் இஸ்லாம் மதத்தைத் தழுவத் தொடங்கினார்கள். சிலர் இஸ்லாம் மதத்தில் ஏற்பட்ட பற்றின் காரணமாக மதம் மாறினர். வேறு சிலர் இரண்டு காரணங்களுக்காகவும் மதம் மாறினார்கள். இத்தகைய மத மாற்றம் சிறிதளவே ஏற்பட்டு வந்த போதிலும் அது ஒரே சீராக நடைபெற்று வந்தது. பிரோஸ் ஷாவின் அமைச்சர்

கான் ஜஹான் இத்தகைய மத மாற்றத்தின் எடுத்துக் காட்டாக விளங்குகிறார். அநேகர் முஸ்லிம் பெயர்களைச் சூட்டிக் கொண்டனர். ஆனால் முஸ்லிம் பூரிகள் (Muslim Puris) போன்றவர்கள் தங்களுடைய பழைய குடும்பப் பெயரைத் தொடர்ந்து வைத்திருந்தனர்.

மதம் மாறியவர்களுள் பெரும்பான்மையினர் விரும்பி இஸ்லாம் மதத்தை ஏற்றுக் கொண்டவர்களாவார்கள். மேலும் அவர்களுள் பெரும்பான்மையினர் இந்து சமுதாயத்தின் கீழ்ப்படி நிலை மக்களாவார்கள். கிழக்கு வங்காளத்தில் பெருமளவில் ஏற்பட்ட மத மாற்றத்தினை இத்தகைய நிகழ்ச்சிக்கு உதாரணமாகக் கூறலாம். பிராமணர் துன்புறுத்தலினின்றும் விடுவித்துக் கொள்ள புத்த மதத்தைச் சார்ந்த விவசாயிகள் இஸ்லாம் மதத்தினை தழுவினர் என்று சிலர் கூறுவர். வேறு சிலர் ஆன்மீகப் பற்றுடைய கிராமவாசிகள் யாதொரு தயக்கமின்றி உடனடியாக இஸ்லாம் மதத்தில் சேர்ந்து விட்டனர் என்று சிலர் கூறுவர். எவ்வாறு இருப்பினும் கிழக்கு வங்காளத்தில் பெருமளவில் ஏற்பட்ட மத மாற்றம் விரும்பி மேற் கொள்ளப்பட்டது என்பதை மறுக்க இயலாது. மேலும் கீழ்ப்படிநிலை மக்களே பெருமளவில் மாறினர் என்பதையும் மறுக்க இயலாது. இத்தகைய மத மாற்றம் கிழக்கு வங்காளத்தில் மட்டும் ஏற்பட்டதாகக் கூற இயலாது. நாடு முழுவதிலும் இத்தகைய நிகழ்ச்சி ஏற்பட்டது. இந்து சமுதாயத்தில் கீழ்ப்படிநிலை மக்களுக்கு அளிக்கப் பெறாத ஒரு அந்தஸ்தினையும் ஒரு நம்பிக்கையையும், இஸ்லாம் அம்மக்களுக்கு அளிக்க வல்லதாக இருந்தது. ஆகவே தான் பொதுவாக கீழ்ப்படிநிலை மக்கள் இஸ்லாம் மதத்தில் பெருமளவில் சேர்ந்திருந்தனர். இராஜபுத்திரர்களும் இஸ்லாம் மதத்தைத் தழுவினார்கள். இதிலிருந்து வட மேற்குப் பகுதியில் இந்திய சமுதாயத்தின் உயர்குடி மக்களிடத்திலும் இத்தகைய மத மாற்றம் ஏற்பட்டிருந்தது என்பது தெளிவாகிறது. இந்த சமய மாற்றங்களுக்கு அரசர்களோ, படை வீரர்களோ பொறுப்பல்ல. ஆயினும் இந்திய முஸ்லிம் சமுதாயத்தில் ஒரு புதிய ஆக்கக்கூற்றினை அவை புகுத்தின. அந்த புதிய ஆக்கக்கூறு சூபி (Sufi) இயக்கமாகும். சூபி ஞானிகள் அல்லது பீர்கள் (Pirs) பதினோராம் நூற்றாண்டில் பஞ்சாபில் இருந்து வந்தனர். பதின்மூன்றாம் நூற்றாண்டில் அவர்கள் முஸ்லிம் படைகளைத் தொடர்ந்து இந்தியாவின் பல பாகங்களுக்குச் சென்றனர். அவர்களுள் அநேகர் கல்வியிற் சிறந்து விளங்கினார்கள். அவர்கள் கல்விமான்களாகவும், கவிகளாகவும் மட்டும் விளங்கவில்லை நல் ஒழுக்க வாழ்க்கை வழி காட்டிகளாகவும் இருந்தனர். அவர்கள் சீடர்களையும் பெற்று இருந்தனர். ஆஜ்மீரைச் சார்ந்த மூயின் உத்தீன் சிஷ்டி, டில்லியைச் சார்ந்த நைஜாமுத்தீன் ஆலியா போன்ற சில மகான்கள் நகரங்களுக்கு அருகே வசித்து வந்தனர். அவர்களுடைய சமாதிகள் கோயில்களாகவும், பக்திமூட்டும்

இடங்களாகவும், மதமாற்று இடங்களாகவும் விளங்கின. ஏனையோர் கன்காக்கள் (Khanqahs) எனப்படும் மடங்களில் கூட்டமாக வாழ்ந்து வந்தனர். பழைய முஸ்லிம் நகரங்களில் இன்னும் அம்மடங்களின் சின்னங்களை பெருமளவில் காணலாம். இவர்கள் பொதுவாக அரச சபையினின்றும், உலாமா எனப்படும் வைதீக இஸ்லாமிய சமயப் பேரறிஞர்களினின்றும் ஒதுங்கி வாழ்ந்தனர். அவர்கள் மக்களிடம் நேரடித் தொடர்பு கொண்டு செயலாற்றி வந்தனர். அவர்கள் இஸ்லாம் மதத்தின் கொள்கைகளை விளக்கும் ஆசான்களாகவும், மேடைப் பேச்சாளர்களாகவும் விளங்கினார்கள். அகச்சார்பான வாழ்க்கையையும் கடவுள் ஒருவரே என்ற கோட்பாட்டினையும் வலியுறுத்தி வந்தனர். இந்து பக்தி இயக்கத்தினைப் பற்றி அறிந்து கொள்ள பயன்படும் ஒரு இணைப்புக் கருவியாக அவர்கள் கருதப் பெற்று வந்தனர். எல்லா மதங்களும் ஒன்றுதான் என்ற கொள்கையினை பிரசாரம் செய்து வந்த கபீர் என்ற முஸ்லிம் நெசவாளி இதற்கு எடுத்துக்கட்டாக விளங்குகிறார். கபீர் ஒரு இந்து சமய உட்பிரிவினை ஏற்படுத்தியவர் ஆவார். அவர்கள் ஆற்றி வந்த இதைவிட முக்கியமான பணி இஸ்லாம் மதத்தைப் பரப்புதலே ஆகும். இந்திய முஸ்லிம்களுள் பெரும்பான்மையினர் முஸ்லிம்களாக மாறுவதற்குக் காரணமாக விளங்கியவர் சூபிகளே அன்றி அரசர்களோ, போர் வீரர்களோ அல்லது துணிச்சல் வீரர்களோ அன்று. அவர்களுள் சிலர் விரிந்த மனப்பாங்கு பெற்றிருந்த போதிலும் பொதுவாக அவர்கள் தனித்தன்மை உணர்ச்சி, சமயப் பணியில் விருப்பம் ஆகியவை வளர காரணமாயிருந்தனர். மாறுபட்ட இனங்களைச் சேர்ந்தவர்களாயினும், மாறுபட்ட சமூகப் படிநிலைகளினின்றும் தோன்றியவர்களாயினும் அவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து நாகரீக ஒற்றுமை, மத ஒற்றுமை ஆகியவற்றைக் கொண்ட சமுதாயம் ஒன்று அமைக்க அவர்கள் உதவினர்.

பதினெட்டாம் நூற்றுண்டில் ஒரு பெரும் முஸ்லிம் சமுதாயம் நாடு முழுவதும் சிதறிக் கிடப்பதை நாம் காண்கிறோம். அதில் அதிகாரிகள், நிலக்கிழார்கள் ஆகியோரை உட் கொண்ட உயர் குடியைச் சார்ந்தவர்களைப் பெருவாரியாகக் காண்கிறோம், வாழ்க்கைத் தொழிலில் ஈடுபட்டு இருந்தவர்களையும் அரசாங்க அலுவலர்களையும் உட்கொண்ட நடுத்தர வகுப்பைச் சார்ந்தவர்களை சிறு அளவில் நாம் காண்கிறோம்; கைவேலைக்காரர்களையும் விவசாயிகளையும் உட்கொண்ட பெரிய பாட்டாளி வகுப்பினரையும் அதில் காண்கிறோம். நடுத்தர மக்கள் எண்ணிக்கை குறைவாக இருப்பதற்கு சில காரணங்கள் உண்டு. முதலாவதாக அவர்கள் இந்துக்களுடன் போட்டியிட வேண்டியதாக இருந்தது. இரண்டாவதாக முஸ்லிம் ஆட்சியில் திறம் படைத்த முஸ்லிம்கள் வெகு சீக்கிரமாக பதவி உயர்வு பெற்றனர். அதன் பயனுக் அவர்கள் உயர்குடியில்

சேர்ந்துவிட வாய்ப்பு ஏற்பட்டது. பதினெட்டாம் நூற்றாண்டு முஸ்லிம்களுக்கு ஒரு நெருக்கடியான காலமாகும். அவர்களுடைய ஆட்சி ஆதிக்கம் வீழ்ந்தது அத்துடன் அவர்கள் உயர் பதவிகள் மீது கொண்டாடி வந்த ஏகபோக உரிமையும் ஒழிந்திட்டது. காரன்வாலிஸ் பிரபு காலந் தொடங்கி பிரிட்டிஷ்காரர்கள் அவ்வுரிமையினை அனுபவித்து வரத் தலைப்பட்டனர். ஆகவே உயர் வகுப்புக்களைச் சார்ந்த முஸ்லிம்கள் இந்துக்களுடன் சிறு பதவிகளுக்காக மோத வேண்டியதாயிற்று. அல்லது அப்பதவிகளை நாடாமல் ஒதுங்கியிருந்து வறுமையில் வாட வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. விரைவில் மேல்நாட்டு கல்வி அறிவு பெற்றவர்களுக்குத் தான் அரசாங்க பதவிகள் அளிக்கப்பெறும் நிபந்தனை ஏற்படுத்தப்பெற்றது. வடமேற்குப் பகுதியினின்றும் முஸ்லிம்கள் இந்தியாவை நாடிவருவது பெரும்பாலும் நின்றுவிட்டது. ஆனல் கல்லாத ஆப்கானியாகள் மட்டும் இன்னும் வந்துகொண்டு இருந்தனர். இஸ்லாம் தனது பிறந்தகத்திலே அழிவுற்று வந்தது. ஆகவே அதனுடன் ஏற்படுத்தப்பெற்றிருந்த தொடர்புகளின் சிறப்பும் அப்பொழுது குன்றியது. அதன் பயனாக இந்திய இஸ்லாம் மதம் தன்னை இதுகாறும் வளம்படுத்தி வந்த மதம், நாகரீகம் ஆகியவற்றைச் சார்ந்த தொடர்பு இயக்கங்களை இழந்து விட்டது. இந்தியாவில் முஸ்லிம்கள் அரசியல் துறையைப் பொருத்தளவில் மற்றொருவருக்கு கீழ்படுத்தப்பெற்றனர். நாகரிகம் பொருத்தளவில் அவர்கள் தனிமை நிலைக்கு உட்படுத்தப்பெற்றனர். இஸ்லாமிய உணர்ச்சிகள் வலுவிழந்த நிலையை அடைந்த போது, சாதி வழக்கங்கள், மகான்களின் சமாதியை வழிபடுதல் போன்ற இந்து பழக்கங்களும் சமூக வழக்கங்களும் முன்பு விட இப்போதைக்கு அதிகளவில் பரவி வந்தன. ஆகவே சில மக்கள் கூட்டத்தினர் இஸ்லாமியக் கருத்துக்களை அதிகமாகக் கொண்டிருக்கின்றனரா அல்லது இந்துக் கருத்துக்களை அதிகமாக கொண்டிருக்கின்றனரா என்பதை அறிந்து கூறுதல் மிகக் கடினமாகத் தோன்றியது. வரி விலக்குப்பெற்ற நிலங்களை திரும்ப எடுத்துக் கொண்டதாலும், வங்காள நெசவுத் தொழில் அழிவுற்றதாலும் முஸ்லிம் சமுதாயம் பலத்த நெருக்கடிக்கு உள்ளாயிற்று.

இவ்வாறு ஆட்சியை இழந்து நாகரிக நிலையில் தொய்வுற்று கிடந்த நேரத்தில் தான் இந்திய இஸ்லாம் மேல்நாட்டு சவாலை எதிர் கொள்ள வேண்டியதாயிற்று. முதலில் நிலைமை மேன்மேலும் சீரழிவுற்றது. ஏனெனில் முஸ்லிம்கள் விலகிய நிலையில் இருந்த பொழுது, இந்துக்கள் புதிய மேல் நாட்டு கல்வியறிவைப் பயன்படுத்திக் கொண்டு புதிய உலகத்திலும், நிருவாகத்திலும் முதன்மை இடம் பெற்றனர். அந்த முதன்மை நிலையை அவர்கள் எப்பொழுதும் இழக்கவில்லை. 1857ஆம் ஆண்டு நடைபெற்ற கலகம் நிலைமையை மேலும் மோசமாக்கி

விட்டது ஏனெனில் இந்துக்கள் அதனுடைய தோற்றத்தின் காரணக்கூறாக அமைந்திருந்த போதிலும் முஸ்லிம்கள் பிரிட்டிஷ் ஆட்சியிடம் கொண்டிருந்த வெறுப்பையும், அதனிடம் அவர்கள் காட்டி வந்த விசுவாசமின்மையும் அப்பொழுது வெளிக்காட்டிவிட்டதாகக் கருதப்பெற்றனர். ஆனால் முஸ்லிம்கள் எண்ணிக்கை அதிகளவில் இருந்தபடியாலும் அவர்கள் மிக்க உள்ளுரம் வாய்ந்தவர்களாய் இருந்தபடியாலும் அவர்களை நிரந்தரமாக கீழ் நிலையில் வைத்திருக்க முடியாது என்பதும் அவர்களுடைய தனித் தன்மையினை போக்கி விட முடியாது என்பதும் விளங்கிற்று முஸ்லிம்கள் புத்துயிர் பெறுவதற்காக தோற்றுவிக்கப்பட்ட முதல் இயக்கங்கள் அவர்களுக்குள்ளிருந்தே வெளிப்பட்டன. ஆகவே அவற்றை உள்ளிருக்கும் தூசை நீக்க மேற்கொள்ளப்பட்ட இயக்கங்கள் என்று கூறலாம். அவை முஸ்லிம் மக்கள் அனைவரிடத்திலும் ஏற்பட்டிருந்தன. அதன் பிறகு தலைவர்களுக்கிடையே ஒரு இயக்கம் தோன்றியது. அதுதான் பாகிஸ்தான் இயக்கம். அது மேல்நாட்டு சக்திகளுக்கு எதிராக மிக்க காலங் கழித்து அளிக்கப்பெற்ற பதிலாக அமைந்திருந்தது, அவ்வியக்கம் முஸ்லிம் தலைவர்களையும், முஸ்லிம் மக்களையும் ஒன்றாக இணைத்து ஒரு தேசிய இயக்கம் ஏற்படக் காரணமாக அமைந்தது. முஸ்லிம் தேசிய இயக்கத்தினை இந்திய தேசிய காங்கிரஸ் இயக்கத்திற்கு ஒப்பிட முடியும்.

மேற் குறிப்பிட்ட இயக்கங்களுள் முதலாவது வாஹாபி இயக்கமாகும். அதன் அறிகுறிகளை ஷா-வாலி-உல்லா தொடங்கிய சீர்திருத்த இயக்கத்தில் காணலாம். ஷா-வாலி-உல்லா (1703-62) டில்லியைச் சார்ந்தவர். இந்திய முஸ்லிம்களுள் தலைசிறந்த இறைமை இயல் நூற் பேராசிரியருள் ஒருவர். அவர் குரானை பாரசீக மொழியில் மொழி பெயர்த்தார். அவரது பிள்ளைகளில் இருவர் உருது மொழியில் எழுதினார்கள். அவர் தொடங்கிய சீர்திருத்த இயக்கத்தினை அவரது மகன் ஷா அப்துல் அஜிஸ் தொடர்ந்து நடத்தி வந்தார். அரேபியாவினின்றும் கொண்டுவரப்பெற்ற வாஹாபி கருத்துக்கள் அவரது சீடரான பரேய்லியைச் சார்ந்த சையத் அகமதுவை வெகுவாகக் கவர்ந்து விட்டன. அதன் பயனாக ஷா-வாலி-உல்லா தொடங்கிய சீர்த்திருத்த இயக்கம் பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் போராடுகிற வாஹாபி இயக்கமாக மாறியது.[1] அவ்வியக்கத்தின் தலைமை அலுவலகம் பாட்னாவில் ஏற்படுத்தப் பெற்றது.

[1] வாஹாபி கருத்துக்கள் சையத் அகமதுவிடம் செல்வாக்குப் பெற்றிருந்தமையால் அதற்கு வாஹாபி இயக்கம் என்று பெயர் ஏற்பட்டது. ஆனால் அவரது இயக்கத்திற்கும் வாஹாபிகளின் இயக்கத்திற்கும் மன நிலையில்தான் ஒற்றுமையிருந்ததேயன்றி இறைமை இயலில் ஒற்றுமை ஏற்பட்டிருக்கவில்லை.

இந்தியா இஸ்லாம் மதத்தில் நம்பிக்கையற்றவர்களின் ஆட்சியின் கீழ் இருந்து வந்த காரணத்தால் அதனை தார்-உல்-ஹார்ப் (Dar-Ul-Harb) அல்லது அமைதியற்ற உலகம் என்று கருதி வந்தனர். அக் காலத்தில் முஸ்லிம்களைக் கொடுமை படுத்தியவர்களுள் முதன்மையிடம் பெற்றிருந்த சீக்கியர்களுக்கு எதிராக சையித் அகமது தனது கவனத்தை செலுத்தி இருந்தார். சுவாத் பகுதியில் தங்கி அங்கிருந்து கொண்டே ஜிஹாத் அல்லது புனித சமயப் போரினை நிகழ்த்தி வந்தார். 1831-இல் சீக்கியர்களுடன் போரிடும்போது இறந்தார். இந்தியாவின் கீழ்ப் பகுதியில் இரண்டு இணையொத்த இயக்கங்களை நடத்தப்பெற்று வந்தன. ஜான்பூரைச் சேர்ந்த சேக் காரமத் அலியும், பரீத்பூரைச் சார்ந்த ஹாஜி ஷாரியாத் உல்லாவும் அவற்றின் தலைவர்களாக இருந்தனர்.[1] காராமத் அலி ஷா அப்துல் அஜீஸின் சீடர்களுள் ஒருவர். ஷாஜி ஷாரியத் உல்லா நில உடைமைப் போராட்டத்தில் கலந்து இருந்தார். ஆயினும் இந்த இரு இயக்கங்களும் அமைதியான முறையில் நடத்தப்பெற்று வந்தன. அவை சமயப் பிரசாரம் செய்து வந்தன. இந்தியாவின் கிழக்குப் பகுதியில் இஸ்லாம் மதம் வலுவடைவதற்கும் தூய்மை நிலை அடைவதற்கும் அவை பேருதவியாற்றின.[2] காராமத் அலியின் பணி பின்வருமாறு விவரிக்கப்பட்டுள்ளது. சிறு படகுகளின் துணைகொண்டு நாற்பது ஆண்டுகள் அவர் கிழக்கு வங்காள ஆறுகள் துணை ஆறுகள் ஆகியவற்றில் அங்குமிங்குமாகப் பயணம் மேற்கொண்டு அசாம் முதற்கொண்டு வங்காளக்குடாக் கடலில் உள்ள சாந்தீபி, ஏனைய தீவுகள் வரை வாழ்ந்து வரும் மக்களைச் சந்தித்து அவர்களிடையே இஸ்லாம் மதத்தில் ஏற்பட்டிருந்த சீர்திருத்தக் கருத்துக்களையும், புதிய மேம்பாடுகளையும் பரப்பி வந்தார். அவரது படகுகள் ஒரு நடமாடும் கல்லூரியினை ஒத்திருந்தது. ஒரு படகில் அவரும் அவர் தம் குடும்பத்தினரும் தங்கி வந்தனர். மற்றொன்றில் அவருடன் வந்த மாணவர்களும் சீடர்களும் வாழ்ந்து வந்தனர். மூன்றாவது வழிபாட்டு அறையாகவும், சொற்பொழிவு ஆற்றுமிடமாகவும், பயன்படுத்தப் பெற்றது.

அஹமதியா சமயக் கட்சியைப் பற்றி ஒரு சில வார்த்தைகளை இங்கு கூறலாம். அஹமதியா சமயக் கட்சியைத் தொடங்கியவர் மீர்சா குலாம் அஹமத் (1838–1908) என்பவராவார். அக்கட்சியின் தலைமை அலுவலகம் பஞ்சாபிலுள்ள காதியன் என்னுமிடத்தில் அமைக்கப்பட்டிருந்தது. பஞ்சாப் மக்களுள் அநேகர் அதில் சேர்ந்திருந்தனர். அதனுடைய அமைப்பு முறை போற்றற்குரியது. இந்தியாவிலும், இங்கிலாந்து உட்பட பல வெளிநாடுகளிலும் அக் கட்சியினர் தங்கள் மதத்தை

[1] இதற்கு பரெய்சி இயக்கம் என்று பெயர். (Faraidhi)
[2] S. Ikram Cultural Heritage of Pakistan. P. 15.

குறிப்பிடத்தக்க முறையிலே பரப்பி வந்தனர். அதனை தோற்றுவித்தவர் தம்மை தீர்க்கதரிசியாகக் கருதினர். நபிகள் நாயகத்தின் அருண் மொழியுடன் சில உண்மைகளைச் சேர்த்து அதனை முழுமையான நிலையை அடையச் செய்வதே தனது பணி என்று அறிவித்து வந்தார். இதனால் முஸ்லிம்களுள் பெரும் பகுதியினர் இந்த கட்சியினை இஸ்லாமிய மதத்திற்கு முரணான மதக்கட்சியாகக் கருதினார்கள். இந்திய இஸ்லாம் வளர்ச்சிக்கு அது ஆற்றிய தொண்டினைவிட அதனுடைய சார் பாளர்களுள்[1] ஒருசிலர் பெற்றடைந்த சிறப்புதான் அதன் மேம்பாட்டுக்குக் காரணமாகும்.

மேல்நாட்டு அறைகூவலுக்கு இந்திய முஸ்லிம்கள் அளித்த பதில் முஸ்லிம் அரசர்களிடமிருநது பிறக்கவில்லை. முஸ்லிம் அரசர்கள் ஐரோப்பிய சிறு அணிகலன்களிடம் தங்கள் மனத்தைப் பறிகொடுத்திருந்தனர் என்பதும், மேலீடான ஐரோப்பிய பழக்க வழக்கங்களை கையாண்டு வந்தனர் என்பதும் உண்மையே. ஆயினும் அவர்கள் மேல் நாட்டுக் கருத்துக்களை தங்கள் செவிவழி நுழைய இடங்கொடுக்கவில்லை. அவர்கள் கவனம் எல்லாம் தட்டுமுட்டு சாமான்கள், மது வகைகள், சீர் உடை ஆகியவற்றினைச் சுற்றியே இருந்து வந்தது. சையித் அகமதுகான் என்பவர்தான் முதல் மெய்யான முயற்சியை மேற்கொண்டார். அவர் 1817-இல் பிறந்தார். 1837-இல் பிரிட்டிஷ் அரசாங்க வேலையில் சேர்ந்தார். விரைவில் இரண்டாம் படியான நீதிபதியாக நியமிக்கப்பெற்றார். 1857ஆம் ஆண்டு நடைபெற்ற கலகத்தின் போது பிரிட்டிஷ் அரசாங்கத்தினிடம் விசுவாசமாக இருந்தார். அதனுடைய காரணங்களைப் பற்றி சிறப்புமிக்க ஒரு கட்டுரையினை வெளியிட்டார். மத்திய ஆசியாவினின்றும் வந்த சையத் குடியில் தோன்றினார். மேல்நாட்டு கல்வியிலும், கிழக்கு நாட்டுக் கல்வியிலும் சிறந்து விளங்கினர். ஆகவே பிற்போக்கான நிலையிலிருந்த கீழை நாட்டினருக்கும் அடாதமுறையில் நுழைந்து வரும் மேலை நாட்டினருக்கும் இடையே பொருள் விளக்குபவராகப் பணியாற்றுந் தகுதியினை பெற்றிருந்தார். தன்னுடைய கருத்துக்களை தன்னுடைய மக்கள் மனத்தில் பதிய வைக்க அவருடைய ஆற்றல் வாய்ந்த பண்பு உதவியது. அவரது கலப்பற்ற வாய்மை அவரை அவதூறுகளினின்றும் காப்பாற்ற உதவியது. 1869-இல் அவர் இங்கிலாந்து சென்றார். 1876-இல் பதவியினின்றும் ஓய்வு பெற்றார். 1878-இல் கவர்னர் ஜெனரலுடைய சட்டசபை உறுப்பினரானார். 1888-இல் வீரத்திருத்தகைப் பட்டம் பெற்ற அவர் 1898-இல் உயிர் நீத்தார். இந்திய முஸ்லிம்கள் மேல் நாட்டவர்

[1] சர். ஜபருல்லாகான், பாகிஸ்தான் வெளிநாட்டு அமைச்சர் 1947-55 சிறந்த எடுத்துக் காட்டாவார்.

களுடன் அரசியல், நாகரிகத் தொடர்புகள் வைத்துக்கொள்ள வேண்டிய அவசியத்தை அவர் உணர்ந்திருந்தார். பிரிட்டிஷ் ஆட்சியினர் கொண்டிருந்த சகிப்புத் தன்மையும், அவர்கள் ஏற்படுத்தி இருந்த அமைதி நிலையும் அவர்களுடைய ஆட்சிக்கு தார்-உல்-இஸ்லாமில் அல்லது சமாதான உலகில் இடம் பெறும் தகுதியினை அளித்திருக்கின்றன என்று கருதினார். கடவுளின் அருள் பெற்ற ஆட்சிகளுள் பிரிட்டிஷ் ஆட்சி ஒன்று என்று ஏற்றுக் கொள்ளப் பெற்றபின், முஸ்லிம்கள் பிரிட்டிஷ் ஆட்சியினரிடம் விசுவாசத்துடன் நடந்து அவர்களின் பாராட்டினைப் பெற வேண்டும் என்று எண்ணினார் அவ்வாறு செய்யத் தவறினால் அரசாங்கத்தின் ஆதரவைப் பெற ஏற்பட்டிருக்கும் போட்டியிலே இந்துக்களால் தோற்கடிப் பெறுவார்கள் என்று கருதினார். அந்த நிலை இதற்கு முன்னரே கல்வித்துறையில் ஏற்பட்டு விட்டது. முஸ்லிம்கள் முன்னேற்றத்திற்கு தற்கால கல்வி முறை இன்றியமையாத கூறாகக் கருதினார். அந்நகைய கல்வி அறிவு இஸ்லாம் மதக் கொள்கைக்கு முரணாக இருக்க முடியாது என்று எண்ணினார் ஆகவே அவர் மேல் நாட்டு அறிவின் ஆதரவாளராக மாறினார். இந்த வாதத்தின் பயனாக 1875-இல் அலிகாரில் 'ஆங்கிலோ-ஓரியண்டல்' கல்லூரி நிறுவப்பெற்றது. பிரிட்டிஷ்காரர்கள் கல்லூரி முதல்வர்களாகவும் ஆசிரியர்களாகவும்[1] பணியாற்றி வந்தனர். மாணவர்கள் அங்கேயே தங்கி படித்தனர். மசூதி ஒன்றும் அங்கு நிறுவப்பெற்றது. மத போதனைக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. மேல் நாட்டு கல்வியும் கிழக்கு நாட்டு கல்வியும் சரி அளவில் போதிக்கப்பட்டு வந்தன. 1920-இல் அக்கல்லூரி அலிகார் முஸ்லிம் பல்கலைக் கழகமாக மாறியது. தகுதியுள்ள முஸ்லிம் இளைஞர்கள் அரசாங்க வேலை, பொது வாழ்க்கை ஆகிய துறைகளில் இந்துக்களுடன் சரி நிலையில் இருந்து போட்டியிட அலிகார் பல்கலைக் கழகம் பெரிதும் உதவியது முஸ்லிம் சமுதாயம் இழந்து விட்டதாகக் கருதப் பெற்று வந்த ஆற்றலை முஸ்லிம் இளைஞர்களுக்கு அலிகார் பல்கலைக் கழகம் மீட்டுத் தந்தது.

சர். சையிது பொருள் வகையைச் சார்ந்த விஷயங்களில் மட்டும் தன் கவனத்தைச் செலுத்தியிருக்கவில்லை. அவரது இயக்கம் பொது சீர்திருத்த இயக்கமாகவும் அமைந்திருந்தது. இந்திய முஸ்லிம்கள் ஒரு தனிப்பட்ட மக்கள் தொகுதி என்றும் அம்மக்கள் தொகுதி இந்து சமுதாயத்தில் கலந்துவிடக் கூடாது என்றும், மேலை நாடுகள் அளிக்கவிருக்கும் கருத்துக்களில் சிறந்தன என்று கருதப்படுபவை இஸ்லாம் மதத்தின் முக்கிய கருத்துக்களுக்கு முரணாக விளங்க

[1] சர். தியோடர் பெக் (முதல் முதல்வர்), சர். தியோடர் மாரிசன், சர். தாமஸ் ஆர்னல்ட் ஆகியோர் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்கினார்கள்.

வில்லை என்றும் கருதினார். அந்த கருத்துதான் சர். சையிது தொடங்கிய இயக்கத்திற்கு மூலகாரணமாகும். அவரை புது மனப்பான்மை கொண்ட முஸ்லிம் என்று கூறலாம். ஏற்றுக்கொள்ளப்பட்ட நான்கு இறைமை இயல் துறைகளுக்கு அப்பாற்பட்ட பொது தத்துவங்களை மக்கள் கவனிக்கும்படி செய்தார். நபிகள் நாயகத்தின் தெய்வப் பணியினையும், குரானில் கடவுளது அருண் மொழி வெளிப்படுத்தப்பெற்றிருக்கிறது என்ற கோட்பாட்டினையும் அவர் ஏற்றுக் கொண்டார். ஆனால் பகுத்தறிவும் கடவுள் தன்மையில் ஒன்று என்றும் இயற்கை ஆற்றல் அவரது கைவேலைப்பாடு என்றும் வாதிட்டார்[1].

ஆகவே தற்கால தேவைகள், தற்கால பிரச்சனைகள் ஆகியவற்றை தக்கமுறையில் அணுகுவதற்கு குரானையும், இஸ்லாம் மதத்தையும் மெய்யறிவின் அடிப்படையில் விளக்கவேண்டும் என்று எண்ணினார். இவ்வாறாக மேல் நாடுகளின் மெய்யறிவினைச் சார்ந்த சாதனைகள் வரவேற்கப்பட வேண்டும் என்றும், அவற்றை இஸ்லாமிய கருத்துக்களுடன் இணைக்கப்பட வேண்டும் என்றும் கருதினார். குறிப்பாக விஞ்ஞான அறிவினைப் பெறவேண்டிய அவசியத்தை வலியுறுத்தி வந்தார். ஏனெனில் மேல் நாடுகளின் முன்னேற்றத்தின் குறிப்பிடத்தக்க கூறாக விளங்குவது விஞ்ஞான அறிவேயாகும். அலிகாரில் அவர் நிறுவிய முதல் நிறுவனம் விஞ்ஞான கழகமேயாகும். இந்த கருத்தினை அவர் வலியுறுத்தி வரும்போது இஸ்லாமிய கோட்பாட்டில் காணக்கிடக்கும் கிரேக்க மரபும் மேல் நாட்டு கிறித்தவ சமயம், இஸ்லாம் ஆகிய இரண்டும் சேர்ந்து பங்கிட்டிருந்த யூத பின்னணியும் அவருக்கு பேருதவி செய்தன. இவ்வாறு தன்னுடைய நிலையினைப் பலப்படுத்திக்கொண்ட பிறகு சையிது தனது போராட்டத்தினை இரண்டு முனைகளில் நடத்தினார். ஒன்று ஓதுக்க நிலையினை விரும்பிய பிற்போக்கான முஸ்லிம்களுக்கு எதிராகவும், மற்றொன்று ஐரோப்பிய ஆய்வாளர்களுக்கு எதிராகவும் மேற்கொள்ளப்பட்டன. அதன் பயனாக பின்னோக்கிய மனப்பான்மை நீக்கப்பெற்று முன்னோக்கிய மனப்பான்மை ஏற்படுத்த வழி ஏற்பட்டது. மேல்நாட்டு கருத்துக்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தவர்களது நம்பிக்கை மீட்டுத்தரப்பெற்றது.

மேலே குறிப்பிடப் பெற்ற கருத்துக்கள் சிறப்புமிக்க ஆதரவாளர்களை தன்பால் இழுத்திருந்தன. அவர்கள் அனைவரும் அலிகார் பரம்பரையினர் என்று அழைக்கப்பெற்றனர். அவர்களுள் சிலரைப் பற்றி இங்கு குறிப்பிடலாம். மௌல்வி நசீர் அகமதுவும், மௌல்வி ஜாகா-உல்லா என்ற இருவரும் டில்லி கல்லூரியைச் சேர்ந்தவர்கள்.

1 அவரைப் பின்பற்றியவர்கள் 'நெசாரிகள்' என்றழைக்கப்பட்டனர். இயற்கை என்ற வார்த்தையினின்றும் அப்பெயர் பெறப்பெற்றது.

நலகத்திற்கு முன்னர் ஏற்பட்டிருந்த மறுமலர்ச்சி அவர்களைப் பேணி வளர்த்திருந்தது. அல்டாப் ஹூசேன், ஹாலி, மௌல்வி ஷிப்லி நுமானி ஆகியோர் சிறந்த கவிகளாவார். குதாபக்ஷ் சிறந்த கல்விமான். யூசுப்-அலி கல்வி நிபுணர். சையிது அமீர் அலியின்[1] பணி பொதுவாக ஏனையோருடையதை ஒத்திருந்த போதிலும், அதனுடையது என்று சொல்லத்தக்க ஒரு தனி பாணியையும் அது உட்கொண்டிருந்தது.

'இஸ்லாமின் மெய்க்கருத்து' (Spirit of Islam) என்கிற அவரது நூலில் முஸ்லிம் அல்லாதாரைக் குறித்து இஸ்லாம் மிகச்சிறந்த முறையில் வருந்தம் தெரிவிக்கிறது. அவரது சாரசினர்களின் வரலாறு (Histoy of the Saracens) முஸ்லிம்களுக்கு ஒரு நன் மருந்து போல் அமைந்திருந்தது. நபிகள் நாயகத்தின் தனித்தன்மையினை வலியுறுத்தி வந்தார். அவ்வாறாக தீர்க்கதரிசிக்குரிய வீர வழிபாடு என்று சொல்லக் கூடிய முறையினை புகுத்தினார். சம்பிரதாய முறைமையின் சிறப்பினை வலியுறுத்தி வந்த பொழுதிலும், அவர் சீர்திருத்த வாதியாகவும் விளங்கினார். பெண்கள் கல்விக்கு ஆதரவு அளித்தார். வரலாற்றுப் பின்னணியுடைய இஸ்லாமின் மேம்பாடுகளை வலியுறுத்தினார். இவ்வாறாக கிலாபத்து இயக்கத்தின் தலைவர்களுக்கு ஒரு தொடங்கு நிலையினை ஏற்படுத்தியிருந்தார். இவ்வாறாகவே அத்தலைவர்களுக்கும் மேல்நாட்டு கருத்துக்களை ஏற்றுக்கொண்ட முற்போக்காளர்களுக்கும் இடையே ஒரு இணைப்பினையும் அமைத்துக் கொடுத்தார்.

விக்டோரியா கால உலகில் இந்திய இஸ்லாம் பெற்றிருந்த நிலைக்கு அவரது திட்டம் மிகப் பொருத்தமாக இருந்தது. வலிமையுடன் ஈர்க்கிற ஒரு நாகரீகத்தின் பண்புகளை உட்கிரகித்துக் கொள்ள அது வழி செய்தது. அரசியல் முன்னேற்றம் ஒன்று தான் பெற்று அடையக் கூடியதொன்று என்று கருதி வந்த காலத்தில் படிப்படியான அரசியல் முன்னேற்றம் ஏற்பட வழி வகுத்தது. இருபதாம் நூற்றாண்டு தொடங்கியவுடன் சூழ்நிலைகள் மாறின. மதத்துறையில் மெய்யறிவைவிட மேலான ஆற்றல் பொருந்திய சக்தி தேவைப்பட்டது. அரசியல் துறையில் ஆலோசனை சபைகளை விட மேலான முற்போக்கு சபைகள் அமைக்கக்கூடிய அரசியல் திட்டம் தேவைப்பட்டது. தொழிற்வளர்ச்சி ஐரோப்பாவில் பெருமாற்றங்களை ஏற்படுத்தியது. பழைய இஸ்லாமிய உலகம் பயமுறுத்தப் பெற்றிருந்தது. எல்லா இஸ்லாமியர்களும் காலிபாவின் ஆட்சிக்கு உட்பட்டிருக்கவேண்டும் என்ற கருத்துக்கள் மூலமாகத் தன்னை காப்பாற்றிக்

[1] 1849-1928, பிரிவி கவுன்சிலின் நீதி சார்ந்த குழுவின் முதல் இந்திய உறுப்பினர்.

கொள்ள முயற்சித்து வந்தது. இந்தியாவிலே இந்தியர்களிடம் ஆட்சியினை ஒப்படைக்கும் வகையில் முதல் அறிகுறிகள் தோன்றின. அதன் பயனாக இந்தியாவிலே முடிவில் இந்து அரசாங்கம் அமைக்கப் படும் என்ற எண்ணம் தோன்றியிருந்தது. 1912-இல் பால்கன் நாடுகளிடம் துருக்கி தோல்வியுற்றது. முதல் உலகப்போரிலும் துருக்கி தோற்றது. இரு தோல்விகளும் துருக்கியின் அழிவுக்கு காரணமாக அமைந்தன. ஆகவே அநேக முஸ்லிம்கள் ஐரோப்பாவை இஸ்லாமின் எதிரியாக சில காலம் கருதி வந்தனர். இதுவே போருக்குப்பிறகு ஏற்பட்ட கிலாபத்து இயக்கத்தின் வலிமைக்கு காரணமாகும். இஸ்லாம் மதத்தினை காக்க வேண்டிய நிலையில்தான் இந்துக்களின் உடன்பாடு செய்து கொண்டது சரி எனக்கருதப்பட்டது. 1922-இல் துருக்கி புத்துயிர் பெற்றது. மதச்சார்பற்ற நாடாக அமைக்கப்பெற்றது. அவ்விரு நிகழ்ச்சிகளும் முற்போக்காளர்கள் தங்களுடைய நம்பிக்கையை மீண்டும் பெற உதவின. பிற்போக்கு திட்டத்தின் அடித்தளத்தினை குலைக்கவும் உதவின. அப்பொழுதிலிருந்து இந்து பெரும்பான்மையினர் முஸ்லிம்களின் தனி முறையான வாழ்விற்கு பேராபத்தை விளைவிப்பவர்களாகத் தோன்றினர். ஆனால் சையிது காலத்திற்கு திரும்பிச் செல்ல இயலாத நிலை ஏற்பட்டிருந்தது. இந்திய இஸ்லாமியர்களுக்கு ஆற்றல் படைத்த ஒரு கொள்கையும் தேவையாக இருந்தது. சர். முகமது இக்பால் அவர்களின் நூல்களிலே அவற்றைக் கண்டனர்[1].

இக்பால் பெரும்பாலும் பாரசீக மொழியிலே தான் தனது நூல்களை எழுதி வந்தார். ஆங்கிலத்தில் ஒரே ஒரு நூலை மட்டும் தான் எழுதினார்.[2] ஆன்மீக சுதந்திரம் பெற மேற்கொள்ளப் பெறும் போராட்டத்தின் ஆற்றல் வாய்ந்த உயிர் நாடியாக விளங்க இஸ்லாம் மதம் போதிய தகுதியினை உட்கொண்டிருந்தது என்பதே அவர் கூறும் செய்தியாகும். அவர் வலியுறுத்தி வந்த கருத்துக்கள் பின்வருமாறு: இஸ்லாம் எல்லோராலும் ஒப்புக்கொள்ளத்தக்க மதமாக மட்டும் இருக்கவில்லை; மத சம்பந்தமான எல்லா அனுபவ அறிவினை ஒன்று சேர்த்து முழு நிறைவாக்கப் பெற்ற மதமாக இருந்தது. பழம்பொருள் திரட்டு பவருக்குரிய ஆர்வத்துடன் சேமித்து வைத்துப் போற்றற்குரிய விலையுயர்ந்த பொருள் என்று இஸ்லாமைக் கருத முடியாது. அதற்கு மாறாக அது வழக்காற்றிலுள்ள செயல் தூண்டும் தத்துவமாக அமைந்திருந்தது. அத்தத்துவம் உலக வாழ்வினை திருத்தி அமைக்க வல்லதாகவும், செயல் நோக்கத்தை அளிக்க வல்லதாகவும் அமைந்திருந்தது. ஐரோப்

[1] 1876-1938.

[2] Six Lectures on the Reconstruction of Religions Thought Lahore, 1930.

பிய நாடுகள் ஆதிக்க வெறி, பண ஆசை ஆகியவற்றின் பிடிப்புக்குள் சிக்கி இருந்தன[1].

சரியான பண்புக்கூறுகளை உண்டாக்குவதும் தொடர்ந்து போராடி இயற்கை சக்திகளின் மீது மனிதனது ஆதிக்கத்தை நிலைபெறச் செய்வதும் இஸ்லாம் மதத்தினுடைய வேலையாகும். இக்கருத்து இஸ்லாமிய பின்னணியில் வைக்கப்பெற்ற நீயிட்ஸ்க் கருத்து என்று கூறலாம். இக்பாலுடைய போதனைகள் முஸ்லிம் இளைஞர்களுக்கு தற்காலத்தவர்களை விஞ்சும் அளவில் நற்கால மனப்பான்மை ஏற்பட உதவின. அதே நேரத்தில் அது இஸ்லாமியத் தன்மையினையும் தனித்தன்மையினையும் பெற்றிருந்தது. சையிது அகமதுகான் இந்திய இஸ்லாமியர்களுக்கு தனி வாழ்வு உணர்ச்சியினை ஏற்படுத்தினார். இக்பால் முஸ்லிம்களுக்கு என தனிப்பட்ட மாற்ற முடியாத விதி உண்டென்ற உணர்ச்சியினை தோற்றுவித்தார்.

இத்தகைய கருத்துக்கள், உணர்ச்சிகள் அடங்கிய கரைச்சலின் வண்டல் அரசியல் இயக்கம் என்ற பளிங்கின் மீது சென்று படியச் செய்வதற்கு கருவினை ஊக்கி ஒன்று தேவைப்பட்டது. அச்சம் என்பதே அக்கருவினை ஊக்கியாக அமைந்து விட்டது. சையது அகமதுகான் முஸ்லிம் சமுதாயத்திற்கு ஒரு புதிய அடிப்படை உரிமை உணர்ச்சியினையும் புதிய நடைமுறையினையும் ஏற்படுத்தித் தந்தார். இந்திய அரசினருடன் நட்புறவு கொள்ளும் வழியினைப் பின்பற்றுமாறு தூண்டுவதின் மூலம் புதிய இடர்காப்பு உணர்ச்சியினை அவர்களிடம் ஏற்பட வழி செய்தார். மற்றவர்களிடமிருந்து பிரிந்து வாழும் உணர்ச்சி, பல வகுப்புகளடங்கிய சமுதாயத்தில் கலந்து விட வேண்டும் என்ற யோசனைக்கு உடனடியான எதிர்ச்செயலை தூண்டும் எண்ணத்தை உட்கொண்டிருந்தது. இஸ்லாம் மதத்தில் தலையிடும் எண்ணம் பிரிட்டிஷ்காரர்களிடம் தோன்றியதற்கு யாதொரு அறிகுறி தென்படவில்லை யாதலால் அவர்களை ஆட்சி செய்ய அனுமதி வழங்க முற்படலாம் என்று கூறினார். அதுவே சையிது அவர்களிடம் கொண்டிருந்த நம்பிக்கைக்குக் காரணமாகும். இந்து ஆட்சி ஒரு வேளை ஏற்பட நேர்ந்தால், அவ்வாட்சி அவ்வாறு செயற்படுமா என்ற கேள்வி எழுந்தது. 1885-இல் காங்கிரஸ் ஏற்படுத்தப் பெற்றபோது சையிது உள்ளபடியே அச்ச

[1] மேல் நாடுகளைப் பற்றி இக்பால் கொண்டிருந்த கருத்தினை பின்வரும் வரிகளில் காணலாம்.

'தற்கால நாகரிகத்தின் ஒளி கண்களைக் கூசச்செய்யும். ஆனால் போலியான நவரத்தினங்களை வெகு சாமர்த்தியமாக ஒன்று சேர்த்து ஏற்படுத்தப்பெற்ற ஒளிக்கு சமமாக அதனைக்கருதலாம்'.

'மேல் நாட்டவர்களுள் அறிவு மிக்கோர் பெருமை கொள்ளச் செய்யும் விஞ்ஞான அறிவு என்பது பேராசை என்கிற இரத்தக்கறை படிந்த கைகளில் விளங்கும் ஒரு போர்க் கருவியாகும்'.

மடைந்தார். இந்தியாவில் பெரும்பான்மையினர் ஆட்சிஎன்பதற்குஇந்து ஆட்சி என்ற பொருளைத் தந்தார். இந்து ஆட்சி ஏற்பட்டால் முஸ்லிம்கள் கலாச்சாரம் தன்னுடைய தனித்தன்மையினை இழந்து விடும் என்று கருதினார். அவர் இதற்கு முன்னரே 1877-இல் கல்கத்தாவில் அமீர் அலி தொடங்கிய தேசிய முகமதிய சங்கத்திற்கு தனது ஆதரவை அளிக்க மறுத்து விட்டார். அது அழிச்செயலில் முஸ்லிம்களை ஈடுபடுத்துவதாகக் கருதினார். முஸ்லிம்களுள் ஒரு சிறு பகுதியினரே குறிப்பாக பம்பாய் முஸ்லிம்களே, காங்கிரசுக்கு ஆதரவளித்தனர். அவர்களே பிற்கால தேசிய முஸ்லிம்களின் தொடக்க மூலமாக விளங்கினார்கள்

பொதுவாக முஸ்லிம்கள் காங்கிரசின் வளர்ச்சியினை சற்று விலகி இருந்துதான் கவனித்து வந்தனர். காங்கிரசுக்கும் கர்சன் பிரபுவிற்கும் இடையே தகராறு ஏற்பட்டபோதும் அவர்கள் ஒதுங்கியே இருந்தனர். காங்கிரசில் சேராமல் முஸ்லிம்கள் விலகியிருந்தனர். அதுவே காங்கிரசில் இந்துக்கள் ஆதிக்கம் அடைய உதவியது. அவ்வாறு காங்கிரசில் இந்துக்கள் ஆதிக்கம் பெற அனுமதித்த பிறகு காங்கிரசின் கோரிக்கைகளை ஏற்றுக்கொள்ளப்படுவதற்கான முதல் அறிகுறிகள் தோன்றிய போது முஸ்லிம்கள் அச்சமடைந்தனர். இதன் விளைவாக 1906-இல் முஸ்லிம் பிரதிநிதிக்குழு ஒன்று மிண்டோ பிரபுவை சந்திக்க முற்பட்டது. ஆகாகான் அக்குழுவின் தலைவராக நியமிக்கப் பெற்றார். பிரதிநிதித்துவ முறை ஒன்று ஏற்படுத்தப் பெறுமேயானால் முஸ்லிம்களுக்கு தனி தேர்தல் தொகுதிகள் ஏற்படுத்தப் பெறவேண்டும் என்ற கோரிக்கையினை மிண்டோவிடம் சமர்ப்பித்தனர். அவர்கள் அனைத்து இந்திய முஸ்லிம் லீக்கினை ஏற்படுத்தினார்கள். இவ்வாறாக சையிது தமது வாழ்நாள் முழுவதும் எந்த நடவடிக்கையை வெறுத்து வந்தாரோ அதனை முஸ்லிம்கள் இப்பொழுது மேற்கொண்டனர். முஸ்லிம் நில உடைமையாளர்களைக் கொண்ட தனி தேர்தல் தொகுதிகள் ஏற்படுத்தப்பெற்றன. பிரிட்டிஷ்காரர்கள் இந்திய மக்கள் கட்டுக்கடங்காத வகையில் அதிகாரங்களைத் தொடர்ந்து வைத்திருந்தனர். இத்தகைய கூறுகளைக் கொண்ட மிண்டோ மார்லி சீர்த்திருத்தத்திட்டம் முஸ்லிம்களுக்கு அந்த நேரத்தில் மனநிறைவு ஏற்படுவதாக அமைந்திருந்தது ஆனால் வெகு சீக்கிரமே அவர்களிடம் அச்சம் ஏற்பட்டு விட்டது. துருக்கி நாட்டிற்கு நேர்ந்த நெருக்கடிகளே அதற்குக் காரணமாகும். அதன் பயனாக கிலாபத்து இயக்கம் தொடங்கப்பெற்றது. அனைத்து இஸ்லாமியர் ஒற்றுமைக் கருத்து அப்பொழுது தான் தோன்றியிருந்த இந்திய முஸ்லிம் தேசிய உணர்ச்சியினை நிலைகுலையச் செய்தது. பிரிட்டிஷ்காரர்களின் துருக்கி கொள்கைக்கு எதிராக ஏற்பட்ட வெறுப்பு இந்து ஆட்சியைப் பற்றி முஸ்லிம்கள் கொண்டிருந்த பயத்தினை கீழ்ப்படுத்தி விட்டது. இந்த மன வெழுச்சி சில நடவடிக்கைகளின் வாயிலாக

வெளிப்பட்டிருந்தது. அவற்றுள் ஒன்று 1916-இல் காங்கிரசுடன் ஏற்படுத்திக் கொண்ட லக்னௌ உடன்பாடாகும். அதன்படி காங்கிரசு தனித்தொகுதி முறையினை ஏற்றுக்கொண்டது. மற்றொன்று காந்தியின் ஒத்துழையாமை இயக்கத்தினை முஸ்லிம்கள் ஆதரிக்க ஒப்புக்கொண்டதாகும். இந்த புயல் கடந்து சென்ற பிறகு முஸ்லிம்கள் மயக்கம் தெளிந்து தங்களுடைய எதிர்காலத்தைப் பற்றிய அச்சம் கொண்ட நிலையில் காணப்பெற்றனர் அதே நேரத்தில் சில முஸ்லிம்கள் காங்கிரசிலேயே தங்கி விட்டனர். அவர்களுள் அநேகர் மேல்நாட்டு கருத்துக்களை ஏற்றுக் கொண்டவர்களாவார். (நாட்டின் அரசில் இஸ்லாம் மதத்திற்கு அளிக்கப்பட வேண்டிய இடத்தைப் பொருத்தளவில் கமால் பாஷா போன்ற மதச்சார்பின்மைக் கோட்பாட்டாளர்கள் கருத்தினை ஏற்றுக்கொண்டார்கள் அவர்களுள் மிகச்சிறந்தவர் பம்பாயைச் சார்ந்த முகமது அலி ஜின்னு ஆவார். அவர் பல ஆண்டுகளாக காங்கிரஸ் உறுப்பினராக இருந்தார். இப்பொழுது 'சுயேச்சை கட்சி'[1] (Independent Party) யின் தலைவராக இருந்து கொண்டு சட்டசபையில் சமநிலை வலிமைக் கோட்பாட்டை கைப்பற்றி வந்தார்.)

மாண்ட்போர்டு சீர்த்திருத்தங்கள் நடைமுறைப் படுத்தப்பெற்று வந்தமுறை இந்த அச்சங்களை அதிகமாக்கி விட்டன. இந்த அச்சங்களை கட்சித் தலைவர்களுக்கு இடையே ஏற்பட்ட காரசாரமான வார்த்தை பரிமாற்றங்களின் வாயிலாகவும், பெருகி வரும் உணர்ச்சி வேகம் நிறைந்த வகுப்புக் கலவரங்களின் வாயிலாகவும் வெளிப்பட்டன. அலி சகோதரர்கள் இந்துக்களுடன் சகோதர மனப்பான்மை கொண்டுபழக வேண்டும் என்ற பிரசாரத்தினை விட்டு முஸ்லிம் உரிமைகளுக்காகப் போராடத் தொடங்கினுர்கள். ஆனுல் முஸ்லிம்கள் ஒற்றுமையின்றி குழப்பமுற்று இருந்தனர். 1927-இல் சைமன் குழு பிரச்சனையின் காரணமாக லீக் கட்சிக்குள் பிளவு ஏற்பட்டது[2] 1929-இல் இவ்விரண்டும் அனைத்து இந்திய முஸ்லிம் மாநாட்டில் ஒன்று சேர்ந்தன. 1931-இல் ஜின்னு விலகினுர்.) பஞ்சாபில் தான் முஸ்லிம்கள் சுறுசுறுப்பாக இருந்தனர். சர். பஸல் இ ஹுசேன் என்பவரின் அசையா உறுதியுடன் கூடிய தலைமையின் கீழ் முஸ்லிம்கள் நம்பிக்கை கொண்டிருந்தனர். அவரது அன்பார்வமற்றத் தன்மையும் கொண்ட காரியத்தில் வைத்திருந்த கவனமும் அயர்லாந்து தலைவர் பார்னலை நமக்கு நினைவு ஊட்டுகிறது. 1927ஆம் ஆண்டு இறுதியில் சைமன் குழு அமைக்கப் பெற்

1 இதனை கட்சி என்று கூறுவதைவிட பார்லிமெண்டிலுள்ள உறுப்பினர்கள் தொகுதி என்று கூறலாம். ஏனெனில் இது நாடு முழுவதும் பரவிய அமைப்பு முறையினை கொண்டிருக்கவில்லை. அதனுடைய உறுப்பினர்கள் எண்ணிக்கை சற்றேறக்குறைய 30தாக இருந்தது. காங்கிரஸ் சுயராஜ்ய கட்சியுடன் சேர்ந்து அரசாங்கத்தினை தோற்கடிக்கக்கூடிய நிலையில் இருந்தது. இத்தகைய நிகழ்ச்சி அடிக்கடி நேர்ந்தது என்பதை இங்கு குறிப்பிடலாம்,

2 ஒத்துழைக்க வேண்டுமெனை கொள்கையினரது தலைவர் சர். முகமது ஷாபி ஆவார்.

றது. இது முதற்கொண்டு நடைபெற்று வந்த அரசியலமைப்புச் சார்ந்த விவாதங்கள் முஸ்லிம்களின் அச்சத்தை அதிகரிக்கச் செய்தன. ஏனெனில் மேலும் சில அதிகாரங்கள் பொறுப்புள்ள அமைச்சர்களுக்கு அளிக்கப்பெறும் என்பது தெளிவாகத் தோன்றியது. முழுமையான தன்னாட்சி ஏற்படுத்தும் வகையில் பெருந்த முன்னேற்றம் ஏற்பட்டு வருவதும் நன்கு புலனாயிற்று. அச்சம் வளரவளர ஒற்றுமை உணர்ச்சி மேம்பாடுற்றது. நடைமுறைக்கேற்ற கொள்கையினைத் தேட முற்பட்டனர். (ஒற்றுமை ஏற்படுத்துவதற்குரிய முயற்சி ஜின்னாவின் தலைமையின் கீழ் லீக் கட்சியினை திருத்தி அமைக்கும் நடவடிக்கையில் முடிந்தது.[1] அரசியல் ஓய்வு நிலையில் இருந்து வெளிப்பட்டு கட்சித்தலைமைப் பொறுப்பை ஜின்னா ஏற்றுக்கொண்ட நிகழ்ச்சியினை அக்காலச் சூழல்களின் அடையாளக் குறியாகக் கருதலாம்.) ஆக்க முறையான திட்டத்தைத் தேடிப்பெறும் முயற்சி அவர்களை இரண்டு திசைகளில் அழைத்துச் சென்றது. அவற்றுள் முதலாவது இடர்காப்புகளைப் பற்றியதாகும். 1930 முதற்கொண்டு நடைபெற்று வந்த அரசியலமைப்புப்பற்றிய விவாதங்களின் போது வகுப்பு பிரதிநிதித்துவக் கோட்பாடு மீண்டும் வலியுறுத்திவரப்பெற்றது (தனித்தொகுதிகளைக் கோரியதுடனில்லாமல், அரசாங்கப் பதவிகளையும் முஸ்லிம்களுக்கென ஒதுக்கிவைக்க வேண்டும் என்று கோரினார்கள். (முஸ்லிம்கள் கூட்டாட்சி அமைப்பினை வரவேற்றனர். ஏனெனில் அது மாநிலங்களுக்கு அதிகமான அதிகாரங்களை வழங்க இருந்தது. முஸ்லிம்கள் பெருவாரியாக இருக்கும் இடங்களில் முஸ்லிம்களுக்கு தகுந்த பாதுகாப்பு ஏற்படுத்த இயலும்.) மத்திய அரசின் அதிகாரங்களை கூடுமான வரை குறைக்கும் வகையில் பாடுபட்டனர்.[2] இரண்டாவதாக முஸ்லிம்கள் பெரும்பான்மையினராக இருக்கும் இடங்களில் மாநில சுய ஆட்சியை ஏற்படுத்தும் வகையில் முயற்சி செய்தனர். எல்லைப்புற மாகாணம், பலுசிஸ்தானம், சிந்து, காஷ்மீர் ஆகியவற்றைச் சேர்த்து ஒரு முஸ்லிம் நாடாக அமைக்கவேண்டும் என்றும், அந்த நாடு கூட்டாட்சி அமைப்பில் இடம்பெற வேண்டும் என்றும் 1930-இல் இக்பால் யோசனை கூறினார். இந்த யோசனை படைப்புத் திறன்மிக்க கருத்தாகக் காணப்பெற்றது. புதிய சீர்த்திருத்தங்களில் ஏற்பட்டபோது. அது செழிப்பாக வளர்ச்சியுற்றது. கேம்பிரிட்ஜில் சௌத்ரி ரஹம்த்அலி இக்கருத்தினை விரிவாக்கி வந்தார். சில முஸ்லிம் இளைஞர்களை இக்கருத்தைக் கொண்டு ஊக்குவித்தார்.

[1] அனைத்து இந்திய முஸ்லிம் மாநாட்டின் செயற்குழு 1936-இல் கடைசி முறையாக கூடிற்று.

[2] P பஞ்சாபையும், A ஆப்கானியர்களையும் (எல்லைப்புற மாகாணம்) K காஷ்மீரையும், S சிந்துவையும் குறிக்கும். பாகிஸ்தான் என்பதற்குப் பொருள் பரிசுத்தமானவரின் உலகம் என்பதாகும்.

அவர் தான் 1933-இல் பாகிஸ்தான் என்ற பெயரை ஏற்படுத்தினார்[1]. அந்தக் காலத்தில் அவரது கருத்துக்கள் நடைமுறைக்கு ஒவ்வாதனவாகக் கருதப்பெற்றன. ஆனால் ஏழு ஆண்டுகளுக்குள்ளாகவே அவரது கருத்துக்கள் செயற்முறைக்குரிய திட்டமாக மாற்றப்பெற்றன. அந்த வகையான நடவடிக்கையை மேற்கொண்டவர் பிற்காலத்தில் கயித் இ அஜாம் என்று அழைக்கப் பெற்றவராவார். பாகிஸ்தான் என்ற புதிய பெயர் அவரது கட்சி கொள்கைக் குரலாகவும் சின்னமாகவும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இக்பாலுடைய கருத்துப்பாங்கு, ரஹமத் அலியின் கூர்நோக்கு, முஸ்லிம்களின் அச்சம் ஆகியவற்றினை ஒன்று சேர்க்க ஜின்னாவின் அனுபவ அறிவுத்திறம் உதவியது. அதன் பயனாக பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் எப்பொழுதுமே ஏற்பட்டிராத அளவில் முஸ்லிம்கள் ஒன்று சேர்க்கப்பட்டிருந்தனர். அதனுடைய விளைவு ஒரு புதிய அரசியல் படைப்பாகும்.

[1] உதாரணமாக மாநிலங்களுக்கு அரசியலமைப்புச் சட்டத்தில் குறிப்பிடாத அதிகாரங்களை வழங்க வேண்டும் என்றும், குறிப்பிடப்பெற்ற அதிகாரங்களில் எவ்வளவுக்கெவ்வளவு அதிகாரங்களை மாநிலங்களுக்கு அளிக்க வேண்டுமோ அவ்வளவையும் அவற்றுக்கு அளிக்க வேண்டும் என்றும் எண்ணினார்கள்.

# 6 1935 ஆம் ஆண்டுச் சட்டமும் அதற்குப் பின்னர் ஏற்பட்ட நிகழ்ச்சிகளும்

1935 ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் நான்காம் தேதியன்று புதிய இந்திய அரசியல் சட்டம் மன்னரது ஒப்புதலைப் பெற்றது. இதுவே இந்தியாவைப் பொருத்தளவில் பிரிட்டிஷ் அரசினருடைய ஆக்க முறையான இறுதிச் சாதனையாகும் அதனை உருவாக்குவதற்கு முன்னர் நடைபெற்ற வாதங்கள், இதனுடைய உருவளவு ஆகிய வற்றிற்கு ஏற்ப இதனுடைய தனிச் சிறப்பு அமைந்திருந்தது. அரசியலைச் சார்ந்த அடுத்த நடவடிக்கையைப் பற்றிய ஆராய்வு பத்து ஆண்டுகளுக்கு முன்னரே மட்டிமேன் கமிட்டியின் அறிக்கையுடன் தொடங்கியது. துரதிர்ஷ்டம் பிடித்த சைமன் கமிஷன் ஏழாண்டு களுக்கு முன்னர் இந்தியாவை வந்தடைந்தது. சைமன் கமிஷன் அறிக்கை வெளியாகும் முன்னரே அது எவ்வாறிருக்கும் என்பதனை காங்கிரசின் எதிர் முழக்கம் என்று கருதப்பெறும் நேரு அறிக்கை முன்கூட்டியே அறிவித்திருந்தது. 1930-இல் பிரிட்டிஷ் இந்திய அரசு தனது திட்டங்களை வெளியிட்டது. அவற்றின் வாயிலாகத் தான் மையத்தில் பொறுப்பாட்சி ஏற்படுத்த வேண்டும் என்ற யோசனையை பிரிட்டிஷ் இந்திய அரசு முதன் முதலில் அதிகாரப் பூர்வமாக அறிவித்தது. இந்த அறிவிப்பை அடுத்து வட்டமேஜை மாநாட்டின் மூன்று கூட்டத் தொடர்கள் நடைபெற்றன. இந்திய அரசியல் சட்டத்தில் காணப்பெறும் தேர்தல் பற்றிய விதிகளை லோதியன் அறிக்கை வரையறுத்திருந்தது. 1932ஆம் ஆண்டு ஆகஸ்டு 4-ந் தேதியன்று வெளியிடப்பெற்ற வகுப்புவாரி பிரதிநிதித்துவத்தைப் பற்றிய இறுதியான முடிவு மாகாணங்களில் வகுப்புவாரி பிரதிநிதித் துவ முறையினை உறுதிப்படுத்தியது. 1932ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 24ஆம் நாள் அன்று ஏற்படுத்தப்பெற்ற பூனா உடன்பாடு வாயிலாக இம்முறைக்கு இறுதி வடிவம் வழங்கப்பெற்றது. அதன் பயனாக தாழ்த்தப்பெற்ற சமுதாயத்தினருக்கு பொது, தனி ஆகிய

இருவகை பிரதிநிதித்துவம் வழங்கப்பெற்றது. இதுவும் காந்தி மேற்கொண்ட சாகும்வரை உண்ணாவிரதத்தின் விளைவேயாகும். 1933ஆம் ஆண்டு வெளியிடப்பெற்ற 'வெள்ளை அறிக்கை' (White Paper) அரசினருடைய திட்டங்களை தெளிவுபடுத்தியது. லின்லித்கோ பிரபுவின் தலைமையின் கீழ் அமைக்கப்பெற்ற பாராளுமன்றத்தின் இரு சபைகளின் கூட்டுக் கமிட்டி அத்திட்டங்களை மீண்டும் பரிசீலனை செய்தது அதன் விளைவாக ஐந்து பெரும் மாற்றங்கள் ஏற்படுத்தப்பெற்றன. அத்திட்டங்களும், திருத்தங்களும் பிறகு இரு பெரும் இடர்பாடுகளுக்கிடையே சட்டமாக நிறைவேற்றப் பெற்றன. அவ்விடர்ப்பாடுகளுள் ஒன்று பிரிட்டிஷ்காரர்களின் நயக்கம் மற்றொன்று இந்தியர்களின் பொறுமையின்மை. பிரிட்டிஷ்காரர்களின் நயக்கம் பாராளுமன்ற எதிர்ப்பின் வாயிலாக வெளிப்பட்டது. இந்தியர்களின் பொறுமையின்மை காங்கிரசு இட்ட முட்டுக்கட்டையின் வாயிலாக வெளிப்பட்டது. இந்திய அரசியல் சட்டம் இந்தியர்களுக்கிடையே உடன்பாட்டினை ஏற்படுத்தவில்லை என்பதை மறுக்க இயலாது. ஆனால் இந்தியர்கள் கருத்தினுக்கும் பிரிட்டிஷ் கருத்துகளுக்கிடையே எத்துணை அளவு உடன்பாடு ஏற்படுத்த இயலுமோ அத்துணை அளவு உடன்பாட்டினை இச் சட்டம் ஏற்படுத்தியது.

இந்திய அரசியலமைப்பில் அப்பொழுது காணக்கிடந்த சிறப்புக் கூறுகள் அனைத்தும் தொடர்ந்து இருக்கவும், மேலும் விரிவாக்கப் படவும் அச்சட்டம் வழி வகுத்தது. 1892-இல் ஏற்படுத்தப்பெற்ற மக்கள் பிரதிநிதித்துவ முறை 1921-இல் ஏற்படுத்தப்பெற்ற இரட்டையாட்சி, பொறுப்புள்ள அமைச்சர்கள் ஆட்சி, 18ஆம் நூற்றாண்டில் தொடங்கப்பெற்ற மாகாண சுய ஆட்சி, 1909ஆம் ஆண்டில் ஏற்றுக்கொள்ளப்பெற்ற வகுப்பு வழி பிரதிநிதித்துவம், 1919ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பெற்ற காப்பு விதிகள் இவையனைத்தும் இப்பொழுது தொடர்ந்து இருக்க இச்சட்டம் உதவியது. இவற்றுள் பல மேலும் விரிவாக்கப்பெற்றன. அது மட்டுமன்றி சில புதிய கோட்பாடுகளும் புகுத்தப்பெற்றன. இவற்றுள் குறிப்பிடத்தக்கவை பின்வருமாறு: கூட்டாட்சி கொள்கை அக்கொள்கையின் சாயலான மாகாண சுய ஆட்சிக் கொள்கை, மக்களால் தேர்ந்தெடுக்கப் பெற்ற அமைச்சர்களைக் கொண்ட மாகாணப் பொறுப்பாட்சிக் கொள்கை.

முதலில் நிருவாகத்தைப் பற்றிய மாறுதல்க[illegible]. சிந்து, பம்பாயினின்றும் பிரிக்கப்பெற்று தனி மாகாணமாக அமைக்கப்பட்டது. முன்னுள் பீகார்-ஓரிசா மாகாணத்தைச் சார்ந்த ஓரிசா பகுதி சென்னை மாகாணம் மத்திய மாகாணம் ஆகியவற்றைச் சேர்ந்த சில

பகுதிகள் ஒன்றாக இணைக்கப்பெற்று ஒரிசா என்ற பெயருடன் தனி மாகாணமாக ஏற்படுத்தப்பெற்றன. சிந்து, ஒரிசா ஆகிய இரண்டும் கவர்னர் ஆட்சிக்குட்பட்ட மாகாணங்கள் நிலையினை அடைந்தன. 1932-இல் வடமேற்கு மாகாணம் கவர்னர் ஆட்சிக்குட்பட்ட மாகாண நிலையினை அடைந்தது என்பதனை இங்கு குறிப்பிடுதல் அவசியமாகும். அதே நேரத்தில் பர்மா இந்தியாவினின்றும் பிரிக்கப்பட்டது. மாண்ட் போர்டு சீர்திருத்தங்களை அடிப்படையாகக் கொண்ட ஒரு அரசியல் திட்டம் அங்கு உருவாக்கப்பெற்றது. இம்மாறுதல்களின் விளைவாக பிரிட்டிஷ் இந்தியா இப்பொழுது 11 கவர்னர் ஆட்சிக்குட்பட்ட மாகாணங்களையும், 4 தலைமை ஆணையாளர்கள் ஆளுகைக்குட்பட்ட பகுதிகளையும், ஒரு பிரிட்டிஷ் ஏஜென்சி பகுதியினையும் உட்கொண்டிருந்தது. அந்தமான், குடகு, ஆஜ்மீர்-மேர்வாரா, டில்லி இவை நான்கும் தலைமை ஆணையாளர் ஆளுகைக்குட்படுத்தப்பெற்றன. பலுசிஸ்தான் ஏஜென்சி பகுதியாக விளங்கியது. மேற்குறிப்பிடப் பெற்ற மாறுதல்கள் மாகாணங்களில் வளர்ந்து வரும் தற்பெருமை உணர்ச்சிகளுக்கு அளிக்கப்பெற்ற சலுகைகளாகக் கருதப்பெற வேண்டுமேயன்றி ஒரு குறிப்பிட்ட திட்டத்தின் விளைவாக நாம் கருதக் கூடாது. குஜராத், மகாராஷ்டிரம் இவையிரண்டும் நன்கு வரையறுக்கப்பெற்ற பகுதிகளாக இருந்த போதிலும், அவை தனி மாகாணங்களாக அமைக்கப்பெறாமல் பம்பாய் மாகாணம் என்ற பெயரில் தொடர்ந்து ஒன்று சேர்க்கப்பட்டிருந்தன. அதே போன்று சென்னை மாகாணத்தில் தமிழர்கள், தெலுங்கர்கள் மலையாளத்தினர்கள் ஆகியோர் அனைவரும் ஒன்று சேர்க்கப் பெற்றிருந்தனர். இந்தியாவினின்றும் பர்மா பிரிக்கப்பட்டது என்று முன்னர் கூறினோம். பர்மா வெகு காலமாக அனுபவித்து வந்த கலாசாரம், வரலாறு ஆகியவற்றைச் சார்ந்த சுதந்திரத்தினை ஒத்துக்கொள்ளும் வகையில் ஏற்படுத்தப்பட்ட நிகழ்ச்சியாகவும், வரலாறு சம்பந்தப்பட்ட ஒரு கோளாற்றினை சரிபடுத்தும் நிகழ்ச்சியாகவும் அந்த நடவடிக்கை அமைந்தது.

இச்சட்டத்தில் காணக்கிடக்கும் கருத்தை ஈர்க்கும் மாறுதல்களில் மிகவும் சிறப்பானது கூட்டாட்சி கோட்பாடேயாகும். இந்திய கூட்டாட்சி இருவித நடவடிக்கைகள் வாயிலாக உருவாக்க திட்டமிடப் பெற்றது. முதலாவதாக இதுவரை மைய அரசுக்கு உட்பட்டிருந்த மாகாணங்களுக்கு சுய ஆட்சி உரிமை அளிக்கப்பட்டது. இரண்டாவதாக இதுகாறும் தனித்திருந்த சுதேச இராச்சியங்கள் இந்தியாவின் ஏனைய பகுதியுடன் இணைக்கப்படுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பெற்றன. இதற்கு முன்னர் இந்த இராச்சியங்கள் சுதேச அரசர்கள் ஆலோசனைக்குழு (Chamber of Princes) மூலமாக ஒன்று

சேர்ந்திருந்தன என்பதனையும், அவர்கள் ஒவ்வொருவரும் பிரிட்டிஷ் அரசுடன் நேரடித் தொடர்பு கொண்டிருந்தனர் என்பதனையும் நாம் நினைவில் வைத்துக்கொள்வது அவசியமாகும். மாகாணங்களைப் பொருத்தளவில் கூட்டாட்சி முறை சட்டத்தின் வாயிலாக அமைக்கப் படக் கூடியதாக இருந்தது. சுதேச மன்னர்களைப் பொருந்தளவில், அவர்களுடைய ஒப்புதலின் பேரில் தான் அவர்களை கூட்டாட்சியில் சேர்த்துக்கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டிருந்தது. ஏனெனில் தனித்தனி உடன்படிக்கைகள் அவர்களது நிலையினை வரையறுத்திருந் தன. ஆகவே தான் சுதேச மன்னர்கள் ஆளுகைக்கு உட்பட்டிருந்த மக்கள் தொகையில் பாதிக்கு மேற்பட்ட மக்களை ஆண்டுவந்த மன்னர் கள் இத்திட்டத்தினை ஏற்றுக்கொண்ட பிறகு தான் மைய ஆட்சி முறையைப் பற்றிய விதிகள் நடைமுறைப்படுத்த வேண்டும் என்று குறிப்பிடப்பெற்றுள்ளது. மைய கீழ் சட்டசபை உறுப்பினர்களுள் மூன்றில் ஒரு பங்கினரையும் மேல் சட்டசபையின் உறுப்பினர்களுள் ஐந்தில் இரண்டு பங்கினரையும் நியமிக்கும் உரிமை சுதேச மன்னர் களுக்கு அளிக்கப்பட்டது. மைய அரசுக்கு அவர்கள் விட்டுக்கொடுக்க விருக்கும் அதிகாரங்கள் கூட்டாட்சி ஏற்பு ஒப்பந்த பத்திரத்தின் (Instrument of Accession) வாயிலாக வரையறுக்கப்பட வழிவகை செய்யப்பெற்றது. சுதேச மன்னர்கள் கூட்டாட்சியில் கலந்து கொள்ளும் வரை பழைய மைய அரசு நீடித்து செயற்பட்டு வரவும் வழி வகுக்கப்பட்டது.

மையத்தில் அமைக்கப்பெறவிருக்கும் நிருவாக முறை சிற்றரசர்கள் சேர்ந்த பிறகே அமுலாக்கப்பட வேண்டும் என்று இருந்த போதிலும், ஏனைய விஷயங்களில் கூட்டாட்சி கோட்பாடு தனித்து இயங்கி வந்ததோடு மட்டுமன்றி, நடைமுறைபடுத்தப்பெற்றும் வந்தது. கூட்டரசு அதிகாரங்கள், மாகாண அரசு அதிகாரங்கள், இரண்டிற்கும் பொதுவான அதிகாரங்கள் என மூன்று விவரமான அதிகாரப் பட்டியல் கள் தயாரித்து சட்டமியற்று துறையில் எஞ்சிய அதிகாரங்களைப் பற்றிய பிரச்சனைக்கு தீர்வு காணப்பெற்றது. அப்பொழுது எதிர் காண இயலாத அதிகாரங்களை மாகாண அரசுக்கோ அல்லது மைய அரசுக்கோ அளிப்பதற்குப் பதிலாக கவர்னர் ஜெனரலுடைய தனி விருப்பத்திற்கு விடப்பெற்றன. அத்தகைய அதிகாரங்களைப் பங்கிடும் போது இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே பெரிய கருத்து வேற்றுமை இருந்தது என்பதை நாம் இங்கு குறிப்பிடுதல் அவசியமா கும். நிருவாகம், நிதி ஆகிய துறைகளைப் பற்றிய அதிகாரங்களைப் பங்கிடும்போது 1919ஆம் ஆண்டுச் சட்டத்தில் காணப்பெறும் முறை பொதுவாக கடைபிடிக்கப்பெற்றது. வருமான வரி வாயிலாக அரசாங்கம் பெறும் தொகையில் ஒரு பகுதியினை மாகாணங்களுக்கு

வழங்க ஏற்பாடு செய்யப்பட்டது. இதுவே 1919ஆம் ஆண்டுச் சட்டம், 1935ஆம் ஆண்டுச் சட்டம் ஆகியவை ஏற்படுத்திய திட்டங்களுக்கு இடையே இருந்த முக்கிய வேறுபாடாகும். மைய அரசு மாகாண அரசு ஆகிய இரண்டிற்கும் பொதுவான சட்டமியற்றும் அதிகாரங்களின் பட்டியல் ஒன்று ஏற்படுத்தியதினால் உண்டாகும் நன்மை இரண்டாவது உலகப் போரின் போது தெளிவாக விளங்கியது. போர் தொடங்குவதற்கு முன்னால் எவராலும் எண்ணிப் பார்க்க முடியாத அளவில் நாட்டு மக்களின் வாழ்க்கையினை கட்டுப்படுத்த வேண்டிய அவசியம் போர் தொடங்கிய பிறகு மைய அரசுக்கு ஏற்பட்டது கூட்டாட்சி முறையினை ஏற்றுக் கொண்டதன் விளைவாக மாகாணங்களில் நன்னாட்சி ஏற்படுத்தப்பெற்றது. இரண்டாவது உலகப் போரின் விளைவாக உண்டான அனுபவம், குறிப்பாக 1943-இல் தோன்றிய வங்கப் பஞ்சம் ஏற்படுத்திய அனுபவம், இந்த மாறுதலின் உண்மை நிலையினை வெளிப்படுத்தியது. மைய அரசு மாகாண அரசு ஆகியவற்றிற்கு இடையே ஏற்படும் சச்சரவுகளுக்குத் தீர்வு காணவும், அரசியல் சட்டத்தின் உட்பொருளை விளக்கவும், ஒரு கூட்டரசு நீதிமன்றம் அமைக்கப்பெற்றது. கூட்டரசு ரிசர்வ் பாங்கு ஒன்றும் ஏற்படுத்தப்பெற்றது. இவ்வாறாக கூட்டாட்சி அமைப்பு தன் முழு உருவத்தைப் பெறலாயிற்று.[1]

மாகாணங்களில் பொறுப்பாட்சி ஏற்படுத்தப்பெற்றது. இதனை அடுத்த முக்கிய மாறுதலாக நாம் கருதலாம். இரட்டையாட்சி ஒழிக்கப்பெற்றது. அதற்குப் பதிலாக மக்களாட்சி அமைக்கப்பட்டது. கவர்னரால் நியமிக்கப்பெற்ற போதிலும், அரசு மக்களால் தேர்ந்தெடுக்கப்பெற்ற சபைக்கு உட்பட்டு நடக்க வழிவகை செய்யப்பெற்றது. முதலமைச்சர்கள் அல்லது பிரதமர்கள் மாகாண நிருவாகத்தின் உண்மைத் தலைவர்களாக விளங்கினர். ஒதுக்கப்பெற்ற அதிகாரங்களைத் தவிர ஏனைய விஷயங்களில் கவர்னர்கள் முதலமைச்சர்களின் யோசனைப்படி செயலாற்றி வரலாயினர். மாகாணங்களினின்றும் அகற்றப்பெற்ற இரட்டையாட்சித் திட்டம் மையத்தில் புகுத்தப்பெற்றது. மையத்தில் பாதுகாப்பு, வெளிநாட்டு விவகாரங்கள் ஆகியவை நீங்கலாக நிருவாகம் முழுவதனையும் மக்கள் ஆதரவு பெற்ற அமைச்சர்கள் கட்டுப்படுத்தி வரலாயினர். பாதுகாப்பு வெளிநாட்டு விவகாரங்கள் ஆகியவற்றைக் கவனிக்க கவர்னர் ஜெனரல் ஆலோசகர்களை நியமிக்க ஏற்பாடு செய்யப்பட்டது. இவ்வாலோசகர்களின் நிலை முன்னர் ஏற்படுத்தப்பெற்றிருந்த கவர்னருடைய நிருவாகக் குழுவினர்

[1] 1934ஆம் ஆண்டு இந்திய ரிசர்வ் பாங்கு சட்டம் இதனை ஏற்படுத்தியது.

பணியாற்றி வந்த நியமனம் செய்யப்பெற்ற உறுப்பினர்களின் நிலையினை ஒத்திருந்தது.

இப்புதிய திட்டத்தின் ஏனைய கூறுகள் புதியனவன்று. அவை முன்னர் வழக்கத்தில் இருந்துவந்த முறைகளைப் பின்பற்றியனவாக இருந்தன. மாகாண சட்டசபைகள் மாற்றி அமைக்கப்பெற்றன. மொத்தம் 11 மாகாணங்கள் ஏற்படுத்தப்பெற்றன என்று முன்னர் கூறினோம். அவற்றுள் ஆறு மாகாணங்களில் மேல் சபைகள் ஏற்படுத்தப்பட்டன. இந்த மக்கள் சபைகளுக்கு ஆதரவாக பொது மக்களடங்கிய வாக்காளர் தொகுதிகளை அமைத்தனர். இத்தொகுதிகள் லோதியன் கமிட்டியின் ஆலோசனைப்படி பெரிதாக்கப்பெற்றதன் பயனாக மூன்று கோடி வாக்காளர்களை உட்கொண்டிருந்தன. சொத்துடையவர்களுக்கு வாக்குரிமை என்ற நிலை முற்றிலும் அகற்றப்படவில்லையென்றாலும் வயது வந்த மக்களுள் ஏறக்குறைய ஆறில் ஒரு பங்கினர் வாக்குரிமைப்பெற்றனர். வாக்குரிமை அளிப்பதில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் எவ்வித வித்தியாசமும் காட்டப்படவில்லை. 1909–இல் முஸ்லிம் நெஞ்சங்களை சமாதானப்படுத்துவதற்காக ஏற்படுத்தப்பெற்ற வகுப்பு வழி பிரதிநிதித்துவக் கோட்பாடு 1919-இல் மனித பலவீனத்திற்கு அளிக்கப்பெறும் சலுகையாக அமையுமாறு விரிவாக்கப்பெற்றது. 1935-இல் நிலையான சிறப்புக் கூறாக அது அமைந்துவிட்டது. எல்லா மாகாணங்களில் முஸ்லிம்களுக்கும், பஞ்சாபில் சீக்கியர்களுக்கும், சென்னை போன்ற சில இடங்களில் கிறுத்தவர்களுக்கும், வங்கத்தில் ஐரோப்பியர்களுக்கும் தனி பிரதிநிதித்துவம் வழங்கப்பெற்றது. தனி பிரதிநிதித்துவக் கோட்பாடு வெளிப்படையாக ஏற்றுக்கொள்ளப்பட்ட போதிலும், பல்வேறு இனங்கள் அடங்கிய சமுதாயத்திற்குகந்ததும் ஆராய்ந்து முடிவு செய்யப்பெற்றதுமான கருத்தின் ஒரு பகுதியாக அது பயன் படுத்தவில்லை. ஒரே சீரான மேல்நாட்டு மக்கள் பிரதிநிதித்துவக் கொள்கையினின்றும் மாறுபட்டதாக இருப்பினும், அம்மாறுதல் அனுமதிக்கப்பெற்ற ஒரு மாறுதலாகக் கருதப்பெற்றது. இத்தகைய பொது நெறியினின்றும் விலகிச் செல்லும் கட்சியினை சிந்து, ஒரிசா ஆகிய மாகாணங்களை நிறுவிய போதும் நாம் காண்கிறோம். நிருவாக நலன் அல்லது வரலாற்றைச் சார்ந்த கருதி செய்யப்படாத சொல் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டு மாகாணங்களை அமைத்தல் தொன்றுதொட்டு வரும் வழக்கமாகயிருந்தது. ஆனால் சிந்து, ஒரிசா மாகாணங்களை அமைக்கும்போது மக்களின் கோரிக்கையே அடிப்படையாகக் கொள்ளப்பட்டது.

இச்சட்டத்தில் காணப்பெறும் காப்பு விதிகளும் தனிப்பட்ட அதிகாரங்களும் முந்திய வழக்கத்தினை தொடர்ந்து கடைப்பிடிக்கும் வகையிலே அமைந்திருந்தன. மையத்தில் ஒதுக்கப்பெற்ற துறைகளை கவனிக்கும் பொறுப்பு, கவர்னர் ஜெனரலுடைய சட்டங்கள் என்ற வடிவில் கொண்டுவரப்பெறும் சட்டங்களுக்குத் தகுதிச் சான்று வழங்குதல், தொடர்ந்து ஆறு மாதங்கள் வரை நடைமுறையில் இருக்கக் கூடிய அவசரச் சட்டங்களை நிறைவேற்றுதல் போன்ற அதிகாரங்கள் கவர்னர் ஜெனரலுக்கு அளிக்கப்பெற்றன. தனி முறையான பொறுப்புக்களை நிறைவேற்றுவதற்காக கவர்னர்களுக்கு தனிப்பட்ட அதிகாரங்களை வழங்கியது. அவற்றுள் முக்கியமானவை ஒரு சார்பாக நடந்துக் கொள்வதை தடுத்தல், சிறுபான்மையினரின் நியாயமான நலன்களை பாது காத்தல், தன்னாட்சிமுறை முறிவுறும் போதும் நிருவாகத்தினைத் தொடர்ந்து நடத்துதல் ஆகும். தன்னாட்சிமுறை முறிவுறும் போது தற்காலிக சட்டங்கள், நிரந்தரமான சட்டங்கள் ஆகியவற்றை நிறைவேற்றும் அதிகாரத்தினையும், நிருவாகம் முழுவதினையும் கட்டுப்படுத்தி நடத்தும் அதிகாரத்தினையும் கவர்னர்கள் பெற்றனர். புதிதாக ஏற்படுத்தப்பெற்ற அரசியல் என்ற இயந்திரம் செயல் ஆற்றல் இழக்கும் போதும் புதிதாக அமர்த்தப்பெற்ற அமைச்சர்கள் என்ற பொறியியல் வல்லுநர்கள் வேலை நிறுத்தத்தில் ஈடுபடும் போதும், நிருவாகத்தினை தொடர்ந்து இழுத்துச் செல்லக்கூடிய நெருக்கடிகால இயந்திரத்திற்கு இந்த தனி முறையான அதிகாரங்களை ஒப்பிடலாம். ஏனைய காப்பு விதிகள் அகில இந்திய பணித்துறைகளின் உரிமைகளை அழியாது காப்பாற்றின. மேலும் அப்பணித்துறைகளை கட்டுப்படுத்தும் அதிகாரம் இந்தியா அமைச்சருக்கு வழங்கப் பெற்று இருந்தது. அவ்வதிகாரமும் இப்போது கெடாது காப்பாற்றப்படுவதற்கு இக்காப்பு விதிகள் உதவின.

இந்தியா அமைச்சர் தொடர்ந்து பணியாற்ற இச்சட்டம் வழி வகுத்தது. ஆனால் இந்தியா கவுன்சில் ஒழிக்கப்பெற்றது. அதற்குப் பதிலாக இந்தியா அமைச்சருக்கு உதவியாக இருக்க பல ஆலோசகர்கள் நியமிக்கப் பெற்றனர். இந்திய விவகாரங்களைக் கட்டுப் படுத்தும் முடிவான அதிகாரம் பாராளுமன்றத்திற்கு தொடர்ந்து அளிக்கப் பெற்றது. இந்த முடிவான அதிகாரத்தின் புறச்சான்றாக இந்தியா அமைச்சர் விளங்கினார். அரசியலமைப்புத் துறையில் பெற்றோர்க்கும் குழந்தைக்கும் இடையே ஏற்பட்டிருந்த கொப்பூழ்க் கொடி இன்றும் துண்டிக்கப் பெறவில்லை.

வழி காட்டு விதிகளடங்கிய பத்திரம், சிக்கலான அட்டவணைகள் ஆகியவற்றுடன் கூடிய இப்பெரும் அரசியலமைப்புச் சட்டம்

டொமினியன் நிலையினை இந்தியாவிற்கு அளிக்கவில்லை என்றாலும், டொமினியன் நிலையினை நோக்கி மேற்கொள்ளப்பட்ட பெரிய நடவடிக்கையாக அமைந்திருந்தது. சுருங்கக் கூறின் மைய அரசுடன் ஒத்திட்டு பார்க்கும்போது மாகாண அரசிற்கு சுயஆட்சி உரிமை வழங்க இச் சட்டம் ஏற்பாடு செய்தது; தல நிருவாகம் பொருத்தளவில் தன்னாட்சி ஏற்படுத்தப்பெற்றது. மையத்தில் செயலாட்சி, சட்டமியற்றுதல் ஆகிய இரு துறைகளிலும் பொது மக்கள் பங்கு கொள்ள ஏற்பாடு செய்யப்பெற்றது. கூட்டாட்சி கொள்கை ஏற்றுக் கொள்ளப்பட்டது. சுதேச மன்னர்கள் இந்தியாவின் ஏனைய பகுதியில் சேர்ந்து கொள்ள திட்டமிட்டது. மாகாணங்களில் பிரிட்டிஷ் கட்டுப்பாடு குறைந்தது. இனி பிரிட்டிஷ் அரசினருக்கு கவர்னர்களை நியமித்தல், இந்திய சிவில் சர்விசு, இந்திய போலீஸ் சர்வீசு ஆகியவற்றை கட்டுப்படுத்துதல் போன்ற அதிகாரங்கள் மட்டுமே அளிக்கப் பட்டன. சிவில், போலீஸ் ஆகிய சர்விசுகளைச் சார்ந்தவர்களை அமைச்சர்கள் பதவியினின்றும் விலக்க முடியாது. அவர்களை ஓரிடத்தினின்றும் மற்றோர் இடத்திற்கு மாற்றுவதற்கும், அவர்களை வேலையற்றோர் பட்டியலில் சேர்ப்பதற்கும் அமைச்சர்களுக்கு அதிகாரம் வழங்கப்பெற்றது. ஆனால் இந்தியா அமைச்சருடைய அனுமதியின்றி அவர்களை நீக்கவோ, கீழ்ப்படிக்குத் தள்ளவோ முடியாது. அமைச்சர்களுக்கு உட்பட்டு நடக்க வேண்டிய நிலை ஏற்படுத்தப்பட்டது என்றாலும் மாகாண அமைச்சரவையைப் பொருத்தளவில் அவர்கள் சற்று சுதந்திரமாகவே பணியாற்றி வந்தனர் என்பன உண்மையாகும்.

சில முக்கியமான வகைகளில் இந்த புதிய அரசியலமைப்புச் சட்டம் டொமினியன் நிலைக்குக் குறைவான நிலையினையே அளித்தது என்று கூற வேண்டும். முதலாவதாக மையத்தில் இரட்டையாட்சி ஏற்படுத்தும் திட்டத்தினைக் குறிப்பிட வேண்டும். மைய நிருவாகம் இரு பிரிவுகளாக பிரிக்கப்பட்டது என்றும், அவற்றுள் ஒன்று ஒதுக்கீடு செய்யப்பெற்ற பகுதி என்றும், பாதுகாப்பு, வெளிநாட்டு விவகாரங்கள் ஆகிய இரண்டும் இப்பிரிவின் கீழ் கொண்டு வரப்பெற்றன என்றும் முன்னர் கவனித்தோம். இப்பகுதியினை கவனித்து வரும் செயல்குழுவினை விலக்க இந்திய மக்களுக்கு அதிகாரமில்லை. அக்குழு பிரிட்டிஷ் நாடாளு மன்றத்திற்கு மட்டுமே பொறுப்புள்ளதாக இருந்தது. வைசிராய் நாட்டுத் தலைவருக்குரிய அதிகாரங்களையும், பிரதம மந்திரிக்குரிய அதிகாரங்களையும் தொடர்ந்து வகித்தார். அவர் பிரிட்டிஷ் அமைச்சரவையின் ஆதரவை எதிர்நோக்கி செயலாற்றி வந்தார். 1845-இல் கனடாவில் எல்ஜின் பிரபு ஒரு எழுதாச் சட்டத்தின் மூலமாக நிறைவேற்றிய மாற்றம் இந்தியாவில் இன்னமும் நிறைவேற்றப் படவில்லை. அது மட்டுமன்றி அத்தகைய மாற்றம் சட்டத்தின் வாயி-

லாக தடை செய்யப்பட்டது. காப்புவிதிகளை நாம் இரண்டாவது தடைக்கட்டாகக் கருதலாம். இந்த வகையான காப்பு விதிகளுக்குச் சமமான விதிகளை வேறெந்த டொமினியன்களிலும் காண இயலாது என்று பேராசிரியர் கூப்லாந்து அவர்கள் கூறுகின்றார். அவ்விதிகளை புறக்கணிக்கக்கூடும் அல்லது அவற்றை நடைமுறையில் சிறிது சிறிதாக குறைத்து ஒன்றுமில்லாதனவாக செய்து விடக்கூடும். அல்லது திருத்தங்களைக் கொண்டு வந்து அகற்றிவிட முடியும். ஆனால், தற்போதைக்கு இந்தியா பிரிட்டிஷ் அரசின் ஆதரவில் தொடர்ந்து இருந்து வருகிறது என்பதனை விளம்பரம் படுத்துவனவாக அவை அமைந்திருந்தன. மேலும் அறிவிக்கப்பெற்ற பிரிட்டிஷ் அரசின் நல்லெண்ணங்களில் சந்தேகம் கொண்ட பிரிட்டிஷ் ஏகாதிபத்திய எதிர்ப்பாளர்களுக்கு பயன்படும் கருவியாகவும் அவை அமைந்தன. மூன்றாவதாக புதிதாக அமைக்கப் பெறவிருக்கும் மத்திய சட்டசபை பிரிட்டிஷ் நாடாளுமன்றத்திற்கு அடங்கியிருக்க வேண்டிய நிலை தொடர்ந்து இருந்தது. இந்திய சட்டசபை ஏனைய டொமினியன்களின் அரசியலமைப்புகள் போலவே பிரிட்டிஷ் நாடாளுமன்ற சட்டத்தின் வாயிலாகவே ஏற்படுத்தப்பெற்றது. அதுமட்டுமன்றி அதனுடைய சட்டமியற்றும் அதிகாரம் பல விதங்களிலும் கட்டுப் படுத்தப் பெற்றது இந்தியா அமைச்சருடைய கட்டுக்கு உட்பட்டு செயலாற்றி வரும் கவர்னர் ஜெனரலுடைய ஒப்புதல் அதனுடைய சட்டங்களுக்கு கிடைக்காமல் போகக்கூடும். இந்தியா அமைச்சருடைய யோசனையின் பேரில் பிரிட்டிஷ் அரசர் அது இயற்றும் சட்டங்களை நிராகரிக்கலாம். இத்தகைய கட்டுப்பாடுகளை நாளடைவில் இந்த புதிய திட்டத்திற்கு யாதொரு தீங்கு நேராவண்ணம் நீக்கிவிட முடியும் என்பது உண்மையேயாகும். ஆனால் அக்கட்டுப்பாடுகள் இருக்கும் வரை அவை இந்திய சுதந்திர வேட்கையினை தடை செய்வதாகவே அமைந்திருந்தன. மேலும் வெஸ்ட் மின்ஸ்டர் சட்டத்தின் வாயிலாக நலம் பெற்ற டொமினியன்களுடன் இந்தியாவின் நிலைமையினை ஒப்பிட்டு குறை காணுவதற்கு இக்கட்டுப்பாடுகள் இடம் அளித்தன.

புதிய அரசியலமைப்பின் முக்கிய கூறுகள் பின்வருமாறு: 1. கூட்டாட்சி கொள்கையும், அத்துடன் இணைக்கப்பெற்ற சுதேச மன்னர்களின் ஒத்துழைப்பும். 2. மக்களால் தேர்ந்தெடுக்கப்பெற்ற பிரதிநிதிகளுக்கு அரசாங்கம் பொறுப்புள்ளதாக இருத்தல் வேண்டும் என்ற கொள்கை. 3. வகுப்புவாரி பிரதிநிதித்துவம். 4. தடைக் காப்பு விதிகள். பிரிட்டிஷ் ஆட்சியின் அடுத்த 12 ஆண்டுகளில் ஏற்பட்ட அரசியலமைப்புப்பற்றிய விவாதங்களும், அரசியலைச்சார்ந்த திட்டங்களும் இவைகளைப்பற்றியதாகவே இருந்தன.

புதிய அரசியலமைப்பின் நல்விளைவுகளை நாம் கவனிப்பதன் மூலம் பின்னர் ஏற்பட்ட நிகழ்ச்சிகளை ஓரளவு முன்னறிவிக்க இயலும். மையத்தில் கூட்டாட்சி அமைப்பு உருபெறவில்லை. அதற்குப் பதிலாக இறுதியில் இந்தியக்குடியரசு ஏற்படுத்தப்பெற்றது. இதனைக் கொண்டு புதிய அரசியல் சட்டம் வெற்றிபெற வில்லை என்று நாம் முடிவு கட்டுதல் எளிதாகும். ஆனால் இது உண்மையன்று. 1935ஆம் ஆண்டு அரசியல் சட்டம் பழையனவற்றையும், புதியனவற்றையும் இணைக்கும் அமைப்பியல் சார்ந்த ஒரு இணைப்புப்பொருளாகவே கருதப் படவேண்டும். சுதந்திர விதைகளை அது உட்கொண்டிருந்தது. பொறுப்பற்ற கூறுகள் இனி திட்டத்தின் முக்கியமான கூறுகளாகக் கருதப்பெறவில்லை. அவற்றை இந்திய அரசியல் மரத்தின் வேர் என்றோ அல்லது அடிமரம் என்றோ கூற இயலாது. அவற்றை இனி கிளைகளுக்குத்தான் ஒப்பிடக்கூடும். மரக்கிளைகளைப் போல மரத்திற்கு யாதொரு கேடு நேராவண்ணம் அவற்றை தரித்து எறியக்கூடும். புதிய கூறுகளை இந்திய ஆலமரத்தின் வேரூன்றிய கிளைகளுக்கு ஒப்பிடலாம். ஆலமரத்திறுக்கு யாதொரு தீங்கும் நேராமல் எவ்வாறு மூலத்தண் டினை வெட்டியெடுத்து விடலாமோ அதேபோன்று காலம் வரும்போது திட்டத்திற்கு தீங்கு நேரா வகையில் பொறுப்பற்றக் கூறுகளைப் போக்கிவிட முடியும். இரண்டாவதாக இந்தியாவில் வன்முறையான புரட்சி ஏற்படாமல் இருந்ததற்கு ஒரு காரணம் இடைவிடாத தொடர்பு ஆகும். இந்தியாவின் முக்கியமான அரசியல் கட்சி அரசியலமைப்புத் திட்டத்தில் எப்பொழுதுமே மனநிறைவு கொண்டதாகக் காணப்பெற வில்லை. சில நேரத்தில் சட்டத்திற்குப் புறம்பான செய்கைகளின் வாயிலாக தனது குறிக்கோளை நிறைவேற்ற முற்பட்டது. ஆயினும் சமாதான முறையிலே சுதந்திரம் பெற முடியும் என்ற நம்பிக்கை எப்பொழுதும் இருந்து வந்தது. காங்கிரசு கட்சி இத்திட்டத்தினை ஏற்றுக்கொள்ளவில்லை என்பது வெளிப்படையாகத் தோன்றினும், முழுமையான சுதந்திரத்தைப் பெற முடியும் என்ற நம்பிக்கை தான் அதனை வன்முறையில் ஈடுபடுவதினின்றும் தடுத்தது எனலாம். மகாத்மா காந்தியினுடைய சாத்வீக போராட்டக்கொள்கை இந்த நம்பிக்கையின் விளைவு என்று சொல்ல முடியாவிட்டாலும் சில நேரத் தில் முழு மனதுடன் தன்னைப் பின்பற்றி நடக்காதவர்கள் மீது தன்னு டைய கொள்கையினை திணிக்க இது பெரிதும் உதவியது. 1942ஆம் ஆண்டில் ஏற்பட்ட ஆகஸ்டு எழுச்சியும், 1946-இல் ஏற்பட்ட கப்பற் படையினர் கலகமும் வன்முறையினை ஆதரிப்பவர்களின் எண்ணிக்கை குறைந்து விட்டதை வெளிப்படுத்தின. இப்பொழுதும் அவர்கள் ஆபத்தினை விளைவிக்கக்கூடிய எண்ணிக்கையில் இருந்த போதிலும், புரட்சியினை ஏற்படுத்தும் அளவிற்கு அவர்கள் வராமல் தடுத்து நிறுத் தப்பெற்றனர். நெருக்கடி நிலை தொடர்ந்து இருந்து வந்தது. சூழ்

நிலைக்கேற்ப அது ஏறி இறங்கி வந்தது. ஆனாலும் ஒரு புரட்சி ஏற்படக்கூடிய அளவில் அது வளரவில்லை. அரசியலில் மாற்றம் ஏற்பட்டு வரும் வேளையில் ஏற்படக்கூடிய சிரமங்களை சமாளிக்கத் தக்கதாக இச்சட்டம் அமைந்திருந்தது. அத்துடன் உலக நெருக்கடியையும், போர்க்கால இடர்ப்பாடுகளையும் சமாளிக்கத்தக்க வகையிலும் இது அமைந்து விட்டது.

மூன்றாவதாக பிரிட்டிஷ்காரர்களின் அறிவிக்கப்பெற்ற நல்லெண்ணங்களின் சின்னமாக இச்சட்டம் விளங்கியது. தேசிய கோட்பாட்டினுக்கு அளிக்கப்பெறும் ஒரு சலுகையாக அது காணப்பட்டது. மாண்டேகு சேம்ஸ்போர்டு சீர்திருத்தங்கள் உலகப்போருக்குப் பிறகு பிரிட்டனுக்கு ஏற்பட்டிருந்த பலவீனத்தின் விளைவுகள் என்று குறிப்பிடக்கூடும். ஆனால் 1935ஆம் ஆண்டுச் சட்டம் ஏற்படுத்தப்பெற்ற போது பிரிட்டன் ஒரு வலுவுள்ள நாடாக இருந்தது என்பதனை மறுக்க இயலாது. ஆகவே அச்சட்டம் பிரிட்டிஷ் அரசின் முழு மனதுடன் ஏற்படுத்தப் பெற்ற சட்டமாகக் கருதப்பட வேண்டுமேயொழிய அதனுடைய பலவீனத்தைப் பயன்படுத்திக்கொண்டு அதனிடமிருந்து பலவந்தமாக பெறப்பட்ட சட்டமாகக் கருதப்படக்கூடாது. அதனை நிறைவேற்றும்போது மேற்கொள்ளப்பெற்ற விவாதங்கள் பிரிட்டிஷ் அரசின் அசைக்க முடியாத நல்லெண்ணங்களைத் தெளிவுபடுத்துகின்றன. இந்த உண்மையை பலர் அக்காலத்தில் ஏற்றுக்கொள்ளவில்லை. மௌன்ட்பேட்டன் பிரபுவினுடைய அறிக்கை வெளியாவதற்கு முன்னர் சில மாதங்களில் ஏற்பட்டிருந்த நெருக்கடி காலத்திலும் இவ்வுண்மையினை ஒத்துக் கொண்டவரின் எண்ணிக்கை முன்புவிட மிகக் குறைந்து விட்டது. ஆனால் பொறுமையின்மை, நம்பிக்கையின்மை ஆகியவற்றினால் தோன்றிய சந்தேகம் இந்தியா சுதந்திரம் பெற்ற போது மறைந்து விட்டது. அதுபோது புதிய சுதந்திரம் 1935ஆம் ஆண்டுச் சட்டம் உட்கொண்டிருந்த கருத்தின் முழு வளர்ச்சியாகத் தோன்றியது. ஆகவே இச்சட்டம் அமைதியான முறையில் அதிகார மாற்றம் ஏற்படுத்துவதில் பெரும் பங்கு கொண்டுள்ளது என்பதை நாம் அறியலாம். அதே நேரத்தில் 1917ஆம் ஆண்டிற்குப் பிறகு இந்திய மக்களுக்கும், பிரிட்டிஷ் மக்களுக்கும் இடையே நல்லெண்ணம் மீண்டும் ஏற்பட இச்சட்டம் பெரிதும் உதவியது என்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது. பிரிட்டிஷ் ஆட்சி முடிவுற்றபோது பிரிட்டிஷ் அரசு தனது முந்தைய பாவங்களுக்கு மன்னிப்புக் கேட்க வேண்டிய அவசியமில்லாமல் போயிற்று. இந்திய அரசினுடைய வாரிசு ஏற்பாட்டு ஒப்பந்தத்தினை 12 ஆண்டுகளுக்கு முன்னரே தயாரிக்கப்பட்டது. பொறுப்புள்ள தலைவர்கள் அச்சட்டத்தின் பால் கொண்டிருந்த மதிப்பு இந்தியக் குடியரசு அரசியலமைப்பினை ஏற்படுத்திய போது நன்கு

வெளிப்பட்டது. அச்சட்டத்தில் காணப்பெறும் நிபந்தனைகள் பல அப்படியே ஏற்றுக்கொள்ளப்பட்டன. அக்பர் காலத்திய தோடர் மால் பந்தோபஸ்து முறைக்கும் வட இந்தியாவில் பிரிட்டிஷ் இந்திய அரசு ஏற்படுத்திய நிலவர ஏற்பாட்டிற்கும் இடையே காணப்பெறும் தொடர்பினை 1935ஆம் ஆண்டு இந்தியச் சட்டத்திற்கும் புதிய அரசியலமைப்புக்கும் இடையே நாம் காண்கிறோம். இவ்வளவு மதிப்புடன் இச்சட்டம் நடத்தப்பெற்றது என்றால் அதற்கு முக்கிய காரணமாக இருந்தவர் இந்தியாவின் முதல் பிரதம நீதிபதி சர். மௌரிஸ் கிவியர் ஆவர். அவர் தான் அச்சட்டத்தின் நிபந்தனைகளை ஐயம் தெளிவுற விளக்கி அவற்றின் உட்பொருளை எடுத்துக்காட்டி அவற்றின் உண்மையான தன்மையினை விளக்கினார். 1935ஆம் ஆண்டுச் சட்டத்தைப் பின் பற்றியவாறு இந்திய அரசியலமைப்பின் இறுதி ஏற்பாடுகள் செய்த பொழுதுதான் இந்தியாவில் பிரிட்டிஷ்காரர்களுக்கு உண்மையான பாராட்டுகள் கிடைத்தன.

அதே நேரத்தில் இச்சட்டத்தில் பல குறைகளும் இருந்தன. இக்குறைகள் பல விளைவுகளுக்குக் காரணங்களாக அமைந்தன. மையத்தில் கூட்டாட்சியைப்பற்றிய நிபந்தனைகளை நடைமுறைப் படுத்துவதென்பது சுதேச மன்னர்களைப் பொருத்திருந்தது. அது பிரிவினையைத் தடுக்கவில்லை. சுதேச மன்னர்களின் ஆளுகைக்குட் பட்டிருந்த மக்கள் தொகையில் பாதிக்கு மேற்பட்ட மக்கள் தொகையைக் கொண்ட சுதேச இராச்சியங்கள் கூட்டாட்சியில் சேர்ந்த பிறகே மத்திய அரசைப் பற்றிய நிபந்தனைகள் நடைமுறைப் படுத்தவேண்டும் என்ற நிபந்தனை ஒரு பெரிய முட்டுக்கட்டையாக இருந்தது. இதனிலும் நுண்ணிய மேல் குடியார்கள் ஒத்துழைப்பு ஆற்றல் வெகுவாக பாதிக்கப்பட்டது. எப்பொழுதும் புதைந்திருக்கிற பிரிவினை சக்திகள் இப்பொழுது தூண்டப்பெற்றன. சுதேச மன்னர்கள் ஒத்துழைக்கத் தவறியதன் விளைவாக மத்திய கூட்டாட்சி சட்டசபையும், செயற்குழுவும் உயிர் பெறவில்லை. பொறுப்பற்ற ஆட்சி தொடர்ந்து இருக்கலாயிற்று. அதன் விளைவாக இனம் சார்ந்த சக்திகளைக் கட்டுப் படுத்துவதும், தேசிய சக்திகளை திருப்தி படுத்துவதும் முன்னைவிட இப்பொழுது மிகக்கடினமாக மாறிவிட்டன.

பிரிவினை சக்தியைத் தூண்டவில்லையென்றாலும், அச்சக்தியை வளர்க்க இச்சட்டத்தில் காணப்பெறும் மற்றொரு குறைபாடு காரணமாக இருந்தது. சிறுபான்மையினர் பிரதிநிதித்துவம் பெறவேண்டும் என்பதற்காக இனவழி தேர்தல் தொகுதிகள் ஏற்படுத்தப்பெற்றன. மேல் சபைகளும் அந்நோக்கத்துடன் தான் அமைக்கப்பெற்றன. ஆனால் ஓர் இனம் கொண்ட தேசிய ஜனநாயக நாட்டிற்குப் பொருத்தமான

இறைமைக் கொள்கை கடை பிடிக்கப்பெற்றது. பெரும்பான்மை முடிவே எல்லா பிச்சனைகளின் அடிப்படைத் தத்துவமாக அமைந்தது. இந்திய சமுதாயம் பல்வேறு இனங்களைக் கொண்டது என்ற உண்மை புதிய அரசியல் நிறுவனங்களை ஏற்படுத்திய பொழுது உணரப்பட்ட தாகத் தெரியவில்லை. இந்தியாவில் இரு கலாச்சாரங்கள் இரு மதங்கள் ஒன்றின் பக்கம் ஒன்றாக இருந்து வருகிறது என்ற உண்மையைக் கவனிக்கத் தவறி விட்டனர். ஒரு சமுதாயத்தைச் சேர்ந்த பெரும் பான்மையினர் ஆதரவு பெற்ற அரசாங்கத்தின் கட்டளைகளை மற்றொரு சமுதாயத்தினர் ஒத்துக்கொள்வார்கள் என்று ஊகித்தனர். இத்தகைய மனநிலை 19ஆம் நூற்றாண்டில் பிரிட்டிஷ்காரர்கள் கொண்டிருந்த மன நிலையினின்றும் மாறுபட்டு இருந்தது என்று கூற வேண்டும். அப் பொழுது பிரிட்டிஷ் அரசினர் அரசியல் துறையில் தலைமை அதிகாரம் பெற்றிருந்த போதிலும், சமூகம், கலாச்சாரம், மதம் ஆகிய துறை களில் தலையிட்டால் தனக்கு ஆபத்து ஏற்படும் என்பதை உணர்ந்திருந் தனர். கலாச்சாரத்துறையில் தலையிடாக் கொள்கை வல்லாட்சியினால் ஏற்பட்ட குறையினை அகற்றும் வகையில் அமைந்தது. புதிய அரசியல் திட்டம் எல்லா வகையான பெரும்பான்மையினருக்கும் அரசியல், கலாச்சாரம் ஆகிய துறைகளில் எல்லா விதமான சிறுபான்மையினரின் மீது ஆதிக்கம் செலுத்தும் அதிகாரத்தினை அளித் தது. அத்தகைய போக்கு பிரிட்டிஷ்காரர்களிடம் ஏற்பட்டுள்ளது என்ற ஐயம் தான் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் சிப்பாய்க் கலகம் ஏற்படுவதற்கான சூழ்நிலை உருவாகுவதற்கு காரணமா யிருந்தது. 1935ஆம் ஆண்டிற்குப் பிறகு ஒரு இனம் மற்றொரு இனத் தினை அடக்கியாளுமோ என்ற பயம் தான் பிரிவினை ஏற்படுவதற்கான சூழ்நிலை உண்டாவதற்கு காரணமாக அமைந்தது.

புதிய தலைவர்கள் புதிய நிறுவனங்களுடன் புதிய சகாப்தம் தொடங்கியது. 1936–இல் வில்லிங்டன் பிரபுவிற்குப் பிறகு லின் லித்கோ பிரபு வைசிராய் ஆனார். லின்லித்கோ தனது பதவிக்காலம் முடிவதற்குள் இச்சட்டத்தினை முழுமையாக நடைமுறைப்படுத்திவிட வேண்டும் என்ற பேரவா கொண்டிருந்தார். அவர் பல்பொருள் அறிவு பெற்றிருந்தார். விவசாயம் பற்றிய இராயல் கமிஷனின் தலைவர் என்ற முறையில் இந்தியா முழுவதையும் சுற்றிப் பார்த்தவர். 1935ஆம் ஆண்டு அரசியலமைப்புத் திட்டத்தின் முன் வரிவினை பரிசீலனை செய் வதற்காக அமைக்கப்பெற்ற கூட்டு நாடாளுமன்றக் கமிட்டியின் தலைவ ராக இருந்தார். வங்காளத்தில் மாண்ட்போர்டு சீர்திருத்தங்களைத் துவக்கி வைத்த ஜெட்லாந்து பிரபு (அப்பொழுது ரோனல்ட் ஷாய் பிரபு) விற்குப்பிறகு சர். சாமுவேல் ஹோர் இந்தியா அமைச்சரானார். 1935ஆம்

ஆண்டுச் சட்டத்தினை வரைவதில் பெரும் பங்கு கொண்ட சர். மௌரிஸ் கிவியர் இந்தியாவின் முதல் பிரதம நீதிபதியாக பதவியேற்ருர்.

இந்தியாவிலே இச்சட்டம் அரைகுறை மனத்தோடுதான் வரவேற்கப்பட்டது. ஆனுல் ஓரளவு நம்பிக்கையுடன்தான் அதனை வரவேற்றனர் என்பதை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். லிபரல் கட்சியும் வேறு சிதற்றுக் கட்சிகளும் முழுமையான பொறுப்பாட்சி நோக்கி ஏற்படுத்தப்பெறும் சீர்திருத்தங்களின் முதல் தவணை என்ற முறையில் இச் சட்டத்தினை நடைமுறைப்படுத்துவதற்கு இசைந்தார்கள். முஸ்லிம் லீக் கட்சி வெகு பலமாக இச்சட்டத்தினைக் கண்டித்தது. ஆயினும் இச்சட்டம் செயல்பட ஒரு வாய்ப்பு அளித்து அதன் வாயிலாக இதன் விளைவுகளை அறிந்துகொள்ள முற்பட்டனர். காங்கிரசு இச்சட்டத்தினை கண்டித்தது. ஆயினும் மாகாணங்களைப் பற்றிய விதிகளை நடைமுறைப்படுத்துவதற்கு தன்னுடைய ஒத்துழைப்பினை அளிக்கத் தயாராக இருக்கிறது என்பதனை ஜாடையாக அறிவித்தது. 1916-இல் லக்னௌ உடன்பாடு ஏற்படுத்தப்பெற்ற போது இந்துக்களும் முஸ்லிம்களும் ஒன்று கலந்து செயற்படுவர் என்ற நம்பிக்கை ஓரளவு இருந்தது. 1935-இல் மத்திய சட்டசபை தேர்தல் நடத்தப்பெற்றபோது இந்து இந்தியாவின் காங்கிரசுத்தான் செல்வாக்கு பொருந்திய கட்சி என்பது நிச்சயமாயிற்று.

இந்த வகையான சூழ்நிலையில் லின்லித்கோ பிரபு தனது பணியினைத் தொடங்கினுர். அவருடைய பிரதிநிதிகள் முக்கியமான சுதேச இராச்சியங்களுக்கு அனுப்பப்பெற்றனர். இந்தியக் கூட்டாட்சியில் சுதேச மன்னர்கள் கலந்து கொள்வதைப் பற்றிய பேச்சுவார்த்தைகளை அவர்கள் நடத்திஞர்கள். இந்த பேச்சுவார்த்தைகளும், அவற்றைப் பற்றிய அறிக்கைகளை ஒத்திட்டுப் பார்த்தலும் 1939ஆம் ஆண்டு வரை நடைபெற்று வந்தது அதற்குள்ளாக சுதேச மன்னர்களை அலறவைக்கும் புது நிகழ்ச்சிகள் ஏற்பட்டுவிட்டன. மேலும் உலகப்போர் அரசாங்கத்தினுடைய கவனத்தை கவரத் தொடங்கியது. தக்க சமயம் நழுவி விட்டது. அது மீண்டும் வருவதாக இல்லை. சுதேச இராச்சியங்களை உட்கொண்டிருந்த இந்தியப் பகுதியின் மறைவு வரவேற்கத்தக்க முடிவான நிகழ்ச்சி என்று எண்ணுதவர்கள், இந்த விஷயத்தில் தேவைக்கு மீறிய பொறுமையும் அமைதியும் காட்டப்பட்டது என்று எண்ணுவது இயல்பேயாகும். இரும்பு நன்ருகக் காய்ச்சப்பட்டு இருக்கும் போதே அதனை அடித்து தேவையான உருவத்தைப் பெறவேண்டிய நிலை அப்போது ஏற்பட்டிருந்தது. ஆனுல் 1939-இல் வைசிராய் அடிப்பதற்கு சம்மட்டியினைப் பயன் படுத்தத் தொடங்கியபோது அடிக்கப்பட வேண்டிய இரும்பு குடிமுந்து

கிடந்தது. அடுத்த நடவடிக்கை மாகாண தேர்தல்கள் நடந்தவதை பற்றியதாகும். 1937ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் தேர்தல்கள் நடைபெற்றன. காங்கிரசு அமோக வெற்றி பெற்றது. 5 மாகாணங்களில் பெரும்பான்மையைப் பெற்றது. பம்பாயில் தன்னோடு ஒத்தவர்களின் துணைகொண்டு அமைச்சரவையை ஏற்படுத்தக்கூடிய நிலையைப் பெற்றது. வடமேற்கு எல்லை மாகாணத்தில் எல்லை காந்தி அப்துல் கபார்கான் தலைமையின் கீழான செஞ்சட்டை பத்தானியர்கள் பெரும்பான்மையைப் பெற்றனர். இவர்கள் காங்கிரசின் கூட்டாளிகள் ஆவார். வங்காளத்தில் பசுல் உல் ஹக் தலைமையின் கீழ் முஸ்லீம் கூட்டு மந்திரி சபை அமைக்கப்பெற்றது. பஞ்சாபில் யூனியனிஸ்டு கட்சி பெரும்பான்மையைப் பெற்றது. இக்கட்சியினை மீண்டும் படைத்தவர் சர். பஸ்லி உசேன் என்பவராவார். சர். சிக்கந்தர் ஹயாத் கான் இப்பொழுது மந்திரி சபையை அமைத்தார். யூனியனிஸ்டு கட்சி ஒன்று தான் இந்தியாவில் இருந்த இன சார்பற்ற முக்கியமான கட்சியாகும். முஸ்லிம்கள் பெருவாரியாக இக்கட்சியில் இருந்த போதிலும், லாலா சோது ராம் தலைமையின் கீழான இந்து ஜாட் மக்களின் ஒரு பிரிவினரும் சீக்கிய விவசாயினர்களின் ஒரு பிரிவினரும் இதில் சேர்ந்திருந்தனர். இக்கட்சி நாட்டுப்புற நலனுக்கு முக்கியத்துவத்தை அளித்தது. சர். சிக்கந்தர், அவரைத் தொடர்ந்த சர். கிசிர் ஹயாத்கான் ஆகியோர் தலைமையின் கீழ் இக்கட்சி பஞ்சாபில் ஒன்பது ஆண்டுகள் ஆட்சி செலுத்தி வந்தது.

உடனே ஒரு இக்கட்டான நிலை ஏற்பட்டது. காங்கிரஸ் தலைவர்கள் கவர்னர்களிடம் சில உறுதி மொழிகளை வேண்டினார்கள். அதாவது அரசியலமைப்புச் சார்ந்த நடவடிக்கைகளைப் பொருத்தளவில் அமைச்சர்களது நடவடிக்கைகளை கவர்னர்கள் தங்களுக்கு அளிக்கப் பெற்ற தனி அதிகாரங்களைப் பயன்படுத்தி ஒதுக்கித்தள்ளக் கூடாது என்பதாகும். எதிர்பாராத நிகழ்ச்சிகள் ஏற்படும்போது நிலைமையினை சமாளிப்பதற்காக கவர்னர்கள் தங்களுக்கு சட்டமளித்த அதிகாரத்தினை விட்டுக்கொடுக்க தயாராக இல்லை. ஆனால் பதவி ஆசை மாகாண காங்கிரசு கட்சிகளிடம் வெகு பலமாக எழுந்திருந்தது. வைசிராய் வெளியிட்ட அறிக்கை இந்த இக்கட்டு நிலையினை போக்கியது. ஜூலையில் ஏழு மாகாணங்களில் காங்கிரசு மந்திரி சபைகள் அமைக்கப் பெற்றன. மாகாணங்களில் பொறுப்பாட்சி திருப்திகரமான அளவில் தொடங்கியது.

இந்த மந்திரி சபைகள் சற்றேறக்குறைய இரண்டரை ஆண்டுகளுக்குப் பிறகு ஏற்பட்ட உலகப்போர் தொடங்கும் வரை ஆட்சி செலுத்தி வந்தன. ஓரிரு மந்திரி சபைகள் தவிர ஏனையவை குறிப்

பிடத்தக்க அளவு நிலைபெற்று விட்டன. காங்கிரசு கட்சிக்குள் போதிய அரசியல் திறம்படைத்தவர்கள் உள்ளனர் என்பதைக் குறிந்துக் காட்டும் அளவிற்கு அவை செயல்பட்டு வந்தன. அவர்களுள் மிகவும் சிறந்தவர் திரு. சி. இராஜகோபாலாச்சாரி ஆவார். ஐக்கிய மாகாணத்தில் பண்டிட் ஜி. பி. பந்த் அவர்களையும், பம்பாயில் பி. ஜி. கெர் அவர்களையும் இராஜகோபாலாச்சாரியின் மதிப்பார்ந்த கூட்டாளிகளாகக் கருதலாம். அமைதி நிலைநாட்டப்பெற்றது. இனச்சச்சரவுகள் தக்க முறையில் சமாளிக்கப்பெற்றன. நிருவாகம் முதலில் சரிவர நடக்க வில்லை என்றாலும் பின்னர் ஒழுங்காக நடைபெற்றது. மாகாண காங்கிரசு கமிட்டிகள் தங்களை இணையொத்த அரசாங்கங்களாகக் கருதும் போக்குத் தடை செய்யப்பெற்றது. காங்கிரஸ்காரர்கள் அரசியலமைப்புக்குகந்தவாறு எண்ணமிடலாயினர். காந்தியினுடைய ஆதாரக் கல்வித் திட்டம் போன்ற முன்னேற்ற நடவடிக்கைகளும் மதுவிலக்கு போன்ற பரிசோதனைத் திட்டங்களும் மேற்கொள்ளப் பட்டன. பிரிட்டிஷ் கவர்னர்கள், மேல் அதிகாரிகள் ஆகியவர்களுடன் அமைச்சர்கள் கொண்டிருந்த தொடர்பு வியக்கத்தக்க முறையிலே நன்றாக அமைந்திருந்தது. இப்புதிய முயற்சி முடிவுற்றபோது இரு பாலாரும் மிக்க வருத்தமடைந்தார்கள். இதுவன்றி வேறு பல நிகழ்ச்சிகளும் ஏற்பட்டன. மையத்தில் கூட்டாட்சித் திட்டம் நடைமுறைக்கு கொண்டுவரப்படாத காரணத்தில் தேசியம் சார்ந்த அரசியல் நடவடிக்கைகள் தொடர்ந்து மேற்கொள்ளப்பட்டுவந்தன. பழைய மத்திய சட்டசபையில்[1] காங்கிரசு மிகுந்த பலத்துடன் இருந்தது. பொறுப்பற்ற மத்திய செயற்குழுவிற்கு எதிராக அது போராடி வந்தது. எல்லாவற்றிற்கும் மேலாக காங்கிரசு தனது தேசியத் தன்மையுடன் கூடிய அமைப்பை தொடர்ந்து வைத்திருந்தது. காங்கிரசின் பெரும் தலைவர்கள் மாகாண அமைச்சர்கள் பதவியினை ஏற்கவில்லை. அதற்குப் பதிலாக அவர்கள் காங்கிரசு மேலிடமாக அமைந்திருந்தனர். காங்கிரசு மேலிடம் காங்கிரசு காரியக் கமிட்டி வாயிலாகவும் காங்கிரசு அமைச்சரவை வாயிலாகவும் தேசியக் கொள்கையின் முக்கியமானக் கூறுகளை வகுத்தது. மேலும் மாகாண அமைச்சரவைகளின் வேலையினை மேற்பார்வையிட்டனர். அதனுடைய ஆணையின்படி அமைச்சர்கள் பதவியேற்றனர். அதனுடைய கட்டளையின்படி அவர்கள் பதவியினின்றும் விலகினார்கள். மாகாண அமைச்சரவைகள் தங்களுக்குச் சமமான கட்சி நிறுவனங்கள் ஏற்பட அனுமதிக்கவில்லை என்றாலும் மத்திய அரசுக்குச் சமமான அனைத்து இந்திய நிறுவனத்தின் ஆணைக்குட்பட்டப் பிரதிநிதிகளாகப் பணி

[1] 144 பேர்கொண்ட சபையில் 104 பேர் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் அவர்களுள் 44 பேர் காங்கிரசுக்காரர்கள்.

யாற்றி வந்தனர். இவ்வாறாக மாகாண சுயஆட்சி, மாகாண பொறுப்பாட்சி ஆகிய இரண்டுமே காங்கிரசு ஆட்சிக்குட்பட்ட மாகாணங்களில் முழுமையைப் பெறவில்லை ஏனெனில் இவ்வரசுகள் இரண்டு வகைகளிலும் வெளி அதிகாரக் குழுவிற்கு உட்படுத்தப்பெற்றனர்.

அரசியல் சார்ந்த மூலப்பிரச்சனைகள் யாவும் காரியக் கமிட்டியிலும் காங்கிரசின் வருடாந்திர பொதுக் கூட்டங்களிலும் விவாதிக்கப் பெற்று முடிவு காணப்பெற்றன. மகாத்மா காந்தி தொடர்ந்து பெரும் செல்வாக்குப் பெற்றிருந்தார். அவர் எந்தவிதமான பதவியை வகிக்கவில்லை என்பதையும் சில நேரத்தில் சந்தா செலுத்தும் அவர் சாதாரண உறுப்பினராகக் கூட இருந்தது இல்லை என்பதையும் நாம் கவனத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். விவசாயிகள் காந்தியையும் காங்கிரசையும் ஒன்றாக எண்ணினார்கள். பட்டணத்தில் வாழும் கற்றறிந்தோர்கள் அவருடைய கொள்கைகளை எப்பொழுதும் ஆமோதிக்கவில்லை என்றாலும் அவருடைய அனைத்து உலகப் புகழினுக்கு மதிப்பு கொடுத்தனர். அவருடைய சகாக்களுக்கு சில நேரத்தில் அவரது கொள்கைகளின் சிலவற்றின்பால் எரிச்சல் ஏற்படுவதுண்டு ஆனால் அவரது முடிவுகளை அவர்கள் மரியாதையுடன் நடத்தினர். அவரது குணத்தைப் போற்றினர். அவருக்கு அடுத்தபடியாக பண்டித ஜவஹர்லால் நேரு மக்களிடையே மிக்க செல்வாக்குப் பெற்றிருந்தார். மேல்நாட்டு நாகரிகப் பண்புகளை ஏற்றிருந்த வகுப்பினைச் சார்ந்த இளைஞர்களும் ஐக்கிய மாகாணங்களைச் சேர்ந்த நிலமற்ற விவசாயிகளும் அவரைக் கடவுளாக மதித்தனர். அவர் ஒரு சோஷலிசவாதியாகவும், சமூக சீர்திருத்த வாதியாகவும், கடவுள் உண்டு என்பதைக் கண்டறிய முடியாது என்னும் கொள்கையுடையவராகவும், மதக்குருமார்களின் அத்துமீறிய செல்வாக்கினை எதிர்ப்பவராகவும், தேசியவாதியாகவும், மக்களாட்சிக் கொள்கையுடையவராகவும் விளங்கினார். அவரது பரந்த குறிக்கோள்களும் மட்டற்ற ஆர்வமும் புதிதாக தோன்றிவரும் மேல்நாட்டுப்பண்புகளை ஏற்றுக்கொண்ட வகுப்பினர்களின் மனப்போக்கிற்கு உகந்தனவாக இருந்தன. இந்திய சுதந்திரத்திற்காக அவர் செய்த தியாகங்கள், தன்னலமற்ற போக்கு, கபடமற்ற பேச்சு அவரை காந்தியின் வாரிசாக ஏற்கனவே முடிவுகட்ட உதவின. பிறருடைய கவனத்தை வெகுவாக ஈர்க்கும் தன்மையைக் கொண்டவரில்லையென்றாலும் மிகுந்த ஆற்றல் படைத்த இராஜேந்திர பிரசாத் காங்கிரசின் பிற்போக்கு பிரிவினுடைய பிரதிநிதியாக விளங்கினார். மேற்கு இந்தியத் தொழில் அதிபதிகள், போராட்டத்தில் நம்பிக்கை கொண்டவர்கள் ஆகியோரின் பிரதிநிதியாக சர்தார் வல்லபாய்படேல் விளங்கினார். காங்கிரசின் தீவிர இடது சாரிகளின் பிரதிநிதியாக வங்காளத்தைச் சார்ந்த சுபாஷ் சந்திர போஸ் விளங்கினார்.

அப்போதைக்கு ஏற்பட்டுவரும் முன்னேற்றங்களை கண்காணித்து வருவதிலேயே காங்கிரசு மனநிறைவு பெற்றிருந்தது. ஆனால் இந்த கண்காணிப்பு உயிர்நாடியற்ற கண்காணிப்பு அன்று. 1936 முதல் 1939 வரையிலுள்ள ஆண்டுகளில் மூன்று முக்கிய முடிவுகள் எடுக்கப்பட்டன. காங்கிரஸ் தலைவர்கள் தங்களுடைய தலைமையினை மேலிடம் என்று விளக்கம் தந்தனர். மாகாண முதலமைச்சர்கள் மேலிடத்தின் கட்டளைப்படி நடந்து வந்தனர். அவர்களை மைய அதிகாரத்திற்குட்பட்டு நடக்கும் எண்ணிறந்த இராணுவத் தளபதிகளுக்கு அவர்களை ஒப்பிடலாம். மத்திய மாகாணங்களில் டாக்டர் காரே கட்டுப்பாட்டை மீறிய போது கட்சியில் பிளவு ஏற்படும் என்று அறிந்தும் அவரை உடனே பதவியிலிருந்தும் நீக்கினார்கள். காங்கிரசு தலைமையிடத்திலும் தீவிரவாதிகள் அதே நிலைக்கு உட்படுத்தப்பெற்றனர். 1937ஆம் ஆண்டின் இறுதியில் ஜவஹர்லால் நேருக்கு அடுத்தபடியாக காங்கிரசு தலைமைப் பொறுப்பு ஏற்க சுபாஷ் சந்திர போஸ் அனுமதிக்கப்பட்டார். ஆனால் ஓராண்டு கழித்து மகாத்மா காந்தியின் விருப்பத்திற்கு மாறாக அவர் மீண்டும் அப்பதவிக்குப் போட்டியிட்டபோது டாக்டர் காரேக்கு ஏற்பட்ட கதி அவருக்கு ஏற்பட்டது. மூன்றாவதாக இந்திய மக்களின் உண்மையான பிரதிநிதிகள் காங்கிரசுக்காரர்கள் தான் என்று மிக தைரியமாக உரிமை கொண்டாடினர். ஏனைய கட்சிகள் ஏனைய கருத்துக்களை பிரதிபலிக்கக்கூடும். ஆனால் இந்தியா முழுவதற்கும் காங்கிரசு ஒன்று தான் பிரதிநிதியாக இருக்கக்கூடும் என்று கூறினார்கள். ஆகவே தான் காங்கிரஸ் எங்கெங்கு மாகாணங்களில் பெரும்பான்மையினைப் பெற்றிருந்ததோ அங்கெல்லாம் கூட்டு அமைச்சரவை ஏற்படுத்த காங்கிரசு இசையவில்லை. அமைச்சரவை ஏற்படுத்த எங்கெல்லாம் வேறு கட்சியினர்கள் ஒத்துழைப்பு அவசியமோ அங்கெல்லாம் கூட்டு அமைச்சரவை ஏற்படுத்தப் பெற்றது. அவ்விடங்களிலும் அது தாற்காலிக ஏற்பாடாகவே கருதப்பெற்றது. குறிப்பாக இந்த கோட்பாடு முஸ்லிம் விஷயத்தில் பயன்படுத்தப்பெற்றது. முஸ்லிம் தேசியவாதிகள் முஸ்லிம்களை காங்கிரசில் உள்ள முஸ்லிம்களாகப் பாவித்தனர். காங்கிரசு முஸ்லிம்களை இந்தியர்களாகப் பாவித்தனர். ஆகவே முஸ்லிம்களுக்குத் தனி பிரதிநிதித்துவம் அவசியமாகக் கருதப்பெறவில்லை. அதனால் முஸ்லிம் லீக்கு கட்சியுடன் சேர்ந்து கூட்டரசு ஏற்படுத்த வேண்டிய அவசியமும் உணரப்பெறவில்லை. இவ்வாறாக ஏற்கனவே தோன்றி இருந்த முஸ்லிம் எதிர்ப்பு இப்பொழுது ஐயத்திற்கு இடமற்ற வகையில் வெளிப்பட்டது. நம்முடைய கவனத்தினை இப்பொழுது இதன்பால் செலுத்துவோமாக.

தற்கால இந்தியாவில் முஸ்லிம் எண்ணப்போக்கு இரண்டு கூறுகளை உட்கொண்டிருந்தது. முதலாவதாக தன்னாட்சி பெற வேண்டும் என்ற ஆசையாகும். இது இந்துக்களிடையே எவ்வளவு தீவிரமாக ஏற்பட்டிருந்ததோ அவ்வளவு தீவிரமாக முஸ்லிம்கள் இடையேயும் ஏற்பட்டிருந்தது. இரண்டாவதாக இந்துக்களினின்றும் தனித்து இருக்கவேண்டும் என்ற உணர்ச்சியாகும். இந் தனி உணர்ச்சியினை வைதீக பிராமணர்களிடம் ஏற்பட்டிருந்த தனி உணர்ச்சிக்கு ஒப்பிடலாம். அதன் விளைவாக ஐயத்திற்கிடமற்ற வகையில் ஒரு தேசிய நிறுவனமாக இருந்த பொழுதிலும் பெரும்பாலான இந்துக்கள் கொண்ட காங்கிரசு நிறுவனம் முஸ்லிம்களுடைய விருப்பு வெறுப்புகளுக்கு மாறி மாறி உள்ளாகி வந்தது. முஸ்லிம்கள் சுதந்திரத்தில் பங்குபெற விரும்பினர்கள். ஆனல் அவர்கள் பிரிட்டிஷ்காரர்களுடைய ஆதிக்கத்தினின்று மட்டுமன்றி இந்துக்களுடைய ஆதிக்கத்தினின்றும் விடுதலை பெற விரும்பினர்கள். இன வழி தேர்தல் தொகுதிகள், 1914ஆம் ஆண்டு உலகப்போர் காலத்தில் ஏற்பட்ட மனக்குறைகள், லக்னௌ உடன்பாடு, 1920ஆம் ஆண்டு ஒத்துழையாமை இயக்கத்திற்கு துருக்கி அளித்த ஒத்துழைப்பிற்கு ஆதரவளித்தல் ஆகியவற்றை மார்லி-மிண்டோ சீர்திருத்தங்கள் உண்டாக்கின. மாண்ட்போர்டு சீர்திருத்தங்களின் விளைவாக ஏற்பட்ட அனுபவம், குறிப்பாக பஞ்சாபில் பஸுல்-இ-ஹுசேன் அவர்களின் தலைமையின் கீழ் ஏற்பட்ட அனுபவம், பிரிட்டிஷ்காரர்கள் தங்களுடைய அதிகாரத்தை விட்டுக்கொடுக்கத் தொடங்கிவிட்டார்கள் என்பதனை இந்துக்களைவிட அதிகமான அளவில் முஸ்லிம்களை உணரச் செய்தது. பிரிட்டிஷ்காரர்கள் இந்திய நாட்டை விட்டுப்போவது எவ்வளவுக்கெவ்வளவு நிச்சயமாக காணப்பெற்றதோ அவ்வளவுக்கவ்வளவு சந்தேகத்துடன் இந்துக்களுடைய எண்ணங்களை நோக்கத் தொடங்கினர். 1922ஆம் ஆண்டிற்குப் பிறகு இவ்விரு இனத்தினரும் ஒருவரை விட்டு ஒருவர் தனித்துச் செல்வதற்கு இதுவே காரணமாக அமைந்தது. ஏற்படுத்தவிருக்கும் கூட்டாட்சியில் மைய அரசு பலமற்றதாக இருக்கவேண்டும் என்று முஸ்லிம் விருப்பத்திற்கும் இதுவே காரணமாகும். 1930-இல் சர். முகமது இக்பால் முஸ்லிம் மாகாணங்களுக்கு தனி கூட்டாட்சி முறை அமைக்க வேண்டும் என்று யோசனை கூறினர் சௌத்ரி ரகமத் அலி 1933-இல் பாகிஸ்தான் என்ற வார்த்தையினை புதிதாக உண்டாக்கினர். அரசியல் வாதிகள் அநேகர் பொருந்தாக் கற்பனை என்று சொல்லக் கூடிய ஒரு திட்டத்தினையும் அவர் வரைந்தார். முஸ்லிம்கள் மிகுந்த கலவரத்துடன் இருந்தனர். ஆனல் அவர்களிடையே ஒற்றுமையில்லை. புதுப்பிக்கப்பெற்ற முஸ்லிம் லீக்கு கட்சியின் வாயிலாகத்

தங்களுடைய ஒற்றுமையை நிலைநாட்ட முற்பட்ட போது, பம்பாயைச் சார்ந்த முன்னாள் காங்கிரஸ்காரரான முகமது அலி ஜின்னா என்பவரைத் தலைவராகக் கொண்டனர்.

1937ஆம் ஆண்டு தேர்தல்களின் போது இந்துக்கள் பெருவாரியாக உள்ள மாகாணங்களில் கூட்டு அரசு வாயிலாக காங்கிரசுடன் ஒத்துழைக்க வேண்டும் என்ற அடிப்படையில் தேர்தலில் ஈடுபட்டார். 1937-இல் அவர் கூறியதாவது: 'லீக்குக்கும் காங்கிரசுக்கும் அடிப்படை வித்தியாசம் ஏதும் இல்லை. காங்கிரசு தன்னுடைய ஆக்கமுறையான திட்டத்தினை நிறைவேற்ற நாங்கள் மகிழ்ச்சியுடன் ஒத்துழைப்போம்'. ஆனால், இக்கொள்கையினை நிராகரிக்கும் வகையிலே காங்கிரசின் உட்கிரகித்தல் கொள்கை குறிப்பாக ஐக்கிய மாகாணங்களில் அமைந்திருந்தது. ஒரே அடியில் இக்கொள்கை முஸ்லிம்களின் நட்பு சார்ந்து ஒத்துழைப்பு நம்பிக்கையினை தகர்த்தெறிந்தது. ஒரே கணத்தில் இந்துக்களின் போக்குகள் மீது முஸ்லிம் கொண்டிருந்த சந்தேகத்தினை மீண்டும் புத்துயிர் பெறச்செய்தது. நடுத்தர வர்க்கத்தினைச் சார்ந்த முஸ்லிம்களுக்கு காங்கிரசு ஆட்சி இந்து ஆதிக்க ஆட்சியாகத் தோன்றியது. மேல் நாட்டு நாகரிகப் பண்பாடுகள் கொண்டிருந்த முஸ்லிம் அரசியல்வாதி தன்னுடைய முன்னாள் கூட்டாளிகளால் வெளியே சூழ்ந்திருந்த அரசியல் இருட்டுக்குள் தான் தள்ளப்பட்டிருப்பதைக் கண்டார். தனக்கு ஆதரவாக இருக்க முஸ்லிம் பொது மக்கள் உணர்ச்சியினை நாடிச்சென்றார். அவ்வுணர்ச்சியினைத் தூண்டுவது மிக எளிது எனக் கண்டறிந்தார். அவ்வாறாக நடுத்தர முஸ்லிம் மக்கள் தேசிய இயக்கத்தினை முஸ்லிம் பொது மக்கள் புத்தெழுச்சியாக மாற்றிவிட்டார். இவ்வாறாக பாகிஸ்தான் அரசுக்கு அடிக்கல் நாட்டினார். 'இந்துஸ்தானம் இந்துக்களுக்காக என்பதனை பெரும்பான்மை இனத்தவர் திட்டவட்டமாகக் காட்டி விட்டனர்.' என்று அவர் அறிவித்தார்.[1] காங்கிரசு கொடுமையை இழைத்ததாகக் குற்றம் சாட்டப்பெற்றது. அதற்கு ஆதாரமாக விவரங்கள் சேர்க்கப்பட்டன. (1939ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் காங்கிரசு மந்திரி சபைகள் பதவியினின்றும் விலகியபோது ஜின்னா விடுதலை நாள் ஒன்றை அறிவித்தார். அதுவே நன்றி அறிவிப்பு நாளாகவும் கொள்ளப்பெற்றது. காங்கிரசின் ஆட்சி முடிவடைந்ததன் வாயிலாக முஸ்லிம்களுடைய துயர் நீங்கியது என்பதைக் காட்டவே இந்த நடவடிக்கையை மேற்கொண்டார்.) 1940-இல் பாகிஸ்தானம் லீக்கின் குறிக்கோளாக அமைந்தது. காங்கிரசார் முதலில் இதனுடைய முக்கியத்துவத்தை குறை மதிப்பிட்டார்கள். நாகரிகம் முதிர்ந்த

[1] R. A. Symonds 'The making of Pakistan' பக்கம் 53.

பம்பாயில் ஒரு தீர்க்கதரிசி தோன்ற முடியுமா என்பது அவர்களுடைய எண்ணமாக இருந்தது. தேர்தலில் லீக்கு அமோக வெற்றி பெறவில்லை. பஞ்சாபையோ அல்லது வங்கத்தையோ அது தன் ஆளுகைக்குட்படுத்த இயலவில்லை. தனது ஆசைகளை நிறைவேற்ற இயலாத காரணத்தால் மனக்கசப்பு அடைந்த அரசியல்வாதிகளின் குற்றச்சாட்டுகளாக அவருடைய குமுறல்கள் குறை மதிப்பிடப் பெற்றன. இருபது ஆண்டுகளுக்கு முன்னர் காந்தியை ஒரு அபாயகர மற்ற புரியா போக்குடையவர் என்று பிரிட்டிஷ்காரர்கள் ஒதுக்கி தள்ளியது எவ்வளவு பெரும் தவறாக மாறிவிட்டதோ அவ்வளவு பெருந்தவறாக இந்த தவறான மதிப்பீடு மாறியது.

# 7. இந்தியாவும் போரும், 1939-45

1939ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் போர் தொடங்கியபொழுது பிரிட்டனைக் காட்டிலும் அதிகமாக பொருள் வகையிலே இந்தியா ஆயத்தமாயில்லை. மேலும் இந்திய மக்களின் கருத்தும் பிரிட்டிஷ்காரர்களைக் காட்டிலும் அதிகளவில் பிளவுப்பட்டிருந்தது. போர் ஆயத்த நிலையினைக் குறித்துக்காட்டிய ஒரே அறிகுறி சாட்பீல்ட் குழுவின் வருகையேயாகும். அரசியலமைப்புத் திட்டத்தைப் பற்றிய பரிசோதனைகளில் பொதுமக்களும், அதிகாரிகளும் தங்கள் கவனத்தைச் செலுத்தியிருந்தனர். ஐரோப்பா இன்னும் வெகு தூரத்தில் இருந்தது. போர் ஏற்பட்டாலும் அது இந்தியாவை நேரடியாக பாதிக்கும் என்று எவரும் கருதியதாகத் தெரியவில்லை. அதனால் பொதுமக்கள் ஐரோப்பிய நிகழ்ச்சிகளை அறிந்திலர் என்றோ அவற்றில் கவனம் கொள்ளவில்லை என்றோ கூற முடியாது. இந்திய தேசியவாதிகள் மக்களாட்சி முறையில் பற்றுடையவர்களாயிருந்தமையால் அவர்கள் பாசிஸ்டு இயக்கத்தின் எதிரிகளாக இருந்தனர். பாசிஸ்டு எதிரிகளுடன் சேர்ந்து பாசிஸ்டுகளை ஒடுக்கத் தீவிர நடவடிக்கை மேற்கொள்ள வேண்டும் என்று கூச்சலிட்டனர். ஆனால் அத்தகைய நடவடிக்கைகளில் தாங்களும் பங்கு கொள்ள நேரும் என்று எதிர்பார்க்கவில்லை. இதற்குள்ளாக முஸ்லிம் லீக்கின் தோற்றம், காங்கிரசுக்குள் இடது சாரிகள் வலது சாரிகள் ஆகியோரிடையே நடைபெற்று வரும் பூசல்கள், மாகாண அமைச்சரவைகளின் தலை விதி ஆகியவை ஐரோப்பிய விவகாரங்களை விட அதிகளவில் இந்திய மக்களின் கவனத்தை ஈர்த்திருந்தன. காங்கிரசு தலைவர்களுள் ஜவஹர்லால் ஒருவர் தான் உலக விவகாரங்கள் எத்துணை அளவு இந்தியாவை பாதிக்கும் என்பதை உணர்ந்திருந்தார். அவர் ஒருவர் தான் உலகப் பிரச்சனைகளில் பொது மக்களை ஈடுபடுத்த முனைந்தார். ஒரு காலத்தில் உள்நாட்டுக் கொள்கையினை வரையறுப்பதும் அதனுடைய வேலையாகவே கருதப் பெற்றது. ஆனால் இப்பொழுது அத்தகைய மனப்பாங்கு வேகமாக மறைந்து வந்தது என்பதை நாம் இங்கு குறிப்பிட வேண்டும்.

அவ்வாறிருந்தும் வெளிநாட்டுக் கொள்கையினை வரையறுப்பது பிரிட்டிஷ் அரசின் வேலையாகவே இப்பொழுதும் கருதப்பெற்று வந்தது. சுதந்திரம் பெற்ற பிறகு தான் இந்தியா அயல் நாட்டு விவகாரங்களில் கவனம் செலுத்த வேண்டும் என்று எண்ணினார்கள். பிரிட்டனின் இக்கட்டான நிலை இந்தியாவிற்கு நன்மை பயக்கும் வாய்ப்பினை அளிக்கும் என்ற பழைய கருத்து வெகுவாகப் பரவி இருந்தது. பிரிட்டனுக்கு ஏற்படும் இக்கட்டு நிலை பிரிட்டனுக்கு மட்டுமன்றி இந்தியாவினுக்கும் பெருத்த கேட்டினை விளைவிக்கும் என்பதை எவரும் உணரவில்லை.

ஆகவே போர் துவங்கிய போது போரின் குறிக்கோளை பொதுவாக எல்லோருமே ஆதரித்தனர். ஆனால் அதை அடைவதற்கான முயற்சியை மேற்கொள்ள விருப்பமற்று இருந்தனர். போரை பிரிட்டனுடைய விவகாரமாகக் கருதினரேயன்றி இந்தியாவின் விவகாரமாகக் கருதவில்லை. பிரதிநிதித்துவம் இல்லையேல் வரியில்லை என்ற பழைய வாசகம் இப்பொழுது பொறுப்புள்ள ஆட்சியில்லையேல் போரில் பொது மக்கள் ஈடுபாடு இல்லையென்று மாற்றியமைக்கப் பெற்றது. போரில் இந்தியா பங்கு கொண்ட விதத்தினை எதிர்க்கும் வகையில் காங்கிரசு அமைச்சரவைகள் பதவியினின்றும் விலகின.[1] தனிப்பட்டவர்களும், வகுப்பினர்களும் உதவி செய்ய முன் வந்தனர். ஆனால் மொத்தத்தில் இந்தியா, ஐரோப்பிய அரங்கில் நடைபெற்று வரும் பெரும் நாடகத்தினை உயர் காட்சி மேடையில் அமைக்கப் பெற்றிருக்கும் இருக்கையினின்றும் தான் பாதுகாப்பான சௌகரிய மான இடத்தில் இருக்கிற நினைப்புடன் கண்டு வந்தது. இந்த வகையான மனப்பாங்கு பிரான்சு தோல்வியுறும் வரைத் தொடர்ந்து இருந்தது. ஒரு கணநேரம் ஏற்பட்ட பயம் மறைந்து பிரிட்டிஷ்காரர் களின் விடாப்பிடியினையும், ஆர்வத்தினையும் பாராட்டும் நிலை தோன்றியது. படையெடுப்பு முறியடிக்கப்பெற்றபோது போர் வெகு நாளைக்கு நீடிக்கும் என்று எண்ணமிட்டனர். இந்தியா முக்கிய மான பங்குகொள்ள வேண்டிய நிலை உண்டாகும், என்று எண்ணினார் கள். உதவி செய்ய முன்னைவிட இப்பொழுது அதிகளவில் ஆசை ஏற்பட்டது. ஆயினும் இதைப்பற்றி மாறுபட்ட கருத்து தொடர்ந்து இருந்தது. முதலில் தான் சுதந்திரம் பெறாமல் வேறு நாடுகளின் சுதந்திரத்திற்காக எவ்வாறு போராட முடியும் என்ற பிரச்சனை எழுந்தது. இந்த வகையான எண்ணப்போக்கு ஜப்பான் போரில் ஈடுபட்டபோது மேலும் வலுவடையத் தொடங்கியது. இந்தியாவிற்கு ஏற்பட இருக்கும் ஆபத்தினை முன்னைவிட இப்போது அதிகளவில்

1 கீழே காண்க.

அறிந்தனர். முன்னைவிட இப்போது அதிகளவில் உதவி செய்ய முற்பட்டனர். அதே நேரத்தில் தன்னுடைய விதியினை தானே நிர்ணயிக்க முடியாத நிலையில் இருப்பதைக் கண்டு இந்தியர்கள் மலைத்திருந்தனர்.

இப்போது போர் காலத்தில் இந்தியாவின் நிலையினைப் பற்றி கவனிப்போம். முரண்டு பிடிக்கிற பொதுமக்களை சமாளிக்கும் பொறுப்பும் பிரிட்டிஷ் பேரரசின் ஒரு பகுதி என்ற முறையிலும் காமன்வெல்த் நாடுகளில் ஒன்று என்ற முறையிலும் இந்தியாவின் போர் ஏற்பாட்டினை கவனிக்கும் பொறுப்பும் அரசப் பிரதிநிதியைச் சேர்ந்ததாயின. மாபெரும் இராணுவப் பெருக்கத் திட்டம் ஒன்று மேற்கொள்ளப்பட்டது. இந்தியத் துருப்புக்கள் சண்டை செய்வதற்கு நடு கிழக்குப் பகுதி ஏற்ற இடமாகக் கருதப்பெற்றது. எகிப்தில் கண்காணிக்கும் பணியில் ஈடுபட்டிருந்த சர். ஆர்ச்சிபால்டு வேவலுக்கு உதவி செய்வதற்காக இந்திய துருப்புக்கள் அனுப்பப்பெற்றனர். பிரான்சின் வீழ்ச்சியும், அதன் விளைவாக நடுகிழக்குப் பகுதியினின்றும் பிரஞ்சு பலம் அகற்றப்பட்டதால் ஏற்பட்ட நெருக்கடி நிலையும், இத்தாலி போரில் கலந்துகொண்ட நிகழ்ச்சியும் நடு கிழக்கு போர் அரங்கம் திடீரென மிக முக்கியமான போர் அரங்கமாக மாறியது. அதன் விளைவாக இந்தியத் துருப்புக்கள் நிகழ்ச்சிகளின் மையத்தில் இருப்பதை உணர்ந்தனர். அவர்களுடைய வீரமும், திறமையும் சந்தர்ப்பத்திற்கேற்ப உயர்ந்தன. 1940-41-இல் மேற்கொள்ளப் பெற்ற பெயர் போன பாலைவனப் போர் ஏற்பாட்டில் இந்தியத் துருப்புக்கள், குறிப்பிடத்தக்க பங்கினை வகித்தனர். நான்காவது ஏழாவது படைப்பிரிவுகள் புதிய விருதுகளை இந்தியப் படைக்குத் தேடித்தந்தன. பாலைவனச் சண்டையின் கடுமைகளையும் சிக்கல் களையும் சமாளிக்கும் திறன் பெற்றவர்களாக விளங்கினர். தற்கால போர்க் கருவிகளுடன் அவர் உலகத்திலே முதல் இடத்தைப் பெற்ற னர். வேவல், ஆசின்லெக் ஆகியோரின் தலைமையின் கீழ் பாலைவனப் போர்புரியத் தலைப்பட்ட இந்தியத் துருப்புக்கள் மாண்ட்கோமரி தலைமையின் கீழ் நடைபெற்ற இறுதி போர் வரை இந்தியர்கள் பங்கு கொண்டிருந்தனர். இராக்கு, சிரியா, பாரசீகம் ஆகிய இடங்களில் நடைபெற்ற போர்களும் இதனுள் அடங்கியிருந்தன. இராக்கில் இந்தியர் தலையீடு பெரும் வெற்றியில் முடிந்தது.

அதற்கு முன்னரே இந்திய இராணுவ பெரு முயற்சி கிழக்குப் பக்கத்தின் பால் திருப்பிவிடப்பட்டது. 1941ஆம் ஆண்டின் தொடக் கத்திலிருந்தே ஜப்பானியர்களால் தென்கிழக்கு ஆசியாவிற்கு ஆபத்து

பெருகிக்கொண்டே வந்தது. மலேயாவின் பாதுகாப்பிற்கு பிரிட்டிஷ், ஆஸ்திரேலியா படையினருடன் இந்தியப் படையினரும் பயன் படுத்தப் பட்டனர். 1941ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் ஜப்பானியர்களின் தாக்குதல் ஏற்பட்டபோது இந்திய துருப்புக்கள் தெற்கு நோக்கி பின் வாங்கினர். சிங்கப்பூர் போரிலும் பங்கு கொண்டனர். சிங்கப்பூர் சரணடைந்த போது 90,000 இந்தியத் துருப்புகள் சிக்கியிருந்தனர். அலெக்சாந்தர் தலைமையின் கீழ் பர்மாவினின்றும் வெற்றிகரமாகப் பின் வாங்கு போர் ஏற்பாட்டின் போது இந்தியத் துருப்புக்கள் பெருமை கொள்ளத்தக்க முறையில் பங்கு கொண்டன. அதன் பிறகு இந்தியாவின் பாதுகாப்புத் திட்டத்தில் இடம் பெற்றனர். இந்தோ-பர்மா எல்லையிலுள்ள மலைப்பாங்கான காடுகளும், சுர நோயினால் பீடிக்கப் பெற்ற பள்ளத்தாக்குகளும் அவர்களுடைய முகாங்களாக இருந்தன. இந்த சூழ்நிலையில் இரு பெரும் புதிய பிரச்சனைகளுக்கு முடிவு காண வேண்டிய நிலை ஏற்பட்டது. முதலாவது பாலைவனச் சூழ்நிலையில் போர் இடுவதற்குப் பதிலாக வெப்பக் காடுகள் சூழ்நிலையில் போர் புரிவதாகும். இரண்டாவது இந்த வகையானப் போருக்கென்றே பழக்கப்படுத்தப் பெற்ற ஜப்பானியர்கள் கையாண்டு வரும் போர்த் தந்திரங்கள் ஆகும். செட்டான பழக்க வழக்கங்கள், எளிதாக இயங்கக் கூடிய ஊர்தி ஆகியவற்றின் காரணமாக ஜப்பானியப் படைகள் ஓரிடத்திலின்று வேறோர் இடத்திற்கு எளிதாகப் பெயர்ந்து செல்லும் தன்மையினைப் பெற்றிருந்தது என்பதை நாம் இங்கு குறிப்பிடுதல் அவசியம் ஆகும். 1943ஆம் ஆண்டு போரில் நேரடியாக ஈடுபட்டிருந்த இந்தியப் படை மவுன்ட்பேட்டனுடைய தென் கிழக்கு ஆசிய ஆணைக்கு (S.E.A.C.) உட்படுத்தப் பெற்றது. சர். வில்லியம் சிலிம்மினுடைய பதினான்காவது படையின் ஒரு பகுதியாக மாறிற்று. 1944ஆம் ஆண்டு வசந்த காலத்தில் ஜப்பானியர்கள் அஸ்ஸாமினைத் தாக்கிய போது இந்தியப்படையினர் மாபெரும் சோதனைக்கு உள்ளானார்கள். அச்சோதனையில் பெரும் வெற்றி கண்டார்கள். விமானமூலம் தவிர வேறெந்த வகையிலும் உதவி பெற இயலாத சூழ்நிலையில் கோஹிமால் ஏழாவது படைப் பிரிவினர் ஜப்பானியர்களின் முன்னேற்றத் தாக்குதலை முறியடித்தனர். இவ்வாறாக ஜப்பானியர் வீழ்ச்சியினை உறுதிப்படுத்தினர். அப்பொழுதிலிருந்து இரங்கூன் மீண்டும் கைவசமாகும் வரை வெற்றிகள் மேலும் மேலும் குவியலாயின. ஆனால் அவ்வெற்றிகள் அனைத்தும் மிகக் கடினமான சூழ்நிலைகளில் பெற்ற வெற்றிகள் என்பதனை மறந்துவிடக்கூடாது. மிகக்கடினமான நிலப்பகுதிகளில் போரிட்டு இந்தியப் படை தனது திறத்தினை எடுத்துக் காட்டியது. மேலும் போர் வகைகளில் மிகவும் கடினமானது என்று சொல்லக்கூடிய போர் வகையிலும் இந்தியப்படை தனது ஆற்றலை எல்லோரும் அறியச் செய்தது. ஜப்பானியர்களுக்கு எதிராகப் போரிட்ட இனவகைகளுள் பயப்படுத்தக்

இனவகை கூர்க்காக்கள் என்று ஜப்பானியருடைய ஆவணங்கள் ஒன்றில் குறிப்பிடப் பட்டுள்ளது. 1945ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் போர் முடிவுற்றபோது இந்தியப் படைகள் மௌன்ட்பேட்டன் தலைமையின்கீழ் மலேயாவினைத் தாக்குவதற்குத் தயாராக இருந்தனர். அத்துடன் இராயல் இந்திய விமானப் படையும், கப்பற் படையும் போர் ஏற்பட்டபோது மிகச் சிறியனவாக இருந்த போதிலும், குறிப்பிடத்தக்க முக்கியமான பங்கினை ஏற்றிருந்தன.

இந்தியப் போர் முயற்சியினை ஒழுங்காய் அமைத்தல் லின்லித்கோவினுடைய புகழுக்காரணங்களுள் முக்கியமானவற்றில் ஒன்றாகும். அரசியல் தடுமாற்றங்கள் எண்ணக்கோளாறுகள் எவையும் இன்றி அவர் சிந்திக்கும் தன்மை பெற்றவர். முதலாவது பிரச்சனை இராணுவத் தேவைகளைப் பூர்த்தி செய்வதைச் சார்ந்திருந்தது. இரண்டாவது பிரச்சனை இராணுவப் பெருக்கத்தைச் சார்ந்ததாகும். பெருமளவில் இந்தியாவிற்கு வெகு அருகே பெரிய அளவில் இராணுவ ஏற்பாடு மேற்கொள்ளப்பெறும் என்று முதலில் யாரும் கருதவில்லை. ஆனால் முதலிலேயே மத்திய கிழக்குப் பகுதியில் இந்தியா மிக முக்கியமான தொடர்பு கொண்டுள்ளது என்பது மட்டும் நன்கு புலனாயிற்று. இந்தியப் படைக்கலத் தொழிற்சாலைகளைப் பெருக்க ஏழு கோடி ரூபாயினை மூலதனமாக ஒதுக்க வேண்டும் என்று போர் ஏற்படுவதற்கு முன்னரே சாட்பீல்டு கமிட்டி சிபாரிசு செய்து இருந்தது. முதலில் இத்தொகையும், இதோடு சேர்க்கப்படும் சில தொகைகளும், குறிப்பிட்ட வேலைக்குப் போதுமானது என்று முதலில் கருதப்பெற்றது. பிரான்சின் வீழ்ச்சிக்குப் பிறகு மத்திய கிழக்குப் போர் அரங்கத்திற்கு வேண்டிய பொருட்களை அளிக்கும் பணியில் ஈடுபட்டிருந்த காமன் வெல்த் நாடுகளின் மையமாக இந்தியா கருதப்பெற்றது. 1940ஆம் ஆண்டு கூதிர்க்காலத்தில் சர். அலெக்சாந்தர் ரோஜர் தலைமையின் கீழ் தரவுக்குழு வருகை தந்தது. அதே நேரத்தில் கிழக்குத் தொகுதி மாநாடு (Eastern Group Conference) நடைபெற்றது. அதில் இந்தியா, ஆஸ்திரேலியா, நியூசிலாந்து, இலங்கை, தென் ஆப்பிரிக்கா, தெற்கு ரொடீசியா, பர்மா, மலேயா, ஹாங்காங்கு, பாலஸ்தீனம், கிழக்கு ஆப்பிரிக்கா, ஆகிய நாடுகளின் பிரதிநிதிகள் கலந்து கொண்டனர். அம்மாநாட்டினின்றும் கிழக்குத்தொகுதி தரவுக்குழு (Eastren Group Supply Council) வெளிப்பட்டது. இக்குழு பல திறப்பட்ட இடங்களினின்றும் பொருட்களை தருவிக்கும் முறையினைச் செம்மைப்படுத்தியது. பருத்தி ஆடைகள், சணல், சணல் சம்பந்தப்பட்ட பொருட்கள், தோல் சம்பந்தப்பட்ட பொருட்கள், மரச்சாமான்கள் ஆகியவற்றினை இந்தியா பெருமளவில் வழங்கி வந்தது. இந்தியாவினிடமிருந்து எதிர்பார்க்கப்பெற்ற பொருட்களில் 60 சதவீதத்தினை

முதல் ஆண்டிலேயே வழங்கியது. பின்னர் 75 சதவிகிதத்தினை வழங்கியது ஜப்பான் போரில் கலந்து கொண்டபோது நிலைமை மாறி விட்டது. சில தரவு ஊற்றுகள் உலர்ந்து போயின. இந்தியாவிற்கு அருகிலேயே புதிய தேவைகள் தோன்றின. மேலும் அமெரிக்காவில் மட்டற்ற ஆக்கசக்தி காணப்பெற்றது. அதனைப் பயன்படுத்தி உலக முழுவதும் நேச நாடுகளின் தேவைகளைப் பூர்த்தி செய்ய முடியும் என்று கருதினர். இந்தியாவே தன்னுடைய புதிய தேவைகளை நிறைவேற்ற பிறநாடுகளை நோக்கி இருந்தது. கடன் குத்தகை (Lend-Lease) திட்டத்தின் கீழ் இந்தியா கொண்டுவரப்பெற்றது. 1943ஆம் ஆண்டின் தொடக்கத்தில் தரவுக்குழு கலைக்கப்பட்டது. பொருட்களை வரவமைக்கும் பணியினை பிரிட்டிஷ் மத்திய தேவைப் பொருட்கள் அலுவலகம் மேற்கொண்டது. ஒரு பிரிட்டிஷ் தரவுப் பணி அமைச்சு அத்துடன் சேர்ந்து பணியாற்றி வந்தது.

ஆனால் தொழில் பெருக்க வேலை முன்னை விட இப்பொழுது அதிக வேகத்துடன் நடைபெற்று வந்தது. தொழிற் பெருக்கம் தொன்று தொட்டு வரும் நெசவுத் தொழில் போன்றவைகளை மட்டும் சார்ந்ததாக இல்லை. கனரகத் தொழில், புதிய தொழில்கள் ஆகியவையும் அதில் அடங்கியிருந்தன. ஏற்கனவே சிறப்படைந்திருந்த டாட்டா எஃகுத் தொழிற்சாலை இப்பொழுது விரிவாக்கப் பெற்றது. பர்ன்பூரில் ஏற்படுத்தப்பெற்ற வங்காள எஃகு கழகத்தினுடைய தொழிற்சாலைகள், குமார்தூதி தொகுதி ஆகியவை குறை நிரப்புக்கூறுகளாக அமைந்தன. சிமெண்டு தொழில் பெருமளவில் விரிவாக்கப் பெற்றது. இந்தியாவில் காணப்படும் பாக்சைடுகளைப் பயன்படுத்தி புதிய அலுமினியம் தொழில் வளர்க்கப் பெற்றது. ரஷ்யா, பிரேசில் ஆகிய நாடுகள் நீங்கலாக உலகத்தின் ஏனைய பாகங்களில் ஏகபோக உரிமையினை அனுபவித்து வந்த அப்பிரகத் தொழில் இப்பொழுது பெருவளர்ச்சி அடைந்தது.

தரவு முறையினை ஒழுங்காக அமைக்கும் பணியுடன் படைப் பலத்தினைப் பெருக்கும் பணியும் மேற்கொள்ளப்பட்டு வந்தது. சமாதான காலத்தில் இந்தியப் படையின் எண்ணிக்கை 175,000ஆக இருந்தது. இப்பொழுது அதனுடைய எண்ணிக்கை படிப்படியாக உயர்த்தப்பெற்று இருபது இலட்சத்திற்கு மேலாக உயர்ந்து விட்டது. இதோடு இயந்திரமயமாக்குதல், மோட்டார் வண்டி வாய்ப்புகளை உடன் இணைத்தல் போன்ற பணிகளும் கூடவே மேற்கொள்ளப்பட்டன. அதன் பயனாக இதுவரை பெற்றில்லாத அளவில் ஒரு பெரும் படையினையும் பலவகைத் திறன் பெற்ற தொழில் நுட்ப வல்லுநர்களையும் இந்தியா இப்பொழுது பெற்

றடைந்தது. பிரிட்டிஷ் கப்பற்படை உதவித்தலைவரின் கீழ் செயலாற்றி வந்த கப்பற்படை ஆற்றல் மிக்க சக்தியாக விளங்கியது. பர்மா போராட்டத்தின் போதும் ஜப்பானிய நீர் மூழ்கிக்கப்பல் படையினுக்கு எதிராக மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கையின் போதும் இக்கப்பற்படை சிறப்பாக பணியாற்றி வந்தது. இந்திய விமானப் படை குறிப்பிட்ட பணியினை நிறைவேற்றும் ஆற்றல், சுறுசுறுப்பு ஆகியவற்றிற்குப் பெயர் பெற்றது. இந்தியப் படையின் ஒரு சிறு பகுதியே போராட்ட ஏற்பாடுகளில் நேரிடையாக கலந்திருந்த போதிலும், பெருவாரியான மக்கள் தங்களுடைய வழக்கமான வாழ்க்கையினை விட்டு இராணுவ வாழ்க்கையினை மேற்கொண்டனர் என்பதை மறுக்க இயலாது. மேலும் அம்மக்கள் புதிய கருவிகளையும் புதிய திறனையும் பெற்றனர். இவை யாவும் மாற்றலை நாடும் உணர்ச்சியினை தூண்டிவிட்டதோடு ஒரு புதிய ஊக்கத்தையும் அளித்தன. இந்தியர்களுடைய அனுபவத்தில் போர் மூன்று வரையறுக்கப் பெற்ற படிகளைக் கொண்டதாக அமைந்திருந்தது. முதலாவது ஒத்திகைப் போர்க்காலமாகும். அக்காலத்தில் முன் போலவே வாழ்க்கை நடத்தப்பெற்று வந்தது. போர் வெகு தொலைவில் தோன்றிய காட்சியாகக் கருதப்பெற்றது. செய்தித்தாள்கள், உரையாடல் ஆகியவற்றினைப் பொறுத்த விவகாரமாகக் கருதப்பெற்றது. இந்தியாவைப் பொறுத்தளவில் இக்கட்டம் 1940-இல் ஜூன் மாதத்தில் பிரான்சு வீழ்ந்தவுடன் முடிவுற்றது. பழைய உலக நாடுகளின் அமைப்பு திடீரென மறைந்து விட்டதாகத் தோன்றியது. சிறிது காலம் நாடு குழப்பம், பயம் ஆகியவை நிறைந்த நிலையில் இருந்தது. அதற்குப் பிறகு பிரிட்டன் சண்டை நிகழ்ந்தது. இந்தியர்கள் அச்சண்டையினை பெருகி வரும் வியப்புடன் கண்டு வந்தனர். பழைய அமைப்பு அழியாமல் இருக்கும் என்ற எண்ணம் வளர்ந்தது. இரண்டாவது கட்டம் மத்திய கிழக்குப் படைத்தளம் நிறுவிய போது தொடங்கியது. வியாபாரமும் தொழிலும், பெருக்கமடைந்தன. இராணுவத் தலைமையிடங்கள் பெருகின. காக்கி உடையில் மக்கள் காட்சியளித்தனர்[1]. நகரங்களில் நெரிசல் அதிகமாயிற்று. ஆரவாரமும் பெருகியது. ஆயினும் போர் ஏற்பாடுகளுக்கு இந்தியா அளித்து வந்த உதவியின் அளவிற்கு போரினை தன்னுடைது என்று கருதவில்லை. மூன்றுவது கட்டம் ஜப்பானியத் தாக்குதலுடன் துவங்கியது. 1942ஆம் ஆண்டு வசந்த கால முதற்கொண்டு போரில் ஈடுபட்டிருந்த ஏனைய நாடுகள் அனுபவித்து வரும் குழப்பங்களையும் அசௌகரியங்களையும் தானும் அனுபவிக்கத் தொடங்கியது. போர்

[1] 1941ஆம் ஆண்டு ஜனவரி மாதம் தளபதி ஆச்சின் லெக் வரும் வரை பிற்பகலில் இராணுவ அதிகாரிகள் இராணுவ உடையினை தங்களுடைய அலுவலகங்களில் போட்டுக் கொள்ள கட்டாயப் படுத்தப்பெறவில்லை.

ஏற்படுத்திய சோதனையைத் தானே சமாளிக்கத் தொடங்கியது. போர் மேகம் நாடு முழுவதையும் கவ்வத் தொடங்கியது. போர் அன்றாட நிகழ்ச்சியாகக் காணப்பட்டது. இந்த மாறுதலை முன்னறிவிக்கும் வகையிலே 1942ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் ஜப்பானியரின் விசாகப்பட்டிணத் தாக்குதல் முன்னறிவித்துக் காட்டியது.

அதனுடைய முதல் விளைவு டெல்லியிலும், கிழக்குப் பகுதியிலும் அமெரிக்கர்கள் தோற்றமாகும். இதுவரை மத்தியக்கிழக்குப் பகுதியில் தங்களுடைய கவனத்தை செலுத்தி வந்த பிரிட்டிஷ் துருப்புகளில் அநேகர் பர்மாவில் ஏற்பட்ட ஜப்பானிய ஆபத்தின்பால் தங்கள் முழு கவனத்தை செலுத்தும் பொருட்டு இந்தியாவிற்கு வந்தனர். அதனுடைய உடன் விளைவாக நாட்டினுடைய பொருளாதார நிலையில் சீர் குலைவு ஏற்பட்டது. உள் நாட்டினின்றும் பொருட்கள் துறை முகங்களை நோக்கிச் செல்வதற்குப் பதிலாக துறைமுகங்களினின்று இந்தியாவின் கிழக்குப் பகுதிக்குப் பொருட்களை அனுப்புவதற்காக தரவு வழிகள் மாற்றி அமைக்கப்பெற்றன. அதன் விளைவாக இரயில் போக்குவரத்துத்துறை கடுமையான உழைப்பிற்கு உள்ளா யிற்று. கப்பற் போக்குவரத்து குறைந்து விட்டதால் இரயில் போக்கு வரத்து மேலும் பாதிக்கப்பட்டது. இந்திய இரயில்வேக்கள் போர் முயற்சி முழுவதுடன் நாட்டினுடைய பொருளாதார நிலையையும் சுமந்து செல்ல வேண்டியதாயிற்று. மத்திய கிழக்குப் பகுதிக்கு இந்திய இரயில்கள் முன்னரே அனுப்பப்பட்டு விட்டதால் அவற்றின் சுமை பெரிதாகக் காணப்பெற்றது. இதுவரை கண்டிராத அளவில் பெரும் கஷ்ட காலம் ஏற்பட்டது. இந்த கஷ்ட காலம் போர் முடியும் வரை தொடர்ந்திருந்தது. இந்தியாவில் மேற்கொள்ளப்பட்ட போர் முயற்சிக்காக செலவிட்ட தொகை நாளுக்கு நாள் பெருகி வந்தது. இத்துடன் பிரிட்டிஷ்காரர்களும் அமெரிக்கர்களும் விமானத்தளங்கள் அமைத்தல் போன்ற போர் ஆயத்தங்களையொட்டி பெரும் பணம் செலவிட்டிருந்தார்கள். இவற்றின் விளைவாக விலைவாசி உயர்ந்தது. இதுவரை இத்தகைய விலை ஏற்றம் இந்தியாவில் பொதுவாக ஏற்பட்டதில்லை. பற்றுக்குறை ஏற்பட்டது. அதன் பயனாக வங்கப் பஞ்சம் 1943-இல் ஏற்பட்டது.

பஞ்சம் என்பது பழைய கால நிகழ்ச்சி என்று கருதி வந்தனர். பஞ்ச சட்டத்தொகுதி ஏறக்குறைய அறுபது ஆண்டுகள் வெற்றி கரமாக நடைமுறைப் படுத்தப்பெற்று வந்தது. பஞ்சத்தால் பாதிக்கப் பட இருக்கும் பகுதிகளுக்கு அடுத்த அறுவடை நடைபெற்று மக்கள் வளமுறுவரை உணவுத் தானியங்களை அனுப்புதல், ஆக்க முறையான வேலையில் விவசாயிகளை ஈடுபடுத்துதல் போன்ற திட்டங்களை அது

அடிப்படையாகக் கொண்டு இருந்தது. பர்மா நீங்கலாக ஏனைய வெளி நாடுகளிலிருந்து உணவுப் பொருட்களை தருவிக்க இயலவில்லை. எல்லா இடங்களிலும் உணவு பற்றாக்குறை ஏற்பட்டது. பர்மா வீழ்ச்சியுற்றதால் வங்காளமும், தென்னிந்தியாவும் பர்மாவினின்றும் அரிசி பெற முடியாமல் போய்விட்டது. விவசாயிகள் தங்கள் கைவசம் இருந்த தானியங்களை அதிக விலைக்கு விற்க முன் வந்தனர். தானியங்களின் விலை ஏறியதே அதற்குக் காரண மாகும். அதன் விளைவாக விற்பனை இடங்களினின்றும் அரிசி மறைந்து விட்டது. கடன் பளுவு குறைந்து விட்டது. ஆனால், வாழ்க்கைக்கு இன்றியமையாத உணவுப் பொருள் இல்லை என்ற நிலையினோடு அதனை ஒப்பிட்டுப் பார்க்கும் அது அவ்வளவு சிறப்பு வாய்ந்த பதிற் பொருளாகத் தோன்றவில்லை. மொத்தத்தில் பற்றாக்குறை 5 சதவீத மாகக் கணக்கிடப்பெற்றது. ஆனால் பங்கீட்டு முறையிலும் கட்டுப் பாட்டு முறையிலும் காணப்பெற்ற தவறுகள் அகனுடைய விளைவினை பெரிதாக்கியது. கள்ளச் சந்தைகள் பெருமளவில் தோன்றின. பசியால் வாடிய விவசாயிகள் கல்கத்தாவிற்கு வரத்தொடங்கினர். இந்தியாவின் ஏனைய பகுதிகளில் அரிசி கிடைக்கவேயில்லை. இந்த நிலை மேலும் துன்பத்தை உண்டாக்கியது. அரிசியை உணவாகக் கொண்டிருந்த பகுதிகளில் சுவையற்ற தானியங்களையும், பருப்பு வகைகளையும் மட்டுமே பசியால் வாடும் மக்களுக்கு கொடுத்துதவ முடிந்தது. 1943ஆம் ஆண்டு கோடைக் காலத்தில் வங்காள அரசு நிலைமையினை சமாளிக்க முடியாதென்பது நன்றாக விளங்கியது. மாகாண சுயஆட்சிக் கொள்கையின்பால் ஏற்பட்டிருந்த தேவைக்கு மீறிய அன்பு. மைய அரசின் காலங்கடந்த நடவடிக்கைக்கு முக்கிய காரணமாக அமைந்தது. 1943ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் வேவல் பிரபு இந்தியா வந்த பிறகு தான் இப்பிரச்சனையை பல இடர்ப்பாடுகளுக்கிடையே சமாளித்தனர். பஞ்ச நிவாரண வேலையில் பிரிட்டிஷ் படை ஈடுபடுத்தப்பெற்றது. பங்கீட்டு முறை எல்லா பெரிய பட்டணங்களில் புகுத்தப்பெற்றது. அப்பொழுது பிரிட்டிஷ் படையினருக்கு மக்களிடையே ஏற்பட்டிருந்த செல்வாக்கு வேறெப் பொழுதும் ஏற்பட்டிருந்ததில்லை. பற்றாக்குறை நீடித்திருந்த போதிலும் எவரும் பட்டினியால் வாடவில்லை. நம்பிக்கையுணர்ச்சி மீண்டும் திரும்பியது. உணவுப்பற்றிய மைய அரசின் பிரச்சனையாக மாறியது.

போர்க் காலத்தில் அரசியல் அமைப்புப் பற்றி எழுந்த பிரச்சனையை இப்பொழுது கவனிப்போம் 1939ஆம் ஆண்டு கோடை காலத்தில் சுதேச மன்னர்களின் தயக்கம் கூட்டரசை மையத்தில் ஏற்படுத்துவதை இன்னும் தாமதப்படுத்தியது. காங்கிரசு

கண்காணித்துக்கொண்டும் காத்துக்கொண்டும் இருந்தது. போர் ஏற்படுவது நிச்சயமாகத் தெரிந்தபோது காந்தி தன்னுடைய சமாதானக் கோட்பாட்டினால் உந்தப்பெற்று ஹிட்லருக்கு ஒரு கடிதம் எழுதினார். போர் ஏற்பட்ட போது ஆலோசனை கேட்க பொறுப்புள்ள அமைச்சரவை இல்லாததைக் கண்டார். ஜெர்மனிக்கும் மாட்சிமை தங்கிய மன்னருக்கும் இடையே போர் தொடங்கியது என்று சட்டபூர்வமாக விருப்பம் அறிவிக்கும் நிலையில் இல்லாதிருப்பதையும் கண்டார். இதனைத் தொடர்ந்து இரு சட்டசபைகளைக் கூட்டி உரையாற்றினார். தேசத்தலைவர்களிடம் கலந்து பேசினார். அத்தகைய நடவடிக்கை சட்ட முறையான நடவடிக்கையே ஆகும். அத்தகைய நடவடிக்கை தவிர்க்க முடியாததும் ஆகும். ஆனால் வேகமாக வளர்ச்சியுற்று வரும் தேசிய உணர்ச்சியினைத் தூண்டுவதாக அதனைக் கருதுவது இயற்கையேயாகும். லீக்கும், காங்கிரசும் அதனை அவ்வாறே கருதின வங்காளம், பஞ்சாப், சிந்து ஆகிய இடங்களில் ஏற்படுத்தப்பெற்ற காங்கிரசு அல்லாதார் அல்லது முஸ்லிம் லீக்கு மந்திரி சபைகளுடைய தலைவர்கள் சட்டசபைகளின் ஆதரவுடன் போர் முயற்சிக்கு உதவி செய்ய உறுதிமொழி தந்தனர். சுதேச மன்னர்களும் தனித்தனியாக உறுதிமொழி தந்தனர். ஆனால் காங்கிரசு போர்க்குறிக்கோள்களை உடனடியாக வரையறுக்க வேண்டும் என்றும், உடனடியாக சுதந்திர அறிக்கையை வெளியிட வேண்டும் என்றும் கோரியது. காங்கிரசு மாகாணங்களில் முஸ்லிம்களுக்கு நியாயம் வழங்க பிரிட்டிஷ் அரசு ஏற்பாடு செய்வதாக உறுதி அளித்தால் லீகுக்கு போர் ஏற்பாடுகளுக்கு ஆதரவளிக்கும் என்று கூறியது. அத்துடன் லீக்கின் ஒப்புதலின்றி எந்த விதமான அரசியலமைப்பு சார்ந்த முன்னேற்றத்தினை ஏற்படுத்தக் கூடாது என்ற கோரிக்கையை விடுத்தது. இந்த சூழ்நிலையினை சமாளிக்கும் வகையில் அக்டோபர் 17ஆம் தேதி டொமினியன் நிலை அரசியலமைப்புச் சார்ந்த முன்னேற்றத்தின் குறிக்கோளாகும் என்று உறுதியாக அறிவித்தார். மேலும் போர் முடிந்த பிறகு சிறுபான்மையினரின் கருத்துக்களுக்கு தக்க மதிப்பு அளித்த பிறகே எந்த நடவடிக்கையும் மேற்கொள்ளப்பெறும் என்றும் கூறினார். இதற்கிடையில் சண்டையை நடத்தும் பணியிலே இந்தியப் பொது மக்களை சேர்த்துக்கொள்ளும் வகையிலே எல்லா வகை கருத்துக்களும் இடம்பெற்ற ஆலோசனைக்குழு ஒன்றை அமைக்கத் திட்டமிட்டார். காங்கிரசு மேலிடம் அந்த திட்டத்தை நிராகரித்தது. மாகாண காங்கிரசு அமைச்சரவைகள் பதவியினின்றும் விலகின. லீக்கு காங்கிரசைப் போல் அவ்வளவு உறுதியாக இல்லை. சிறுபான்மையினரின் உரிமைகளை வற்புறுத்திற்று என்றாலும் கூட்டரசு திட்டம் முழுவதையும் விட்டுவிட வேண்டும் என்று கோரியது.

இவ்வாறு உண்டாக்கப்பெற்ற முட்டுநிலை போர் முடியும் வரை தொடர்ந்திருந்தது. அது இரு கூறுகளைக் கொண்டிருந்தது. பிரிட்டிஷ் அரசைப் பொருத்தளவில், போர் முயற்சியில் பங்கு கொள்ள வேண்டுமென்றால் முழுமையான பொறுப்பாட்சி ஏற்படுத்தப்பெற வேண்டும் என்று காங்கிரசு கோரியது. அரசியலமைப்புச் சார்ந்த சில இக்கட்டுகள் இருந்தமையால் பிரிட்டிஷ் அரசு இக்கோரிக்கையினை ஏற்கவில்லை. போர் முடிந்துவிடும் என்ற எண்ணத்தில் சட்டபூர்வமாக இல்லை என்றாலும் நடைமுறையில் சுயஆட்சி உரிமை வழங்க தயாராய் இருந்தது. கனடா நிகழ்ச்சியினை நினைவில் வைத்திருந்த பிரிட்டிஷ்காரர்களுக்கு இது ஏமாற்றுத் தன்மையற்றதாகத் தோன்றியது. மேலும் அப்போது ஏற்பட்டிருந்த சூழ்நிலையில் அதுவே பொது அறிவுக்குகந்த நடவடிக்கையாகத் தோன்றியது. நியாயமான உணர்ச்சிகளைத் தடைப்படுத்துவதற்காக கையாளப்பெற்ற கபடமும் சூழ்ச்சியும் நிறைந்த நாடகங்களாகக் காங்கிரசு கருதியது. இரண்டாவது கூறு காங்கிரசுக்கும் ஏனையக் கட்சிகளுக்கும் இடையே ஏற்பட்டிருந்த தொடர்பினைப் பற்றியதாகும். இந்திய மக்களின் முறையான ஒரே பிரதிநிதி காங்கிரசு தான் என்ற 1937ஆம் ஆண்டு தொடங்கப்பெற்ற கொள்கையினை இப்பொழுது தொடர்ந்து கைப்பற்றி வந்தது. பிரிட்டிஷ் அரசு மட்டுமன்றி லீக்கும் இதனை ஏற்க மறுத்தது. 1940ஆம் ஆண்டின் தொடக்கத்தில் பாகிஸ்தான் திட்டத்தினை முறைப்படியாக ஏற்க இது தூண்டியது. காங்கிரசுடன் ஒரு சார்பாளரை மட்டும் கட்டுப்படுத்தும் ஒப்பந்தத்தினை ஏற்படுத்திக் கொள்ள பிரிட்டிஷ் அரசு மறுத்தது. அம் மறுப்புக்குத் தக்க ஆதரவாக லீக்கின் போக்கு அமைந்தது. இந்த அரசியலமைப்புப் பற்றிய போராட்டத்தில் மூன்று கட்சிகளும் இவ்வாறாக ஒன்றையொன்று பயனற்றதாக்கிவிட்டன. இந்த முட்டுநிலை பிரிட்டிஷ் அரசு, காங்கிரசு ஆகியோரிடையே ஏமாற்ற உணர்ச்சியை வளர்த்தது. லீக்கு காங்கிரசு ஆகிய கட்சிகளிடையே ஏற்பட்டிருந்த ஐய உணர்ச்சி மேலும் வளர்வதற்குக் காரணமாக அது அமைந்தது.

பிரான்சின் வீழ்ச்சி இந்த வகையான இருப்பு நிலையினை தாற்காலிகமாக மட்டுப்படுத்தியது. பேராசிரியர் கூப்லாந்து கூறியபடி காங்கிரசின் எதிர்ப்பு தொனி மென்மையடைந்தது. பிரிட்டனின் வீழ்ச்சி நாஜி ஆக்கிரமிப்பின் முதற் படியாக ஒருகணம் கருதப்பெற்றது. ஜூன் முதல் தேதியன்று காந்தி பின்வருமாறு எழுதினார். 'பிரிட்டனின் அழிவின் வாயிலாக நாங்கள் சுதந்திரம் பெற விரும்ப மாட்டோம்'. காங்கிரசு மேலிடம் காந்தியினுடைய சமாதானக்கொள்கையைத் தூக்கி எறிந்துவிட்டது. பீடெயின் போர் நிறுத்திய போது அவரை வெகுவாகப் புகழ்ந்தார். ஒவ்வொரு பிரிட்டிஷ்காரனையும்

பெருந்தன்மையாகவும், தைரியமாகவும் ஹிட்லரிடம் சரண்புகுமாறு அறைகூவினார். தேசிய அரசு அதனையொத்த நிறுவனங்கள் ஆகியவற்றின் வாயிலாக பாதுகாப்பு நடவடிக்கைகள் எடுக்கவேண்டும் என்று பேசிக் கொண்டனர். ஆகஸ்டு சலுகை அறிவிப்பு இதற்கு பிரிட்டிஷ்காரர்கள் அளித்த பதிலாக அமைந்தது. சிறுபான்மையினர் உரிமைகள், பிரிட்டிஷ்காரர்களின் கடமையுணர்ச்சியுடன் செய்யப்படும் செயல்கள் ஆகியவற்றினை காக்கும் வகையிலே ஏற்படுத்தப்பெறும் காப்பு வாசகங்களுடன் ஒரு புதிய ஏற்பாடும் சேர்க்கப்பட்டது. போர் முடிந்த பிறகு இந்திய அரசியல் நிர்ணய சபை ஒன்று புதிய அரசியலமைப்புத் திட்டத்தினை வகுக்கும் என்பதே அந்த ஏற்பாடாகும். அச்சபை மேற்கொள்ளவிருக்கும் முடிவுகளை இப்பொழுதே ஏற்றுக் கொள்வதாக அறிவிக்கப்பட்டது. இந்தியாவின் சார்பாக சட்டமியற்று உரிமையினைப் பிரிட்டிஷ் நாடாளுமன்றம் முழுமையாக விட்டுக்கொடுத்து விட்டதாகக் கருத வேண்டும். இந்த உரிமையினை இவ்வளவு காலம் விழிப்புடன் பாதுகாத்து வந்தது என்பதை இங்கு குறிப்பிடுதல் அவசியமாகும்.

ஆகஸ்டு மாதத்திற்குள் பிரிட்டிஷ் வீழ்ச்சியைப் பற்றிய பயம் மறைந்து விட்டது. வெற்றி தோல்வி இன்னும் நிர்ணயிக்கப்படவில்லை என்றாலும், பிரிட்டன் இறுதிவரை போராடும் என்பது மட்டும் நிச்சயமாகக் காணப்பட்டது. பிரிட்டிஷ்காரர்களின் பற்றுறுதி அவர்களுடைய திறமையில் ஒரு புதிய நம்பிக்கையினைத் தோற்றுவித்தது. இந்த நிலை காங்கிரசுக்காரர்களிடையே ஆர்வத்தினை ஏற்படுத்துவதற்குப் பதிலாக பிரிட்டிஷ்காரர்களின் நல்லெண்ணங்களில் ஏற்பட்டிருந்த ஐயத்தினைப் புதுப்பித்தது. பிரிட்டன் இந்தியாவுடன் இன்னமும் விளையாடிக் கொண்டிருக்கிறது என்று அநேகர் எண்ணினார்கள். இப்பொழுது முழு சுதந்திரம் என்ற அடிப்படையில்தான் உடன்பாடு ஏற்படுத்த முடியும் என்பது தெளிவாயிற்று. அந்த உடன்பாடும் இந்தியாவிற்கு ஒரே சார்பானரான காங்கிரசுடன் மட்டும்தான் செய்துகொள்ள இயலும் என்றும் தெரிவிக்கப்பட்டது. தன்னுடைய பலத்தினை உணர்ந்த நிலையும், பிரிட்டிஷ்காரர்களிடம் ஏற்பட்டிருந்த ஐயமும் சேர்ந்து காங்கிரசை ஆகஸ்டு சலுகையினை நிராகரிக்கத் தூண்டின. புதிய இந்தியா அமைச்சர் ஆமெரி, வைசிராய் ஆகியோருடைய வேண்டுகோள் செவிடன் காதில் ஊதப்பெற்ற சங்கொலியின் கதியினை அடைந்தது. முட்டுநிலை இவ்வளவு முழுமையாக இதுவரை ஏற்பட்டதில்லை. எத்தகைய தேசிய அரசு அமைக்கப்பெற்றாலும் அதில் முஸ்லிம்களும் இந்துக்களும் சம எண்ணிக்கையில் இருக்க வேண்டும் என்று

பாகிஸ்தானக் குறிக்கோளைக்கொண்ட லீக்கு இப்பொழுது வற்புறுத்தி வந்தது. பிரிவினைக் கொள்கையினை இவ்வாறாக சுட்டிக் காட்டியது. இந்துக்கள் முஸ்லிம்கள் ஆகிய இனங்கள் சார்ந்த முட்டுநிலை இந்தோ - பிரிட்டிஷ் முட்டு நிலையினைப் போல் முழுமையை அடைந்தது.

இவ்வாறாக காங்கிரசு காந்தியினுடைய சமாதானக் கொள்கை, ஒத்துழையாமைக் கொள்கை ஆகியவற்றினை மீண்டும் கடைப்பிடிக்கத் தொடங்கியது. போர் முயற்சியினை எதிர்க்கும் வகையிலே காந்தி சமாதானக் கொள்கையினை பிரசாரம் செய்ய உரிமை கொண்டாடினார். இந்த உரிமையினை அரசு மறுத்தாலும் சரி அல்லது எதிர்த்து வாதாடினாலும் சரி சட்டமறுப்பு இயக்கத்தினை நடத்த உரிமை கொண்டாடினார். இதனைத் தொடர்ந்து சட்டமறுப்பு இயக்கம் நடைபெற்றது. இதுவரை நடைபெற்ற சட்டமறுப்பு இயக்கங்களுள் இதுதான் குறைவான ஆர்வத்துடன் தொடங்கப்பெற்றது. எல்லா சட்டமறுப்பு இயக்கங்களுள் இதுதான் மிகக் குறைந்த அளவு வெற்றியினைக் கண்டது. 1940ஆம் ஆண்டு கூதிர்க்காலத்தில் வெகு சாதாரணமாகத் தொடங்கப்பெற்ற இயக்கம் மே மாதத்தில் உச்ச கட்டத்தை அடைந்தது. சுமார் 14,000 காங்கிரசுகாரர்கள் சிறையிலடைக்கப்பெற்றனர். 1930ஆம் ஆண்டு புள்ளி விவரத்துடன் இதனை ஒப்பிடும்போது இந்த எண்ணிக்கை மிகக் குறைவாகக் காணப்படுகிறது. அதன் பிறகு சிறைவாசம் மேற்கொண்டவர்கள் எண்ணிக்கை ஓரே சீராக குறைந்து வந்தது. இதற்கு மக்கள் ஆதரவு இல்லையென்றே கூறலாம். அதனுடைய முக்கியத்துவம் எல்லாம் மகாத்மா காந்தி தன்னுடைய சொந்த செல்வாக்கினை மட்டும் பயன்படுத்தி எதைச் செய்ய முடியும் என்பதைக் குறித்து காட்டும் நிகழ்ச்சியாகக் கருதப்படுவதை ஒட்டி இருந்தது. வெகு நாளைக்கு முன்னரே உறுதி செய்த வண்ணம் வைசிராய் தனது குழுவின் எண்ணிக்கையை பதினைந்தாக உயர்த்தினார். அவர்கள் பதினொரு பேர்கள் இந்தியர்களாவார்கள்.

ஜப்பானும், அமெரிக்காவும் போரில் ஈடுபடுதல் அதைத் தொடர்ந்து ஏற்பட்ட உடனடியாக நிகழவிருக்கும் படையெடுப்பு பயம், ஆகியவை ஒரு புதிய சூழ்நிலையை உருவாக்கின. முட்டுநிலையை உடனே உடைத்தெறிய வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இந்திய சுதந்திரத்தில் அமெரிக்கர்கள் வெளிப்படையாக அக்கறை காட்டினர். பேரல் ஹார்பர் நிகழ்ச்சிக்கு சிறிது முன்னர் ஜவஹர்லால் நேரு உட்பட எல்லா காங்கிரசுக்காரர்களும் விடுதலை செய்யப்பெற்றனர். மேலும் ஒரு முயற்சி மேற்கொள்ள ஏற்பாடுகள் செய்யப்பெற்றன.

1942ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 11ந் தேதி சர். ஸ்டாபோர்டு கிரிப்ஸ் அவர்களை ஒரு புதிய புரட்சிகரமான திட்டத்துடன் இந்தியாவிற்கு அனுப்புவதைப் பற்றி பிரதம மந்திரி அறிவித்தார். கிரிப்ஸ் அப்பொழுது கீழ்ச்சபையின் முதல்வராவார். போர்க் கால அமைச்சரவையின் உறுப்பினரும் ஆவார். போர் முடியும் வரை கிரிப்ஸ் திட்டம் இந்திய அரசியலில் முக்கிய இடம் வகித்திருந்தது. முதலில் மாட்சிமை தாங்கிய மன்னருடைய அரசு ஒரு இந்திய யூனியனை ஏற்படுத்த விரும்புகிறது என்பதனை மீண்டும் வலியுறுத்தியது. போருக்குப் பிறகு இந்திய யூனியன் காமன்வெல்த் அமைத்தல் ஒரு டொமினியன் என்ற முறையில் இடம் அளிக்கப்பெறும் என்றும் அதில் வலியுறுத்தப்பெற்றிருந்தது. அந்த குறிக்கோளை அடைவதற்காக மேற்கொள்ளவிருக்கும் நடவடிக்கைகளும் அதில் காணப்பெற்றன. மாகாண சட்டசபைகள் தேர்தல் தொகுதிகளாக செயற்பட்டு அரசியல் நிர்ணய சபையொன்றை தேர்ந்தெடுக்க வேண்டும். இந்த சபை உடன்படிக்கையொன்றை ஏற்படுத்த பிரிட்டிஷ் அரசுடன் பேச்சு வார்த்தையினை மேற்கொள்ள ஏற்பாடு செய்யப்பட்டது. வருங்காலத்தில் இந்தியா காமன்வெல்த் அமைப்பினின்றும் பிரிந்து செல்லும் உரிமை வெகு தெளிவாக எடுத்துக் காட்டப்பெற்றது. சுதேச இராச்சியங்கள் அதில் கலந்துகொள்ள உரிமை வழங்கப்பெற்றன. இந்திய புதிய சூழ்நிலைக்கு ஏற்றவாறு அவற்றைப் பற்றிய உடன்படிக்கைகள் மாற்றி அமைக்கவும் ஏற்பாடு செய்யப்பட்டது. புது அரசியலமைப்புத் திட்டத்தினின்றும் விலக்குப்பெற்று அப்பொழுது மாகாணங்கள் பெற்றிருந்த அரசியலமைப்புச் சார்ந்த நிலையினை தொடர்ந்து வகிக்க அவற்றிற்கு உரிமை அளிக்கப்பட்டது. விலக்குப்பெற்ற மாகாணங்கள் விரும்பினால் பின்னர் கலந்துக்கொள்வதற்கு வேண்டிய விதிகளும் அதில் சேர்க்கப்பெற்றிருந்தன. தேசிய போர்க்கால நிருவாகத்துடன் எல்லாக் கட்சிகளும் ஒத்துழைக்க வேண்டும் என்ற அழைப்புடன் இந்த திட்டத்தின் வாசகம் முடிவுற்றது.

கிரிப்ஸ் திட்டத்தினை இரு காரணங்களால் ஒரு பெரும் முன்னேற்றமாகக் கருத வேண்டும். முதலாவது அதில் எந்தவித ஒளிவு மறைவுமே இல்லை. இரண்டாவது அது நன்கு வரையறுக்கப்பெற்று இருந்தது. 1939ஆம் 1940ஆம் ஆண்டுகளில் வெளியிடப்பெற்ற அறிவிப்புகளில் காணப்பெறும் தயக்க நிலையும் தெளிவற்ற வாசகங்களும் இதில் காண்பதற்கில்லை. இதில் சில புதிய சிறப்புக் கூறுகளும் உண்டு. அரசியல் நிர்ணய சபையொன்றை ஏற்படுத்தும் திட்டம் ஏற்கனவே அறிவிக்கப்பட்டது. இப்பொழுது இந்தியர்கள் மட்டுமே அரசியல் திட்டத்தினை வகுக்கும் பணியில் ஈடுபடுவார்கள்

என்பது திட்டவட்டமாக அறிவிக்கப்பட்டது. கூட்டரசினின்றும் பிரிந்து செல்லும் உரிமை ஏற்றுக்கொள்ளப்பட்டது. இரு கட்சியினரைப் பாதிக்கும் உடன்படிக்கை ஏற்படுத்தி அதன் வாயிலாக பிரிட்டிஷ்காரர்கள் தங்கள் கடமையினை நிறைவேற்றவும், புதிய அரசியல் அமைப்புத் திட்டத்தினை நடைமுறைப்படுத்தவும் வழி வகுக்கப்பெற்றது. இது அயர்லாந்தில் மேற்கொள்ளப்பெற்ற ஏற்பாட்டினை நினைவூட்டுகிறது. இறுதியாக புதிய அரசியலமைப்பு திட்டத்தினின்றும் விலகி இருக்க மாகாணங்களுக்கு உரிமை வழங்கப் பெற்றது என்று முன்னர் கண்டோம். அந்த உரிமை மக்களாட்சி அமைப்பிற்குள்ளே முஸ்லிம்களின் அச்சத்தை நீக்க உதவும் ஏற்பாடாகக் கருதப்பெற்றது.

ஒரு சமயத்தில் உடன்பாடு கண்ணுக்கெட்டிய தூரத்தில் இருப்பதாகத் தோன்றியது. ஆனால் அப்பொழுது காங்கிரசுகாரர்கள் புதிய அரசுக்கு டொமினியன் அமைச்சரவைக்குப் பொருந்திய அதிகாரங்களை உடனே அளிக்க வேண்டும் என்று வற்புறுத்தினார்கள். இதுவே விவாதங்கள் தகர்வுறக் காரணமாயிற்று. முதலில் ஏற்பட்டிருந்த பெரு நம்பிக்கைகள் இப்பொழுது மறைந்துவிட்டன. அதற்கு மாறாக ஏமாற்றப்பெற்றனர் என்ற உணர்ச்சி அதிகமாயிற்று. லீக்கு ஆழ்ந்த சிந்தனையுடன் நிலைமையினை வெகு கவனமாகப் பார்வையிட்டு வந்தது. வெறுப்புடன் கூடிய மனநிறைவுடன் இந்தத் திட்டம் அழிவுறுவதைக் கண்டுவந்தது.

இத் திட்டம் முறிவுறுவதற்கு நேரடியான காரணம் எது என்பதை இப்பொழுது வரையறுத்தல் கடினமாகும். மகாத்மா காந்தி இதனை ஆதரிக்கவில்லை என்பது உண்மையேயாகும். நேரு, இராஜகோபாலாச்சாரி ஆகியோர் கொண்டிருந்த பரந்த மனப்பான்மையினை நிலைகுலையச் செய்துவிட்டார். நெருங்கி வரும் ஜப்பானிய ஆபத்தே அணைவருடைய சிந்தனையைக் கவர்ந்திருந்து திவாலாக வரும் ஒரு வங்கியினுக்கு பணம் கொடுக்குமாறு செக்கு எழுதி அனுப்புவதினால் ஏற்படும் பயன் யாது? படையெடுப்பு உடனடியாக ஏற்படவில்லை என்றாலும், மழைக் காலத்திற்குப் பிறகு படை நடமாற்றங்கள் மீண்டும் தொடங்கப்பெற்றால் நிலை மறுபடியும் நெருக்கடிக்கு உள்ளாகாதா? ஜப்பானிய பயம் பிரிட்டிஷ்காரர்களை இவ்வளவு சலுகைகளைக் காட்டத் தூண்டியது என்றால், அந்த பயம் தொடர்ந்து நீடித்து இருந்து பிரிட்டிஷ்காரர்கள் அழிவுறாமல் இருந்தால் மேலும் பல சலுகைகளை அவர்கள் காட்டியிருப்பார்கள் என்று எதிர்பார்க்கக் கூடும் இனம் பற்றிய சிந்தனைகளும், இந்துக்களை இந்த வகையில் நினைக்கத் தூண்டின. காங்கிரசுக்காரர்களுடைய நிபந்தனைகளின்

அடிப்படையில் காங்கிரசுடன் மேற்கொள்ளப்பெற்ற ஏற்பாடு என்று அதனை கருத முடியாது. மக்களாட்சியினை அடிப்படையாகக் கொண்டிருப்பினும் புதிய அரசியலமைப்பினின்றும் விலகி இருக்க மாகாணங்களுக்கு அளிக்கப்பெற்ற உரிமை லீக்கு கட்சியினரைத் திருப்திபடுத்துவதற்காக அளிக்கப்பெற்ற சலுகையாகக் கருதப்பெற்றது. ஆகவே அந்த நிபந்தனை மக்களின் அருவருப்புக்குள்ளாயிற்று. லீக்கு முஸ்லிம் மக்களிடம் பெற்றிருந்த செல்வாக்கினை காங்கிரசு இன்னும் குறை மதிப்பிட்டு வந்தது. மையத்தில் முழு அதிகாரம் தனக்கு அளிக்கப்பெற்றால் லீக்கினுடைய போராட்டத்தினை நசுக்கிவிட முடியும் என்று காங்கிரசு நினைத்தது. சிறிது காத்திருந்தால் காங்கிரசு முழு அதிகாரத்தினை பெற்றிருக்கும். ஆனால் இந்துக்களின் ஆதிக்கத்தின் கீழ் ஒன்றுபட்ட இந்தியா என்ற கொள்கைக்காக இறுதிவரை போராட முடிவு செய்தது. இவ்வாறாக ஒரு பொன்னான வாய்ப்பினை அது இழந்தது. அத்துடன் ஒன்றுபட்ட சுதந்திர இந்தியாவினை ஏற்படுத்தக்கூடிய வாய்ப்பும் நழுவி விட்டது. கிரிப்ஸ் திட்ட நிராகரிப்பு பிரிவினையின் தொடக்கத்தினைக் குறித்துக்காட்டியது.

இந்த முடிவு எடுப்பதற்குமுன் காங்கிரசுக்குள்ளே நெருக்கடி நிலை ஏற்பட்டிருந்தது என்பதை நாம் மறந்து விடக்கூடாது. காங்கிரசினின்றும் இராஜகோபாலாச்சாரியினை வெளியேற்றிய நிகழ்ச்சி இதனை நன்கு வெளிப்படுத்துகிறது. இப்பொழுது காங்கிரசு மீண்டும் காந்தியின் பின்னால் அணிவகுத்து நின்றது. புதிய நிலையினை சமாளிக்க காந்தி தன்னுடைய சமாதானக் கோட்பாடுகளையும், சாத்வீக முறையினையும் திருத்தி அமைக்க முற்பட்டார். பிரிட்டிஷ்காரர்கள் இந்தியாவில் இருப்பதே ஜப்பானியர் தாக்குதலுக்குக் காரணம் என்று அறிவித்தார். இந்தியாவை விட்டு வெளியேறு என்ற வாசகத்தை புனைந்தார். பிரிட்டிஷ்காரர்கள் இந்தியாவினின்றும் வெளியேற வேண்டும் தவறினால் சட்ட மறுப்பு இயக்கம் மீண்டும் தொடங்கப் பெறும் என்ற தீர்மானத்தினை தயாரித்தார். மேலும் ஒரு வாய்ப்பினை பிரிட்டிஷ் அரசினுக்கு அளிக்கப்பட இயலாது என்றும் இதுவே வெளிப்படையான புரட்சி என்றும் அவர் அறிவித்தார். அக்டோபர் தொடக்கத்தில் ஜப்பானியர் மீண்டும் படை ஆயத்தங்கள் செய்யத் தலைப்படும்போது பெரிய நெருக்கடி ஒன்று ஏற்படும் என்பதை எல்லா அறிகுறிகளும் குறித்துக்காட்டின. ஆகவே ஆகஸ்டு 7-ந் தேதி அனைத்து இந்திய காங்கிரசு கமிட்டி அந்தத் தீர்மானத்தை நிறைவேற்றியபோது வைசிராய் உடனே நடவடிக்கையினை மேற்கொண்டார். செயற்குழு உறுப்பினர்கள் அனைவரும் அவருக்கு முழு ஆதரவு அளித்தனர். பூனாவில் காரியக்கமிட்டி உறுப்பினர்கள் அனைவரும் சிறைப்படுத்தப்பெற்றனர். மக்கள் வன்முறையில் ஈடுபட்டனர்.

இந்த வன்முறைச் செயல் மிக்க கவலை அளிக்கக் கூடியதாக இருந்தது என்றாலும் அது வெகு காலம் நீடிக்கவில்லை. ஆயினும் ஏறக்குறைய 900 பேர் உயிரிழந்தனர் பத்து லட்ச பவுன்கள் பெறுமான பொருட்கள் சேதமாக்கப்பெற்றன காங்கிரசு தலைவர்கள் தாங்கள் அதற்குப் பொறுப்பில்லை என்று கூறினார்கள். ஆனால் தீவிரவாதிகளின் பெரும் திட்டங்களைப் பற்றி அவர்கள் முன் கூட்டியே அறிந்திலர் என்று நாம் நினைப்பது காரியமன்று.

இந்தக் காலத்தில் பொறுமையும் திடசித்தமும் கொண்ட வைசிராயிற்கு இந்தியா மிகவும் கடமைப்பட்டிருந்தது. புரட்சி தோல்வியுற்றதால் காங்கிரசின் செல்வாக்கு குறைந்தது. திருப்திகரமான போர் நிலை காங்கிரசின் செல்வாக்கை மேலும் குறைத்தது. காங்கிரசு தவறாக நடந்து விட்டது பெரிய தவறினையும் செய்து விட்டது. இதுவரை தகுதியற்ற குதிரையினை ஆதரித்து பந்தயம் கட்டி வந்தது. போர் முடியும் வரை பிரிட்டிஷ்காரர்களை அகற்ற முடியாது என்றக் கருத்து பரவி வந்தது. 1943ஆம் ஆண்டின் தொடக்கத்தில் காந்தி மேற்கொண்ட உண்ணாவிரதப் போராட்டத்தினை உறுதியுடன் வைசிராய் சமாளித்தார். இதுவும் பிரிட்டிஷ்காரர்களை அகற்ற முடியாது என்றக் கருத்து மேலும் பரவுவதற்கு உதவியது நாள்தோறும பெருகி வரும் போர் வெற்றிகளும் உணவு நெருக்கடியினை சமாளிக்க வைசிராய் மேற்கொண்ட கடும் நடவடிக்கைகளும் அரசினுடைய கைகளை மேலும் பலப்படுத்தியது. முட்டு நிலையை நீக்க பிரிட்டிஷ்காரர்களின் மனநிலையினை அறிய முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. லீக் தலைவர்களும், காங்கிரசு தலைவர்களும் பயனற்ற பேச்சு வார்த்தைகளை நடத்தினர். ஐரோப்பாவில் போர் முடியும் போது இந்தியாவின் நிலையில் யாதொரு மாற்றமும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. ஆனால் வெளித்தோற்றத்திற்குத்தான் அவ்வாறு காணப்பட்டது. ஏனெனில் இந்த இடைக் காலத்தில் லீக் தன்னுடைய நிலையினை மிகவும் பலப்படுத்தி விட்டது. முஸ்லிம்களிடையே ஏற்பட்டிருந்த பிரிவினை உணர்ச்சி எல்லோரும் நன்கு காணும் வகையிலே அமைந்திருந்தது. பிரிவினையைத் தடுப்பதற்காக காங்கிரசு கிரிப்ஸ் திட்டத்தை இப்பொழுது ஏற்றுக் கொள்ளத் தயாராய் இருந்தாலும் லீக் பிரிவினையைப் பெற்றுடைய அத்திட்டத்தை நிராகரிக்க ஆயத்தமாக இருந்தது.

# 8. சுதந்திரமும் பிரிவினையும்

ஐரோப்பாவில் போர் நிறுத்தம் ஏற்பட்டபோது, 1942ஆம் ஆண்டிற்குப் பிறகு வேறெந்த நேரத்திலும் இல்லாத அளவில் பலம் பெற்றதாக இந்திய அரசு காணப்பெற்றது. வெற்றி தெளிவாகக் காணப்பெற்ற பலம் ஆகியவற்றின் வாயிலாக அது பெருமை அடைந்திருந்தது. ஆனால் இந்திய அரசியலில் காணப்பெற்ற அமைதி பிறரை ஏமாற்றக் கூடியதாகவும் போலியானதாகவும் அமைந்திருந்தது. இருவிதத் தன்மைகளை பிரிட்டிஷ் ஆட்சிக்காலத்தில் இறுதியாக வெளிப்படுவதாக இது அமைந்திருந்தது. ஒன்று மாற்ற முடியா அளவிற்கு ஏற்படுத்தப்பெற்ற எளிதில் கையாள முடியாத நிலையினை ஏற்றுக்கொள்ளும் இந்தியரின் சிறப்புத் தன்மை. மற்றொன்று தக்க சமயம் வரும் வரை காத்திருக்கும் பண்பு. ஆனால் ஆழ்ந்து நோக்கும் போது அதே நெருக்கடிகள் தொடர்ந்து இருந்ததைக் காண்கிறோம். உண்மையில் நெருக்கடி நிலை மோசமாகி வந்தது. பிரிட்டன் தோல்வியுற்றிருந்த போது காங்கிரசு அதனிடம் கொண்டிருந்த ஐயத்தினை விட வெற்றி நிலையில் இருந்த பிரிட்டனிடம் அது கொண்டிருந்த ஐயம் அதிகமாக இருந்தது. பாடழிவுப் போரில் வெற்றி கண்ட நாட்டினுடைய ஆற்றலைக் கெடுக்கும் தன்மைவாய்ந்த சோர்வினைப் பற்றி முழுமையாக அறிந்திராத இந்தியத் தலைவர்கள் பிரிட்டிஷ் அரசு முழு அதிகாரம் பெற்ற நிலையிலிருந்தும் சுதந்திரம் வழங்குவார் என்பதை நம்பவில்லை. பிரிட்டிஷ்காரர்கள் நமக்கு நன்மை செய்வதாகக் கூறுவது பிரிட்டிஷ் போலித்தனத்தின் மற்றொரு அறிகுறியாக விளங்கவில்லையா! (பிரிட்டிஷ்காரர்கள் சிறுபான்மையினர் உரிமைகளை எப்பொழுதும் வற்புறுத்திவரும் நிகழ்ச்சி) முஸ்லிம்களின் முரட்டுத்தனத்தை ஊக்குவிப்பதின் வாயிலாக சுதந்திர இந்தியா திட்டத்தினை அழித்துவிட பிரிட்டிஷ்காரர்கள் கையாண்டு வரும் ஒரு நுட்பமான கருவி போன்று காணப்படவில்லையா? மைய சட்டசபைத் தேர்தலிலும் சரி, மாகாண சட்டசபைத்

தேர்தலிலும் சரி லீக் தொடர்ந்து வெற்றி பெற்று வந்திருந்த போதிலும், பாகிஸ்தானக் கொள்கையில் பொருள் இருப்பதாக காங்கிரசார் உணர வில்லை. கொண்ட பிடியினை விடாது இருந்தால் ஒன்றுபட்ட சுதந்திர இந்தியாவினை தாங்கள் எண்ணியபடி நிச்சயமாக ஏற்படுத்த இயலும் என்று இன்னமும் கருதி வந்தனர். ஜின்னாவும் லீக் தலைவர்களும் காங்கிரசின் எண்ணங்களில் ஐயம் கொண்டிருந்தனர். தங்களுடைய பலம் பேரளவில் பெருகி வருவதையும் நன்கு உணர்ந்திருந்தனர். உடனடியாக பிரிவினையை உண்டாக்க வேண்டும் என்ற கொள்கையினை மேடைகளில் வற்புறுத்தி வந்தபோதிலும் மீட்டுப்பெற இயலாத அளவில் அதனை அவர்கள் பற்றி வரவில்லை. இந்த நிலையினை 1928ஆம் ஆண்டிற்குப் பிறகு காங்கிரசு முழு சுதந்திரக் கொள்கையின் பால் கொண்டிருந்த பற்று நிலையுடன் ஒப்பிடலாம். 1928ஆம் ஆண்டில் காங்கிரசு முழு சுதந்திரத்தினை அடைவதை தனது நோக்கமாக ஏற்படுத்தி யிருந்தாலும், மீட்டுப்பெற இயலாத அளவில் அக்கொள்கையினை பற்றி வரவில்லை என்பதை நாம் உணர வேண்டும். முஸ்லிம்கள் தங்களுடைய கோரிக்கையினை வற்புறுத்துவதின் வாயிலாகத்தான் தங்களுடைய சமுதாயத்தின் எதிர்காலத்தை நல்ல முறையில் அமைக்க முடியும் என்று எண்ணினார்கள். பிரிட்டிஷ்காரர்களிடம் காங்கிரசு கொண்டிருந்த ஐயப்பாடு, முஸ்லிம்கள் காங்கிரசிலும் கொண்டிருந்த ஐய உணர்ச்சி, லீக்கினுடைய வலிமையினை காங்கிரசு சரிவர புரிந்து கொள்ளாத நிலை ஆகியவற்றிற்கிடையே பிரிட்டிஷ் அரசியல்வாதிகள் இந்திய சுதந்திர இலக்கினை நோக்கி முன்னேறி வரும் பாதை கரடுமுரடாகத்தான் அமைந்திருக்க வேண்டியதாயிற்று.

1943ஆம் ஆண்டு கூதிர்க் காலத்தில் லின்லித்கோவை அடுத்து வேவல் பிரபு வைசிராயாகப் பதவியேற்றார். அவரது நிருவாகம் குறிப்பிடத்தக்க அளவு வெற்றியினைக் கண்டது. காங்கிரசுடன் நட்பை நாடினார் என்றாலும் அவர்களிடத்து மன உறுதியுடன் நடந்து கொண்டார். வங்கப் பஞ்சத்தினை மிக்க விறுவிறுப்புடன் சமாளித்தார். உணவுப் பற்றிய நிருவாகத்தினை தன்னுடைய கட்டுக்குள் கொண்டு வந்தார். பெருகி வரும் வெற்றிச் சூழ்நிலையில் இருந்து போர் முயற்சி ஏற்பாட்டினைத் தலைமை தாங்கி நடைமுறைப்படுத்தி வந்தார். பண வீக்கத்தினை கட்டுக்குள் அடக்கினார் அவரது தோற்ற அமைதியும், செல்வாக்கும் அவரது ஆற்றலையும் நம்பிக்கையையும் வெளிப்படுத்தின. இப்பொழுது முற்றிலும் மாறான பணியினை மேற்கொள்ள வேண்டியதாயிற்று. குற்றங் காண்கிற மனப்பான்மை அதிகமாகக் கொண்டிருந்த இரு சாராரை பிரிட்டிஷ் நேர்மையில் நம்பிக்கை கொள்ள வைக்க வேண்டியதே அவரது முதல் வேலையாக இருந்தது. அதன் பிறகு ஒன்றையொன்று சந்தேகித்து வரும் இரு சாராரை

ஒத்துழைப்பு விட்டுக்கொடுக்கும் மனப்பான்மை ஆகியவற்றின் அவசியத்தை உணரச் செய்வதை அடுத்த வேலையாகக் கொண்டார். இரு சாராரும் ஒன்றுபட்டு வேலை செய்ய இயலும் என்பதனையும் அவர் எடுத்துக்காட்ட வேண்டியதாக இருந்தது. அப் பணியில் தோல்வியுற்றால் பிரிவினை நிச்சயம் என்பது தெளிவாயிற்று. பிரிவினையால் ஏற்படவிருக்கும் அளவிட முடியாத விளைவுகளையும் அனைவரும் உணர்ந்திருந்தனர். ஆனால் நற்பேறு அவருக்கு எதிராக இருந்தது என்பது எல்லோருக்கும் தெளிவாகத் தெரிந்திருந்தது. ஆயினும் மேற்கொண்ட பணியினை வீரத்துடன் தொடங்கினார்.

வேவலின் முதல் நடவடிக்கை கிரிப்ஸ் திட்டத்தில் குறிப்பிடப் பெற்றிருந்த தேசிய நிருவாகத்தினை ஏற்படுத்துவதைச் சார்ந்திருந்தது. கிரிப்ஸ் திட்டம் இன்னும் மீட்டுப் பெறப்படவில்லை என்பதை நாம் உணர வேண்டும். இத்தகைய நிருவாகம் தான் ஜப்பானியப் போரை முடித்து வைக்கும் பணியினை மேற்கொண்டிருந்தது. அப்பொழுது அப் போர் இன்னும் ஓராண்டு நடைபெறும் என்று எதிர்பார்க்கப்பட்டது. அதன் பிறகு முன்னரே அறிவித்தபடி அரசியல் நிர்ணய சபை ஒன்றினை அது அமைக்கப்பட இருந்தது. 1945ஆம் ஆண்டு ஜூன் மாதம் பேச்சு வார்த்தைகள் நடை பெற்றன. செயற்குழு இடங்களை பங்கிடுவதில் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. மேலும் முஸ்லிம்களின் கருத்தினை லீக் கட்சி ஒன்று தான் பிரதிபலிக்க முடியும் என்ற உரிமையை காங்கிரசு ஏற்றுக்கொள்ள மறுத்தது. இதுவும் பேச்சு வார்த்தைகள் முறிவுறக் காரணமாக அமைந்தது. ஆகஸ்டு மாதத்தில் ஜப்பானியப் போர் எதிர்பாராதவிதமாக முடிந்தது. அந்நிகழ்ச்சி நிலைமையினை உடனடியாக கவனிக்கத் தூண்டியது. முஸ்லிம்களின் ஒரே பிரதிநிதி லீக்காக மட்டும்தான் இருக்க முடியும் என்ற வாதத்தின் உண்மையினை தேர்தல் வாயிலாக அறியமுற்பட்டார். 1945-6ஆம் ஆண்டு குளிர்காலம் முழுவதும் இதில் செலவிடப்பெற்றது. அதே நேரத்தில் நெருக்கடி நிலையும் மேலும் வளர்ந்து வந்தது. காங்கிரசு இந்துக்களிடம் எந்த அளவு செல்வாக்குப் பெற்று இருந்ததோ அந்த அளவுக்கு முஸ்லிம்களிடையே லீக் செல்வாக்குப் பெற்றிருந்தது என்பது தெளிவாயிற்று. மிக முக்கியமான பஞ்சாப் மாகாணத்தில் யூனியனிஸ்டு கட்சி அழிந்து விட்டது என்றே கூற வேண்டும். சர். கிஸிர் ஹயாத்கான் டிவானு அவர்களின் தலைமையின் கீழ் எஞ்சியிருந்த யூனியனிஸ்டு கட்சியினர் காங்கிரசு ஆதரவுடன் தான் பதவியிலிருக்க இயன்றது. மிகக் கவனமாக வரையறுக்கப்பெற்ற தனி மதிப்பு முறை சிறுபான்மையினரை உணர்ச்சி பெருக்கெடுத்து வரும் சூழ்நிலையில் பதவியில் அமர்த்த உதவியது. 1946ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் ஏற்பட்ட கப்பற்படைக்

கலகம் வெகு சீக்கிரமே அடக்கப்பெற்றாலும் கூட, பிரிட்டிஷ்காரர்கள் அமைதியினை நிலைநாட்டுவது எவ்வளவு கடினம் என்பதை வலியுறுத்தியது.

புதிதாக அமைக்கப்பெற்ற பிரிட்டிஷ் அரசு இப்பொழுது நேரடியாகத் தலையிட்டது. புதிய அரசின் முக்கிய உறுப்பினர்களுள் ஒருவரான பெதிக் லாரன்சு தலைமையின் கீழ் அமைச்சரவை தூதுக்குழு ஒன்று இந்தியாவிற்கு ஏப்ரல் மாதம் அனுப்பப்பட்டது. அதில் சர். ஸ்டாபோர்டு கிரிப்ஸ், A. V. அலெக்சாந்தர் இடம் பெற்றிருந்தனர். இரு கட்சிகளிடையே சமரசம் ஏற்படுத்த மீண்டும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. பின்னர் தனது திட்டங்களை அக்குழு வெளியிட்டது. ஒன்றுபட்ட இந்தியாவினை ஏற்படுத்துவதே இன்னும் முக்கிய நோக்கமாகக் கருதப்பெற்று வந்தது. அந்நோக்கம் நிறைவேற கையாளப்படவிருந்த முறை கிரிப்ஸ் திட்டத்தில் காணப் பெறும் முறையின் சூழ்திறமிக்க உருமாற்றமாகத் தோன்றியது. பாதுகாப்பு, வெளிநாட்டு விவகாரங்கள், கடிதப் போக்குவரத்து ஆகியவற்றினைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் கொண்ட கூட்டரசு அமைப்பு அமைக்கப்படும் என்றும், அந்த அமைப்பில் பிரிட்டிஷ் இந்திய மாகாணங்கள் பங்குகொள்ளும் என்றும் கூறப்பட்டது. சுதேச இராச்சியங்களுடன் பேச்சு வார்த்தைகள் நடத்தப்பெற்ற பிறகு அவற்றினை கூட்டரசு அமைப்பில் சேர்த்துக்கொள்ள ஏற்பாடு செய்யப் பட்டது. இதில் இரண்டு முக்கியக்கூறுகள் காணப்பெற்றன. கூட்டரசின் அதிகாரங்கள் முஸ்லிம்களின் விருப்பத்திற்கு ஏற்ப குறைக்கப்பெற்றன. இக் கூட்டரசுக்கு கீழ் நிலைப்பட்ட கூட்டரசுகளை ஏற்படுத்த மாகாணங்களுக்கு உரிமையை வழங்கியது. கூட்டாட்சி அதிகாரங்கள் நீங்கலாக ஏனைய அதிகாரங்களுள் எவற்றை தன் கட்டுக்குள் கொண்டுவர வேண்டும் என்பதை முடிவு செய்துகொள்ளும் உரிமை அம் மாகாணங்களுக்கு வழங்கப்பெற்றது. இந்த அடிப்படையில் அரசியல் நிர்ணய சபை ஒவ்வொன்று அமைக்கப்படும் என்றும் அதில் எல்லாக் கட்சிகளும் பிரதிநிதித்துவம் பெற்றிருக்கும் என்றும் கூறப்பட்டது. மீண்டும் இடைக்கால தேசிய அரசு ஒன்றினை ஏற்படுத்தவும் திட்டமிடப்பட்டது. இதனை பாகிஸ்தானத்தின் பிரதிபிம்பம் என்று கூறலாம். ஒன்றுபட்ட இந்தியா, முஸ்லீம் களுக்குத் தன்னாட்சி ஆகிய இரு கருத்துக்களுக்கிடையே சமரசம் ஏற்படுத்த இது உதவுவதாகக் கருதப்பெற்றது.

ஒரு சிறிது நேரம் நம்பிக்கையின் சாயல் வெளிப்பட்டிருந்தது. ஏனெனில் இரு கட்சியினரும் இனி மேற்கொள்ளவிருக்கும் நடவடிக் கையின் அடிப்படையாக இதனை ஏற்றுக் கொண்டனர். ஆனால் இன

அடிப்படையில் இடங்களைப் பங்கிடுவதில் தகராறு ஏற்பட்டது. முஸ்லிம்களுக்கு அளிக்கப்பெற்ற ஐந்து இடங்களுள் ஒன்றினை முஸ்லிம் ஒருவருக்கு காங்கிரசு வழங்க உரிமை கோரியது. இந்தத் திட்டம் ஏற்றுக்கொள்ளப்பட்டால் லீக்கின் பிரதிநிதிகள் எண்ணிக்கை நான்காக குறைந்துவிடும். ஆனால் லீக் காங்கிரசுடன் சம நிலையில் வைக்கப்பட வேண்டும் என்று வற்புறுத்தப்பெற்றது. தேசிய முஸ்லிம்களுடன் லீக் கட்சியினர் ஒன்றுபட்ட பணிபுரிய மறுத்தனர். தேசிய முஸ்லிம்களை லீக் கட்சியினர் துரோகிகளாகக் கருதினர். காங்கிரசு மேற்கொண்டு நடவடிக்கை எடுக்க மறுத்த போது, லீக் தனித்து பதவியேற்க முன்வந்தது. ஆனால் வைசிராய் அதற்கு இணங்க மறுத்த போது லீக் வெகுண்டெழுந்தது சில வாரங்களுக்குப் பிறகு காங்கிரசு தனது தவறை உணர்ந்தது. அதன் பயனாக காங்கிரசு தலைவர்கள் பதவியேற்றனர். ஜவஹர்லால் நேரு செயற்குழு துணைத் தலைவராக நியமிக்கப்பெற்றார். கொடுத்த வாக்கினை மீறிய நடவடிக்கையாக லீக் இதனைக் கருதியது. ஆகவே ஆகஸ்டு 16ஆம் நாள் நேரடி நடவடிக்கை நாளாக அறிவிக்கப்பட்டது. இனி நெருக்கடி நிலையினைக் கட்டுப்படுத்த இயலாது என்பது தெளிவாயிற்று. கல்கத்தாவில் ஆகஸ்டு மாதம் பெரிய கலவரங்கள் ஏற்பட்டன. அதில் இந்துக்கள் அதிகமாக பாதிக்கப்பட்டனர். பீகாரில் வகுப்புக் கலவரம் ஏற்பட்டது. அங்கு முஸ்லிம்கள் பலியானார்கள். கிழக்கு வங்காளம், ஐக்கிய மாகாணங்கள் ஆகியவற்றிலும் கலவரங்கள் ஏற்பட்டன. 1946ஆம் ஆண்டு மழைக் காலத்தில் ஏற்பட்ட வெறி உணர்ச்சியும், இரத்த வெள்ளமும் சேர்ந்து ஒன்றுபட்ட சுதந்திர இந்தியா திட்டத்தினை அழிவுறச் செய்தன. பிரிவினை தான் இப்பொழுது ஒரே வழியாகக் காணப்பட்டது. ஆயினும் எல்லாக் கட்சிகளும் இவ்வுபாயத்தில் இன்னும் ஒன்பது மாதங்கள் பிடித்தன.

இந்த ஒன்பது மாதங்களும் பல முயற்சிகள், இன்னல்கள் ஆகியவற்றிற்கிடையே கழிக்கப்பெற்றன. 1946ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் லீக் செயற்குழுவில் கலந்துக் கொண்டது. வாழ்த்துவதற்கன்றி வசைபாடவே இதில் லீக் கலந்து கொண்டதாக அனைவருக்கும் விரைவில் தெரியலாயிற்று. அதே மாதம் வடமேற்குப் பகுதிக்கு ஜவஹர்லால் சென்றபோது அவர் பெருத்த ஆபத்தில் தான் இருப்பதைக் கண்டார். செஞ்சட்டையினர், எல்லைக்காந்தி ஆகியோர் இருப்பினும் எல்லை மாகாணம் இந்த ஆட்சியினை ஏற்காது என்பது விளங்கியது. டிசம்பர் மாதம் அரசியல் நிர்ணயசபை கூடியது. லீக் அதில் பங்கு கொள்ளவில்லை. 1947ஆம் ஆண்டின் தொடக்கத்தில் பஞ்சாபில் கிஸிர்கான் அமைச்சரவை வீழ்ந்தது, அதனைத் தொடர்ந்து

கலவரம் ஏற்பட்டது. அதன் விளைவாக அமிர்தசரஸ், மூல்தான் ஆகிய சில இடங்கள் அழிவிற்குள்ளாயின. சிறுபான்மை அமைச்சரவையின் பலமற்ற கட்டளைகளை அடுத்து 93 வது பிரிவின் கீழ் ஆட்சி அமைக்கப் பட்டது. உள்நாட்டுப்போர் அடக்கப்பட்டது. ஏதாவது ஒரு ஏற்பாடு செய்து ஆகவேண்டியநிலை வந்தது. அதுவும் உடனடியாக செய்ய வேண்டியதாக இருந்தது.

மீண்டும் ஒரு முறை பிரிட்டிஷ் அமைச்சரவை நேரடியாகத் தலையிட்டது. பண்டித ஜவஹர்லால் நேரு, ஜின்னா (இப்பொழுது காயிதே அஜாம் அல்லது பெருந்தலைவர்) சர்தார் பல்தேவ்சிங் (சீக்கியத் தலைவர்). ஆகிய மூவரும் இலண்டனுக்கு அழைக்கப் பெற்றனர் பேச்சு வார்த்தைகள் முன்போலவே பயனற்றனவாகி விட்டன. ஐயநிலையைப் போக்க மேற்கொள்ளப்பட்ட கடைசி முயற்சி 1947ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 20ஆம் தேதி மேற்கொள்ளப்பட்டது. 1948ஆம் ஆண்டு ஜுன் மாதம் பிரிட்டிஷ் அதிகாரத்தினை இந்தியாவினின்றும் மீட்டுப் பெற்றுவிட பிரிட்டிஷ் அரசு முடிவெடுத்தது. அதே நேரத்தில் வேவல் திருப்பி அழைக்கப்பட்டார். மௌண்ட்பேட்டன் பிரபு வைசிராயாக நியமிக்கப் பெற்றார். பிரிட்டிஷ் ஆட்சியினை இந்தியாவினின்றும் மீட்டுப் பெறுவதற்கான நடைமுறை சார்ந்த திட்டத்தினை வகுப்பதே அவரது முக்கிய வேலையாக இருந்தது. இலண்டன் அரசின் தூண்டுதல்களோ நெருக்கிவரும் அரசியல் வெட்ட வெளியால் ஏற்படவிருக்கும் அதிர்ச்சியோ, புதிதாக அமர்த்தப்பட்ட தலைவரால் ஏற்படக்கூடிய உற்சாகமோ காங்கிரசு, லீக் ஆகியவற்றிற்கிடையே ஏற்பட்டிருந்த முட்டு நிலையினை நீக்கும் திறனைப்பெற்றிருக்கவில்லை. கண்ணுக் கெட்டிய தூரத்தில் வெற்றி இருப்பதை ஜின்னா கண்டார் பாகிஸ்தானக் கோரிக்கையை ஒரு இம்மி அளவும் முஸ்லீம் லீக் விட்டுக் கொடுக்காது என்று கூறினார் பிரிவினை இல்லை என்றால் நீண்டதொரு உள்நாட்டுப்போர் உயிர்ச்சேதம் ஆகியவை ஏற்படுவது நிச்சயம் என்பதை காங்கிரசார் உணரச்செய்யும் அளவிற்கு காங்கிரசின் தந்திரங்களை அவர்கள்பால் திருப்பிவிட்ட பெருமை ஜின்னாவைச் சார்ந்ததாகும் மே மாதம் காங்கிரசே பஞ்சாப் பிரிவினை யோசனையைக் கூறியது.

பிரிவினை இல்லையேல் அமைதி இல்லை என்பதை மௌண்ட்பேட்டன் சீக்கிரமே உணர்ந்து விட்டார். இலண்டன் சென்றபோது இத்திட்டத்திற்கு அமைச்சரவையின் ஒப்புதலைப்பெற்றார். ஜுன் மூன்றாந் தேதி பிரிவினைக் கொள்கையினை பிரிட்டிஷ் அரசு ஏற்றுக் கொண்டதாக அறிக்கை வெளியிடப்பட்டது. அதற்காக நடைமுறைச்சார்ந்த திட்டம் ஒன்று ஏற்படுத்தப்பெற்றது. ஆகஸ்டு 14ம் தேதியன்று பிரிட்டிஷ் அரசு இந்தியாவினின்றும் விலகிச்செல்ல முடிவு செய்தது. காங்கிரசு,


1 & 2 HIMACHAL PRADESH
3 DELHI
4 TRIPURA
5 MANIPUR
6 GOA
Peshawar
JAMMU
Srinagar
KASHMIR
Lahore
PANJAB
Sultanpur
Patiala
Karachi
UTTAR PRADESH
NEPAL
BHUTAN
ASSAM
Shillong
BURMA
RAJASTHAN
Jaipur
Ajmir
Lucknow
Patna
BIHAR
W.B.
Dacca
MADHYA PRADESH
Bhopal
Bhuj
Rajkot
BOMBAY
W. BENGAL
Calcutta
Nagpur
ORISSA
Cuttack
BAY OF BENGAL
Bombay
Hyderabad
ARABIAN SEA
MYSORE
ANDHRA PRADESH
Bangalore
Madras
KERALA
MADRAS
LACCADIVE ISLANDS
Trivandrum
CEYLON
Colombo
ANDAMAN
NICOBAR

இந்திய யூனியன்.

லீக், சீக்கியர்கள் ஆகியோர் இத்திட்டத்தை உடனே ஏற்றுக்கொண்டனர். ஒவ்வோருவரும் தனது அதிருப்தியை வெளியிட்டனர். ஆயினும் மேலும் போராடுவதால் யாதொரு பயனும் ஏற்படாது என்பதை அவர்கள் அனைவரும் அறிந்திருந்தனர். சீக்கியர்களிடம் தான் மிகுந்த மனக்குறை ஏற்பட்டிருந்தது. அவர்களுள் பலமிக்க ஒரு சாரார் போராடுவது என்று தீர்மானித்தனர். ஆனால் மூன்று கட்சிகளுள் அவர்கள்தான் குறைந்த பலமுள்ள கட்சியாக இருந்தனர். மேலும் அவர்களிடையே பிளவுகள் அதிகமாக இருந்தன. தகுந்த தலைவர்களை அவர்கள் கொண்டிருக்கவில்லை. இந்திய அரசியல் ஆட்டத்தில் உடன்பாட்டுக்கு உதவும் மிகச்சிறிய ஆக்கக்கூறு இவ்வாறாகக் கண்டெடுக்கப் பெற்றது.

திட்டம் தட்டுத் தடங்கலின்றி நடைமுறை படுத்தப்பெற்று வந்தது. அதனை நடைமுறைப்படுத்தும் முயற்சி தொடங்கிய பொழுது வைசிராய் குறிப்பிடத்தக்க சொற்பொழிவொன்றினை ஆற்றினார். 1942ஆம் கிரிப்ஸ் திட்டத்தின் தழுவலாக இருந்தது என்று நாம் அதனைக் கூறலாம். அத்திட்டத்தினை நடைமுறைப் படுத்தியபோது வெகு சிறந்த உபாயங்களைக் கையாண்டனர். பஞ்சாப், வங்காளம் ஆகிய இரு மாகாணங்களைப் பிரித்துவிடவேண்டும் என்ற கொள்கை ஏற்றுக் கொள்ளப்பட்டது. ஆனால் அம்மாகாணங்களின் சட்டசபைகளின் கோரிக்கையின் பேரில்தான் பிரிவினை மேற்கொள்ளப்படவேண்டும் என்று ஏற்பாடு செய்யப்பட்டது. எல்லைக்கோடுகளை நிர்ணயிக்க எல்லைக்கமிஷன்களை ஏற்படுத்த முடிவு செய்யப்பட்டது. சிந்து மாகாணம் பொறுத்தளவில் பிரிவினையைப் பற்றிய முடிவு அம்மாகாண சட்டசபையின் விருப்பத்திற்கு விடப்பட்டது. ஊசலாடிக் கொண்டிருந்த டுசெஞ்சட்டை அமைச்சரவையின் கீழிருந்த வடமெற்கு எல்லை மாகாணத்தில் குடி ஒப்பம் (Referendum) வாயிலாக அம்மாகாணத்தின் வருங்கால நிலையினை முடிவு செய்ய ஏற்பாடு செய்யப்பட்டது. அதே முறையினை அஸ்ஸாம் மாகாணத்தைச் சேர்ந்த சில்ஹெட் மாவட்டத்திலும் கடைப் பிடிக்க முடிவெடுத்தனர், இவ்வாறாக கிழக்குப் பாகிஸ்தானம், மேற்குப் பாகிஸ்தானம் என்ற இரு பிரிவுகளைக் கொண்ட பாகிஸ்தானம் நாடு உதயமாயிற்று. பாகிஸ்தானம் இந்தியா ஆகிய இரண்டும் பிரிட்டிஷ் காமன்வெல்த் அமைப்பில் அடங்கிய இரு டொமினியின் நாடுகளாக ஏற்படுத்தப்பெற்றன. ஒவ்வொன்றும் ஒரு அரசியல் நிர்ணயச் சபையை பெற்றடைந்தது. இந்தியாவின் சொத்துக்களையும், கடன்களையும் சமசரிவித அளவில் பிரிக்க ஏற்பாடுகள் மேற்கொள்ளப்பட்டன. இந்திய டொமினியின் முதல் கவர்னர் ஜெனரலாக மௌன்ட்பேட்டன் பதவியேற்றார். ஜின்னா பாகிஸ்தானம் கவர்னர் ஜெனரலானார். சுதேச இராச்சியங்கள் மட்டும் தான் இந்த திட்டத்தில் புகுத்தப்படவிருந்தன.

அவை பிரிட்டிஷ் அரசுடன் ஏற்படுத்திக்கொண்ட உடன்படிக்கைகள் முடிவுற்றன. அத்துடன் பிரிட்டிஷ் தலைமை அதிகாரமும் அழிந்தது. ஒவ்வொரு இராச்சியமும் கொள்கையளவில் சுதந்திரம் பெற்ற நாடாகக் கருதப்பட்டது என்றாலும் அவையனைத்தும் இவ்விரு டொமினியன்களுள் ஏதாவது ஒன்றினுள் ஐக்கியப்பட்டு விடவேண்டும் என்று பிரிட்டிஷ்காரர்கள் ஆட்சிப் பொறுப்பினை விட்டுச் செல்லும்போது உறுதியாக குறிப்பிட்டனர்.

இவ்வாறாக பிரிட்டிஷ் வரலாற்றுக் காலப்பகுதி இந்தியாவில் முடிவுற்றது. இக்காலத்தில் ஏறக்குறைய மூன்றரை நூற்றாண்டுகள் வியாபாரம் நடத்தி வந்தனர். இரண்டு நூற்றாண்டுகள் அரசியல் சார்ந்த அதிகாரங்கள் பெற்றிருந்தனர். 130 ஆண்டுகள் மேலாட்சி செய்து வந்தனர். மெகாலே, எல்பின்ஸ்டன் ஆகியோரும், அவர்கள் காலத்தில் வாழ்ந்து வந்த ஏனையப் பெரியோர்களும் கண்டு வந்த கனவு அவர்கள் எதிர்பாராத வகையில் நினைவாயிற்று. ஒரு சில விஷயங்களை அவர்கள் ஏற்றுக்கொள்ளாமல் இருந்திருக்கக்கூடும். ஆனால் பொதுவாக அவர்களது முன்உணர்வு சரியானதென்பதை அவர்கள் உணர்ந்திருப்பார்கள் ஏனெனில் 1947-இல் பிரிட்டிஷ்காரர்கள் இந்தியர்களிடம் ஒப்படைத்த இந்தியா கடந்த நூற்றைம்பது ஆண்டுகளாக படை வலிமையாலும் அரசியல் தந்திரங்களாலும் பிரிட்டிஷ் ஆதிக்கத்திற்குட்படுத்தப்பெற்று வந்த புராதன இந்தியாவினின்றும் முற்றிலும் மாறுபட்டதாக இருந்தது. மெகாலேயும், மன்றோவும் விரும்பி எதிர்பார்த்தவாறு, ஆங்கிலேய நெறிகள், ஆங்கிலேய அறிவு, ஆங்கிலேய நாகரிகப் பண்பு ஆகியவற்றைக்கொண்ட இந்திய வகுப்பு ஒன்று வளர்ச்சியுறவில்லை என்றாலும் ஒரு புரட்சிகரமான மாறுதல் ஏற்பட்டிருந்ததை எவரும் மறுக்க இயலாது புற வாழ்க்கையில் மட்டுமின்றி அகவாழ்க்கையிலும் பெரும்மாற்றம் ஏற்பட்டிருந்தது. பஞ்சாப் குழுவினர் கொண்டிருந்த தோல்வி மனப்பான்மை நிராகரிக்கப்பட்டது. இந்திய சமுதாயத்தின் மேற்கட்டடம் மேலோட்டமாகப் பார்ப்பவர் கண்களுக்கு கவர்ச்சியூட்டுவதாக அமைந்திருப்பினும், மேல்நாட்டுக் கருத்துக்களும், குறிக்கோள்களும், புதிய நிறுவனங்களும், புதிய பண்புகளும் நாட்டில் வேரூன்றி விட்டிருந்தன. வளர்ந்துவரும் தேசிய உணர்ச்சியின் காரணமாக பழங்கால கலாச்சாரம் புத்துயிர் பெற்றது என்றாலும், அதன் போர்வைக்குள்ளே மேலைநாட்டு கலாச்சாரமும் வளர்ச்சியுற்று வந்தது. பிரிட்டிஷ்காரர்களுக்கு எதிராகக் காங்கிரசு கையாண்டு வந்த வாதங்களும், ஆயுதங்களும் பெரும்பாலும் மேலை நாட்டில் தோன்றியனவாகவே இருந்தன. இந்தியா தனது விலங்குகளை மேலைநாட்டு சம்மட்டியைக் கொண்டு தகர்த்தெறிந்தது. இருசாரார்களிடையே ஏற்பட்டிருந்த இணக்க ஒற்றுமைதான் விலங்குகளை வன்முறையைப் பயன்படுத்தி

அவ்விலங்குகளைத் தகர்த்தெறிய முற்படாதமைக்கு காரணமாக இருந்தது. விலங்குகளை ஒரு சாரார் ஆட்டி ஒலி எழுப்பியபோது, மற்றொரு சாரார் அவற்றை எடுத்துவிடத் தொடங்கினார்கள்.

# 9. பொருளாதாரம், கலை ஆகியவற்றின் வளர்ச்சி

பிரிட்டிஷ் ஆட்சிப் பகுதியின் கடைசி இருபத்தைந்தாண்டுகள் எல்லாத் துறையிலும் விரைவான முன்னேற்றங்கள் ஏற்பட்டன. ஏற்படுத்தப் பெறவிருக்கும் புதிய இந்தியாவினை எதிர் நோக்கி அனைவரும் இருந்தனர் முன்னேற்றத்தினை நோக்கியிருந்த நாட்டுப் பற்றுடையவர்கள் தங்கள் கருத்தினில் உருவாக்கி இருந்த புதிய இந்தியா ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர் அவர்களது முன்னோர்கள் பின்னோக்கி பார்த்திருந்த இந்தியாவினின்றும் பெரிதும் மாறுபட்டதாக இருந்தது. பழைய கீர்த்திகளை புதுப்பிக்கும் எண்ணம் குறைந்து கொண்டே வந்தது. அவர்கள் காலத்திய மேல் நாடுகளின் வெற்றிகளுடன் போட்டியிட வேண்டும் என்ற ஆர்வம் மேலும் மேலும் பெருகி வந்தது. பழைய இந்தியாவை முற்றிலும் புறக்கணிக்கக் கூடாது என்பது உண்மைதான். ஆனால் கடும் போட்டி நிறைந்த இந்த உகத்தில் நேர்த்தியான பின்னணியாக அது கருதப்பெற்று வந்தது. இப்புதிய உலகத்தில் வளர்ந்து வரும் புதிய தலைமுறையினர் சமமான பெருமைப்படத்தக்க பங்கினை ஏற்க முனைந்தனர். பழைய இந்தியா அந்தி நேர ஒளிபோல் விளங்க வேண்டும் என்றும் அந்த ஒளியில் மேல் நாடுகள் என்ற தொழிற்சாலையின் கடுமையான உருவமைப்பினை நயம் படுத்தவேண்டும் என்றும் எண்ணினார்கள் புதிய வாழ்க்கை முறைகளையும் சிந்தனைகளையும் கொண்ட மக்களின் ஆர்வத்தை எழுப்புவதற்கு வேண்டிய வெப்ப நிலையினை பழைய இந்தியா ஏற்படுத்தி அளிக்கும் என்றும் எண்ணினார்கள். பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலே நாட்டுப் பற்றுடையவர்கள் எண்ணியது போன்று பழைய இந்தியாவினின்றும் வடித்தெடுக்கப் பெறும் பண்புக் கூறுகளைப் பெருமளவில் கொண்டு புதிய இந்தியா அமைக்கப்படக்கூடிய நிலை உண்டாகவில்லை. சம காலத்திய உரமிக்க

மேல் நாடுகளினின்றும் அடிக்கடி பெறப்பட்ட கருத்துக்களைக்கொண்டு அது அமைக்கப்படவிருந்தது.

இந்த இருவித போக்குகள் இராஜாராம் மோகன்ராய் காலம் முதல் இந்தியாவில் எப்பொழுதும் காணக்கிடந்தன. ஒரே நபரிடம் இந்த இருவித போக்குகளும் ஒரே சமயத்தில் காணக்கிடந்தன. பிரிட்டிஷ் ஆட்சிப் பகுதியின் பிற்காலத்தில் இந்த இருவித ஓடைகளும் ஒன்றன் பக்கத்தில் ஒன்ருக ஓடி இருந்தன. எப்பொழுதும் அவை ஒன்றை ஒன்று வெளிப்படையாக மோதவில்லை என்ருலும் மேல்நாட்டு நாகரிகப் பண்பு நீரோட்டம் எளிதில் அறியக்கூடிய வகையில் பெருகி வந்தது. தேசிய இயக்கம் அதனுடைய முன்னேற்றத்தின் அளவை ஓரளவு மறைத்து இருந்தது. ஏனெனில் நாம் பெற்றடைந்த பழைய கலாச்சாரத்தினை தேசியவாதிகள் உயர்த்திப் பேசி வந்தனர். மேற்கத்திய கருத்துக்களை வெளிப்படையாகப் போற்றி வருவது நம்முடைய தன்மானத்திற்கு நாமே இழுக்குத் தேடிக்கொள்வதாகும் என்று எண்ணினர்கள். ஆயினும் அந்த போக்கு மக்களிடையே தொடர்ந்திருந்தது. அந்நியர் ஆதிக்கம் ஒழிந்த பிறகு தன்னுடைய பலத்தினை காட்டலாம் என்ற எண்ணத்துடன் அத்தகைய எண்ணப் போக்குடையவர்கள் காத்திருந்தனர். அந்நிய ஆட்சி ஒழிந்த பிறகு தற்கால நாகரிகப் பண்புகளை மேற்கொள்ளுபவர்களை தேசப் பற்றற்றவர் என்று எவரும் கூறமாட்டார்கள் அன்ரே? இந்த இருவித போக்குகளின் செல்வாக்கினை தேச வாழ்வின் எல்லா வகைத் துறைகளிலும் நாம் காண இயலும்.

முதலாவது உலகப்போர் முடிவுற்ற கால முதற்கொண்டு பொருளாதார முன்னேற்றம் வேகமாக ஏற்பட்டு வந்தது. 1924-ஆம் ஆண்டில் பருத்தியின் மீது விதிக்கப்பெற்றிருந்த உள்நாட்டுத் தீர்வை தாற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டது. 1925-இல் அது ஒழிக்கப் பெற்றது. பொருளாதாரத் துறையில் அடிமை நிலை முடிவுற்று வருவதை இவ்விரு நடவடிக்கைகளும் எடுத்துக்காட்டின. புதிய நிதி சுதந்திரம் கோட்பாடு வெறும் பேச்சளவில் ஏற்றுக்கொள்ளப்பட்ட கோட்பாடாகக் கருதக்கூடாது. அக் கோட்பாடு நடைமுறைப்படுத்தப் பெற்று வந்தது. புதிய தொழில்களுக்கு ஆதரவு அளித்தல், முன்னரே அமைக்கப்பெற்றிருந்த தொழில்களுக்கு பாதுகாப்பளித்தல் ஆகிய பணிகளை சர்க்கார் மேற்கொண்டது. இவ்வாருக புதிய எஃகு தொழில் பாதுகாப்பினை பெற்றது. அதன் விளைவாக 1930-ஆம் ஆண்டு தொடங்கிய சில ஆண்டுகள் ஏற்பட்டிருந்த மந்தநிலையினை அது சமாளிக்க முடிந்தது. ஜப்பானியருடைய விலை குறைந்த நெசவுப் பொருட்களுக்கும் இந்திய நெசவுப் பொருட்களுக்கும் இடையே

